# சிவஞானபோத வசனாலங்கார தீபம்

ஸ்ரீ காசிவாசி சாம்பவஸ்ரீ
செந்திநாதையரவர்கள்
இயற்றியது

வெளியீடு:
**கலாசம்ரக்ஷண சங்கம்**
தஞ்சாவூர்

விற்பனை உரிமை:
**அகல்**
D-15 அபினவ் கைலாஷ்
19, வேளச்சேரி சாலை
சைதாப்பேட்டை
சென்னை - 15

அமரர் திரு. ரோஜா முத்தையா அவர்களது
பதினோராவது ஆண்டு நினைவு வெளியீடு எண் : 11 - A

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சிவஞானபோத வசனாலங்காரதீபம் |
| நூலாசிரியர் | : | காசிவாசி செந்திநாதையர் |
| பொருள் | : | சைவ சித்தாந்தம் |
| மொழி | : | தமிழ் |
| நூல் வெளியீடு | : | கலாசம்ரக்ஷண சங்கம்<br>5 - D, செல்வம் நகர்<br>தஞ்சாவூர் - 613 007 |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு: 1916<br>இரண்டாம் பதிப்பு: டிசம்பர் 2003 |
| தாள் | : | வெள்ளை |
| பக்கம் | : | 308 |
| நூலின் அளவு | : | டபுள் கிரவுன் |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பைண்டிங் | : | கார்டுபோர்டு |
| விலை | : | ரூ. 160/- |
| அச்சாக்கம் | : | ஹேமமாலா சிண்டிகேட், சிவகாசி |
| விற்பனை உரிமை | : | அகல்<br>D - 15 அபினவ் கைலாஷ்<br>19, வேளச்சேரி சாலை<br>சைதாப்பேட்டை<br>சென்னை - 15 |

# பதிப்புரை

காசிவாசி செந்திநாதையர், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரின் சீடர். தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் துறைபோகிய அறிவுடைய பெரியார். நாற்பது நூல்களுக்கு மேல் வரைந்தவர் இப்பேரறிஞர். காசியிலே பத்தாண்டுகள் தங்கி வடமொழியில் வியக்கத்தக்க தேர்ச்சி பெற்றார்.

இவர் வரைந்த நூல்களில் முக்கியமானவை: (1) ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் அருளிய பிரமசூத்திர சிவாத்துவித சைவ பாடியத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு, (2) சிவஞானபோத வசனாலங்காரதீபம், (3) சைவ வேதாந்தம், (4) கந்தபுராண நவநீதம், (5) தேவாரம் வேதசாரம்.

ஐயர் அருளிய தேவாரம் வேதசாரம் என்ற நூல் கலாசம்ரக்ஷண சங்கத்தின் மூலம் 1996-இல் மீளவும் பதிப்பிக்கப்பட்டது. ஐயர் வரைந்த சிவஞானபோத வசனாலங்கார தீபம் 1916-ஆம் ஆண்டில் அதாவது நளவருடம் சித்திரை மாதத்தில் முதல் பதிப்புப் பெற்றது. இந்நூலில் தம் மனத்தைப் பறிகொடுத்த சைவசித்தாந்தப் பேராசிரியர் அமரர் க.வஜ்ரவேல் முதலியார் அவர்கள் இதைத் தற்காலத்துக்கு ஏற்ப சுருக்கி அமைத்தார். இப்பணியை அவர் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பணிபுரியும்போது மேற்கொண்டார். அவர் அமைத்து வைத்திருந்த விளக்கநூலை பல்கலைக்கழகத்தின் அனுமதியுடன், திருநெல்வேலி அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம் 1996இல் வெளியிட்டது. இது ஒரு நல்ல வெளியீடு என்றாலும் ஐயர் வெளியீட்டுக்கு உள்ள பெருமை இவ்வெளி யீட்டிற்கு இல்லை. குறிப்பாக ஐயர் அவர்கள் சிவஞானபோத சூத்திரங்களுக்கு உரிய தேர்வு வினாக்களை அவ்வச்சூத்திர முடிவிலே வரைந்தும், அந்த அந்தக் கேள்விக்கு உள்ள விடை தம் நூலின் எந்தப் பகுதியில் அமைந்து இருக்கிறது என்பதையும்

காட்டியிருக்கிறார். இப்பகுதி திருநெல்வேலி பதிப்பில் விடுபட்டிருக்கிறது.

மேலும், வடமொழி சூத்திரங்களையும், மேற்கோள்களையும் கிரந்த லிபியில் ஐயர் அவர்கள் காட்டியிருக்கின்றார். இதுவும் திருநெல்வேலிப் பதிப்பில் விடுபட்டுப்போய் இருக்கிறது. சுருக்கமாகச் சொன்னால் மூலப்பதிப்பில் பாதியளவு திருநெல் வேலிப் பதிப்பில் விடுபட்டிருக்கிறது. ஆகவே, மூலப் பதிப்பை உள்ளவாறே மீளவும் பதிப்பித்தல் இன்றியமையாத ஒரு சைவப் பணி என்று நாம் உறுதியாகக் கூறுவோம்.

இந்நூலின் படி ஒன்றை அமரர் ரோஜா முத்தையா அவர்கள் எமக்கு 1986-இல் தந்துதவினார். அதில் சில பக்கங்களில் பூச்சி அரித்திருந்ததால் அதை அப்படியே படம் பிடித்து அச்சிடுதல் எம்மால் சாத்தியமாகக் கருதப்படவில்லை. இந்நூலின் கருக்கு அழியாத படியொன்றை கரந்தை திருஞான சம்பந்தன் அவர்கள் எமக்கு அண்மையில் தந்தார். அவருக்குக் கலாசம்ரக்ஷண சங்கம் கடன்பட்டிருக்கிறது.

சிவஞான பாடியம் அச்சில் வெளிவருவதற்கு முன்பு உரை நடையில் முதன்முதலாக வெளிவந்த நூல் ஐயர் வரைந்த இந்நூலே. இந்நூலை ஓதி உணர்ந்தார் சிந்தாந்தப் பேரறிவைப் பெறுவர்.

இந்நூல் அமரர் ரோஜா முத்தையா அவர்களின் பதினோராம் ஆண்டு நினைவு வெளியீடாக வருவது நனிசாலப் பொருத்த முடையது.

**5 - D, செல்வம் நகர்,** **சேக்கிழார் அடிப்பொடி**

**தஞ்சாவூர் - 613 007.** **முதுமுனைவர் தி. ந. இராமச்சந்திரன்**

௧.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோத

# வசனாலங்காரதீபம்.

ஸ்ரீ காசிவாசி சாம்பவஸ்ரீ

செந்திநாதையரவர்கள்

இயற்றியது.

இது

மஹாவித்வான் புரசை—அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கரும் தமிழ்ப்பண்டிதருமாகிய

புரசை — சுந்தரமுதலியாரவர்கள் குமாரர்

சி. சு. ஏகாம்பரமுதலியாருடைய மனைவியாரும்

சைவசித்தாந்த மகாசமாஜத்தின்

வனிதைவகுப்புக் காரியதரிசியுமாகிய

ஆண்டாளம்மை எனப்பெயரிய

மங்கையர்க்கரசியாரால்

சென்னை

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிடப்பட்டது.

நள௵ சித்திரை௴

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# பொல்லாப்பிள்ளையார்
## தோத்திரம்



நான்கடியும் ஒப்பனவாய்வந்த கோச்சக ஒருபோது.

தடந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு தழீஇ
வென்றுவி நந்தாதை வியந்துகைத் துடிகொட்ட
நின்றாடும் பொல்லார்தா ணினைந்தார்தா முய்ந்தாரே.

தழீஇ தழுவ என்பதன்றிரிபு. வென் தாவி எனப் பிரிக்க. தழுவத் தாவி நின்று கொட்ட ஆடும் பொல்லார் என வினைமுடிபு செய்க.

பொல்லார் பொள்ளார் லள ஒற்றுமை. உளிமுதலியவற்றால் போழ்ந்து செய்யப்படாதவர் என்பது கருத்து. எனவே சுயம்பு மூர்த்தி என்றதாம்.



☞ இது ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதபண்டிதரவர்கள் அனுமதிபெற்றுச் சிவஞானமாபாடியத்திருந்தெடுத்துப் பதிப்பிக்கப்பட்டது.

# பொருளடக்கம்.



## திருச்சிற்றம்பலம்.

# தக்ஷிணாமூர்த்திதோத்திரம்.

### திருவானைக்காப்புராணம்.

மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயி
ரம்மலர்த் தாணிழ லடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ. 1

### திருநாகைக்காரோணப்புராணம்.

பதிபசு பாச மென்னப் படுமொரு மூன்றுஞ் சுத்தம்
பதிநிலை யொன்றற் கொன்று பயில்வியாப் பியமா மின்னும்
பதியொடு பசுக்க லக்கும் பண்புமிற் றென்றோர் செங்கைப்
பதிவிர லளவிற் சேர்ப்பிற் பகர்பவற் கடிமை செய்வாம். 2

### உறையூர்ப்புராணம்.

முழுதுணர் முனிவர் தேற மூவகைப் பாச மாய
பழுதற வொழிந்தான் மாக்கள் பதநிழ லடங்கு முண்மை
செழுமலர் பொருவு மங்கை விரல்களாற் றெரித்தி யாருந்
தொழுதெழக் கல்லா னீழல் வதிபவர் துணைத்தாள் போற்றி. 3

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசபரம்பரைத் தருமபுரவாதீனத்திலே

காஷாயம்பெற்றுத் துறவுபூண்ட செம்மனச்செல்வரும்,

துறவிலக்கணம் முற்றும் குடிகொள்ளப்பெற்றவரும்,

தமிழ் சமஸ்கிருதமென்னும் இருபாஷாவல்லுநரும்,

வைத்தீஸ்வரன்கோயிற் றருமகர்த்தாவுமாகிய

ஸ்ரீமஸ்ரீ சொக்கலிங்கத்தம்பிரான்சுவாமிகளியற்றிய

# கத்தியரூபச்சிறப்புப்பாயிரம்.



புண்ணியம் பசுபுண்ணியம் சிவபுண்ணியம் என இருவகைப்படும். அநாதிமலபெத்த பசுக்களாகிய ஆன்மாக்களைச்சுட்டிச்செய்யும் புண்ணியம் பசுபுண்ணியம் எனப்படும். அநாதிமல முத்தபதியாகிய சிவபெருமானைச் சுட்டிச்செய்யும் புண்ணியஞ் சிவபுண்ணியம் எனப்படும். அவை ஆலயங்கட்டுதல், ஆலயஜீர்ணோத்தாரணஞ்செய்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், சுகந்த தூபமிடுதல், சிவபூஜைசெய்தல் முதலியனவாம். குடிகளுக்குச்செய்யும் தீமையினும் மஹாராஜாவுக்குச்செய்யும் தீமை மிகக்கொடியது; அங்ஙனமே ஆன்மாக்களுக்குச் செய்யும் துரோகத்தினும் சிவபெருமானுக்குச்செய்யும் துரோகம் மிகக்கொடியது. குடிகளுக்குச் செய்ததீமை இராசாவால் ஒருபோழ்து பொறுக்கப்படினும் பொறுக்கப்படும். இராசாவுக்குச்செய்த தீமையோ ஒருபோழ்தும் பொறுக்கப்படமாட்டாது. அதுபோல, ஆன்மாக்களுக்குச் செய்ததுரோகம் சிவபெருமானால் ஒருபோழ்து பொறுக்கப்படினும் பொறுக்கப்படும்; சிவபெருமானுக்குச்செய்த துரோகமோ ஒருபோழ்தும் பொறுக்கப்படமாட்டாது. ஆகலின், சிவத்துரோகத்தினும் மேலாகிய துரோகமுமில்லை; சிவபுண்ணியத்தினும் மேலாகிய புண்ணியமுமில்லை.

தக்கன் சிவதூஷணஞ்செய்தபோது, அவியாசையாலும் அச்சத்தாலும் அபிமானத்தாலும் அதனைக்கேட்டுக்கொண்டிருந்த தேவர் முனிவர் முதலா

யினோர் வீரபத்திரக்கடவுளால் அப்போது தண்டிக்கப்பட்டமையோடமை யாது, பின்னரும் சூரன் முதலிய அசுரர்களால் நூற்றெட்டு யுகங்காறுஞ் சகிக் கலாற்ருத துன்பமடைந்தமை வேதோபபிருங்கணமாகிய மகாஸ்காந்தபுரா ணத்தில் விஸ்தரித்துப் பேசப்பட்டிருத்தலை ஆண்டுக்கண்டுதெளிக.

பரசமயிகளால் சைவசமயத்துக்கு இடையூறுநேருகின்றகாலத்திலே அதனைநீக்கிச் சைவஸ்தாபனஞ்செய்தல் சிவபுண்ணிய மென்றுயர்த்துச்சொல் லப்படுமனைத்தினும் சிறந்ததொருவிசிட்ட சிவபுண்ணியமென்பது,

"நிறுத்திடவல் லானமல னுனெறியை யென்று
மறுத்திடவல் லானவல மார்க்கமய லுற்றே
நிறுத்திலன் மறுத்தில னெனிற்கரிச நேச
மறுத்தவனே மாகைகரி சல்லவற மாமே."

எனச்சுப்பிரமணியக்கடவுள் அகத்தியமகாமுனிவரர்க்குச் செவியறிவுறுத்தி யருளிய பொருளையுடைய சிவதருமோத்தரச் செய்யுளாலும் பிறவற்றாலும் உணரக்கிடத்தலினாலன்றோ அவ்வுண்மை உணர்ந்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் சமணரால் சைவசமயத்துக்கு இடையூறு நிகழ்ந்துழி, திருவால வாய்ச் சொக்கநாதப்பெருமானை நோக்கி "ஞாலநின் புகழே யாக வேண்டு நான் மறைக ளேத்துஞ்-சீலமே யால வாயிற் சிவபெரு மானே" என்று வேண்டியருளினர்.

ஒரு காரியத்தை ஒருவன் தனக்குப்பயன்படுமாறு செய்தலாலும், பிறர் க்குப் பயன்படுமாறு செய்தலாலும் தனக்கும் பிறர்க்கும் பயன்படுமாறு செய் தலாலும் அக்காரியம் மூவகைப்படும். இம்மூவகைக்காரியங்களுள்ளும் தனக் கும் பிறர்க்கும் பயன்படுமாறு செய்யுங்காரியமே மகாவிசேஷமுடைத்தா கும். அக்கருத்தினுற்றான் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் யாவர்க்கும் பயன்படுமாறு அத்தியுத்தம சைவஸ்தாபன புண்ணியத்தை ஆலவாயண்ண லருட்டுணைபற்றிச்செய்தருளினர்.

கூன்பாண்டியர்காலத்திலே அவர் மனைவியாராகிய மங்கையர்க்கரசியா ரும் மந்திரியாராகிய குலச்சிறைநாயனருமாகிய சிவஞானச்செல்வர்கள் இரு வரும் ஒத்த கருத்தினேடு, பன்னிரு திருநாமங்களையுடைய சீகாழிப்பதியின ராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனரை மதுரைக்கு எழுந்தருளுவித்து, அந் நாயனர்வாயிலாகச் சமணர்களை வாதுகளிலே தோல்வியடையச்செய்து, சமண

சமயவிருளை ஓட்டி வைதிக சைவநெறிக்கின்றியமையாப் பெருஞ் சிறப்பின தாகிய திருவெண்ணீற்றொளி உலகமெங்குந் தழைத்தோங்குமாறு செய்த ருளியதூஉம் அப்புண்ணியமாட்சி கண்ணியே என்பதீண்டுணரற்பாலது.

சில காலத்துக்கு முன்னர்ச் சென்னையின்கண்ணே யிருந்த புரசை அஷ்டாவதானராகிய மஹா வித்வான் சபாபதிமுதலியாரவர்களுடைய மாணாக்கராயும் தமிழ்ப்பண்டிதராயு மமர்ந்த புரசை சுந்தரமுதலியாருடைய செல்வக் குமாரராகிய ம-ள-ள--ஸ்ரீ, சி. சு. ஏகாம்பரமுதலியாரும், அவர் மனைவியாராகிய சைவசித்தாந்த சமாஜத்து வனிதை வகுப்புக்காரியதரிசி ஆண்டாளம்மை எனப் பெயரிய மங்கையர்க்கரசியாருமாகிய இருவரும் தங்கள் உடல் பொருள் ஆவி மூன்றையும் சிவபெருமானுடைய கீர்த்தியைத் தமிழ்நாடெங்கும் பரப்புதலாகிய திருத்தொண்டுக்கு அர்ப்பணஞ்செய்யத் துணிந்தவர்களாய், வைதிகசைவத்தை உலகினர்க்குப் பல பிரகாரமாகப் பிரகாசிப்பித்தல் வேண்டும் என்னும் உயர்வொப்பில்லாத ஒரேகருத்திலே காகத்தின் இரண்டு கண்களுக்கும் மணி ஒன்றே அமைந்தாற்போலுள்ளார்கள். அவ்வம்மையார் தம் நாயகரோடு சிதம்பரம், மதுரை, காஞ்சிபுரம், திருப்பாதிரிப்புலியூர், சென்னைமாநகரம், திரிசிரபுரம், இராமநாதபுரம், புதுவை, தஞ்சையாநகரம், சிவகாசிமுதலிய பற்பல இடங்களிற் சென்று இனிய சைவப்பிரசங்கமழையினால், ஆங்காங்குள்ள சிவனடியார்கள்முதலிய யாவர்களையும் பரமானந்தசாகரத்தில் மூழ்கச்செய்து வருவாராயினர். இது நிற்க.

அவ்விருவரும், சிவஞானபோதமானது தமிழிலேயுள்ள ஞானசாஸ்திரங்களுளெல்லாம் மிகு கடினமுடையதாய், அதற்குள்ள சிற்றுரைமுதலிய கொண்டும் அதன் உண்மைப்பொருள் எவர்க்கும் புலப்படாதிருந்தமையை உணர்ந்து நெடுநாட் கவலைகொண்டிருந்தார்கள். பின்னர்த் திருவருளினாலே, ஸ்ரீ, பரங்கிரி நிவாசராய், வீணுகானபுரத்துச் சைவசமயபரிபாலனசபையாராற் செந்திநாதயோகிகள் என்றும், சென்னைபுரியின் இந்துலகுலேக சங்கத்தாராற் கிறிஸ்துமதகானன குடாரி என்றும், சூரியனார் கோயிலின் அதிவருணாசிரமவாசாரியவரிய சைவசமய பரிபாலக ஸ்ரீசிவாக்கிரயோகேந்திர ஞானசிவாசாரிய சுவாமிகளாதீனத்திலே தற்காலத்தில் மடாதிபதிகளாய் எழுந்தருளியிருக்கும் சிவாநுபூதிச்செல்வர்களாகிய ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரதேசிக சுவாமிகள் தாம் ஐயரவர்கட்கு விடுத்தருளிய திருமுகத்தில்,

"நிறைகல்வி தவமொழுக்கஞ் சான்றாண்மை
கண்ணேட்ட நெடுகு மன்பு
பொறைமேன்மைக் குலஞ்ஞான முதிர்ச்சியநு
பூதிமுதற் 'குணங்க ளெல்லாம்
குறையாமற் கொண்டசெந்தி நாதமறை
யோய்நின்னைக் குறித்தியா மிட்ட
மறைவாய்மைச் சித்தாந்த சிகாமணியென்
பெயரெவர்க்கும் வழங்க லாமோ."

எனப்பத்தியரூபமாகவரைந்ததன்மேலும்,

"நிகழ்காலத்திலே தங்களைப்போல வேதாகமசாரமாகிய மெய்கண்டநூற் சொரூப தடஸ்த சித்தாந்த நுட்பமறிந்தவர்களாய் நாம் இதுகாறும் ஒருவரையுங்கண்டதில்லை; அந்த நுட்பமறிந்த தங்களுக்குச் சித்தாந்தசிகாமணி என்கிற பெயரடுக்குமென்றளித்தேமன்றி முகமனுயளித்தேமில்லை" யெனக் கத்தியரூபமாக வரைந்தும் புகழப்பட்டவராகிய ஸ்ரீகாசிவாசி சாம்பவஸ்ரீ செந்திநாதையரவர்களைத் தங்களுக்கு ஆசாரியராகக்கொண்டு தீக்ஷைபெற்று, சிவஞானபோதப் பொருளை உலகினர் இன்னதென்றறியமாட்டாது மிண்டிய மாயாவாதச் சண்டமாருதத்தினாற் புடைப்புண்டுபோகாவண்ணம் பாதுகாக்கவேண்டுமென்று முறுகிவளர்ந்த அன்புமேலீட்டினால் அவர்கள் வாயிலாக அச்சிவஞானபோதத்தை வசனரூபமாக்குவித்தார்கள்.

அந்த வசனமானது வேதாகமமாதி அதிப்பிரபல பிரமாணங்கள் பலவற்றோடியைந்து மிகு சிறப்புற்று யாவர்க்கும் இன்பம் விளைக்குமாறு வரையப்பட்டமையான் சிவஞானபோதவசனாலங்காரதீபம் என்னும் பெயர்த்தாயிற்று.

அதன் மாட்சியை அதனை வாசிப்பவர்களே உணர்ந்து கொள்வார்களாதலின், மீட்டும் மீண்டும் அதன்சிறப்பெடுத்துப்பேசுதல் மிகையாகுமென்றித்துணையின்நிறுத்துகின்றேன்.

இந்த அரிய பெரிய சிவஞானபோத வசனாலங்காரதீபத்தைப் பரோபகார சிந்தைகொண்டு சிரத்தையோடு அச்சிடுவித்த மங்கையர்க்கரசியாரும் அவர் நாயகரும் அரோகதிடகாத்திரர்களாய் நீடுவாழ்ந்து, இதுபோன்ற ஏனைய வைதிகசைவஸ்தாபனத்துக்குரிய நூல்களை மேன்மேலும் லோகோபகாரமாக அச்சிடுவித்துப் பரப்பி வைத்தியநாதப்பெருமானுடைய திருவருளுக்குப் பாத்திரராகிப் பேரானந்தப் பெருவாழ்வுறுவாராக.

உ

சிவமயம்

சைவசித்தாந்தமகாசமாஜ உதவிச்சபைத்தலைவர்

ஸ்ரீமான்

# ஜெ. யெம். நல்லசுவாமிப்பிள்ளையவர்கள்

எழுதியது.



சிவஞானபோதவசனாலங்காரதீபம் என்னும் இந்நூல் எப்போது வெளிவருமென்று அநேக அன்பர்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்றார்கள். வெளிவந்தவுடன் கண்ணுறின் அன்பும் ஆநந்தமும் அவர் எய்துவர் என்ப தெம்மனோர் துணிபு. அது நிற்க.

சித்தாந்தநூல்களிலே மிகவும் குய்யமானதும் கடினமானதும் சிவஞானபோதம். அந்நூல்களுக்கெல்லாம் முதல் நூலாய் நின்றதும் சிவஞானபோதம். அந்நூல்களின் கருத்தையெல்லாம் தொகுத்து மிகச்சிறியவளவிலே அடக்கியுள்ளதும் சிவஞானபோதம். எல்லா வேத வேதாந்த சித்தாந்தங்கட்கும் திறவுகோலாயுள்ளதும் சிவஞானபோதம். இந்நூலின் சொல்லையும் பொருளையும் துணையாகக்கொண்டு எழுந்தவைகளே மற்றெல்லா நூல்களும். அதுமுதல் இதுவரை இந்நூலின் கருத்தை விளக்கித் தெரிக்கவந்தவைகளே மற்றெல்லா நூல்களும். மற்றெல்லா நூல்களினுமுள்ள உண்மைப்பொருள்களெல்லாவற்றையும் இந்நூலிற்காணலாம். இந்நூலிலில்லாத பொருள்கள் மற்றெல்லா நூல்களிலும் இல்லையென்பதொருதலை.

நாம் ஆரம்பத்திற் சித்தாந்தநூல்களைப் படித்து ஆராயத்தொடங்குங்கால், நமக்கு ஆசிரியராயிருந்த பெரியோர் சிவஞானசித்தியாரையே முதலில் ஆராய்ச்சிசெய்யும்படி சொன்னார்கள். எனினும், அந்நூல் மிகவும் அகன்றிருத்தலின் பலநாளின் முற்றுமென்பதையும், இந்நூல் நுணுகியிருத்தலின் சிலநாளின் முற்றுமென்பதையும் ஓர்ந்து, இந்நூலின் கருத்தினை நுண்ணிய காலத்திலே உட்கொள்ளலாமென்கிற பேரவாவினாலே, இந்நூலைப்படித்து அதன்பயனாக இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கலாயினோம். அவ்வாறியற்றியபொழுது எண்ணியகாலத்துள் முடியாமையால், நாம் எடுத்துக்கொண்ட பிரயாசை நாமே அறிவோம். அன்றி நம் மெய்கண்டநாதரும் அறிவார்; மற்றோரறியார். ஆனாலும் எடுத்துக்கொண்ட முயற்சி வீணாகவில்லை. அப்பிரயாசையாலும் முயற்சியினாலும், சித்தாந்தத்தின் திறவுகோலை ஒருவாறு கைப்பற்றினோம். நெடுநாள் நம்முளத்திற்புகுந்திருந்த ஐயம் திரிபுகளும் அன்றே விலகின. நம் சித்தாந்த உண்மைகளைப் பிறர்க்கு எடுத்து ஓதவும் உரைக்கவும் அன்றே தெளிந்தேம். இவ்வுரைகளால் நாம் தற்சிறப்பைக்

கூறப்போந்ததாக நண்பர்கள் கொள்ளார்கள். இந்நூலின் பெருமையினையே உணர்த்தப்போந்ததாகவே கொள்ளுவர் என்பது திண்ணம்.

அக்காலத்திற்றானே இவ்வரியநூலை யாவரும் எளிதில் உணருமபொருட்டு எளிய வசனநடையில் எழுதவேண்டுமென்பது எமதாசிரியருக்கும் கருத்தாயிருந்தது. அன்றுமுதல் இன்றுவரை எமக்கும் கருத்துண்டு. எனினும், 'இன்னபொழுது இன்னதலத்து இன்னவினை இன்னரால் முடியவேண்டுமென்றறிந்து அவரால் அதனைப் பின்னமறக் கூட்டுவிக்கும் பிரா'னருளால், இவ்வரிய பெரிய காரியம், நமது இன்னொரு ஆசிரியராகிய ஸ்ரீமத் காசிவாசி செந்திநாதையரவர்களாலும், நமது ஆப்தாத்னங்களாகிய ஸ்ரீமான் ஏகாம்பர முதலியார், அவர் அன்புடைய மனைவியார் ஸ்ரீமதி ஆண்டாளம்மையென்னும் மங்கையர்க்கரசியார் ஆகிய இருவராலும் இனிது முற்றுவிக்கப்பட்டமையால், நமக்கு அது எவ்வளவோ மகிழ்ச்சியை உண்டாக்கிற்று.

எமக்குத் தெரிந்தமட்டில், இத்தமிழ்நாட்டில், இருமொழியினும் வல்லுநராகி, அதிலும் வேதாகமநூல்களிற் பயின்று, நம்மாகமாந்தங்களையும் அதன் பூர்வோத்தரங்களையும் பூர்த்தியாயுணர்ந்து, அதிலும் அவ்வுண்மைகளை நம்மனோர் உணரும்பொருட்டு அநேகக் கணக்கான நூல்களையும் பத்திரிகைகளையும் பதிப்பித்து நம் சைவத்தை வளர்த்து வந்தவர்களில், நம்மையரவர்களைவிட இன்னும் பெரியாரைக் கண்டிலம். நம் சைவத்துக்குப் பூர்வாசாரியராகிய ஸ்ரீ நீலகண்டசிவம் செய்தருளிய வேதாந்தசூத்ரபாஷ்யத்தைத் தமிழ் விருத்தியுடன் வெளிப்படுத்தியதொன்றே நம்மையரவர்களின் புகழை நம் வடமொழி தென்மொழி வாழ்ந்திருக்கும்வரை நிலைநாட்டுமென்பதற்கு ஐயமின்று. *கண்ணுதலாரருளிச்செய்த வடமொழிப்பெருமையினை உணர்ந்து எத்துணைப் பெருமுயற்சிசெய்து அதனை உலகர்க்கு உபயோகப்படுத்தினரோ, அவ்விதமே அக்*கண்ணுதலாரருளிச்செய்த தமிழ்மொழிப்பெருமையினை உணர்ந்து அதிக பெருமுயற்சிசெய்து அத்தமிழ்மொழியிற் சிறந்தநூலாகிய சிவஞானபோதத்தையும், 'வசனாலங்காரதீபம்' என்னும் அணியினால் அழகுசெய்து உலகர்க்கு உபயோகப்படுத்தினார்கள். இதனாலும் இவர்கள் புகழ் என்றும் நிலைபெற்றதென்பதே திண்ணம்.

---

* * வடமொழி தமிழ்மொழி கண்ணுதலார் அருளிச்செய்தமை,

"மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
வாரிய முந்தமி ழும்முட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே"

என்னுந் திருமந்திரத்தாலறிக. இக்கருத்துப்பற்றியே "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்" என்றார் பிறரும்.

இனி இந்நூலின் பெருமையினை நுவலுவது மிகையாகும். எதனாலென்றால், பொருள் அட்டவணையைப் பார்த்த அளவிலே இன்னின்ன அடங்கி இருப்பன என்பது வெளியாமாகலானும், நூலைப்படிப்போர்க்குத் தானே அதன் மாட்சி அறியக்கிடத்தலானுமாம் என்க. ஆயினும் ஒன்றைமட்டும் எடுத்து உரைக்காமற்போவதற்கு மனம் இசையவில்லை; யாதெனில்:—

தென்மொழியிற் பயில்வோர்க்கு வடமொழிப்பயிற்சி இல்லை: வடமொழிவல்லுநர்க்குத் தென்மொழியில் தேர்ச்சியில்லை; ஆகவே சைவநூல் பயின்று வருவோர்கள் சைவசமயம் வேதாகம ஸ்மிருதி புராண இதிகாசங்களாற் பிரதிபாதிக்கப்பட்டதெனச் சொல்லிக்கொண்டுவரினும், வடமொழியில் உள்ள ஆதாரங்களை எடுத்து ஆளாமலும், இவ்விருமொழியிலும் உள்ள நூல்களுக்கு ஒற்றுமையை எடுத்துக்காட்டாமலும் வாளாபோயினர். அங்ஙனமாகவும், ஐயரவர்களே வடமொழியிலுள்ள ஆதாரங்களை எடுத்தாண்டும், அவ்விருமொழிகளினுமுள்ள நூல்களுக்கு ஒற்றுமையை எடுத்துக்காட்டியும் விளக்கினார்கள். உமாபதி சிவம், சிவாக்கிரயோகிகள், சிவஞானயோகிகள் முதலிய மகான்கள் இவற்றை வெளிப்படுத்தியுள்ளார்களாயினும், நாளுக்கு நாள் இப்பயிற்சி மிகவும் குன்ற, சிலர் தற்காலம், சைவமதமும், சைவநூல்களும், அதினும் சிவஞானபோதமும் தமிழுக்கே யுரித்தெனக் கொள்கின்றார்கள். இது உண்மையாயின் எவ்வளவோ நமக்கு மகிழ்ச்சியினை யுண்டுபண்ணும். ஆயினும், அதற்குத் தகுந்த ஆதாரத்தை யாருங்காட்டவில்லையென்றே கொள்கின்றோம்.

இக்கருத்து எதுமுதல் உற்பத்தியாயினதென்பது எமக்குத் தெரியும். காலஞ்சென்ற திருவனந்தபுரம் பண்டிதர் பி. சுந்தரப்பிள்ளையவர்கள். எம். ஏ. எம்முடைய சிவஞானபோத ஆங்கிலமொழிபெயர்ப்பைப்பற்றி "ஹிந்து" என்னும் சென்னைத் தினசரிப்பத்திரிகையில் எழுதிய பதிப்புரையிலேயே இக்கருத்து முதலில் வெளிவந்தது. அதற்குமுன் இக்கருத்தை யாரும்வெளியிடவில்லை. அப்பொழுதே நாம் பிள்ளையவர்களுடன் தர்க்கித்து மறுத்துள்ளேம். அதுமுதலே சில நண்பர்கள் இக்கருத்தைத் தழுவிவருகின்றார்கள்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பது ஒத்தாதலின், இவர்கள் கருத்து உண்மையாயின் கொள்ளத்தக்கதே. ஆயின், அவர் தங்கருத்துக்கு ஆதாரமாகக் கூறுவதென்னையெனின், மெய்கண்டதேவர் தம்நூலில் கஉ—சூத்திரங்களையும் தாம் மொழிபெயர்த்ததாகச்

சொல்லவில்லை என்பதொன்றேயாம். இது இவ்வளவு பெரிய ஆதாரமாயின், அவர் காலத்தவர்களும் சிஷ்யகூட்டத்திற் சேர்ந்தவர்களுமாகிய அருணந்தி சிவாசாரியார் மனவாசகங்கடந்தார் என்னும், இவர்கட்கு விளங்காத தொன்றுகுமோ. இவர் விளம்பிய உண்மையை ஆகமாந்தமென்று அவர்கள் ஏன் கொள்ளவேண்டும். மேலும், சித்தியாரிற் காணப்படும் அநேக விருத்தங்கட்கு மூலம் ஆகமாந்தங்களிலே காணப்படுகின்றது. இதனுண்மை சிவஞானசித்தியார்க்கு ஆகமமேற்கோள் என்னும் தொகுப்பிலும் காணலாம். பன்னிரண்டு வடமொழிச் சூத்திரங்களும் தமிழிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டனவாகுல், அநேக கோடி கிரந்தங்களடங்கிய உஅ—ஆகமங்களும் உபாகமங்களும் எதினின்றும் மொழிபெயர்க்கப்பட்டனவென்றால், அதற்கு விடை யாதோ? அதிலிருந்தெனில், இவர்கள் வாக்குத்தான் பிரமாணமோ? வேறுண்டோ? உண்டெனின் யாது? மேலுமிவ்வாசகங்கள் கன்னியாகுமரிமுதற் காஸ்மீரம் வரைவழங்கப்பட்டுவருவதும் அவர் அறியார்போலும்! ஒரு ஜெர்மன்பண்டிதர் நாம் காணேமென்று கைவிட்ட அநேகசைவாகமங்களையும் சைவநூல்களையும் இராஜபுடானுமுதலிய வடதேசங்களிலே கண்டு வியப்புற்றதாக நம்மிடம் அது, கூறியுள்ளார். இக்கருத்தேயன்றி இன்னும் வியப்பைத் தருவதொன்றுண்டு. ஆங்கிலநெறியில் நவீன ஆராய்ச்சியில் இறங்கியுள்ளார் ஒருவர், உமாபதிசிவத்துக்கு முன்னர்ச் "சைவசித்தாந்தம்" என்ற சொற்றொடரே வழக்கத்தில் இல்லையென்று கூறியதேயாம்.

இன்னனவாசங்கைகளெல்லாம், நம்மையரவர்கள் நூலினுல் மெய்ம்மையிற் பறக்கக் காணலாம். வேண்டிய அளவில், தமிழ்நூல்களிற் கண்டவற்றிற்கெல்லாம் வடமொழிப்பிரமாணங்கள் காட்டியுள்ளார்கள். 'சித்தாந்தம்' என்ற பதம் அநேகமாய் ஆகமநூல்களிற் காணப்படுதலை இந்நூலில் வரைந்துள்ளார்கள். சைவம், சித்தாந்தம், ஆகமாந்தம் என்ற சொற்கள் ஒருபொருட் பன்மொழிகளாகின்றன.

இன்னுமொன்று; மேலே குறிப்பிட்ட ஆராய்ச்சிக்காரர், தம் சரித்திர ஆராய்ச்சிவரையிற் சந்தானகுரவர்கள்வரலாற்றிற் காணப்படும் சில அம்சங்களைக் கட்டுரையாகக் கொள்கின்றார். இவர் நாம் சித்தாந்ததீபிகையில் எழுதிய அப்பர்சுவாமிகளின் திவ்யசரித்திரத்தில் எடுத்துக்காட்டியிருக்கும் பேர்போன ஆங்கிலசரித்திர ஆசிரியரான ஜே. எ. பிரௌட் அவர்கள் வசனத்தைக்கண்ணுற்றிருப்பாராகுல் இவ்விதமாய் எழுதியிரார். அவ்வாசிரியர், சமயசரித்திரங்களை மற்ற ஜீவியசரித்திரங்களின் உண்மைகளை அளந்தறிவதுபோல் அறியக்கூடாதென்றும், சமயசரித்திரங்களில் என்றுமழியாத உண்மைகள் புலப்படுமேல் அவைகளே போதுமென்றும் கூறுகின்றார்.

அவ்வளவினன்றி ஒவ்வொரு சமயத்தாரும் இறைவனருள் என்பதொன்று உண்டு என்று ஒப்புக்கொள்ளுதலால், அவனருள் விளங்குமாறும்,

ஆட்பா லவர்க்கரு ளும்வண்ணமு மாதி மாண்புங்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றி வைகேட்க தக்கார்

என்றபடி அநந்தவிதமாகுமாம்; நம் ஆராய்ச்சிக்காரர் இச்சமய உண்மையைக் கைக்கொள்ளாது தம்மனம் போனவாறு கூறலாமேயொழிய உண்மை உணர்ந்து கூறவல்லுநராகார் ஆகார்.

இனி, நம் முடிவுரை:—

நம்மையர் அவர்கள் மெய்வருத்தம் பாராது, கைம்மாறு கருதாது, நம்மவர்களை உய்விக்கும்வண்ணம் செய்யும் இவ்வுழைப்பிற்கு நம் முழுமனத்தினுடன் நன்றி கூறுதலன்றிப் பிறிது கைம்மாறு கண்டிலம்.

இந்நூலை ஆக்கித்தந்தவர்களாகிய நம்மையாவர்களுக்கு நாம் எவ்விதமாகக் கடமைப்பட்டுள்ளேமோ அவ்விதமாக இந்நூலை அச்சிட்டு உபகரித்தோர்களாகிய முதலியாரவர்களுக்கும் அம்மையார்க்கும் நாம் கடமைப்பட்டிருக்கின்றோம்.

சில வருடங்களாக, இவ்விருவரும் நம் சைவநூல்களை அதிகமாகப் பொருட்செலவு செய்து கற்றும் கேட்டும் வருவதுடன், சைவசபைகள் கூடும் இடங்கட்கெல்லாம் சென்று அரிய பிரசங்கங்களைச் செய்தும், அவ்வளவினில்லாமல் அவ்வரிய பிரசங்கங்களைப் பத்திரிகைவாயிலாக மிகப் பணச்செலவுசெய்து வெளிப்படுத்தியும் உதவிபுரிந்துள்ளார்கள். இவ்வுழைப்பினுலெல்லாம் அவர்கள் ஓர் பிரதிப்பிரயோசனம் அடையவேண்டி முன்வந்தவர்களல்லர். நம்சமயத்திலும் சாத்திரங்களிலும் நம் பெருமானிடத்திலும் வைத்த அயரா அன்பே அதற்குக்காரணம். இறைவன் திருவருளை முன்னிட்டு இச்சிவபுண்ணியத்திற்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்துள்ளார்கள். திருவருளை முன்னிட்டே இந்நூலை இயற்றுவித்தும், அச்சிடுவித்தும் நமக்கு உபயோகமாம்படி செய்துள்ளார்கள். இவ்வரிய செயல்களுக்கெல்லாம் நாம் இயற்றக் கூடிய கைம்மாறு யாதென்றால், இவ்விருவர்களும் இத்திருப்பணியின்பொருட்டு இடைவிடாது என்றும் உழைக்குமாறு நீடித்த ஆயுளும், தேகவன்மையும், மனோபலமும் என்றின்னோரன்னவற்றை அருள்புரியுமாறு திருவருளைப் பிரார்த்திக்கவேண்டியதே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்

# சிவஸ்ரீ-கலியாணசுந்தரயதீந்திரரவர்கள்

எழுதியது.



கைலைக்கல்லாலவிருட்சத்தின்கீழ் எழுந்தருளுந் தென்முகத்தெய்வமாகிய குருமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய பன்னிரண்டு வடமொழிச்சூத்திரங்களடங்கிய ஞானசாஸ்திரம் சிவஞானபோதமாம். இது ஞானதானவள்ளல்களாகிய அகச்சந்தான பரம்பரையில் வந்து, அத்துவிதமெய்கண்டதேவர் மூலம் செந்தமிழ்ச் சூத்திரமாக உலகிற் பரவியது. திருநெறித்தமிழ்முறை பன்னிரண்டின் கருத்தினைப் பொதிந்துள்ளது. இச்சாஸ்திரத்தினுக்கு மாதவச்சிவஞானயோகிகள் ஒரு சிற்றுரையும் பேருரையாகிய பாடியமும் எழுதி வைத்தனர். இவையிரண்டும் விஸ்தாரமான பரிபாஷாக்கலப்பாயிருத்தலினாலே, இலக்கியவிலக்கணம் நன்குகற்ற வித்துவான்களிற் சிலரேயன்றி மற்றையர் பலரும் இச்சாஸ்திரத்திற் பழகாது வாணாளை வீணாளாய்க் கழித்து வருகின்றனரெனத் தேர்ந்து யாவருமெளிதிற் கற்று வைதிகசைவசித்தாந்தவுண்மையறிந்துய்தற்பொருட்டு, ஸ்ரீநீலகண்டபாஷியம் மொழிபெயர்த்தருளியவரும் சித்தாந்தசிகாமணியுமாகிய காசிவாசி சாம்பவஸ்ரீ செந்திநாதையரவர்களைக் கொண்டு மேலே சுட்டிய நூலுரைகளைச் சிவஞானபோதவசனாலங்காரதீபம் என வசனரூபமாக இயற்றுவித்து ஷை சுவாமிகளிடத்து அனுக்கிரகம் பெற்றவரும், சைவசித்தாந்தமகாசமாஜத்தின் வனிதையர்வகுப்புக்காரியதரிசியும், கம்செரியட் டிபார்ட்மெண்டில் ஏஜெண்ட் உத்தியோகத்திலிருந்து இப்போது உபகாரச்சம்பளம் பெற்றுவருபவராகிய ஸ்ரீமத் சி. சு. ஏகாம்பரமுதலியாரவர்கள் மனைவியாருமாகிய ஆண்டாளம்மாளெனப் பெயரிய ஸ்ரீமதி மங்கையர்க்கரசியம்மாள் உலகோபகாரமாக அச்சிட்டு வெளிப்படுத்திச் "செய்யாமற் செய்த உதவிக்கு-வையகமும் வானகமு மாற்றலரிது" என்னுந் திருக்குறளினுக்கு இலக்காய்நின்றனர். இத்தகைய வசன நூலானது தமிழ்நாடு முழுவதும் பரவும்படி சைவாபிமானசீலர்களியாவரும் செய்யின், இஃதோர் சிவதருமமாம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

**பேப்பர் காரன்சி டிபார்ட்மெண்டு உத்தியோகத்திலமர்ந்திருந்து**

இப்பொழுது உபகாரவேதனம்பெற்று

**ஆறுதலடைந்திருப்பவராகிய**

சித்தாந்தஞானநிஷ்டராம்

சித்தாந்தசைவசரபம் சோளங்கிபுரம்

## ஸ்ரீ ல ஸ்ரீ

## சிவ. அருணகிரிமுதலியாரவர்கள் எழுதியது.

இந்நிலவுலகத்திலுள்ள சமயங்கள் பலவற்றுள்ளும் மிகச்சிறந்ததும், உயர்வொப்பற்றதும், தன்றன்மை என்றுங் குன்றாததும், பரம்பொருளின் கருணைவிளைவாகிய அருவம், அருவுருவம், உருவம் என்னும் தடஸ்தலட்சணங்களை விளக்குவதற்குத் தலையாயதுமான சமயம் சைவசித்தாந்தம் ஒன்றேயாம். இச்சமயத்திற் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களின் கொள்கைகள் உள்ள உள்ளவாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. அன்றியும் பலசமயங்கள் கூறும் பல பொருள்களின் இயல்புகளைத் தன்னகத்தே யடக்கிக்கொண்டு தானொன்றே அவையனைத்தினும் முதன்மைபெற்றுச் சமய அரசாய் விளங்கலின் சித்தாந்தசைவம் எனவும் வேதசிவாகமங்களாற் புகழப்பெற்று நிற்கின்றது. இத்தகைய அரிய பெரிய சைவசமயத்துக்கும், அச்சமயத்தினெய்தி அதனினுமுயர்ந்த சுத்த சிவத்தின் நிலையைப் போதிக்கும் சித்தாந்தநெறியைக் கடைப்பிடித்தற்கும் சிறந்த சாத்திரமாயுள்ளது சிவஞானபோதம் என்னும் சித்தாந்தநூலேயாம். இந்நூல் முற்றுமுணர்ந்த முதல்வன்றிருக்கரத்தில் எஞ்ஞான்றும் நீக்கமற விளங்கியிருக்கின்றது. அல்லாமலும் இதற்கிணையாயதொருநூல் பிறிதில்லை. இஃதொன்றே ஒன்றுக்கொன்று மாறுதல்போலப் பொருளைப் புலப்படுத்துகின்ற ஆகமவேதங்கள் அவ்வாறு விரோதமுறாமையைச் செவ்வனே தெரித்து உண்மை ஞானோபதேசநூலாய் விளங்குகிறது. இது நம் மெய்கண்டசிவத்தின்றிருவருட்பெருக்கால் இவ்வுலகத்திற் பரந்திருக்கின்றது. இந்நூலுக்கு இதுகாறும் வெளிவந்த சிற்றுரையும் பேருரையும் மிகக் கடினநடையிலிருப்பதால், அக்குறையை யகற்றுவானிரங்கித் தம்முடைய அறிவில் இளமைதொட்டு

ஓங்கிவளர்ந்த உண்மை யுணர்ச்சியினல் அபிமானம் மிக்கு, அதனையே கடைப்பிடியாகப்பிடித்து, எவ்விடத்தும் உண்மைஞானம் பாவுதற்குவேண்டும் முயற்சிகளையே தலைநின்று செய்துவருகின்ற சிவஞானச்செல்வியாகிய ஸ்ரீமதி ஆண்டாளம்மையார் என்னும் மங்கையர்க்கரசியார் சித்தாந்த சிகாமணியாகிய காசிவாசி ஸ்ரீலஸ்ரீ செந்திநாதையர் அவர்களைக்கொண்டு சிவபெருமான் றிருக்கரத்திற்றரிக்கப்பெற்ற சிவஞானபோதம் என்னும் அரியநூலை, சிவஞானபோதவசனலங்காரதீபம் எனப் பெயரிய நூலாக வசனநடையில் யாவரும் எளிதிலுணருமாறு முன்னோர் கருத்துக்குச் சிறிதும் மாறுபாடின்றி இயற்றுவித்துச் சைவபரிபாலனஞ் செய்துவருகின்றார். இந்நூல் சிவபரமாத்வாவைப் பரம்பொருளாகக்கொண்டு வழிபடும் சைவர்கள் ஒவ்வொருவர் கரத்திலும் இருக்கவேண்டியது அத்தியாவசியகம். முக்கியமாய் இலக்கணம், தருக்கமுதலிய கருவிநூல்களில் ஆராய்ச்சியில்லாதார்க்கு இதுபோன்ற சேமநிதியாயுள்ள சித்தாந்தவசனநூல் வேறுகிடையாது; இது உண்மை. சிவதருமமும், சித்தாந்தசைவமும் நீடூழிவாழ்க.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உரிமையுரை.

யான் பெங்களூரில் 1900-ம் 1902-ம் வருடங்களில் இருந்தபோது, சித்தாந்தசைவ சரபம் என்று புகழப்படும் ஸ்ரீமத்-சிவ. அருணகிரிமுதலியாரவர்கள் இயற்றிய சித்தாந்த விளக்கப்புஸ்தகமும், துண்டுப்பத்திரிகைகளும் எனக்குக்கிடைத்தன. அவற்றைக் கண்ணுற்ற மாத்திரத்தே அவர்களுடைய சித்தாந்தநூற்பயிற்சியும், உழைப்பும், ஊக்கமும் எனக்குத் தெரியவந்தன. யான் கமிசரியேட் டிபார்ட்மெண்டில் உத்தியோகமாயிருந்த சிகந்திராபாத்தில், அவர்கள் உத்தியோகஸ்தர்களா யமர்ந்துகொண்டு சித்தாந்தஞான போதம் எனப் பெயரிய சங்கத்தை ஸ்தாபனஞ்செய்தும், அதிற் சைவோபந்நியாசங்கள் செய்தும் சைவசமயாபிவிருத்தி செய்துகொண்டு வருவதாக அறிந்தேன்.

யான் உத்தியோகநிமித்தமாய்ச் சீனதேசத்துக்கு மாற்றப்பட்டுப்போய் ஆங்கு மூன்று வருடமிருந்து, 1905-ம்ஞு இந்தியாவுக்கு மீண்டுவந்த காலத்திலே, சென்னையில் மூன்றுமாசம் தங்கியிருந்தேன். அப்போது யான் அவர்களைத் தரிசிக்க நேர்ந்தது. அவர்களோடு சம்பாஷித்தகாலத்தில் யான் மாயாவாதத்தில் மயங்காது நிற்றற்கும் சிவபக்தியில் ஓங்கி நிற்றற்கும் வேண்டப்படும் பற்பல உபதேச உதவிபுரிந்தார்கள். அவர்கள் பிரசாரணஞ் செய்த பன்னிருதிருமுறைத்திரட்டில் அடங்கிய திருவாசக. விஷய சூசனங்களும் பிரமாணங்களும் எனக்குப் பெரும் பிரயோசனத்தை விளைத்தன. அவர்களெடுத்துக்கொண்ட பெருமுயற்சியினுற் பதினுன்கு சித்தாந்தசாஸ்திர மூலம் ஒரே புஸ்தகமாய் வெளிவந்து அனைவர்க்கும் பயன்படுவதாயிற்று.

அஃதன்றி அவர்கள் தமது உத்தியோக நிமித்தமாய் இரங்கோன் பேபர்கரன்சி டிபார்டுமெண்டிற்கு மாற்றப்பட்டுப் போகும்வரையும் யான் சந்தேகித்து அவ்வப்போது விடுக்கும் வினக்களுக்கெல்லாம் சிறிதும் சிரமம்பாராது தக்கவிடையளித்துப் பேருதவி புரிந்தார்கள்.

பின்னர்த் திருவருட் சகாயத்தினுற் சாம்பவஸ்ரீ, காசிவாசி. செந்திநாதையரவர்களை அடுத்து அவர்களைக்கொண்டு சிவஞானபோத வசனலங்காரதீபம் இயற்றுவித்து, அதனை அச்சியற்ற வேண்டுமென்பதுபற்றி இரங்கோனுக்குக் கடிதம் எழுதியபோது, அவர்கள் "கவலைகொள்ளவேண்டாம்" என்று எனக்குத் தைரியம் பிறப்பித்ததோடமையாது, அச்சிவஞானபோதவசனலங்காரதீபம் வாங்குமாறு நூறு கையொப்பக்காரர்களைச் சேர்த்து முன்னர்ப் பணம் வாங்கிக் கொடுத்தார்கள். பின்னரும் கையொப்பக்காரர்களைச் சேர்த்து எனக்கு ஊக்கஞ்செய்து வருகின்றார்கள். காகிதக்கிரயம் முன்னிலும் மூன்று மடங்கு அதிகரித்திருக்கும் இவ்வேளையிற் புஸ்தகம் அச்சிடுவது முடியாதகாரியமாயிருந்த விடத்தும், தேகம் அநித்தியமாதலின்,

''அன்றறிவா மென்னு தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றுத் துணை.''

என்று உத்தரவேதமுடையார் கூறியாங்கு, அப்புஸ்தகவேலையை எப்படியேனும் முடித்துவிடவேண்டும் என்னும் கருத்தினோடு என் உயிர்த்துணையாகிய ஸ்ரீமத், சிவ. அருணகிரிமுதலியாரவர்கள் பேருதவியை முன்னிட்டு அச்சிட்டுப் பூர்த்திசெய்வித்தேன்.

''செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.''

என்னுந் திருவாக்குப்பிரகாரம் சித்தாந்தசைவம் என்னும் பெயரைத்தானும் கனவினுங் கேட்டிராத சிகந்திராபாத் இரங்கோன்முதலிய நகரங்களிலே மிகப் பிரயாசையோடு வைதிகசைவசபைகளை ஸ்தாபனஞ்செய்து, அவற்றில் வாரந்தோறும் உபந்நியாசஞ் செய்து சைவமெய்ப்பயிரானது தழைத்தோங்குமாறு செய்யும் இவ்வன்பர்கள் செய்த நன்றியானது எக்காலத்தும் எவ்விடத்தும் என்னாலும் பிறராலும் மறக்கற்பாலதொன்றன்று.

''எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.''

எனது அன்பர்களாகிய வள்ளலாரவர்களுக்குச் சிவபிரான் அரோகதிடகாத்திரத்தையும், நீடிய ஆயுசையும் பிரசாதிப்பாராக. மேலும் இவர்கள் யான் பிரசுரிக்குமாறு உத்தேசித்திருக்கும் நூல்களுக்கும் வேண்டியவாறு உதவிபுரிவார்களென்று நம்பி எதிர்பார்த்திருக்கின்றேன்.

இங்ஙனம்,
அன்பன்
சி. ஏகாம்பரன்.

திருச்சிற்றம்பலம்.

## மெய்கண்டதேவநாயனுர்தோத்திரம்.

விநாயகபுராணம்.

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிவெலா மகப்படுத் தவற்றி
னெறியெ லாம்விளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம். 1

சேதுபுராணம்.

அல்லாத பரசமய வலகைத் தேர்விண் டகலவகல் புனற்பெண்ணை யயல்சூழ் வெண்ணெய்ப், பொல்லாத விபமுகத்துப் புத்தே டன்பாற் புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த வாய்ந்து, நில்லாத நிலை யிதுமற் றென்று மொன்ருய் நிற்குநிலை யிதுவெனமெய்ந் நெறிதேர்ந் தியாரும், வெல்லாத சிவஞான போதஞ் சொன்ன மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம். 2

அருணகிரிபுராணம்.

வேதத்தி னரும்பொருளை விமலனரு ணந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபா
லோதித்தேர்ந் தருந்தமிழா லெமக்குணர்த்தி யெம்முனஞ்
சேதித்த மெய்கண்ட தேவனடி சிந்திப்பாம். 3

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதசூத்திர

# முதற்குறிப்பகராதி.





## சிவஞானபோத சூர்ணிகை

## முதற்குறிப்பகராதி.



## சிவஞானபோதசூர்ணிகைமுதற்குறிப்பகராதி.





சிவமயம்.

# சிவஞானபோதவசனாலங்காரதீப

# விஷயசங்கிரகம்.

## முதலாஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.



### முதலாஞ் சூர்ணிகை.



### இரண்டாஞ் சூர்ணிகை.



### மூன்றாஞ் சூர்ணிகை.

## இரண்டாஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.

சிவபிரான் உயிர்கண்மாட்டுக் கலப்பினால் உடலுயிர்போல வேறின்றாய், பொருட் டன்மையாற் கண்ணின் ஞாயிறுபோல வேறுமாய், உயிர்க்கு உயிராதற்றன்மையாற் கண்ணின் ஆன்மபோதம்போல உடனுமாய் நிற்கை.—சிற்சத்தி ஆணை எனப்படுவது.— சிவபெருமானது தடஸ்தலக்ஷணம் எனப்படும் பொதுவியல்பு. பக்கம் உசு.

## முதலாஞ் சூர்ணிகை.

நஞ்ஞுக்கு ஆறு பொருள்.— சாமியமே அன்மைப்பொருள்.—இதற்குப் பிர மாணம் பரிபாஷேந்துசேகரம், பதஞ்சலிமஹாபாஷ்யம்.—நதுவிதீயம் என்றது யசுர் வேதம்.—அதனை அத்துவிதம் என்றது சாந்தோக்கியம்.—உருத்திரரே சத்து.—எண் ணுப்பெயர்மேல் வந்த அகாரம் இன்மைப்பொருளினும் மறுதலைப்பொருளினும் வரை யறுத்துநில்லாமை.—ஆன்மாவுஞ் சிவனும் அபேதமாயும் பேதமாயும் நிற்கை.—சிவபெ ருமான் ஆன்மாக்களுக்கு வேறாயும் வேறன்மையாயும் நிற்கை.—சிவபெருமானும் ஆன் மாக்களும் உடனாயும் உடனாகாமையும் நிற்கை.—சிவபெருமான் அபேதமுதலிய மூன் றாய் ஒருங்குநிற்றலை உணர்த்துதற்கு உதாரணம்.—மும்மதத்தினர் கொள்கை உடலு யிர், கண்ணருக்கன், அறிவொளி என்னும் மூன்று உவமைகளால் மறுக்கப்பட்டமை.— இருக்குவேதத்துச் சிவோஹம்பாவனை.—பிருகதாரணியத்துச் சிவோஹம்பாவனை.— சர்வஞ்ஞானோத்தரத்துச் சிவோஹம்பாவனை.—சிவோஹம்பாவனையினாற் கிருஷ்ணர் யானே உலகெலாமாயினேன் என்றமை.—அவர் அர்ச்சுனர்க்கு விசுவரூபம் தரிசிப்பித் தமை.—கிருஷ்ணர் சிவோஹம்பாவனையினாலே தமக்கு நிவேதிக்கப்பட்டவற்றைச் சிவ பிரான்பால் காட்டினமை. பக்கம் உசு.

## இரண்டாஞ் சூர்ணிகை.



ஆன்மாக்களுக்கு இரு கன்மங்களைபுஞ் சிவபெருமான் தமது ஆஞ்ஞாசத்தியினால் அருளுகின்றமை.—இருவினை.—மாயையினுண்மை.—வினை.—அது உயிர்க்குப் பய னாதல்.—மறுசெனனத்தில் வினை ஏறுகை.—சிவபெருமான் ஆன்மாக்களுக்கு வினைப் பயன்களை நுகர்விக்கை.—ஆணவம் செம்பிற் களிம்புபோல ஆன்மாவைப்பற்றினமை.— மூலமலத்தின் காரியம்.—மாயையின் காரியம்.—இரு வினையின் காரியம்.—திரோதான சத்தி மலம் எனப்படுகை.—பாசம் ஐவகை.— பாசத்தினுண்மை.—சுத்தமாயை.— சுத்தமாயையினின்று சூக்குமைமுதலியன.—சுத்தமாயையினின்று சிவதத்துவம் ஐந்து.- அசுத்தமாயையினின்று வித்தியாதத்துவம் ஏழு.—வித்தியாதத்துவசிவதத்துவங்களுக் குச் சுருதிப்பிரமாணம்.—அவற்றிற்கு உபப்பிருங்கணப்பிரமாணம்.—ஆன்மதத்துவம் இருபத்துநான்கு.—சிவதத்துவம் வித்தியாதத்துவம் ஆன்மதத்துவம் என்பன பொது வுஞ் சிறப்பும் பொதுச்சிறப்புமென முத்திறப்படுகை.—அதற்குக் காரணம்.—சிவத்த

## மூன்றாஞ் சூர்ணிகை.



## நான்காஞ் சூர்ணிகை.



## மூன்றாஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.



## முதலாஞ் சூர்ணிகை.



## இரண்டாஞ் சூர்ணிகை.



## மூன்றாஞ் சூர்ணிகை.



## நான்காஞ் சூர்ணிகை.

## ஐந்தாஞ் சூர்ணிகை.



## ஆறாஞ் சூர்ணிகை.



## ஏழாஞ் சூர்ணிகை.



## நான்காஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.



## முதலாஞ் சூர்ணிகை.



## இரண்டாஞ் சூர்ணிகை.

## மூன்றாஞ் சூர்ணிகை.

---

உயிரின் மூன்று அவஸ்தை.—சகலத்திற்கேவலம்.—ஜாக்கிரஸ்தானமாகிய இலாடத்தில் முப்பத்தைந்து கருவி.—இவை உருவகப்படுத்தப்பட்டமை.—சொப்பனத்தானமாகிய கண்டத்திலே கருவி இருபத்தைந்து.—சுழூப்திஸ்தானமாகிய இதயத்தில் மூன்று.—துரியத்தானமாகிய உந்தியில் இரண்டு.—துரியாதீதமாகிய மூலாதாரத்தில் ஒன்று.—சகலத்திற்சகலம்.—ஜாக்கிர ஜாக்கிரத்திலே கருவி ஐந்து.—ஜாக்கிரசொப்பனத்தில் நான்கு.—ஜாக்கிரசுழூப்தியில் மூன்று.—ஜாக்கிரதுரியத்தில் இரண்டு.—ஜாக்கிரதுரியாதீதத்தில் ஒன்று.—சுத்தாவஸ்தையும் நின்மலஜாக்கிரமுதல் ஐவகைப்படுகை. பக்கம் எஉ.

## ஐந்தாஞ் சூத்திரம்.

---

### சூத்திரக்கருத்துரை.

ஆன்மாவும் கருவிகளும் அரசனும் மந்திரியும்போல நிற்குமிடத்தும், சிவபெருமானது முதலுபகாரம் வேண்டப்படும்.—ஆன்மாவினுல் மெய்முதலியன விஷயங்களை விஷயீகரிக்குமிடத்தும், அவை தம்மையும் தம்மைச் செலுத்தும் அவ்வான்மாவையும் அறியா.—ஆன்மாக்கள் சிவபெருமானது சிற்சத்தியினுற் கேவலசகலாவஸ்தைகளில் இம்மைப்பயன்களை அறிந்து அநுபவிக்குமிடத்தும், தம்மைச் செலுத்தும் திரோதானசத்தியையும் அறியா.—சிவபெருமானது சன்னிதிமாத்திரத்தினுல் ஆன்மாக்கள் கேவலசகலமாகிய இரு அவஸ்தையினும் உணருங்கால், சிவபெருமான் விகாரமடையார். பக்கம் அ௦.

## முதலாஞ் சூர்ணிகை.

---

ஆன்மாவினுல் ஐம்பொறித்தத்துவங்கள் நடை பெறுகை.—ஆன்மா மெய் வாய் முதலிய புலன்களை விஷயங்களிற் செலுத்தி இலாடஸ்தானத்திலிருப்பதால், ஐம்பொறிகள் ஆன்மாவை அறியமாட்டா.—ஒரு கருமஞ் செய்தற்கு அரசனும் மந்திரியும் இன்றியமையாதவாறுபோல, ஒரு விஷயத்தை அறிதற்கண்ணும் ஆன்மாவும் ஐம்பொறிகளும் தம்முள் இன்றியமையா. பக்கம் அக.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

ஆன்மாக்கள் சிவபெருமானுல் அறிவிக்க அறியும்.—சிவசத்தி எனப்படும் சங்கற்பமாகிய சிவனது சந்நிதியிற் பிரபஞ்சம் செயப்படுகை.—மன்னுசிவன்.—சொன்னசிவன்.—எண்ணுன் சிவன்.—பிருதிவிமுதற் சிவதத்துவம் இறுதியாகிய தத்துவங்கள் ஜடமெனக் காண்கை.—தத்துவங்களின் வடிவு நிறமுதலியன.—காலாக்கினிபுவனமுதற் சிவதத்துவம் இறுதியாயுள்ள தத்துவங்கள் ஒன்றுக்கொன்று மேன்மேல் வியாபிப்பது.—தத்துவதரிசனம்.—சிவபெருமானது முதலுபகாரம் எனப்படும் சூக்குமபஞ்ச

கிருத்தியம்.—அவர் நிர்விகாரி.—ஆன்மாக்களுடைய பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கு உளதாகிய இரக்கம் எனப்படும் அருள் அவர்க்கு அநாதிக்கண்ணது.—இரக்கம் குணம், சிவபெருமான் குணி.—அதற்குச் சிவாகமப்பிரமாணம்.—சிவபிரான் விகாரமுறாதவர் என்றமைக்குப் பிரமாணம். பக்கம் அஉ.

## ஆறாஞ் சூத்திரம்.

---

### சூத்திரக்கருத்துரை.

பதிப்பொருளின் இலக்கணம்.— பாசஞானபசுஞானங்களால் அறியப்படாத போது சிவம், பதிஞானமொன்றினால் அறியப்படுங்காற் சத்து.—இவ்விருவகையானும் அவர் சிவசத்து. பக்கம் கூo.

## முதலாஞ் சூர்ணிகை.

---

பிரபஞ்சத்துச் சுட்டுப்பொருள்கள் இராசசகுணமிகுதியால் உளது என்று உணரும் உணர்வைப் பிறப்பிக்கை.—அப்பொருள்கள் தாமசகுணமிகுதியினால் இல்லை என்னும் உணர்வைப் பிறப்பிக்கை.—சத்துமில்லை அசத்துமில்லை என்றதின் பொருள்.—பதியின் தடஸ்தலக்ஷணம் இரண்டாஞ் சூத்திரத்து எ-ம் பிரிவிற் கூறப்பட்டமை.—சொரூபலக்ஷணம் ஆறாஞ் சூத்திரத்துக் கூறப்படுகை.—சிவபெருமான் சித்துசத்து எனப்படலாற் சர்வஞ்ஞத்துவாதி எண்குணங்களும் இவ்விரண்டனுள்ளே அடங்குகை.—பசுபாசங்களின் சிறப்பியல்பு சிவஞானத்தினால் உணரப்படுகை.—மனமுதலியன ஆன்மாவுக்குக் கருவிகளாய் வேறு நிற்பன என்று அறிந்து நீங்கி இவற்றைக் கொண்டு அறியும் கர்த்தாவினுண்மை யாரென்று ஆராய்ந்தார்க்கு ஆன்மசொரூபம் விளங்குகை.—அங்ஙனம் ஆராயும் அறிவு பசுஞானம்.—சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம்.—ஏகதேசஞானம் பாசஞானம்.—பசுபாசங்கள் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படினும், சிறப்பியல்புபற்றி அசத்தாகா.—பிரபஞ்சம் அசத்தெனப்பட்டதின் பொருள்.—ஆன்மதத்துவமுதலிய மூவகைத்தத்துவமும் ஒன்றினொன்று லயமாவது.—தத்துவசுத்தி.—பிரபஞ்சம் காரியாவஸ்தையில் ஸ்தூலமாய்க் கண்ணுக்குப் புலப்படுகை.—அது பின்னர்க் காரணாவஸ்தையிற் சூக்குமரூபமாய்ப் புலப்படாது நிற்கை. பக்கம் கக.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

பாசஞானபசுஞானங்களைக் கடந்து சிவஞானத்தினாற் புலப்படுவது சத்தாகிய சிவம்.—சத்தாகிய மெய்ப்பொருள் சிவனருளே.—கேவலம் ஞானமாத்திரையாயிருப்பது பரம்பொருளன்று.—ஆன்மாவின் அறிவு சிவபிரான் திருவருளில் அடங்கி அதுவாய்நின்று அத்திருவருளினாற் சிவத்தை அறிவது.—சிவபிரான் திருவருளினாலே பாவிக்கப்படல்வேண்டு மென்றதற்குப் பிரமாணங்கள்.—ஆன்மசிற்சத்தி என்றதில் ஆன்மா கண்ணையும், சிற்சத்தி கண்ணின் ஒளியையும் ஒப்பன.—மருட்கேவலம்.—சகலகேவலம்.—பிரளயகேவலம்.— விஞ்ஞானகேவலம்.— அருட்கேவலம்.— சகலத்திற் சுத்தம்.—சுத்தாவஸ்தை சீவன்முத்திமுதல் ஐவகைப்படும். பக்கம் கரு.

## எழாஞ்சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.

சிறப்பதிகாரம் எனப்படுதற்குக் காரணம்.— சாதனவியல்.— சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அநுபவியாது.—அசத்தாகிய பாசம் சத்தாகிய சிவத்தை அறியாது.—சிவமாதற்றன்மையும் பிரபஞ்சமாதற்றன்மையுமாகிய இரண்டுமின்றிச் சத் தசத்தாயுள்ள ஆன்மாவே சிவத்தையும் பிரபஞ்சத்தையும் அறியும். பக்கம் க0ச.

### முதலாஞ் சூர்ணிகை.

சூரியனுக்கு முன் இருள்போலச் சிவபிரானுக்கெதிராக ஜடமாகிய பிரபஞ்சம் முனைக்காமை. பக்கம் க0ரு.

### இரண்டாஞ் சூர்ணிகை.

அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சத்துக்கு அறிவில்லை.—பாசம்வாயிலாக ஆன்மாவில் நிகழும் ஞானம் பாசஞானம். பக்கம் க0சு.

### மூன்றாஞ் சூர்ணிகை.

சதசத்தாகிய ஆன்மாவே சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சத் தையும் அறியும்.—கண்ணின் இயற்கையது ஆன்மா.— ஆன்மாவினுண்மைத்தன்மை சத் தினும் அசத்தினும் சார்ந்ததின்வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்பினது.— பசி நோய்க்கு மருந்துபோல ஒரு விஷயத்தை அறியமாட்டாது மயங்கும் ஆன்மாவுக்கு ஔஷதமாயுள்ளது கலாதிதத்துவம்.—கலாதிதத்துவவியஞ்சகமில்லாதபோது அறியும் ஒப்புவமையாற் சத்தாதலும், கலாதிதத்துவவியஞ்சகமுள்ளபோது அறிவு நிகழாத ஒப்புவமையால் அசத்தாதலுமாகிய தன்மையுடையது ஆன்மா.— ஆன்மா சத்து அசத்து என்னும் இரண்டின்பாலுளதாதல்.— ஆன்மரூபம்.—பிரமேயம், பிரமாதா, பிரமாணம், பிரமிதி.—அசத்தினால் விளங்கும்போது காட்சி, அநுமானம், உரை என்பன ஆன்மா வுக்கு வியஞ்சகங்கள்.—சத்தினால் அறிவுவிளங்கும்போது ஆன்மாவுக்குச் சிவஞானம் வியஞ்சகம். பக்கம் க0சு.

## எட்டாஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.

ஆன்மாவானது முன்னர் ஈட்டிய புண்ணிய விசேஷத்தினால் அவ்வான்மாவுக்கு அந்தரியாமியாயிருந்த சிவபரம்பொருள் ஆசாரியவடிவங்கொண்டு தீக்ஷை செய்கை.— சிவபெருமான் அரசனுக்குச் சாமியமாகக் கூறப்படுகை.—ஆன்மா அரசகுமாரன் எனப் படுகை.—ஐம்பொறிகள் வேடரெனப்படுகை. பக்கம் ககஉ.

## முதலாஞ் சூர்ணிகை.

ஆன்மாவின் அறிவு படிமுறையானே சிறிது சிறிதாக ஏகதேசமாய் விளங்கி, பின்னர் மேலோங்கி வியாபகமாய் விளங்குமியல்பினது.—நல்வினை தீவினை ஒருவர்க்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதலினுல் அவை பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போல்வன.—இருவினையொப்பு.–சிவபுண்ணியம் இருவகை.—பொதுச்சிவபுண்ணியம், சிறப்புச்சிவபுண்ணியம். பக்கம் ககங.

## இரண்டாஞ் சூர்ணிகை.

ஆசாரியமூர்த்தியினது திருமேனி அருண்மயம்.—விஞ்ஞானகலர்க்கும், பிரளயாகலர்க்கும், சகலர்க்கும் தத்துவஞானம் உணர்த்துமுறைமை.—விஞ்ஞானகலர்க்குச் சூக்குமமலசத்தி.—பிரளயாகலர்க்கு ஸ்தூலமலசத்தி.—சகலர்க்கு ஸ்தூலதரமலசத்தி.—நீரில் நிழல்போல ஆன்மசைதன்னியத்திலே சிவசைதன்னியம். பக்கம் ககடு.

## மூன்றாஞ் சூர்ணிகை.

ஸ்படிகத்திற் பற்றிய நிறங்களை அந்த ஸ்படிகத்துக்கு வேறென்று அறியுமாறு போல, ஆன்மா ஐம்பொறிகளைத் தனக்கு வேறெனத் தெளிகை.—ஆன்மா சிவபரம் பொருளுக்கு அடிமையாய் அச்சிவபரம்பொருள் தன்னிடத்து விளங்கப்பெறுகை. பக்கம் ககஅ.

## நான்காஞ் சூர்ணிகை.

ஆசாரியர்வாயிலாக ஆன்மா ஐம்பொறிகளுக்கு வேறும் என்று உணர்ந்து சிவபிரான் திருவடியைத் தலைப்படுகை.—ஐம்பொறிக்கருவிகள் ஆன்மாக்களால் அறியப்படாது நீங்குங்கால் மலம் தாரகம்.—அவ்வான்மாக்களால் அவை அறியப்பட்டுக் கழியுங்காற் சிவம் தாரகம்.—சிவரூபம்.—ஆன்மதரிசனம்.—பாசஞானமும் பசுஞானமும் தம்முட்சமமாகா. கண்ணிந்திரியம் பிரகாசத்தில் மிகுதூரத்தினதாகிய விஷயத்தை வியாபித்து அறியும்.—பசுஞானத்துக்குச் சிவஞானம்வாயிலாக வியாபகம். பக்கம் கககூ.

## ஒன்பதாஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.

தான்பணியை நீத்தல்.—இறைபணி நிற்றல்.—சிவரூபத்தில் நிகழ்வது ஆன்மதரிசனம்.—சிவதரிசனத்தில் நிகழ்வது ஆன்மசுத்தி. பக்கம் கஉஅ.

ஆன்மாவிலே சிவம் சிவஞானத்தினுல் உணரப்படுவது.—இதற்குச் சுருதிபுராண தேவாரப்பிரமாணங்கள். பக்கம் கஙo.

## இரண்டாஞ் சூர்ணிகை.

பிரபஞ்சத்தை நிலையில்லது என வியாபக அறிவினுல் விவேகித்து அறியிற் சிவ ஞானசொரூபம் வெளிப்படுவது.—அசுத்தமிச்சிரசுத்தப்பிரபஞ்சம்.—முப்பத்தாறு தத்து வப்படி.—வேதாந்தசித்தாந்தமகாவாக்கியங்கள்.—சிவபாவனை அபேதமாகச் செய்யப் படுதல் வேண்டும் என்றமைக்குச் சுருதி ஆகமப்பிரமாணங்கள்.—சிவனுக்குரிய குணங் களைப் பாகத்தியாகலக்ஷணையினுல் ஏகான்மவாதிகள் அறிவுரூபமாக்கத்துணிகை.— ஏகான்மவாதிகளின் ஈசுரனும் சீவனும் மும்மூன்று கூறுகளாலானமை.—ஏகான்மவாதி யின் ஆன்மப்பிரமம் சைவோபநிடதப்பிரகாரம் துவம்பதார்த்தமாகிச் சிவத்துக்கடிமை யாவது.—ஏகான்மவாதியின் பிரமம் இருவித சகுணப்பிரமங்களுக்கு இடையில் (சந் தம்ச) நியாயத்தினுல் இடைப்படுகை.—கருடபாவனை மெய்.—கருடபாவனை செய்யு முறைமை. பக்கம் கஙக.

## மூன்றாஞ் சூர்ணிகை.

சிவஞானக்கண்ணினுற் சிவத்தை ஆன்மாவில் நாடுதலும், ஐம்புலனுக்கு வேருக ஆன்மாவைக் காண்டலும் சிவானந்தபோகத்தை அடைதற்குச் சாதகங்கள்.—ஏகதே சக்காட்சிவாசனையை நீக்குதற்குச் சாதகமாயது முத்திபஞ்சாக்ஷரம்.—இதயதாமரை யின்கண்ணே பஞ்சாக்ஷரத்தினுல் அமைந்த சிவலிங்கத்திருமேனியிற் கொல்லா மைமுதலிய அஷ்டபுஷ்பங்கொண்டு பூசிப்பது.—அந்தரியாகபூசையினுல் காட்டத்தி னின்றும் அக்கினி வெளிப்படுமாறுபோலச் சிவபிரான் அறிவுக்கறிவாய் விளங்கி நிற் பது.—இதற்குச் சுருதிபுராணதிராவிடசுருதிப்பிரமாணங்கள்.—இதயகமலத்தை உண ர்த்துதற்குப் போந்த இரு செய்யுட்கள்.—தேகமாகிய சிவாலயத்தில் ஆன்மா சிவலிங் கம்.—அதற்கு உயிர் சிவனுர் திருவடி.—இருக்குவேதத்து அந்தரியாகபூசை.—கொல் லாமை முதலியவற்றை உணர்த்தும் ஆகமப்பிரமாணம்.—தியானயாகம் மேலாயதென் றமைக்குச் சிவதருமோத்தரப்பிரமாணம். பக்கம் கசO.

# பத்தாஞ் சூத்திரம்.

## சூத்திரக்கருத்துரை.

ஆன்மசுத்தியின் பயன் பாசக்ஷயம்.—ஞானத்துயோகம் தெளிதல்.—ஞானயோ கஸ்தானம் சிதம்பரம்.—முத்திநிலையில் ஆன்மா சிவனேயாய் ஒற்றுமைப்பட்டு ஏகனுகி இறைபணிநிற்பது பக்கம் கசள.

## முதலாஞ் சூர்ணிகை.

யான் என்றொரு முதல் காணப்படுமாறில்லை என்றறிந்து சிவனே முழுவது மெனக் காண்பாரை, அவர் தமது திருவடிவியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கிநிற் கச்செய்வது.—இதனையுற்று மாணிக்கவாசகசுவாமிகளும் திருநாவுக்கரசுநாயனுரும் அரு ளிய திருவாக்குக்கள்.—உமாபதிசிவாசாரியசுவாமிகள் மாணிக்கவாசகசுவாமிகள் திரு

வாக்கைப் பரமசித்தாந்தமாக எடுத்தோதினமை.—மலவாசனை நீங்கிச் சிவானந்தத்தை அடைதற்கு ஏகனாகி நிற்றல் சாதனம்.—கண்ணுக்கு ஒளி உண்டு என்றமைக்குச் சுருதி ஆகம தர்க்கப்பிரமாணங்கள். பக்கம் கருகூ.

## இரண்டாஞ் சூர்ணிகை.

ஆன்மாவினது ஞான இச்சாக்கிரியைகள் சிவனாது ஞான இச்சாக்கிரியையின்றி நிகழா என்பது.—இறைபணிவழுவாது நிற்றற்குத் தேவாரசுருதிப்பிரமாணம்.—ஏகனாகிநின்றால் மலவாசனை நீங்குவது.—இறைபணிநின்றாற் பிராரத்தவினையும் ஆகாமிய வினையும் நீங்குவது.—செவிவாய் முதலியன சிவபிரானுக்கு உடைமை.—ஆன்மாக்கள் அடிமை.—இவற்றிற்குச் சுருதிப்பிரமாணம்.—சிவபிரான் ஏனையோரை விடுத்துத் தம்மைச் சார்ந்தவரைப் பாதுகாத்தல்பற்றி நடுநிலையிற்கோடினாரல்லர் என்பது.—தத்துவஞானிக்குப் பயிற்சிவபத்தினால் தற்போதம் முனைத்துத் தோன்றுமாயின், அவன் பின்னர்ப் பகுத்துணர்வுவாயிலாக ஏகனாகியிறைபணி நிற்கவேண்டுமென்பது.— திருவடி வியாபகத்தைத் தலைப்பட்டோர் ஐம்புலவிஷயங்களிற் சென்றாரேனும் அவற்றாற் றொடக்குண்ணாரென்பது.—இதற்குச் சுருதி ஆகமப்பிரமாணங்கள். பக்கம் கசுஉ.

## பதினோராஞ் சூத்திரம்.

### சூத்திரக்கருத்துரை.

சிவப்பேறு:—துரியநிலைக்கண்ணது சிதம்பர அருணிலை.—துரியாதீதத்திற் சிவத்துவவிளக்கம்.—சுவாநுபூதிமானவன் என்பது அரன்கழல் செலுமே என மொழிபெயர்க்கப்பட்டமை.—இடையீடில்லாத அன்பு பராபக்தி.—ஏகனாகி இறைபணியில் நின்றுகொண்டு சிவபிரான் அத்துவிதமாய் உடனின்று பெருங்கருணையினால் உபகரிக்கும் உதவியை நோக்கவேண்டுமெனல்.—துரியாதீதத்திற் சிவமாகிய விஷயம் விஷயீகரிக்கப்படுமெனல்.—நோக்குந்தோறும் நோக்குந்தோறும் என்றமையை மாணிக்கவாசகசுவாமிகள் புணர்ந்தாற் புணருந்தோறும் என்றமை.—அத்துவிதம் என்றதின் பொருள்.—அத்துவிதம் என்னுஞ் சொல்லினாற் பெறப்படுஞ் சம்பந்தங்கள்.—தாதான்மியம் இருதிறப்படும்.—ஆன்மபோதமும் கண்ணொளியும்போல இருபொருள் அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும் தாதான்மியமே அத்துவிதம் எனப்படும்.—அறுவகை ஆன்மாக்கள்.—ஆன்மா முடிவுகாணிலாப்பேரின்பத்தைப் பெறுவன் என்றமைக்குப் பிரமாணம்.—ஆனந்தத்தை ஆன்மாவுக்குச் சிவபிரான் விளைவிக்கின்றார் என்றமைக்கும், ஆன்மா ஆனந்தத்தை அடைகின்றான் என்றமைக்கும் சுருதிப்பிரமாணங்கள்.—பூமா என்றதின் பொருள்.—சுருதிகளுக்கும் வேதாந்தசூத்திரத்துக்கும் இசைவுறப்போந்த திராவிடசுருதிகள்.—பூமாவுக்குள்ள முடிவிறந்த ஆனந்தகுணப்பொருளை ஏகான்மவாதிகள் அறிவுரூபமாகத் திரிப்பது. பக்கம் கஎகு.

## முதலாஞ் சூர்ணிகை.

பரமுத்தர்களாகிய ஞானிகளுக்கு எய்தும் விஷயங்களைச் சிவபிரான் உடனின்று உணர்வது.—எல்லா ஆன்மாக்களுடைய எல்லாவிஷயங்களையும் ஏகமாய்ப் பொதுவகையாற் சிவம் ஒருங்கு உணர்ந்து அவ்வான்மாக்களோடு உடனின்று சிறப்புவகையாலும்

உணர்வது.—சிவபிரான் திருவடிகளிலே நான் என்று ஒருமுதல் காணப்படுமாறில்லை என்று உணர்ந்து முழுவதுஞ் சிவமே எனக் காண்டல் தெளிவுக்காட்சி.—இக்காட்சியினாற் சிவத்தோடொற்றுமைப்பட்டு அவர் திருவடிகளை உணருங்கால் அச்சிவம் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் விளைவது.—இதற்குத் திராவிடசுருதிப்பிரமாணம்.—ஆன்ம அறிவோடு உடனின்று கருதுவார் கருதியபொருளை அறியாதிருப்பின், அது சிவத்துக்கு ஏதமாகும். பக்கம் கஅ௨.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

சிவபிரான் ஆன்மாவில் விரவிநின்று சிவானந்தவிஷயத்தை அத்துவிதமாய் நிகழுமாறு செய்துவரும் உபகாரத்தை மறவாமல் அவரது அருளின்வழிநிற்றலாற் சிவானந்தாநுபூதிநிஷ்டை தலைப்படுவது.—முத்திநிலையில் ஆன்மாவுக்கு ஏகதேச அறிவு நீங்கிப் பூரண அறிவு விரிவது.—இதற்குப் பிரமாணம்.—ஆன்மாவைச் சிவபிரான் சிவானந்த சாகரத்துள்ளே படியச்செய்தலால் விகாரமெய்தாமை.—முத்திநிலையில் ஆன்மாவுக்கு அன்புநிகழுமாறு.—இதற்குப் பிரமாணம்.—கேவலசகலசுத்தாவஸ்தைகள்.—சுத்தாவஸ்தைக்கு ஆகமப்பிரமாணம்.—காயத்திரிமந்திரம்.—அதன் பொருள்.—காயத்திரிமந்திரத்துக்குச் சிவாகம உபப்பிருங்கணம்.—பர்க்கஸ் சிவசத்திக்கும் ஒளிக்கும் பெயர்.—காயத்திரிமந்திரத்துக்கும் சிவஞானபோதபதினொராஞ் சூத்திரத்துக்கும் பொருளொற்றுமை.—ஆதித்தியனுக்கு இரண்டு குணம்.— கண்ணுக்கு இரண்டுகுணம்.—ஆசாரியருக்கு இரண்டு குணம்.—ஆன்மாவுக்கு இரண்டு குணம்.—சீவன்முத்தர் பரமே பார்த்திருப்பது.—மகாவிஷ்ணு நிருத்ததரிசனத்தினால் அகண்டாகார நித்தவியாபக எல்லையைத் தலைப்பட்டமை.—சிவனார் நவதாண்டவம்.—உரன் என்றது மெய்யுணர்வு.—ஞானயோகஸ்தானம் துரிய அருட் சிதம்பர எல்லை.—சிற்றின்பசிறுபோகத்துக்கு ஏகதேச அறிவு வேண்டுவது.—பேரின்பபரபோகத்துக்கு வியாபக அறிவு வேண்டுவது.—வியாபக அறிவுக்கு மூவாசிரியர்களும் விடுத்த பிரமாணங்கள்.—ஐம்புலன்களும் ஒன்றியவிடத்து உளதாம் மெய்யுணர்வினால் அடையும் சிவபோகத்தை நடராஜர் திருவுருவத்தில் ஐம்புல அளவிற்கும் எளிதாக உணர்வது.—மெய்யுணர்வினால் எய்தும் திருக்கூத்தும் மெய்யுணர்வினால் எய்தும் சிவபோகமும் ஒன்றே.—சிவபோகம்.—சகஜநிஷ்டை.—சிவானந்தபோகத்தினர் தத்தமக்குரிய அதிகாரத்திற் சிவாஞ்ஞையினால் நிற்பது.—இருக்குவேதமுதலிய சமஸ்தவேதோபநிடதங்களில் நிறுத்திப் பேசப்பட்டது தகராகாயதிருச்சிற்றம்பலபஞ்சகிருத்தியநடனம்.—சித்தாந்தசிவஞானபோதத்திற் சொரூபநிலை பற்றிக் கூறப்படுவது பஞ்சகிருத்திய அதிகாரம் நீங்கிய பரானந்தநடனம்.—ஆன்மாவிலே பரநடனம்.— அதற்குப் பிரமாணம்.—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் முதலாயினோர்க்குச் (சிவஞானபோதம் கூறுமாறு) அவர் கருத்துச் சிவபோக பரநடனத்திலேயாம்.—பரநடனத்தில் எய்தும் மெய்ப்பாடு.—நிருத்ததரிசனஞ் செய்வோர்ஸ்தானம் சிதம்பரம்.—சிலர் பரநடனத்தைத் தரிசிக்கவியலாது ஏகான்மவாதக்குழியிற் பொறிந்துபோனமை.—சிவஞானிக்குத்தான் சிவபரானந்தக்கூத்தைத் தரிசிக்க இயல்வது. பக்கம் கஅகூ.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்.

---

### சூத்திரக்கருத்துரை.

முத்தரறிவு வியாபரிக்குமிடம்.—அவரிச்சை வியாபரிக்குமிடம்.—அவர் கிரியை வியாபரிக்குமிடம். பக்கம் ௨0கூ.

## முதலாஞ் சூர்ணிகை.

---

விருப்புவெறுப்புக்களாய்ப் பொருந்துவது கன்மமலம்.—பிருதிவிமுதல் அசுத்தமா யாதத்துவம் இறுதியாயுள்ளது மாயாமலம்.—விபரீதவுணர்வை உண்டாக்குவது ஆணவ மலம்.—அஞ்ஞானம் ஏகதேசக்காட்சியாலாவது.—ஏகதேசக்காட்சி விருப்புவெறுப்புக்க ளாலாவது.—விருப்புவெறுப்புக்கள் தற்போதத்தினாலாவது. பக்கம் ௨0எ.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

சிவபக்தராவார் சீவன் முத்தர்.—ஆணவமுதலிய மும்மலங்களும் விபரீதவுணர்வை இலக்குவாய்த்தபோது செய்வது.—அவபக்தர் இலக்குவாயாதவிடத்தும் பல்வகை உபா யத்தினாலும் விபரீதவுணர்விற் செலுத்துவது.—மெய்ஞ்ஞானிகள் அன்பர்களைச் சிவா னந்தநிறைவிலே விடுப்பது.—அவபக்தர் அவர்களைப் பிறவிக்குழியிலே வீழ்த்துவது.— சிவத்தைத் தரிசித்து உணரப்பெற்ற தவமே மெய்த்தவம்; ஏனைய பொய்த்தவம்.—சிவா நுபவச்சிவபக்தர் சிவபோகச்செல்வத்தை ஐம்புலவேடர் கொள்ளைகொள்ளவிடாது தடுக்கும் வேலியாயினமை. பக்கம் ௨0அ.

## மூன்றாஞ் சூர்ணிகை.

---

சிவபிரான் சேதனாசேதனப்பொருள்களிற் பகுப்பின்றி வியாபிப்பர்.—திருவே டம் சிவலிங்கம் என்பவற்றில் தயிரில் நெய்போல விளங்குவர்.—வேடம், பாவனை, செயல், தன்மை.—சிவலிங்கத்தைச் சரியாபாதத்தினர் வழிபடுமாறு.—கிரியாபாதத்தி னர் வழிபடுமாறு.—யோகபாதத்தினர் வழிபடுமாறு.—ஞானபாதத்தினர் வழிபடு மாறு. பக்கம் ௨0க.

## நான்காஞ் சூர்ணிகை.

---

சிவபிரான் பிரபஞ்சமெங்கும் வியாபித்துநிற்குநிலையை உணரப்பெற்றோர்க்கு, அவர் கண்ணும் ஆதித்தனும்போலப் பேதநிலையினருமல்லராய், உடலுயிர்போல அபே தநிலையினருமல்லராய், குணகுணிபோலப் பேதாபேதநிலையினருமல்லராய், அம்மூன் றற்கும் பொதுவாய்க் கண்ணொளியும் ஆன்மபோதமும்போல அத்துவிதநிலையினரா யுள்ளார்.—பிரபஞ்சமெல்லாம் சிவவடிவேயாயினும் அன்புவிளையுமிடத்தில் வழிபடல் வேண்டும்.—பிராரத்தவாசனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறுமாறு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைக் கணிப்பது.– ஞானசாரியரை வழிபடுவது.– சர்வஞ்ஞதாதி எண்குணங்களை உணர்த்தும் சுருதி, ஆகம, திராவிடசுருதிப்பிரமாணங்கள்.—ஞானசாரியர் தன்னுண்மை அறியமாட் டாது கிடந்த ஆன்மாவுக்கு அதினுண்மையைத் தெளிவித்து, அந்த ஆன்மா தன்னை அறிந்தவிடத்து முற்றுணர்வுமுதலிய எண்குணங்களால் நிறையச்செய்து சிவவண்ண மாகச்செய்வதே சிவமாக்கி என்றதின் பொருள்.—ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலமுடைய சகலர்க்கே அனுபவமுள்ள தேசிகராற் போதிக்கப்படுவது இந்தச் சிவஞானபோதம். பக்கம் ௨கக.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விசேஷ விஞ்ஞாபனம்.

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய் — போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்.

வேதாகமங்களில் விதிக்கப்பட்ட விதி தவறாமல் சிவதீக்ஷை பெற்றுச் சிவசின்னங்களாகிய விபூதி உருத்திராக்ஷம் தரிப்பவர்களாய், சுத்தஷாட்குண்ணிய பரிபூரணராகிய சிவபெருமானை எஞ்ஞான்றும் பரமபதியாகக்கொண்டொழுகுபவர்களாயுள்ளவர்களே சைவர்கள் எனப்படுவர்கள். படினும், அவர் தம்முட் பெரும்பாலார் சைவசமயத் துண்மைப்பொருள் இன்னதென்று அறியமாட்டாமையானும், அச்சைவசமயத்துண்மையை உபதேசிக்கும் நூல் இன்னதுதானென்று சிறப்பாய் அறியமாட்டாமையானும், கரும்பிருக்க அதனைத் தின்னாது வேம்புதின்பவர்போன்று நேர்ந்த நேர்ந்தவாறு புறச்சமயநூல்களையே மெய்ந்நூல்களாமெனத் திரித்துணர்ந்து, படித்துப் பாராட்டி, அப்புறச்சமயங்களிலே வீழ்ந்து தடுமாறுகின்றார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்முதலிய சைவசமயஸ்தாபனாசாரியர்களுக்கும், மெய்கண்டார்முதலிய சந்தானாசாரியர்களுக்கும் சித்தாந்தமுதனூலாய்ச் சிவாநுபவத்துக்கு இலக்கணமாய்ப்போந்த இரௌரவாகமத்து எழுபத்துமூன்றாவது பாசவிமோசன படலத்துப் பன்னிரண்டாம் அத்தியாயத்துப் பன்னிரண்டு சூத்திரங்களாயுள்ளதும், நான்கு வேதங்கட்குந் தலையாகிய இருக்குவேதத்தினும், முண்டகோபநிடதமுதலியவற்றினும், ஏனைய ஆகமபுராணங்களினும் பிரதிபாதிக்கப்பட்ட நித்தியபதார்த்தங்களாகிய பதி பசு பாசங்களைத் தடஸ்தத்தினும், சொரூபத்தினும் நிறுத்திப் பேசுவதும்; திரயீ எனப்படும் இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்று வேதங்களின் நடுக்கணுற்ற யசுர்வேதத்து மத்தியிலுள்ள நான்காவது காண்டத்து உருத்திராத்தியாயத்துப் பதினொராவது அநுவாகத்திற் காணப்படும் பஞ்சாக்ஷரத்தின் நடுக்கணுற்ற **சிவ** என்னும் ஈரெழுத்தை முதலிலே கொண்டதும், மாணிக்கவாசகசுவாமிகளுக்கு உபதேசிக்குமாறு திருப்பெருந்துறைக் குருந்தமரத்தின்கீழ்த் தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது அடியார்களுக்கு மத்தியிலே மானிடவடிவங்கொண்டு பரமாசாரியராக எழுந்தருளியிருந்த சிவபெருமானது திருக்கரத்திலே அமைந்ததும், மெய்ப்பொருளாகிய சிவம், அம்மெய்ப்பொருளை உள்ளவாறு அறிதற்கு இன்றியமையாத் துணையாகிய அருளெனப்படும் **ஞானம்**, அவ்வருளினாலே தெளிந்த மெய்ப்பொருளை அநுபூதியில்வைத்து நிச்சயஞ் செய்தலாகிய **போதம்** என்னும் மூன்றையும் தன்னுட்கொண்டதும், அபுத்திபூருவம், புத்திபூருவம், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் என்னும் பத்துவகைப் புண்ணியங்களுள்ளே இறுதிக்கண்ணதாகிய உண்மைஞானப்புண்ணியத்தைத் தன்னுள்ளே முக்கியப்பொருளாகப் பொதிந்துள்ளதும், சூக்குமாகமத்திலே பிரதிபாதிக்கப்பட்ட தத்துவரூபமுதற் சிவபோகமிறுதியாகிய பதின்வகை உண்மைஞானத்தைத் தன்னுட்கொண்டதும், இந்தத் தசகாரியங்களையும் இராப்பகலில்லா இடமாகிய சுத்தாவஸ்தை ஐந்தில் அடக்கிப் போதிப்பதும், அந்த அவஸ்தைகளை ஞானத்துச்சரியை, ஞானத்துக்கிரியை, ஞானத்துயோகம், ஞானத்துஞானம் என்னும் நான்கு பாதங்களுள்ளே அமைத்துக் கூறுவதும்,

அவற்றைப் பின்னும் ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, ஆன்மலாபம் என்னும் மூன்றனுள்ளே அடக்கி விளக்குவதும், இருக்குவேதமுதலிய ஆரியவேதப்பொருளாய் விளங்கும் தமிழ்வேததேவாரதிருவாசகங்களாகிய சிவாநுபவ இலக்கியத்துக்குச் சிவாநுபவ இலக்கணமாய்ப் போந்ததுமாகிய **சிவஞானபோத**மானது திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவநாயனாரால் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டுச் சிவஞானபோதம் என்னும் அம்முதனூற் றிருப்பெயரோடு உலகிலே சிறப்புற வழங்கப்படுவதைக் கண்டும் அதனைப் பொருட்படுத்திக் கற்கின்றாரில்லை; அதற்குக் காரணம் அச்சிவஞானபோதச்சிற்றுரை எவர்க்கும் பொள்ளெனப்புலப்படாதிருக்கும் காடின்னியமேயாம். சாமானிய சைவர்களைமாத்திரமா, தமிழ்ப்பண்டிதர்களாய்ச் சைவப்பிரசங்கஞ் செய்யவல்ல வித்துவான்களைத்தானும் அச்சிவஞானபோதப்பொருளைத் தெரிவிக்கவேண்டுமென்று பன்முறை வேண்டியவிடத்தும், அவர்களும் அதன்பொருளை உணர்ந்து தெரிவிக்க இயலாதவர்களாயிருக்கின்றார்கள். இதனை அறிந்து, மனம் கலங்கி இனி என்செய்யலாமென்று நினைந்து, யாழ்ப்பாணத்திலே சோழராஜாவின் புத்திரியாகிய மாருதப்பிரவல்லிக்குச் சுப்பிரமணியப்பெருமான் குதிரைமுகம் நீக்கியருளினமையாலே போந்த மாவிட்டபுரம் என்னுங் காரணப்பெயரையுடைய மகாவிசிட்ட சுப்பிரமணியஸ்தலத்திலே திருவவதாரஞ் செய்தருளி, பூமண்டலத்துள்ள ஆயிரத்தெட்டுச் சிவஸ்தலங்களனைத்தினும் தலைமைபடைத்த துவாதசாந்தபுரமாகிய திருவாலவாய் எனப்படும் மதுராபுரிக்குத் தென்மேற்றிசைக்கணுள்ள **சிவஸ்தலமாயும்**, பொதிகாசலாதிபதியாகிய அகஸ்தியமகாமுனிவரால் இயற்றமிழ் அறிவுறுத்தப்பெற்ற நக்கீரமுனிவராலும் அருணகிரிநாதராலும் முறையே திருமுருகாற்றுப்படைப்பிரபந்தத்தினும் திருப்புகழினும் சிரஸ்தானமாகக்கொண்டு புகழப்பெற்றுச் சுப்பிரமணியப்பெருமான் ஞானசத்தியாகிய தெய்வயானையம்மையாரைத் திருக்கல்யாணஞ் செய்யப்பெற்ற **துஹஸ்தலமாயும்** விளங்கும் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் எனது குருமூர்த்திகளும் சித்தாந்த சிகாமணியுமாகிய **காசிவாசி - சாம்பவஸ்ரீ செந்திநாதையாவர்கள்** சந்நிதானத்தை அடைந்து பிரார்த்தித்து, அவர்களிடத்திலே சிவதீக்ஷைபெற்று, அவர்கள் சிவஞானபோதப்பொருளை எனக்கு அநுக்கிரகிக்க, "நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று பெரியோர் அருளியவாறு, தமிழ்வசனம் படித்து உணரவல்ல ஆடவர்களும் பெண்களுமாகிய சைவசமயிகள் எல்லோரும் எளிதில் வாசித்து உபாயஞானத்துக்குரிய பயனையேனும் பெற்றுக்களிக்குமாறு சிவஞானபோதச்சிற்றுரைப்பொருளைச் **சிவஞானபோதவசனலங்காரதீபம்** என்னும் மகுடத்தோடு வசனரூபமாகச் செய்து கொடுக்கும்படி அடியேன் பிரார்த்தித்தபிரகாரம் அருளிச்செய்ய அதனைப் பிரகடனஞ் செய்தேன். இந்தச் சிவஞானபோதவசனலங்காரதீபமானது சிவஞானபோதச்சிற்றுரை பாஷ்யமுதலிய சித்தாந்தசாஸ்திரங்கள் படித்தற்குச் சிறந்த சாதனமாகும்.

இங்ஙனம்

அடிமை,

**மங்கையர்க்கரசியார்.**

இப்புஸ்தகத்தை நமது சைவசமயாபிமானிகளாகிய அன்பர்கள் யாவரும் விலைக்கு வாங்கி ஊக்கம் பிறப்பிப்பார்களாயின், அங்ஙனம் ஈட்டிய பொருள் கையெழுத்தில் நமது குருமூர்த்திகள் எழுதிவைத்திருக்கும் ஏனைய புஸ்தகங்களையும் அச்சிலேற்றிப் பிரகடனஞ்செய்தற்கு உபகாரமாகும்; அதனால் அது "செய்யாமற் செய்த உதவி" என்று அவ்வன்பர்கள் எவராலும் புகழப்பட்டுப் பெருஞ் சிவபுண்ணியத்துக்குப் பாத்திரராவார்கள் என்பதிற் சிறிதும் தடையின்றாம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானசுவாமிகள்தோத்திரம்.

சிதம்பரசபாநாதபுராணம்.

குறியமுனி யருளியமெய் வரத்தினு லவதரித்துக் கோதின் ஞானத்
துறைசைநமச் சிவாயகுரு வருட்கடலும் வடமொழிதென் மொழிப்போர்த் தூய
நிறைகடலு முண்டுபுனி தாத்துவித சித்தாந்த நிலவப் பூமேன்
மறைமொழிமெய்ச் சிவஞான பாடியஞ்சென் தமிழ்வகுத்த யோகி வாழி. 1

தனிப்பாட்டு.

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தா
ளொருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி
லோதிநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம். 1

திண்ணவின்பச் சேவடியுந் திருவிழியுந் திருமார்புஞ் செல்வக் கையு
நண்ணுமன்பர்க் கருள்கருணைத் திருமுகமும் பசுங்குழலி நடையே யாகிப்
புண்ணியத்தின் பொலிவாகி யற்புதக்கோலக்கொழுந்தாய்ப் புலேநா யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான சற்குருவே கருணை வாழ்வே. 2



ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர்.

உ

திருச்சிற்றம்பலம்.

## குருவணக்கம்.

தருமணியின் றருமணியாய்த் தமையடைந்து வேண்டிநினை தகைய வெம்மைப், பொருமணியின் மதிமலிநூல் போதித்துப் போதவுயர் போத ராக்கிக், குருமணியி னெமக்கென்றுங் குருமணியாய்க் குலவுசெந்தி நாத ரென்னுந், திருமணியின் மணிமலர்த்தாள் சிந்தையினுஞ் சென்னியினுஞ் சேர்த்தி வாழ்வாம். 1

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோத

# வசனலங்காரதீபமூமிகை.

நடுநாட்டிலே திருப்பெண்ணுகடத்திலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே கல்வி செல்வங்களாலும் சிவபக்தி அடியார்பக்திகளாலும் சிறந்த அச்சுதர்களப்பாளர் என்னும் ஒருவர் இருந்தார். அவருக்குக் குருவாயிருந்தவர் அநேக வண்டிகளிலே ஏற்றத்தக்க சிவாகமங்களையுடைய சகலாகம பண்டிதர் என்னும் காரணப்பெயர்பெற்ற ஆதிசைவராகிய அருணந்திசிவாசாரியரே. இந்த அச்சுதர்களப்பாளர்க்கு நெடுங்காலம் பிள்ளைப்பேறின்மையால் அருணந்திசிவாசாரியர் வாயிலாகத் தேவாரத்திருமுறையிலே கயிறு சாத்திப் பார்த்தபோது திருவெண்காட்டுத்தேவாரத்திற் ''பேயடையா'' என்றற்றொடக்கத்த திருப்பாடல் உதயமாயிற்று. அதிலே அமைந்த ''வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் பிள்ளையினோடு உள்ள நினைவாயினவே வரம்பெறுவர் ஒன்றும் ஐயுறவேண்டா'' என்பதின் பொருளைச் சகலாகம பண்டிதர் பார்த்துப் பார்த்து மிக ஆச்சரியமுற்று மகிழ்ந்து அச்சுதர்களப்பாளர்க்கு உரைத்தார்.

அது கேட்ட அச்சுதர்களப்பாளர் திருவெண்காட்டுத் திருப்பதியைத் தமது மனைவியாரோடு அடைந்து ''சோமசூரியாக்கினிதீர்த்தம்'' எனப்படும் முக்குளத்திலே ஒருவருஷம் விதிப்படி நியமத்தோடு ஸ்நானஞ் செய்து, அம்மை அப்பர் இருவரையும் தரிசனஞ் செய்துவருங்கால் ஒருநாள் சுவேதாரணியப்பெருமான் அவர்க்குச் சொப்பனத்திலே தோன்றி, அவரது பக்தியைப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டு, ''உனக்குப் பிள்ளைப் பேறு அரிது'' என்று திருவாய்மலர்ந்தருள, அது கேட்ட அச்சுதர்களப்பாளர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் ''வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் பிள்ளையினோடுள்ள நினைவாயினவே வரம் பெறுவர் ஒன்றும் ஐயுறவேண்டா'' என்றருளிய தேவாரம் பொய்யாமோ? என்று வினவினர். அதனைத் திருச்செவி வாய் மடுத்தருளிச் சுவேதாரணியப்பெருமான் சைவஸ்தாபனஞ் செய்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்மீதும் தேவாரத்தின்மீதும் உனக்கு இத்துணை அன்பிருக்கின்றமையால், தமிழ்நாடு உய்யும்வண்ணம் அத்தேவாரத்தின் மெய்ப்பொருளை உள்ளடக்கிய சைவசித்தாந்தசாஸ்திரத்தை வெளிப்படுத்

திச் சைவஸ்பானஞ் செய்ய வல்ல ஆசாரியனுமாறு உன்னிடத்திலே ஒரு புத்திரன் அவதரிப்பான் என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். அச்சுதர் களப்பாளர் விழித்தெழுந்து அளவிறந்த மகிழ்ச்சிகொண்டு தாம் கண்ட சொப்பனத்தை மனைவியாருக்குத் தெரிவித்து, சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியையும் வழிபட்டுவருவாராயினர். அப்போது அவர் மனைவியார் திருவயிற்றிலே கருப்பம் உண்டாகி ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். இப்புத்திரர்க்கு உரியபருவத்திற் சுவேதவனப்பெருமாள் என்னும் திருநாமஞ் சாத்தப்பட்டது.

திருவெண்ணெய்நல்லூரிலிருந்த அவர் மனைவியாரின் சகோதராராகிய காங்கேயபூபதி அக்குழந்தையைத் திருவருட்செயலால் தாம் அழைத்துக் கொண்டுபோய் வளர்த்துவந்தார். இங்ஙனம் வருங்காலத்திலே இரண்டு வயசில் வீதியிலே மணலிட்டு லிங்கம் அமைத்துச் (சாமுசித்தராதலின்) சிவபிரானை அர்ச்சித்தும் வழிபட்டும் வந்தார். முற்பிறவியிலே சரியை கிரியாயோகங்களைச்செய்து நிருமலாந்தக்கரணராகி மீளப் பிறக்கும்பொழுது அந்த ஞானத்தோடு பிறந்து சிவபாவனை பண்ணுவோரே சாமுசித்தரெனப்படுவர்.

இருக்குவேதத்து, கo–ம் மண்டலத்து, கஉகூ–ம் சூக்தத்து, ச–ம் மந்திரம் கூறுமாறு (பரப்பிரமசிவனுருடைய அபின்னசத்தியாகிய) காமம் எனப்படும் பராசத்தி குடிலையைநோக்கியபோது, அதினின்று வேதாகமங்கள் நாதவடிவாயும் விந்துவடிவாயும் அதன்பின் அக்ஷரவடிவாயும் தோன்றின. பின் அவற்றைச் சொற்களாக இயைத்துப் பிறர்க்கு உபதேசிக்குமாறு,

பரமசிவன் சாதாக்கியதத்துவத்திலே சதாசிவமூர்த்தியாக எழுந்தருளியிருந்து, தாம் சிவபேதமாகவும் உருத்திரபேதமாகவும் அருளிச்செய்த சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்றாகிய இரௌரவாகமத்திலே பாசவிமோசனப் படலத்திலே சர்வாகமசாரமாய் விளங்கிய சிவஞானபோதத்தை

அனந்தேசுவரர்க்கு அருளிச்செய்ய, அவர் ஸ்ரீகண்டபரமேசுவரர்க்கு அருளிச்செய்ய,

ஸ்ரீகண்டபரமசிவனர் அருள்வடிவாகிய கல்லாலவிருக்ஷநிழலின்கண்ணே தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியிருந்து, தமது மாணக்கராகிய நந்திபெருமானுக்கு அருளிச்செய்ய,

அவர் அதனைச் சனற்குமாரமுனிவர்க்கு அருளிச்செய்ய,

அவர் அதனைச் சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்ய,

அவர் அதனைப் பரஞ்சோதிமுனிவர்க்கு அருளிச்செய்ய, பரஞ்சோதி முனிவர் கிருபாவசத்தினாலே திருக்கைலாசத்தை விடுத்து, அகஸ்தியமுனி

வரைக் காணவிரும்பிப் பொதியமலைநோக்கி ஆகாயமார்க்கமாகச் செல்லுங் கால், அவர் எழுந்தருளிய விமானமானது திருவெண்ணெய்நல்லூருக்கு நேரா தாகவந்து நின்றுவிட, உடனே பரஞ்சோதிமுனிவர் அதனைத் தெளிந்து சாமுசித்தராய்ச் சிவபிரானை வழிபாடு செய்துகொண்டிருந்த மிகு பரிபக்குவ முற்ற சுவேதவனப்பெருமாளிடம் வந்து, சிவதீக்ஷைசெய்து, பொய்ச்சமயங் களின் நெறி இது இது என்று கண்டு கழித்து மெய்ச்சமயமாகிய சைவசித் தாந்தத்தின் உண்மையை உணர்ந்து சைவஸ்தாபனஞ்செய்ய வல்லவரென் றோர்ந்து, தமது ஆசிரியராகிய சத்தியஞானதரிசனிகள் திருநாமத்தின் மொழி பெயர்ப்பாகிய மெய்கண்டார் என்னும் திருநாமத்தைக் கொடுத்து, * "சீட னுக்குப் பாவனா தீக்ஷைசெய்து, சிவஞானபோதத்தைக் கொடுக்க" என்று இரௌரவாகமத்துத் தீக்ஷாவிதிப்பிரகரணம் கூறியவாறு, சிவஞானபோ தத்தை மெய்கண்டதேவர்க்கு உபதேசித்து, அதனை அவர்பால் நல்கி, "இதற்கு மொழிபெயர்ப்பும், வார்த்திகமாகிய பொழிப்பும் உரைக்க" என்று ஆஞ்ஞைசெய்து நீங்கியருளினர். அங்ஙனம் ஆஞ்ஞாப்பிரகாரம் மெய்கண்ட தேவர் அருளிச்செய்தார்.

மெய்கண்டதேவர் திருவெண்ணெய்நல்லூரிலே சுயம்புமூர்த்தியாய் எழு ந்தருளியிருந்த பொல்லாப்பிள்ளையாருடைய சந்நிதியிலே வேதசிவாகமப்பொ ருள்களை உணர்ந்தும், சிவஞானபோதத்தைச் சிந்தித்து, தெளிந்து, நிஷ்டை கூடியும் வருங்கால், அப்பொல்லாப்பிள்ளையார் மெய்கண்டார்க்கு அருளிய சூர்ணிகையும், அம்மெய்கண்டார் சிவஞானபோதத்துக்கு அருளிய வார்த் திகமும் பொருளினால் ஒற்றுமையுடையனவாம். "சூர்ணிகை" "சூர்ணகம்" என்பன ஒருபொருட்சொற்கள். சூர்ணிகை என்பது சூத்திரமுதலியவற்றின் பொருளை இலேசானே சுருங்கிய வசனரூபமாயுரைப்பது எனப் பொருள்படும். வார்த்திகம் என்பது பொழிப்புரையெனப் பொருள்படும். இஃதிங்ஙனமாக,

திருத்துறையூர்ச் சகலாகமபண்டிதரெனப்படும் அருணந்தி சிவாசாரி யர் தமது சீடவர்க்கங்களுடைய வேண்டுகோட்பிரகாரம் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்துகொண்டு வேதசிவாகமப்பொருள்களைப் பாடஞ் சொல்லிக்கொண்டுவந்தார். திருவருளினால் அருணந்திசிவாசாரிய ரைத் தம்மிடம் வருமாறுசெய்து, அவரது ஆணவமுனைப்பை அடக்கவேண் டியோ? அவரை உய்விக்கத் திருவுளங்கொண்டோ? நாம் அறியேம்! அரு ணந்திசிவாசாரியரிடம் சீடர்கள் போய் வருதலை அறிந்த மெய்கண்டதேவர் அவர்கள் நாடோறும் கேட்கும் பாடங்களில் வினாக்கள் பொறிக்குங்கால்,

---

* bhāvanādīkṣayā caivaṃ (śiṣyaṃ kṛtvā yathāvidhi) |
śivajñānabodha [illegible] ||
(இரௌரவாகமம்.)

அவர்கள் தமது ஆசாரியாவர்கள் அவ்விடங்களிலே தெளிவாய்ப் பொருளுரைக்கவில்லை என்று கூற, அதனைக்கேட்ட மெய்கண்டதேவர் அவற்றின் பொருளை அவர்களுக்குப் புலப்படுத்திவந்தார். அதனாற் சீடர்களெல்லாம் நாடோறும் மெய்கண்டதேவர்பால் மிகுதியாய்ப் போய்க் கற்றலையும், அருணந்திசிவாசாரியர் தம்மிடம் சீடர்கள் வாராமையாற் குறைவடைதலையும் அறிந்து, மெய்கண்டதேவருடைய ஞானப்பிரபாவத்தின்மீது பொறாமை கொண்டு, ஓர் சிறுபிள்ளைக்கா ஆகமார்த்தங்களிலே நிகழும் சந்தேகங்களை நிவாரணஞ் செய்தற்கு வன்மை உண்டாயிற்று என்று ஆச்சரியமடைந்து, அதனைத் தாம் நேரே போய்ப் பார்த்தல்வேண்டுமென்று மெய்கண்டதேவர் வசிக்கும் இடத்துக்கு வந்தருளினர். சிவாசாரியர் வந்தகாலம் சீடர்கள் பாடம்கேட்கும் சமயமாயிருந்தது. அருணந்திசிவாசாரியருடைய சீடர்கள் எழுந்து ஆசாரியர்க்கு நமஸ்காராதிசெய்து வழிபட்டார்கள். குலத்தினாலும், வயசினாலும், வித்தையினாலும் சிறந்த ஆசாரியராகிய தம்மை மெய்கண்டார் சிறிதும் நோக்காமலும், மதியாமலும் இருப்பதைக்கண்ட அருணந்திசிவாசாரியர் தடைவிடைகளோடு மெய்கண்டார் சீடர்களுக்குப் பாடஞ் சொல்லி வருவதைக் கண்டு, அச்சிவாசாரியர் மெய்கண்டாரை விழித்து "ஆணவமலம் என்பது யாது? அதனை எவ்வண்ணம் காண்பது" என்று வினவ, மெய்கண்டார் அவர்க்குத் தர்ச்சனிவிரல்கொண்டு சுட்டிக்காட்டிச் சாட்சுஷிதீக்ஷைசெய்தமாத்திரத்தினாலே, அதிதீவிரசத்திநிபாதமுற்றுநின்ற அருணந்திசிவாசாரியர் தமது பாசம் க்ஷபமாகச் சிவானந்தத்திலே அமிழ்ந்திப் பரவசராய் மெய்கண்டார் திருவடியிலே வீழ்ந்து வணங்கி அவருக்குச் சீடராயினார். மெய்கண்டார் இந்த அருணந்திசிவாசாரியரிடத்துத் தாம் அருளிய சிவஞானபோதத்தை நல்கி, இதனை விரித்து மற்றோர் நூல் செய்க என்று ஆஞ்ஞாபிக்க, அவ்வாறே அவர் சிவஞானசித்தியார் என்னும் சித்தாந்த நூலையும், தாம் மெய்கண்டதேவரிடத்து வினவிய வினாக்களுக்கு உத்தரமாக அவர் இறுத்தருளிய உத்தரங்கள் அடங்கிய இருபாவிருபஃது என்னும் சித்தாந்தநூலையும் அருளிச்செய்தார்.

மெய்கண்டார் சீடர்கள் முப்பத்தொன்பதின்மருள்ளே மனவாசங் கடந்தார் என்பவர் உண்மைவிளக்கம் என்னும் சித்தாந்தசாஸ்திரம் அருளிச்செய்தார்.

திருப்பெண்ணாகடத்தைத் தமக்குச் சென்மஸ்தானமாகக்கொண்ட மறைஞானசம்பந்தசிவாசாரியர் அருணந்திசிவாசாரியரை அடைந்து, "எனது பாசத்தை அறுத்துத் திருவடிதீக்ஷை புரிந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து நமஸ்கரிக்க, அருணந்திசிவாசாரியர் அவருக்குச் சிவதீக்ஷைசெய்து சிவஞானபோதத்தை அருளிச்செய்தார். மறைஞானசம்பந்தசிவாசாரியரும், தமது ஆசாரியரை நமஸ்கரித்து அவ்விடம்விட்டுப்போய்ப் பூலோககைலாய

மாகிய சிதம்பரத்தை அடைந்து ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து அங்கு அமர்ந்தருளினார்.

தில்லைச்சிதம்பரத்து நடராஜபெருமானுக்குப் பூசை செய்யும் முறை வந்தபோது, தில்லைமூவாயிரவருள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியர் விருதுகளோடு பல்லக்கிலிவர்ந்து பூசைநடாத்திவிட்டு மீளும்போது, திருக்களாஞ்சேரியிலே சிங்காரவனத்திலே எழுந்தருளியிருந்த மறைஞானசம்பந்தசிவாசாரியர் அவர் பல்லக்கில் எழுந்தருளிப் போதலையுற்று "பட்ட கட்டையிற் பகற்குருடு போகின்றது; பாருங்கள்" என்றார்; அதனைக்கேட்ட உமாபதிசிவாசாரியர் மிக மகிழ்வுடையராய், உடனே பல்லக்கை விட்டிறங்கி, அவரை வணங்கி, "பகற்குருடு" என்றதின் பொருள் கூறி மெய்ஞ்ஞானநிலையை அருளிச்செய்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து, அவர் குறிப்பின்வழி நின்றார். நெய்தற்றெழில் செய்வார் வீதியிலேசென்று மறைஞானசம்பந்தசிவாசாரியர் நூலுக்கு இடும் கூழைவாங்கிப் பருக, அவர் திருக்கரத்தினின்றும் ஒழுகுஞ் சேஷத்தை உமாபதிசிவனார் வாங்கி உண்டார். அவரது அதிதீவிரபக்குவத்தை அறிந்து, அவர்க்குச் சிவஞானபோதத்தை உரைத்து வேதசிவாகமப்பொருள்களையெல்லாம் கரதலாமலகமென்ன உபதேசித்தார்.

இதனை அறிந்த ஏனைய தில்லைவாழந்தணர்கள் உமாபதிசிவனாரைத் தமது பந்தியினின்றும் நீக்கிவிட்டார்கள். அவரும் இரண்ணியவன்மசக்கிரவர்த்தியிருந்த கொற்றவன்குடியிற்போய் மடம் கட்டி நடேசமூர்த்தியை ஆன்மார்த்தமாகப் பூசித்துக்கொண்டு சிவஞானநிஷ்டை கூடிக்கொண்டு வந்தார்.

ஓர்கால் நடராஜாவுக்குத் துவஜாரோகணகாலம் வந்தபோது தில்லைவாழந்தணர் துவஜத்தை ஏற்ற முயலுங்கால், அது ஏறாது தடைப்பட்டு நின்றுவிட, தீக்ஷிதர்கள் வருத்தமுற்று இராப்போது தத்தம் மனைகளிலேபோய்ச் சயனிக்குங்கால், அவர்க்குச் சொப்பனத்தில் நடராஜவள்ளலார் எழுந்தருளி, "உமாபதி சிவன் வந்தாற்றான் கொடியேறும்" என்றருளிச்செய்தார். பின் அவர்களெல்லாம்போய் உமாபதிசிவனாரைப் பிரார்த்திக்க, அவர் வந்து கொடிக்கயிற்றைப் பற்றாது விடும்படி ஆஞ்ஞாபித்துவிட்டு, ஐந்து திருச்செய்யுட்களடங்கிய கோடிக்கவி என்னும் சித்தாந்தசாஸ்திரத்தைப் பாடியருள, கொடி சுவயமாகவே ஏறிவிட்டது.

மற்றோர்கால் உமாபதிசிவனார் அறியாவண்ணம் அவர்க்குப் பாகஞ்செய்வாரிடத்துத் திருவமுதாக்கும்பொருட்டுப் பெற்றான்சாம்பான் என்பான் விறகு கொணர்ந்து கொடுக்கும் வழக்கமுடையனாயிருந்தான். ஒருநாள் சமையல் விரைவிலே நடவாமையையுற்று உமாபதியார் வினவியபோது, "பெற்றான்சாம்பான் என்பான் ஒருவன் தினந்தோறும் விறகு கொணர்ந்து கொடுக்கும் வழக்கமுடையன்; இன்று மழையினாற்போலும் கொணர்ந்திலன்,

விறகின்பொருட்டுக் கூலிகொடுத்தாலும் வாங்குகின்றானில்லை" என்று விண்ணப்பிக்க, அதுகேட்ட உமாபதிசிவனார் அவன் வந்தால் என்னிடம் வருமாறு சொல்க என்று அருளிச்செய்தார். பெற்றான்சாம்பான் வந்தவுடனே உமாபதிசிவனாரிடம் அவர் செல்லுமாறு பணிக்க, அவன்போய்ச் சிவனாரை நமஸ்கரித்தான். அப்போது அவர் அவனைநோக்கி "விறகு கொணர்ந்து கொடுக்கின்றாயாம், கூலி ஏன் பெறுகின்றிலை" என்று கேட்க, அதற்கு அவன், சுவாமீ! அடியேற்குத் தீக்ஷை செய்தருளல்வேண்டும் என்று வேண்டினான். அதற்குச் சிவனார் நீ நடராஜபெருமானிடத்தில் நிருபம் வாங்கி வருவாயேல் தீக்ஷை செய்வேன் என்றார். அப்போது சாம்பான் நடராஜபெருமான் சன்னிதிவீதியிலே போய் நடராஜாவைப் பிரார்த்தித்துக்கொண்டு வீதியிற் படுத்திருப்ப, ஆன்மாக்கள்வேண்டிய வேண்டியாங்கருளும் நடராஜவள்ளலார் ஒரு திருப்பாசுரம் எழுதப்பட்ட திருமுகத்தை அர்த்தயாமப்போதிலே அவனிடத்துக் கொடுத்தருள, அவன் அதனைக் கொணர்ந்து உமாபதிசிவனார் திருமுன்னே வைத்து நமஸ்கரித்தான். உமாபதிசிவனார் அத்திருமுகத்தைத் தமது இரு கரங்களினாலும் கண்களிலே ஒற்றி, சிரசின்மீது வைத்து, ஆனந்தக் கூத்தாடி, அதனைத் திறந்து பார்த்தபோது

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்கை முறை

என்று வரைந்தருளப்பட்டிருத்தலைக் கண்டு, பரவசமுற்றிருந்து, பின்னர் எழுந்து பெற்றான்சாம்பானுக்கு ஞானவதிப்பிரகாரம் சாட்சுஷிதீக்ஷை செய்து, உடனே முத்தி அடையும்படி செய்தருளினார். அதனை அறிந்த அப்பெற்றான்சாம்பான் மனைவியும், அரசன்முதலாயினோரும் அவ்வுண்மையைப் புலப்படுத்தித் தங்கள் ஐயத்தை நீக்குமாறு உமாபதிசிவாசாரியரை வேண்ட, அவர் முள்ளிச்செடியையும் தமது திருநோக்கத்தினாற் சோதியாய்க் கிளர்ந்து ஆகாயத்திற் செல்லுமாறு செய்து அதற்கும் முக்திகொடுத்தருளினார்.

சிதம்பரமான்மியத்தின் வழித்தாக அருளிச்செய்யப்பட்ட கோயிற்புராணம் அரங்கேற்றப்படாது பேடகத்துள் இருந்தபோது, சபாநாயகர் தில்லைவாழந்தணர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நாம் கொற்றவன்குடி உமாபதியுடைய பேடகத்துள்ளே பூசைமுதலியவின்றி இருக்கின்றேம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அத்தில்லைவாழந்தணர்கள் அதனை உமாபதிசிவாசாரியருக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர் கோயிற்புராணத்தைச் சபாநாயகர் சந்நிதியில் அரங்கேற்றியருளினார்.

உமாபதிசிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்துகொண்டு, வடமொழியிலே பௌஷ்கராகமவியாக்கியானத்தையும் பத்தாகமங்களினின்று தெரிவுசெய்யப்பட்ட சதரத்நசங்கிரகம் என்னும் நூலையும் அமைத்து, தமிழிலே சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் சைவசித்தாந்தசாஸ்திரங்களையும், கோயிற்புராணம், திருத்தொண்டர்புராணசாரம், திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை என்னும் பிரபந்தங்களையும் அருளிச்செய்தார். சங்கற்பநிராகரணம் அருளிச்செய்த காலம் சாலிவாகனசகாப்தம் ௧௨௩௬.

திருக்கடவூரிலே அவதரித்தருளிய உய்யவந்ததேவநாயனார் பெரும்பற்றப்புலியூரிலே எழுந்தருளியிருந்தபோது, தமது ஆசாரியராகிய திருவியலூர் ஆளவந்ததேவநாயனார் தமக்கு அருளிச்செய்த திருவுந்தியார் என்னும் சைவசித்தாந்தசாஸ்திரத்துக்கு உபப்பிருங்கணமாகத் திருக்களிற்றுப்படியாரை ஓர் பரிபக்குவர்பொருட்டு அருளிச்செய்து, அதன் பெருமையை உலகத்தார் உணரும்வண்ணம் கனகசபையிற்சென்று வணங்கி, யாவருங் காணத் திருக்களிற்றுப்படியிலே அந்நூலை வைக்கும்போது, அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து அதனை வாங்கி யாவரும் காண நடராஜாது திருவடியிலே வைத்தமையினால், தில்லைமூவாயிரவர் முதலாயினோர் அதற்குத் திருக்களிற்றுப்படியார் என்று திருநாமஞ் சாத்தினார்கள்.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று

என்னும் திருவெண்பாப்பிரகாரம், திருவுந்தியார்முதற் சங்கற்பநிராகரணமிறுதியாகிய பதினான்கு சைவசித்தாந்தசாஸ்திரங்களும் மெய்கண்டசாஸ்திரம் என்று சான்றோரால் வழங்கப்பட்டுவருகின்றன.

உமாபதிசிவாசாரியரிடத்திலே அநுக்கிரகம் பெற்ற அருணமச்சிவாயதேசிகர் நவகோடிசித்தவாசபுரம் எனப்பெயரிய திருவாவடுதுறையிற் சித்தமூர்த்தியாக எழுந்தருளியிருந்த சித்தர்சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினார்.

சித்தர்சிவப்பிரகாசர் திருமுவலூரிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே திருவவதாரஞ் செய்த பஞ்சாக்ஷரதேசிகர் எனப்படும் நமச்சிவாயமூர்த்திகளுக்கு உபதேசித்தருளினார்.

இந்தப் பஞ்சாக்ஷரதேசிகசுவாமிகளே திருவாவடுதுறையாதீனத்துக்குப் பிரதமஞானாசாரியசுவாமிகள்.

நமச்சிவாயமூர்த்திகள் திருவாவடுத்துறையில் எழுந்தருளியிருந்து கொண்டு சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசம் அருளிச்செய்தார்.

சிவப்பிரகாசதேசிகர் வைஷ்ணவர்களாலே சிதம்பராலயபூசைக்கு முட்டுப்பாடுவந்தபோது, தமது ஆசாரியமூர்த்திகள் ஆஞ்ஞாப்பிரகாரம், தம்மை வழிபடும்வண்ணம் அக்காலத்திருந்த அரசரை வசப்படுத்திச் சிதம்பராலய பூசையைச் சிறப்புற நடாத்துவித்துப் பின்னர் நிட்டையில் வீற்றிருந் தருளினர்.

பின்னர் நமச்சிவாயமூர்த்திகள் திருவாவடுதுறையிலே திருவவதாரஞ் செய்து தீவிரதாபக்குவராய் எழுந்தருளியிருந்த மறைஞானதேசிகருக்கு அபிஷேகஞ்செய்து உபதேசித்தருள, அவர் சைவசித்தாந்தசாத்திரோப தேசம் கேட்டமாத்திரத்திலே சிந்தித்துத் தெளிந்து தைலதாரைபோல இடையறாது நிட்டையிலே வீற்றிருந்தருளினர்.

பஞ்சாக்கரதேசிகோத்தமர் ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் விளங்கிவரும்வண்ணம் திருவுளங்கொண்டு அம்பலவாணதேசிகருக்கும், தக்ஷிணாமூர்த்திதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து, சைவசித்தாந்தோபதேசஞ் செய்தருளினர்.

தக்ஷிணாமூர்த்திதேசிகர் மெய்கண்டசாஸ்திரக்கருத்தை உள்ளடக்கித் தசகாரியம் உபதேசப்பஃறொடை என்னும் இரு நூல்களை அருளிச்செய்து பரிபூரணதசை அடைந்தார்.

அம்பலவாணதேசிகர் தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு. சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாயநிட்டை வெண்பா, உபதேசவெண்பா, நிஷ்டைவிளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை என்னும் பத்து ஞானநூல்களையும், பூப்பிள்ளையட்டவணை எனப்படும் உயிரட்டவணையையும் அருளிச்செய்தார்.

பின்னரும் அம்பலவாணதேசிகர் தம்மை அடைந்த வைஷ்ணவப்பிராமணரும் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த பரிபக்குவருமாகிய உலகுடைநாயனார் என்பவருக்கு நிருவாணதீக்ஷைசெய்து, மெய்கண்டசாஸ்திரங்களையும், தாம் இயற்றியருளிய தசகாரியமுதலிய நூல்களையும் உபதேசித்தார். உலகுடைநாயனார் தமது ஞானாசாரியர்மீது "மலமெனுந் தடத்தில்" என்றற்றொடக்கத்த பத்துத் திருவிருத்தங்களைப் பாடியருளினர்.

அம்பலவாணதேசிகர் உருத்திரகோடிதேசிகருக்கும், அவர் வேலப்ப தேசிகருக்கும், அவர் குமாரசுவாமிதேசிகருக்கும், அவர் பிற்குமாரசுவாமி தேசிகருக்கும், அவர் மாசிலாமணிதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவ சித்தாந்தோபதேசஞ் செய்தருளினர்.

அக்காலத்திலே மாசிலாமணிதேசிகரிடத்திலே சைவசித்தாந்தோபதேசம் பெற்றுத் திருநெல்வேலியில் ஈசானமடாலயத்திலிருந்த சுவாமிநாததே

சிகர் இலக்கணக்கொத்து என்னும் நூலையும் வடமொழிப்பிரமாணங்களோடு சேர்ந்த தசகாரியஞானநூலையும் இயற்றினுர்.

மாசிலாமணிதேசிகர் இராமலிங்கதேசிகருக்கும், அவர் வேலப்பதேசிகருக்கும், அவர் பின்வேலப்பதேசிகர்க்கும் சைவசித்தாந்தோபதேசஞ் செய்தருளினுர். பெரியபட்டத்து வேலப்பதேசிகர் திருப்பறியலூர்ப்புராணத்தை வடமொழியினின்று மொழிபெயர்த்தருளினுர். சின்னப்பட்டத்துப் பின்வேலப்பதேசிகர் பஞ்சாக்கரப்பஃறொடை என்னும் ஞானநூலை அருளிச்செய்தார்.

அம்பலவாணதேசிகர் அருளிய தசகாரியமுதலிய பத்தும், தக்ஷிணமூர்த்திதேசிகருளிய தசகாரியம், உபதேசப்பஃறொடை இரண்டும், சுவாமிநாததேசிகருளிய தசகாரியம் ஒன்றும், பின்வேலப்பதேசிகருளிய பஞ்சாக்கரப்பஃறொடையுமாகச் சேர்ந்த பதினுன்கு ஞானநூல்களும் பண்டாரசாஸ்திரங்களெனப் பெயர்பெற்று வருவனவாயின.

அந்தப் பின்வேலப்பதேசிகஞானுசாரியர்காலத்திலே, பாண்டிமண்டலத்துப் பொதியமலைச்சாரலிலே பாவநாசத்தைச் சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே பரம்பரைச் சைவவேளாளர்குலத்திலே சிவபக்திமுதலியவற்ருல் ஓங்கிய ஆனந்தக்கூத்தர் என்பாருடைய கற்பினிற் சிறந்த மயிலம்மையார் திருவயிற்றிலே ஒருவர் திருவவதாரஞ் செய்து, முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்று, ஒழுக்கம் அன்புமுதலிய நற்குணங்களோடு வளர்வாராயினுர்.

முக்களாலிங்கர் ஐந்து பிராயத்திலே தமது தாய் தந்தையரால் வித்தியாரம்பஞ் செய்யப்பெற்று ஓர் பாடசாலையில் அமர்ந்து கல்விகற்று வருவாராயினுர். அக்காலத்திலே திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சில முனிவர்கள் விக்கிரமசிங்கபுரத்துக்கு வந்தபோது, அவர்களை முக்களாலிங்கர் தரிசித்துப் பிரார்த்தித்துத் தமது கிருகத்துக்கு அழைத்துக்கொண்டு போய் விருந்துசெய்வித்தார். தமது கருத்தின்படி விருந்தளித்த அன்னையாரையுற்று,

அருந்ததியேன் னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளித்தநீ செல்வி—பொருந்தவே
யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந் தவாத மயில்

என்னும் வெண்பாச்செய்யுளை இயற்றினுர். பின்னர் அவர் தந்தையார் வீட்டிற்கு வந்து நடந்த விஷயங்களைக் கேட்டு மிக்க ஆனந்தமுற்ருர்.

ஆனந்தக்கூத்தர் தமது புதல்வரோடு ஆதீனமுனிவர்களிடத்துக்குப் போய் வணங்கியபோது, சத்திநிபாதமுற்ற முக்களாலிங்கர் பிறவித்துன்பத்தினின்று கரையேற நினைந்து, முனிவர்களோடு தாம் செல்லவேண்டு

மென்ற குறிப்பினைத் தந்தையார்க்கு உணர்த்த, புதல்வரைப் பிரியச் சிறிதும் மனசிலாராயினும் தந்தையார் ஒருவாறு இசைந்து அப்புதல்வரை முனிவர்பால் விடுத்துத் தமது வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

முனிவர்களோடு முக்களாலிங்கர் வழியிலேயுள்ள சிவஸ்தலங்களை வழிபட்டுக்கொண்டு, திருவாவடுதுறையாதீனமடாலயத்துள்ளே பிரவேசித்து, ஆதீனபரமசற்குருவாகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்று, சின்னப்பட்டத்தில் அப்போது எழுந்தருளியிருந்த ஞானசாரியாராகிய பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினர்.

இந்த ஞானதேசிகரிடத்திலே சைவசந்நியாசமும், சிவதீக்ஷையும், சிவஞானயோகிகள் என்னும் தீக்ஷாநாமமும் பெற்று மெய்கண்டசாஸ்திரம், பண்டாரசாஸ்திரம் என்பவற்றைக் கேட்டருளினர்.

இவர் சென்னைமாநகரிலே இருந்தபோது மஹௌதாரியப்பிரபுவாகிய மணலிச்சிந்நயமுதலியாரது ஆஞ்ஞாப்பிரகாரம் வியாகரணத்தில் வல்ல சாஸ்திரியார்வாயிலாகப் பதஞ்சலிமகாபாஷ்யம் கற்றுவந்தார். இங்ஙனம் நெடுநாட் கற்றுவருங்காலத்தில், முதலியார் சாஸ்திரியாரைப் பார்த்து, தம்பிரான் பதஞ்சலிமகாபாஷ்யம் நன்கு கற்றுவருகின்றாரா? என்று சிவஞானயோகிகளையுற்று வினவ, அதற்குச் சாஸ்திரியார் "பாடம் மாத்திரம் சொல்லிக்கொண்டுவருகின்றேன், ஞாபகத்தில் அவற்றைத் தரித்திருக்கின்றாரா? என்பதையுற்று நான் ஒன்றும் அவரிடத்தில் விசாரித்திலேன்" என்று உத்தரம் கூறிவிட்டு, முதலியார் சமுகத்தில் மகாபாஷ்யத்திற் சில வினாக்கள் பொறித்தார். உடனே சிவஞானயோகிகள் "ஏகசந்தக்கிராகி" யாதலின் கடன் மடை திறந்தாற்போலத் தாம் கேட்ட மகாபாஷ்யபாகங்களில் ஓர் பதமும் தவறவிடாது நெட்டுருவாக ஒப்பித்தார். உடனே சாஸ்திரியாரும் முதலியாரும் அடைந்த ஆனந்தத்துக்கு ஓர் அளவில்லை என்பர். அவர் அகத்தியமகாமுனிவரது வரத்தினால் அவதரித்தவர் என்று கூறப்படுகின்றமைக்குச் சான்றாகவே, வடமொழி தென்மொழிக் கடல்களின் கரை கண்டுணரவல்லராயினர்.

பின்வேலப்பதேசிகர் சிவஞானயோகிகளுக்கு ஆசாரியராயிருந்தாரென்பது

எவ்வெவர்கோட் படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகையந் சுவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி
யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்ப்பணியுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்

எனனும் காஞ்சிப்புராணச்செய்யுளால் அறியப்படுகின்றது.

சிவஞானயோகிகள் தொல்காப்பியச்சூத்திரவிருத்திபாஷ்யம், தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பு, நன்னூல்விருத்தியுரைத்திருத்தம், சித்தாந்தப்பிரகாசிகை, காஞ்சிப்புராணமுதற்காண்டமொழிபெயர்ப்பு, அரதத்தாசாரியர் அருளிய பஞ்சசுலோகமொழிபெயர்ப்பு, சிவதத்துவவிவேகம், சோமேசர்முதுமொழிவெண்பா, திருவேகம்பரந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கச்சியானந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பரானந்தக்களிப்பு, செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், செப்பறை அகிலாண்டேசுவரிபதிகம், திருத்தொண்டர்திருநாமக்கோவை, நமச்சிவாயமூர்த்திகண்மீது பஞ்சாக்ஷரமாலைமுதலிய பிரபந்தங்கள், சிவசமவாதவுரைமறுப்பு, "எடுத்து" என்னுஞ்சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம், இலக்கணவிளக்கச்சூறாவளி என்னும் நூல்களை லோகோபகாரமாக இயற்றினமேதாடமையாது, யாமெல்லாம் உய்ந்து பிறவிசாகரத்தினின்றும் கரையேறும்வண்ணம் சிவஞானபோதத்துக்கு மெய்கண்டசிவாசாரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகாபாஷ்யம் எனப்பெயரிய குருவியாக்கியானமும், சிற்றுரை எனப்பெயரிய லகுவியாக்கியானமும் செய்தருளினர். அச்சிவஞானபோதசூத்திரம், வார்த்திகம், வெண்பா என்பவற்றின் உண்மைப்பொருளுணர்ந்து விளக்க வல்லார் இப்பூமண்டலத்தில் இந்த மகானாகிய சிவஞானயோகிகளேயன்றி மற்றியார்!!

இந்தச் சிவஞானபோதம் வடமொழியை முதலாகக் கொண்டதென்றுணர்த்த ஒவ்வொரு சூத்திரத்தினும் முதற்கண்ணே, சிவபெருமான் அருளிய வடமொழிச்சுலோகத்தையும் அதன் பொருளையும், மெய்கண்டதேவர் அருளிய சூத்திரத்தையும் அதன் பதவுரையையும், அதன்பின் சூத்திரக்கருத்துரையையும் அதன் பொருளையும், சூத்திரப்பிண்டப்பொழிப்பையும் வரைந்துவிட்டு, அதிகாணத்துள்ள மேற்கோள், ஏதுமுதலியவற்றின் பொருளைப் பொல்லாப்பிள்ளையாரருளிய ஒவ்வோர் சூர்ணிகையின் பொருளாக அடக்கி வரைந்து, திருஷ்டாந்தமாகப் போந்த வெண்பாக்களின் பொருளையும் எழுதி, மேலும் விளக்கற்பாலனவாய், சுருக்கற்பாலனவாய், விரிக்கற்பாலனவாய்க் கிடந்தவற்றை விளக்கியும், சுருக்கியும், விரித்தும் உரைத்தும், ஒவ்வோர் சூத்திர இறுதியில் ஒவ்வோர் சூத்திரப்பொருளையும் தொகுத்துணர்த்தியும், அச்சூத்திரப்பொருள் இனிது விளங்குமாறு பற்பல வினாக்கள் பொறித்தும், அவற்றின் விடைகள் இன்ன இன்ன பிரிவுகளால் உணரப்படும் என்பது போதா, வினாக்களின் இறுதியில் இலக்கங்கள் கொண்டு அவற்றைக் குறித்தும் வரைந்துள்ளேம்.

இந்தச் சிவஞானபோதவசனலங்காரதீபத்திலே பிரமாணமாய்ப்போந்தவை இருக்குவேதமும், ஆரணியகமும், உபநிஷதமும், பிரமசூத்திரமும், புராணேதிகாசமும், ஆகமமும், தேவாரதிருவாசகதிருமந்திரமும் பிறவுமாம்.

சூத்திரப்பதப்பொருளை (சூ – ப) என்றும்,

சூத்திரக்கருத்துரையை (க – ரை) என்றும்,

கருத்துரைப்பொருளை (க – போ) என்றும்,

சூர்ணிகைப்பொருளை (சூ – போ) என்றும்,

சூத்திரப்பிண்டப்பொருளை (சூ – பி – போ) என்றும்,

வெண்பாப்பொருளை (வெ – போ) என்றும் ஆண்டாண்டுக் குறித்துள்ளேம். இங்ஙனம் எழுதாது மற்றோர்பிரகாரம் மேற்கோண்முதலியபற்றி எழுத முயன்றால், அது வசனநடையாயிருந்தாலும் அதன் பொருள் எவர்க்கும் அறியமுடியாதுபோய்ப் பயனற்றதாய் முற்றுமாகலான் அங்ஙனஞ் செய்துளேம். யாம் பெரும்பான்மையும் மாதவச்சிவஞானயோகிகள் உரைத்தருளிய உரையைத் தொடர்ந்தே இதனை எழுதினேம்.

இங்ஙனம்,

ஸ்ரீகாசிவாசி - செந்திநாதையர்.

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதவசனாலங்காரதீபம்.

## கடவுள்வணக்கம்.

க. பொதுவதிகாரத்தினாலும் சிறப்பதிகாரத்தினாலும் இரண்டாக வேறுபடுத்திக் காட்டி, வடமொழிச்சிவஞானபோதத்தைத் தென்மொழியிலே மொழிபெயர்த்தருளிச்செய்யுமாறு தொடங்கிய மெய்கண்டதேவநாயனார் நின்மலஜாக்கிராதீதசிவானந்தசாகரத்தில் மூழ்கிய தமக்கு எவ்வித இடையூறும் சிறிதாயினும் நணுகாது என்று உணர்ந்தாரேனும், ஆன்றோர் செய்த பிரகாரம் தாமுஞ் செய்து அந்த ஆன்றோர் ஒழுக்கத்தைப் பேணவேண்டும் என்றும், அதனைத் தமது மாணாக்கர்க்கு அறிவுறுத்தவேண்டும் என்றும் கொண்டே, முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துதலாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

உ. கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

ங. (இதன் பொருள்.) திருக்கைலாசத்தின்கண்ணேயுள்ள அருள்வடிவாகிய கல்லாலவிருக்ஷத்தின்கீழே வீற்றிருந்தருளி, இந்தச் சிவஞானபோத சாஸ்திரம்வாயிலாகச் சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று மாறுபடுவனவாக மலைவுற்று வினாவிய நந்திபெருமானுக்கு உளவாகிய சந்தேகங்களை நீக்கியருளிய ஸ்ரீகண்டருத்திரப்பெருமான் மேன்மேலும் கருணைகூர்ந்தருளும் பொருட்டு, சுயம்புமூர்த்தியாகிய விநாயகக்கடவுளுடைய இரண்டு திருவடித்தாமரைகளை மெய்யன்பர்கள் தமது சிரசின்கண்ணே சூடுவர் என்பதாம்.

ச. அவரது திருவடிகள் இரண்டனுள் வலத்திருவடி சேதனாசேதனப்பொருள்களையெல்லாம் ஒருவர் அறிவிக்கவேண்டாது தானே அறியும் அறிவாகிய முற்றறிவு என்றும், இடத்திருவடி அந்தப் பொருள்களையெல்லாம் செயற்படுத்தும் முற்றுத்தொழில் என்றும் உணர்தற்பாலனவாம்.

ரு. ஆகவே, அவரது முற்றறிவே ஓர் திருவடி எனவும், முற்றுத்தொழிலே மற்றத் திருவடியாம் எனவும் ஓர்க.

சு. ஆன்மாக்களுடைய அறிவு எப்பொருளையும் ஒவ்வொன்றாக அறியும் சிற்றறிவாயும், அவர்களுடைய தொழில் எப்பொருளையும் நினைத்தவாறு செய்ய இயலாத சிறு தொழிலாயும் உள்ளன.

எ. ஆதலால் அவரது முற்றறிவாகிய திருவடியையின்றி ஆன்மாக்களாகிய நாம் ஒன்றை அறியவும் இயலேம், அவரது முற்றுத்தொழிலாகிய திருவடியையின்றி நாம் ஒன்றையும் செய்யவும் இயலேம் என்று உணர்ந்து, நமது அறிவுஞ் செயலும் இழந்து திருவருள் வியாபகத்தில் அடங்கிநிற்றலே அவரது திருவடியைச் சூடுதல் என்பதின் பொருளாம்.

அ. தாள் தலை என்னும் இரண்டும் வேறு சொற்களாயும், அவ்விரண்டும் புணருங்கால் தாடலை என ஒன்றாயும் நிற்குமாறுபோல, சீவான்மா பரமான்மா என்னும் இரண்டும் வேறு பொருள்களாயும், முத்திதசையிலே ஆன்மபோதமும் கண்ணொளியும்போல வேறுபடாது அனன்னியமாயும் நிற்கும்.

கூ. உலகத்திலே புதல்வனிடத்திற் செய்யும் வழிபாடு தந்தையர்க்கு மிகுந்த மகிழ்ச்சியை விளைக்குமன்றோ. அந்த முறைமைபற்றி விநாயகக்கடவுளை வழிபடுதல் சிவபெருமானை மகிழ்விக்கும் என்பதும், அவ்விருவர்க்கும் பேதமின்றாம் என்பதும் போதா இல்லார் அருளிய பொல்லார் இணைமலர் புனைவரே என்றார்.

க0. மலையை வில்லாக வளைத்தவரும், கல்லாலநிழலில் எழுந்தருளியிருந்தவரும் சிவபெருமானேயாம்.

கக. மகாமேருவை வில்லாகவளைத்து அக்கினியும், சோமனும், விஷ்ணுவும் முறையே அடியும், நடுவும், நுனியுமாக அமையப்பெற்ற பாணத்தைத் திரிபுரத்தின்மேற் செலுத்தி, அப்புரத்து அசுரர்களைச் சங்கரித்து, அவர்களால் துன்பமடைந்த தேவர்களைக் காத்து, அவர்களுக்குச் சிற்றின்பபோகத்தை ஊட்டிய கடவுளே, கல்லாலவிருக்ஷநிழலில் ஞானசாரியாக எழுந்தருளியிருந்து சனகாதிமுனிவர்களுக்குச் சித்தாந்தோபதேசஞ் செய்து, மும்மலம்போக்கிப் பேரின்பபோகத்தை அருளினரென்று உணரற்பாற்றும். அங்ஙனம் சித்தாந்தோபதேசஞ் செய்தமை

கஉ. 𑌸𑌨𑌕𑌾𑌦𑌿𑌮𑍁𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌸𑍍 𑌤𑍍𑌰𑌿𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌰𑍍𑌥𑌸𑌮𑍍𑌮𑌿𑌤𑌮𑍍।

𑌰𑌹𑌸𑍍𑌯𑌮𑌾𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌾𑌖𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌂 𑌕𑌥𑌯𑌨𑍍 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃॥

சநகாதிமுநீந்த்ரேப்யஸ் த்ரிபதார்த்தார்த்தஸம்மிதம்।

ரஹஸ்யமாகமாந்தாக்யஸித்தாந்தம் கதயந் ஸ்திதஃ॥

"(கைலாசத்திலே சிவபெருமான்) சனகர்முதலிய முனீந்திரர்களுக்குத் திரிபதார்த்தார்த்தங்களினாலே சம்மிதமாயும் இரகசியமாயுமுள்ள ஆகமாந்தம் என்னும் பெயர்த்தாகிய சித்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்" என்று சங்கரசங்கிதை கூறுமாற்றால் உணரப்படும்.

கந. மேலே கூறிய "கல்லால்" என்றற்றொடக்கத்தவஞ்சித்துறைச் செய்யுள் கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய, பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ என்னும் பன்னிரண்டு சொற்களையுடையது.

கச. இந்தப் பன்னிரண்டு சொற்கள்கொண்டு இந்த நூல் பன்னிரண்டு சூத்திரங்களால் அமையப்பெற்றது எனவும்,

கரு. கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய என்னும் முன் ஆறு சொற்கள்கொண்டு பொதுவதிகாரமாகிய பொதுவியல்பு முன் ஆறு சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

கசு. பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர்' ஏ என்னும் பின் ஆறு சொற்கள்கொண்டு சிறப்பதிகாரமாகிய சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

கஎ. கல், ஆல், நிழல் என்னும் மூன்று மொழிகள்கொண்டு பதி, பாசம், பசு என்னும் முப்பொருள்களுக்குப் பிரமாணம் கூறுவதாகிய பிரமாணவியல்பு முதலாம், இரண்டாம், மூன்றும் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

கஅ. மலைவு, இல்லார், அருளிய என்னும் மூன்று மொழிகள்கொண்டு அந்தப் பசு பாசம் பதி என்னும் முப்பொருள்களுக்கு இலக்கணம் கூறுவதாகிய இலக்கணவியல் நான்காம், ஐந்தாம், ஆறும் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

கசு. பொல்லார், இணை, மலர் என்னும் மூன்று மொழிகள்கொண்டு, அப்பதி, பசு, பாசங்களின் இலக்கணத்தை அறிந்து அதனாலாகிய பயன் பெறுதற்கு ஏதுவாயுள்ள சாதனம் கூறுவதாகிய சாதனவியல்பு ஏழாம், எட்டாம், ஒன்பதாம் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

உ௦. நல்லார், புனைவர், ஏ என்னும் மூன்று மொழிகள்கொண்டு அச்சாதனத்தானாகிய பயனை வகுத்துக் கூறுவதாகிய பயனியல்பு பத்தாம், பதினொராம், பன்னிரண்டாஞ் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும் குறிப்பால் உணரக்கிடந்தது.

உக. இங்ஙனம் நூலிலே கூறப்படும் பொருள்களையெல்லாம் குறிப்பால் தன்னகத்தே அடக்கிநிற்றல் மங்கலவாழ்த்துக்கு இலக்ஷணமாம் என்றுணர்க.

---

## கடவுள்வணக்கத்துப் பரீக்ஷைவினக்கள்.



க. சிவஞானபோதம் எத்தனை அதிகாரமுடையது? க.

உ. எந்நிலையில் நின்றவர்க்கு இடையூறு எய்தாது? க.

ந. மெய்கண்டதேவர் எந்நிலையில் உள்ளார்? க.

ச. எதன்பொருட்டு மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்? க.

ரு. எவரை இங்கே வாழ்த்துகின்றார்? க.

சு. அந்த வாழ்த்து யாது? உ.

எ. வாழ்த்துக்கவியின் பொருள் யாது? ந.

அ. விநாயகக்கடவுளது வலத்திருவடி எதனை உணர்த்தும்? ச.

கூ. அவர் இடத்திருவடி எதனை உணர்த்தும்? ச.

க0. ஆன்மாக்களுடைய அறிவும் தொழிலும் எவ்வியல்பின? சு.

கக. திருவடி சூடுதலின் பொருள் யாது? எ.

கஉ. தாள் தலை என்னும் மொழிகள்போல, வேறு பொருள்களாயுள் ளன யாவை அ.

கந. முத்திதசையிற் பரமான்மாவும் ஆன்மாவும் எங்ஙனம் அனன்னி யமாய் நிற்கும்? அ.

கச. விநாயகக்கடவுளை வழிபடுதல் சிவனை மகிழ்விக்கும் என்றற்குக் காரணம் என்னை? கூ.

கரு. மலையை வில்லாக வளைத்தவரும் கல்லாலநிழலில் எழுந்தருளி யிருந்தவரும் யாவர்? க0.

கசு. மலையை வில்லாக வளைத்து எதனைச் செலுத்தினார்? கக.

கஎ. பாணத்தைச் செலுத்தி எவரைச் சங்கரித்தார்? கக.

கஅ. அதனால் தேவர்களுக்கு எதனை ஊட்டினார்? கக.

ககூ. கல்லாலவிருக்ஷநீழலில் எழுந்தருளியிருந்து எதனை உபதேசித்தார்? கக.

உ0. சித்தாந்தோபதேசஞ் செய்து எதனைப் போக்கினார்? கக.

உக. அதனாற் சனகாதியர்க்கு எதனை அருளினார்? கக.

உஉ. சனகாதியர்க்குச் சித்தாந்தோபதேசஞ் செய்தார் என்றமைக் குப் பிரமாணம் என்னை? கஉ.

உங. கல்லால் என்றற்றொடக்கத்த வஞ்சித்துறைச் செய்யுளில் எத்தனை சொற்கள் அமைந்தன? கங.

உச. இப்பன்னிரு சொற்களும் எவற்றைக் குறிப்பால் உணர்த்துகின்றன? கச.

உரு. கல் முதலிய ஆறு சொற்களால் எவை சுட்டப்படுகின்றன? கரு.

உசு. அவ்வாறு சூத்திரங்களிலும் கூறப்பட்டது யாது? கரு.

உஎ பொல்லார் முதலிய ஆறு சொற்களாற் குறிக்கப்பட்டன யாவை? கசு.

உஅ. ஆறு சூத்திரங்களினும் கூறப்பட்டது யாது? கசு.

உகூ. கல்முதலிய மூன்று சொற்களால் உணர்த்தப்பட்டன யாவை? கஎ.

ஙo. அம்மூன்று சூத்திரங்களிற் கூறப்பட்டது யாது? கஎ.

ஙக. மலைவுமுதலிய மும்மொழிகளாற் குறிக்கப்பட்டன யாவை? கஅ.

ஙஉ. அம்மூன்று சூத்திரங்களிற் கூறப்பட்டது யாது? கஅ.

ஙங. பொல்லார்முதலிய மும்மொழிகளால் உணர்த்தப்பட்டன யாவை? ககூ.

ஙச. அம்மூன்று சூத்திரங்களிற் கூறப்பட்டது யாது? ககூ.

ஙரு. நல்லார்முதலிய மூன்று சொற்களாற் குறிக்கப்பட்டது யாது? உo.

ஙசு. அம்மூன்று சூத்திரங்களிற் கூறப்பட்டது யாது? உo.

---

## சமயாதீதம்.

### வேதசாரசைவசித்தாந்தம்.

க. மங்கலவாழ்த்துக் கூறுமிடத்து நமக்கு இறைவர் சிவபெருமான் என்று உணர்த்தி, அந்தச் சிவபெருமானல் அருளிச்செய்யப்பட்ட வைதிக சைவசித்தாந்தத்தினது உயர்ச்சியும், ஏனைச் சமயநூல்களை உணர்ந்தாரது குறைவும் கூறுவாராயினர்.

உ. உடைப்பொருள் இருவகைப்படும்; அவை அடிமையும் உடைமையுமாம். உயிர்ப்பொருளெல்லாம் அடிமைப்பொருள். உயிரில்லாப் பொருளெல்லாம் உடைமைப்பொருள். உயிர்ப்பொருள் சேதனப்பிரபஞ்சம் எனவும், உயிரில்லாப்பொருள் அசேதனப்பிரபஞ்சம் எனவும்படும்.

ங. நின்மலதுரியத்தின்கண்ணே "தான் பணியை நீததலாகிய" ஆன்மசுத்திவாயிலாக அடிமைப்பொருளாகிய தம் இயல்பினை உணர்ந்து, தம்மை உடையானாகிய தலைவனை நின்மலதுரியாதீதத்தின்கண்ணே உணரும் சித்தாந்தசைவர் தமக்கு அடிமைப்பொருளாகிய எம்மை உடையாராகலின், அவர் நாம் செய்யும் குற்றங்களைப் பொருட்படுத்தாது நீக்கி, எமது நற்குணத்தைப் பொருட்படுத்திப் பாராட்டுவாரன்றி ஒருகாலும் தூஷிப்பாரல்லர்; ஆதலான் அவர்கள் நாம் இயற்றும் இந்தச் சிவஞானபோதத்திலே நிகழும் வழுஉக்களைப் பொருட்படுத்தாது நீக்கி, அதிற் காணப்படும் சிறந்த பொருள்களைப் பாராட்டி அதனை அங்கிகரிப்பார்.

ச. அங்ஙனம் பரமபதியாகிய சிவபெருமானுக்குத் தாம் அடிமை என்று உணரமாட்டாத புறப்புறச்சமயத்தாரும், புறச்சமயத்தாரும், அகப்புறச்சமயத்தாரும் எமது நூலையும், எம்மையும் இகழ்ந்து உரைக்கும் மொழிகளையும், புறச்சமயிகளாகாத அகச்சமயத்தார் அறுவரும் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து உரைக்கும் மொழியையும் பொருட்படுத்தேம்.

## புறப்புறச்சமயத்தார்.



(1) லோகாயதரும் (மாத்மிகர், யோகாசாரர் சவுத்திராந்திகர், வைபாடிகர் என்னும்) நால்வகைப் பவுத்தரும், க்ஷமணருமாகிய அறுவரும் வேதம் சிவாகமம் இரண்டையும் நிந்திக்கும் நாஸ்திகராயினும் ஒரு நூல் என்றும் பிரமாணம் என்றும் கூறி ஒரு நெறியில் நிற்றலால் அவர் சமயம் புறப்புறச்சமயம் எனப்படும்.

## புறச்சமயத்தார்.



(2) தார்க்கிகரும், மீமாஞ்சகரும், ஏகான்மவாதியரும், சாங்கியரும், யோகமதத்தினரும், பாஞ்சராத்திரிகளுமாகிய அறுவரும் வேதத்தைப் பிரமாணமாகப் பொதுவகையாற் கொள்ளினும், அவருள்ளே தார்க்கிகர் வேதத்தை நேரே பிரமாணமாகக் கொள்ளாது, அவ்வேதப்பொருளோடு மாறுபட்டுப் பொருள்கொள்ளுகின்றமையானும், மீமாஞ்சகர் வேதத்தின் கன்மகாண்டத்தையேபிரமாணமாகக்கொண்டு ஞானகாண்டமாகிய உபநிடதங்களை இகழ்கின்றமையானும், ஏகான்மவாதிகள் ஞானகாண்டத்தைப் பொருட்படுத்துபவர்போலத் துணிந்து, வேதாந்தம் என்னும் பெயரோடு விளங்குகின்ற சர்வசாரம் பைங்கலமுதலிய மாயாவாத உபநிடதப்பொருள்களைப் பொருட்படுத்தி, அம்மாயாவாதப் பொருள்களுக்கு இயைவுபட (ஆன்மாவையும் பரமான்மாவையும் சிவாகமங்களுக்கு மாறுபடாது நித்தியபதார்த்தங்கள் என்று

உரைக்கும் மெய்மை வேதாந்தமாகிய முண்டகம் சுவேதாசுவதரம் கடவல்லி முதலிய உபநிடத) பரசுருதிகளை அலைத்துத் திரித்து மாயாவாதபரமாகப் பொருள்கொண்டு இடருறுதலானும், சாங்கியர் யோகமதத்தினர் என்னும் இருவரும் தத்தம் மதத்துக்கு வேண்டுவனவற்றைமாத்திரம் எடுத்துக் கொண்டு ஏனையவற்றுக்குப் பிரமாணம் கொள்ளாமையானும் வேதத்துக்குப் புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கொள்கின்றமையானும், பாஞ்சராத்திரர் வேதாந்தம் என்னும் பெயரோடு விளங்கும் நாராயணம் சுபாலமுதலிய உபநிடதங்களைப் பொருட்படுத்தி, இந்த வைஷ்ணவ உபநிடதங்களுக்கு இயைய (ஈச, கேன, கட, பிர்சின, முண்டக, மாண்டூக்கியமுதலிய) உபநிடதபரசுருதிகளை அலைத்துத் திரித்துப் பாஞ்சராத்திரப்பரமாகப் பொருள்கொண்டு இடருறுதலானும் வேதத்துக்குப் புறமாகிய நூல்களைப் பிரமாணமாகக் கோடலானும், தார்க்கிகர்முதற் பாஞ்சராத்திரர் இறுதியாகிய அறுவரும் சிவாகமநிந்தகராதலானும், அவர் சமயம் புறச்சமயம் என வேறு வைத்து எண்ணப்பட்டது.

## அகப்புறச்சமயத்தார்.



(௩) அவைதிகபாசுபதர், மாவிரதர், காபாலர், வாமர், வைரவர் என்னும் ஐவரும் வேதம் சிவாகமம் இரண்டையும் பொதுவகையாற் பிரமாணமாகக் கொள்ளினும், அவ்வேதம் சிவாகமம் இரண்டற்கும் வேறாகிய அவைதிகபாசுபதமுதலிய நூல்களைச் சிறப்புவகையாற் பிரமாணமாகக் கோடலானும், ஐக்கியவாதசைவர் வேதசிவாகமம் இரண்டையும் சிறப்புவகையாற் பிரமாணமாகக்கொண்டு, அவற்றில் விலக்கியவற்றை நீக்கி விதிக்கப்பட்டவற்றைச் செய்வாராயினும், எல்லாக் கேட்டிற்கும் காரணமாகிய ஆணவமலம் ஒன்று உளது என்பதைப் பொருட்படுத்தாமையானும், அதனை உண்டு என்று கூறும் சிவாகமங்களை இகழ்தலானும் அந்த ஆறு மதத்தினர் சமயம் அகப்புறச்சமயம் என வேறு வைத்து எண்ணப்பட்டது.

## அகச்சமயத்தார்.



(4) பாடாணவாதசைவர், பேதவாதசைவர், சிவசமவாதசைவர், சிவசங்கிராந்தவாதசைவர், ஈசுரவவிகாரவாதசைவர், சிவாத்துவிதசைவர் என்னும் அறுவரும் பதி பசு பாசப்பொருளுண்மையெல்லாம் சிந்தாந்தசைவரோடு ஒப்பக்கொள்ளும் அந்தரங்க உரிமையுடையராயினும், அவ்வப்பொருள்களுக்குக் கூறும் தன்னியல்பு பொதுவியல்புமாத்திரையில் மாறுபடலால், அவர்சமயம் அகச்சமயம் என வேறுவைத்தெண்ணப்பட்டது.

புறப்புறச்சமயம்:—

(1) லோகாயதர் பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் தத்துவங்களின் கூட்டமே உடம்பு என்றும், வெற்றிலை பாக்கு சுண்ணும்பு கூடியவிடத்துச் சிவப்புநிறம் ஒன்று தோற்றுமாறுபோல, அப்பிருதிவிமுதலிய நான்கின் சேர்க்கையினுல் ஓர் உணர்வு உண்டாகின்றது என்றும், கடவுள் ஒருவர் இல்லை, ஆன்மா என ஒன்றில்லை, மங்கையரை மணந்து உண்டு உடுத்து வாழ்வதே துறக்கவின்பம் என்றும் கூறுவர்.

(2) மாத்தியமிகர் உலகத்திலுள்ள பொருள்கள் உள்பொருளாயின் அழியா; அவை இல்லாத பொருளாயின் தோன்ரு; அவை உள்ளவும் இல்லவுமாய பொருளெனில் முரணும்; இரண்டும் அல்ல எனின், உணர்ச்சிகூடாது; ஆதலின், இந்த நான்குபாகுபாடும் இல்லாமையின், எல்லாப் பொருளும் சூனியமே என்றும், எல்லாம் மயக்கத்தாற் காட்சிப்பொருள்போலப் புலப்படுகின்றன என்றும் கூறுவர்.

(3) யோகாசாரர் வட்டம், சதுரம், கறுப்பு, சிவப்புமுதலிய வடிவினவாய் அகத்தே தோன்றும் ஞானம் சாகாரஞானம் என்றும், பந்தம் நீங்கியபோது வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் உண்டாவது நிராகாரஞானம் என்றும், இப்படிப்பட்ட ஞானமேயன்றிப் பொருளென மற்ருென்றில்லை என்றும் கூறுவர்.

(4) சவுத்திராந்திகர் உடல் பொறி முதலிய உருவகந்தம் என்றும், இன்பதுன்பங்கள் வேதனைக்கந்தம் என்றும், உருவகந்தத்தை உணரும் உணர்வு ஞானகந்தம் என்றும், சாத்தன் கொற்றன்முதலிய பெயர் குறிக்கந்தம் என்றும், ஞானகந்தம் சாகாரம் நிராகாரம் என இருவகைப்படும் என்றும், சாகாரமாகிய சவிகற்பஞானம் பிரவிருத்திஞானம் எனப்படும் என்றும், நிராகாரமாகிய நிருவிகற்பஞானம் ஆலயவிஞ்ஞானம் எனப்படும் என்றும், அவற்றின் வாசனை வாசனைக்கந்தம் எனப்படும் என்றும், உருவகந்தம் ஒன்றுமே புறச்சமுதாயம் என்றும், வேதனை ஞானம் குறி வாசனை என்னும் நான்கும் அகச்சமுதாயம் என்றும், இவ்விருவகைச் சமுதாயத்துள் உலகம் முழுதும் அடங்கும் என்றும் கூறுவர்.

(5) வைபாடிகர் புறப்பொருண்ஞானமே தமக்குக் காட்சிப்பொருளாமென்றும் மஞ்சளும் சுண்ணும்பும் கூடியவிடத்துச் செவ்வண்ணம் தோன்றுமாறுபோல, இந்திரியங்கள் கூடியவிடத்துப் பிரபஞ்சம் தோன்றும் என்றும் கொள்வர்.

(6) ஆருகதர் சிவனும், அசிவனும், ஆச்சிரவமும், சமுவரமும், நிச்சரமும், பந்தமும், வீடும் எனப் பதார்த்தங்கள் ஏழு என்றும். இவற்றுட் சீவன் அநாதிசித்தனும், முத்தனும், பெத்தனும், என மூவகைப்படும் என்றும், அநாதிசித்தன் அருகக்கடவுள் என்றும், முத்தன் மோகமுதலிய பந்தத்தில்

நீங்கியவன் என்றும், பெத்தன் அவற்றுட் கட்டுண்டவன் என்றும், சீவன் எடுத்த உடம்பளவிற்கேற்ப வியாபகமாய் நிற்பன் என்றும், அசீவன் புற்கலமும் ஆகாயமும் தன்மமும் அதன்மமும் என நான்குவகைப்படும் என்றும், அவற்றுட்புற்கலம் நிலமுதலிய நான்கு பூதமும், மரம் புல்லுமுதலிய நிலையியற்பொருளும், கருப்பை முட்டை முதலியவற்றிற் பிறக்கும் இயங்கியற் பொருளும் என அறுவகைப்படும் என்றும், ஆகாயம் உலகாகாயமும் உலகம் கடந்த ஆகாயமும் என இருவகைப்படும் என்றும், தன்மம் நன்மையைக் கொடுப்பது என்றும், அதன்மம் தீமையைப் பயப்பது என்றும், ஆச்சிரவமானது பொறிவழிச்செல்லுதலாம் என்றும், சமுவரமாவது அங்ஙனஞ் செல்லாமற் றடுத்து முக்திக்குக் காரணமாய் நிலத்தில் எறும்புமுதலிய இறவாமல் வழிபார்த்து மெதுவாய் இயங்குதலும், இனியவை கூறுதலும், நியமவுணவும், பிறவுமாம் என்றும், நிர்ச்சரவமாவது சுடுபாறையிற் கிடத்தல், தலைமயிர் பறித்தல்முதலிய தவமாம் என்றும், பந்தமாவது இருப்புக்கூடானது தன்னுள் அகப்பட்ட சுரைப்பழத்தைத் தண்ணீருள்ளே செலுத்துமாறுபோல, மோகமுதலிய குணங்கள் சீவனுடைய சுதந்திரத்தை அடக்கிப் பிறவியிற் செலுத்துவதாம் என்றும், வீடாவது இருப்புக்கூடு உடைந்தபோது சுரைப்பழம் தண்ணீருக்குமேலே கிளருமாறுபோல, மோகமுதலிய நீங்கிச் சீவன் சுவதந்திரம் பெற்று உலகங்கடந்த ஆகாயத்தை நோக்கி மேலே போதலாம் என்றும் கொள்வர்.

உடம்பு எடுத்தற்கு முன் சீவன் உண்டோ இல்லையோ என்று வினவுங்கால், (1) உண்டாம், (2) இல்லையாம், (3) உண்டும் இல்லையுமாம், (4) சொல்லொணுததாம், (5) உண்டுமாம் சொல்லொணுததுமாம், (6) இல்லையுமாம் சொல்லொணுததுமாம், (7) உண்டும் இல்லையுமாம் சொல்லொணுததுமாம் என்று எழுவகையால் உத்தரம் இறுத்தல்பற்றி, ஆருகதம் அநேகாந்தவாதம் எனவும்படும்.

லோகாயதன் காட்சிவாதி எனவும், (பவுத்தன் கணபங்கவாதி எனவும்), ஆருகதன் அநேகாந்தவாதி எனவும், பவுத்தருள் மாத்தியமிகன் சூனியவாதி எனவும், யோகாசாரன் விஞ்ஞானவாதி எனவும், சவுத்திராந்திகனும் வைபாடிகனும் சமுதாயவாதிகள் எனவும் உணர்க.

புறச்சமயம்:—

(7) தார்க்கிகராவார் வைசேஷிகர் நையாயிகர் என இருவகைப்படுவர். அவருள் வைசேஷிகர் திரவியம், குணம், தொழில், சாதி, விசேடம், சமவாயம், இன்மை என எழுவகைப்பொருள்கள் உண்டு என்றும், அவற்றின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை உணரவே உடம்புமுதலியவற்றின் வேருகிய ஆன்மாவின் இயல்பு விளங்கும் என்றும், அதனுல் உடம்புமுதலியவற்றை நான் என்று எண்ணிய மித்தைஞானம் கழியும் என்றும், அதனுல் முயற்சியின்மையின் அறம் பாவங்கள் இலவாய்ப் பிறவி ஒழியும் என்றும்,

அதனால் துன்ப இன்பங்கள் இலவாய் உடம்பு எடுத்துக்கொண்ட வினைப் பயன் துய்த்தலினாற் கழிந்தவிடத்து, இறுதித்துன்பம் கெட்டு மனத்தோடு கூடுதற்கு ஏதுவின்மையின், அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்றும் கூறுவர்.

நையாயிகர் வைசேஷிகரிற் சிறிது வேறுபட்டுப் பிரமாணம் பிரமேய முதலாகப் பதினாறு வகையாக விரித்துக் கூறுவர். இவர் முத்தியில் ஆனந்தம் உண்டு என்பர்.

(8) மீமாஞ்சகர் பாட்டாசாரியன் பிரபாகரன் என இருவகைப்படுவர். பாட்டாசாரியன் ஜைமினி சூத்திரமதம்பற்றி வழிநூல்செய்து கன்மமே பயன் கொடுக்கும் என்றும், முத்தியில் ஆனந்தம் உண்டு என்றுஞ் சொல்லுவன். பிரபாகரன் சூத்திரபாஷ்யமதம்பற்றி வழிநூல்செய்து, கன்மம் நாசமாகுங்கால் அபூர்வம் என ஒன்றுதோன்றிநின்று பயன்கொடுக்கும் என்றும், கல்லுப்போலக் கிடப்பதே முத்தி என்றும் கூறுவன்.

(9) ஏகான்மவாதியர் சச்சிதானந்தமாய், நித்தமாய், வியாபகமாய் உள்ளது பிரமம் என்றும், இதுவே மெய்ப்பொருள் என்றும், இந்தப் பிரமத்துக்கு வேறாகிய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளி போல அஞ்ஞானத்தினாற் காணப்படுதலிற் பொய் என்றும், இங்ஙனம் தோன்றும் உலகத்துக்கு முதற்காரணமாம் மூலப்பிரகிருதியாகிய மாயை பிரமம் போலச் சத்துமின்றி, முயற்கோடுபோல அசத்துமின்றிச் சொல்லொணாத தாய் இருக்கும் என்றும், இந்தப் பிரமத்துக்கு வேறாகிய அறிவுருபமாகிய யானே பிரமம் என்றும் இங்ஙனம் அறிவதே முத்தி என்றும் கொள்வர்.

(10) சாங்கியர் இருபத்துநான்காம் தத்துவமாகிய மூலப்பிரகிருதி நித்தமாய் வியாபகமாய் சடமாய், பொருள்களனைத்துக்கும் காரணமாய், சாத்துவிக இராசச தாமசகுணங்கள் சாமியமாய் நிற்கும் நிலையினதாய், அருவமாய் உள்ளது என்றும், இதினின்று தோன்றும் புத்திமுதற் பிருதிவியீறாகிய இருபத்துமூன்று தத்துவங்களும் காரியமாம் என்றும், இந்த மூலப்பிரகிருதிக்கு மேலாய் நித்தமாய் வியாபகமாய் அருபமாய் அறிவதுஞ் செய்வதுமின்றி அறிவுமாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலும் காரியமாதலுமின்றிநிற்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாம் தத்துவம் எனப்படும் என்றும், இருபத்தைந்தாம் தத்துவபுருடன் பெத்தமுத்திகளில் ஒருதன்மையனே என்றும், புருடன் தாமரையிலையில் நீர்போல யாதினும் ஒட்டின்றி நிற்பன் என்றும், மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணருங்கால் அஞ்ஞானம் நீங்கும் என்றும், அதுவே முத்தி என்றும் கொள்வர்.

(11) யோகமதத்தினர் பிருதிவி முதற்புருஷன் ஈறாகிய இருபத்தைந்து தத்துவமும் பெத்தமுத்திகளும் நீதிக்கு ஏதுவாம் என்றும், இருபத்தாறும்

தத்துவத்தினராகிய இறைவர் சர்வஞ்ஞராய்ச் சாஸ்திரங்களை அருளிப் புருஷனுக்கு ஞானத்தை உணர்த்துவாராகலின், இறைவர் ஆன்மாக்களுக்கு வேறென்று உணரப்படுவர் என்றும் கொள்வர்.

(12) பாஞ்சராத்திரர் இருபத்துநான்காம் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேலுள்ள இருபத்தைந்தாம் தத்துவத்தில் நாராயணராகிய பரம்பொருள் ஒருவர் உளர் என்றும், அவருக்கு வாசுதேவர், அநிருத்தர், சங்கர்ஷணர், பிரத்தியும்நர் என நான்கு வியூகர் உளர் என்றும், இவரால் உலகம் படைக்கப்பட்டது என்றும், பாஞ்சராத்திரத்தினன்றி வேதங்களில் உறுதிப் பயன் உண்டாகாது என்றும், பாஞ்சராத்திராகமமுறைப்படி தீக்ஷைபெற்று நாராயணரில் லயமடைவதே முத்தி என்றும் கூறுவர்.

அகப்புறச்சமயம்:—

(13) அவைதிகபாசுபதர் ஆன்மாக்களுக்கு ஆணவமலம் என ஒன்று இல்லை என்றும், அவைகள் மாயை கன்மங்களாற் பந்தமுற்று இன்பதுன்பங்களை நுகரும் என்றும், அவற்றில் வெறுப்புத் தோன்றிச் சாஸ்திரமுறையால் தீக்ஷை பெற்றவனிடத்தில் ஈசருடைய ஞானம்போய்ப்பற்றும் என்றும், அப்போது குடும்பபாரத்தைப் புதல்வரிடத்து வைத்துவிட்டுத் துறவறத்திற் செல்வார்போல, ஈசரும் தம்முடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தாம் அதிகாரத்தினின்று ஒழிவுபெற்றிருப்பர் என்றும் கூறுவர். இவர் சங்கிராந்தசமவாதி எனவும்படுவர்.

(14) மாவிரதர் தமது சாஸ்திரத்திற் கூறியபிரகாரம் ஆன்மாக்கள் தீக்ஷைபெற்று, எலும்புமாலை அணிதல்முதலிய ஒழுக்கங்களில் வழுவாது ஒழுகி முத்தராவார் என்றும், முத்தருக்குச் சிவனோடு சமமாகிய எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்றும் கூறுவர். இவர் உற்பத்திவாதி எனவும் படுவர்.

(15) காபாலர் தமது சாஸ்திரமுறைப்படி தீக்ஷைபெற்றுப் பச்சைக் கொடி ஒன்றைக் கையிற்கொண்டு, மனிதர் தலையோட்டிற் பிக்ஷை ஏற்று உண்டு, உன்மத்தராய்ச் சிவன் ஆவேசித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பர். இவர் ஆவேசவாதி எனவும் படுவர்.

(16) வாமமதத்தினர் சடமுஞ் சித்துமாகிய எல்லா உலகும் சத்தியின் பரிணாமம் என்றும், வாமதந்திரத்திற் கூறப்பட்டவாறு ஒழுகிச் சத்தியில் லயித்தலே முத்தி என்றும் கொள்வர்.

(17) வைரவமதத்தினர் பெரும்பான்மையும் வாமமதத்தாரோடொத்துச் சிறுபான்மை ஒழுக்கங்கள் வேறுபட்டு, வைரவரே பரம்பொருள் எனக்கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தி என்பர்.

(18) ஐக்கியவாதசைவர் மாயாமலம் கன்மமலம் என்னும் இரண்டு மலங்கள் உள்ளன என்றும், இறைவர் ஆன்மாக்களுக்கு முன்செய் வினைகளுக்கீடாகத் தனுகரணபுவனமூன்றும் கொடுப்பாரென்றும், இந்தத் தனுகரணபுவனவாயிலாக வினைக்கீடாய் இன்பதுன்பம் நுகர்வார் என்றும், அங்ஙனம் நுகருங்காற் சத்திநிபாதம் எய்தியவிடத்து, திருவருளினால் மாயை கன்மங்கள் நீங்கிவிட அவர் தமக்குள்ள பேரறிவு பிரகாசித்து அந்த இறைவர் அறிவிலே நீரும் நீரும் சேர்ந்தாற்போலக் கலந்துவிடுவர் என்றுங் கூறுவர்.

காளாமுகமும் சாம்பவமுதலியவும் இவ்வறுவகைச் சமயங்களின் பகுதியவாய் அடங்கும்.

அகச்சமயம்:—

(19) பாடாணவாதசைவர் ஆன்மா முத்தியிற் சகஜமலம் நீங்காது கல்லுப்போலக் கிடக்கும் என்பர்.

(20) பேதவாதசைவர் உயிர் மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தபோதே மலம் நீங்கப்பெறும் என்றும், இதுவே முத்தி என்றும் கொள்வர்.

(21) சிவசமவாதசைவர் ஆன்மா பதிப்பொருளைத் தியானித்து, அதற்குச் சாமியமாயபின், அப்பதி செய்யும் பஞ்சகிருத்தியஞ் செய்யும் என்பர்.

(22) சிவசங்கிராந்தவாதசைவர் விகாரமின்றி நிற்கும் ஆன்மசன்னிதியிலே அசத்தாகிய கருவிகள் சத்தாகிய சிவத்தைச் சிவகாரணமாய்நின்று அறியும் என்பர்.

(23) ஈசுரவவிகாரவாதசைவர் கடியவெய்யிலிலே நடந்தோரால் அடையப்படுகின்ற மாநிழல்போல, பதிவிகாரமின்றிநிற்க, ஆன்மாவானது தானே பக்குவம் அடைந்தபோது ஞானக்கண்பெற்றுப் பதியைச் சேரும் என்பர்.

(24) சிவாத்துவிதசைவர் ஆன்மா (அபகதபாப்மத்துவம் எனப்படும்) சர்வஞ்ஞாதி குணங்களைச் சிவோகம்பாவனையினால் அடைந்து, ஒளிமார்க்கவாயிலாகச் சோமலோகம் எனப்படும் பிரமலோகத்தை அடைந்து, சிவசாரூப்பியமுற்றுச் சிவானந்தத்தோடு சமஸ்தபோகங்களையும் துய்த்து, புநராவர்த்தியின்றி இருப்பர் என்று கூறுவர்.

ரு. இது ஞானயோகஸ்தானம் எனப்படும் சிதம்பரமேயாம். இதுவே ஈசகேநமுதலிய பரசுருதிகளால் முடித்துப் பேசப்பட்ட வேதாந்தத்தின் முடிந்தநிலையாம்; இந்த வேதாந்தமே, சைவசித்தாந்தம் வேதசாரம் எனப்படுதற்கேதுவாய், பதிபசு பாசங்களைத் தடஸ்தமாய்க் கூறி முடித்ததாம் என்க.

௬. லோகாயதர்முதல் ஐக்கியவாதசைவர் ஈறுகிய முக்கூற்றுப் பதினெட்டுச் சமயிகளும் பிருதிவிமுதல் அசுத்தமாயாதத்துவம் ஈறுகிய முப்பத்தொரு தத்துவங்களிலே நிலைபெறுவர்; பாடாணவாதசைவர்முதற் சிவாத்துவிதசைவர் ஈறுகிய அறுவரும் சுத்தவித்தியாதத்துவம், ஈசுரதத்துவம், சாதாக்கியதத்துவம், சத்திதத்துவம், சிவதத்துவங்களிலே நிலைபெறுவர். சிவஞானபோதத்து ஒன்பதாம் பத்தாம் சூத்திரங்களாற் போதிக்கப்பட்ட தகராகாயசிதம்பரஞானயோகத்திலே தலைப்பட்டு நின்றவர்க்கும், ஈசகேநாதி சைவோபநிடதங்களை ஆதாரமாகக்கொண்ட வியாசருளிய வேதாந்தசூத்திரத்தினாலும், நீலகண்டசிவாசாரியர் அவ்வேதாந்தசூத்திரத்துக்குத் திரிவுப்பொருள் கொள்ளாது சத்தியார்த்தம் வரைந்தருளிய சிவாத்துவிதபாஷ்யத்தினாலும் போதிக்கப்பட்ட தகராகாயசிதம்பரஞானதியானம் எனப்படும் ஞானயோகத்தில் தலைப்பட்டுநின்றவர்க்கும் முக்திஸ்தானம் அந்தப் பரப்பிரமசிவலோகமெனப்படும் சோமலோகமேயாம்.

௭. ശൈവസിദ്ധാന്തമാർഗ്ഗസ്ഥാഃ ശൈവാഃ പാശുപതാസ്തഥാ।

சைவசித்தாந்தமார்க்கஸ்தாః சைவாః பாசுபதாஸ்ததா।

"சைவசித்தாந்தசமயத்தினரும், அங்ஙனம் சைவபாசுபதர்களும்" என்று கூறும் வாயுசங்கிதாசுலோகத்தினாலும், ஞானபாதத்தினர் ஞானபாதம் யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்னும் நான்குக்கும் உரியர் என்று கொண்டு அருணந்திசிவாசாரியர் "ஞானயோகக்கிரியாசரியை நாலுநாதன்றன் பணிஞானி நாலினுக்குமுரியன்" என்று கூறுதலானும், "நிலவுலகாயதாதி நிகழ் சிவாத்துவிதாந்தம்" என்று உமாபதிசிவாசாரியர் கூறுமாறு, சிவாத்துவிதமே முடிந்தநிலையாகக் காணப்படலானும், வைதிகசைவசித்தாந்தஞானத்துஞானபாதத்துக்கு அடுத்தபடியினர் ஞானயோகத்தானத்தினராகிய அத்தியாசிரமவைதிகபாசுபதசிவாத்துவிதவேதாந்திகளேயாம் என்பது தூணநிகனநியாயத்தினால் நன்கு வலியுறுத்தப்பட்டதாயிற்று.

௮. துடிலை யென்னுந் தடவய லுப்ப
னருள்வித் திட்டுக் கருணைநீர்ப் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே

அவற்றுள்,

இலைகோண் வேந்தனர் பலரே யிலையோரீஇத்
தளிர்கோண் வேந்தனர் பலரே தளிரோரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கோண்டுகோண் வேந்தனர் பலரே
யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
வோரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த

வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னயினு
மன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனல்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே.

கூ. "சுவாமீ! குடிலை எனப்படும் விசாலமாகிய வயலின்கண்ணே, அருள் என்னும் வித்தை விதைத்து, (அதிற்) கருணை என்னும் நீரைப் பாய்ச்சி, (அதினின்றும் முளைத்துளதாம்) வேதம் என்னும் விருக்ஷத்தை வளர்த்தீர்; அம்மரத்தின்கண்ணே உளவாம் பயன்கள் பலவே; அவற்றுள், பலர் இலையையே (நன்றெனக்)கொண்டு மகிழ்ந்தார்; (வேறு) பலர் இலையை விடுத்துத் தளிரையே (நன்றெனக்)கொண்டு மகிழ்ந்தார்; (வேறு) பலர் தளிரைவிடுத்து அரும்பையும், (வேறுபலர்) மலரையும், (வேறுபலர்) பிஞ்சையும், (வேறுபலர்)காயையும் (நன்று நன்றெனக்)கொண்டு மகிழ்ந்தார்கள்; அந்த (இலை முதலிய) ஆறு உறுப்புக்களும் அங்ஙனம் (பலர்க்கும் பலபிரகாரம்) பயன்படுவனவேயாக, (பெரியோரால்) ஆராயப்படும் வேதாந்தம் என்று கூறப்படும் அந்த மரத்து உச்சியிற் பழுத்த தெவிட்டாத சுவையையுடைய அரிய பழத்தைப் பிழிந்து சாரமாகக்கொண்ட சைவசித்தாந்தத்தேனமுதைப் பருகினோர் சிலரேயாம்; யான் அந்தச் சிலரது உத்தமோத்தமநிலையை அடைதற்கு இயலாத அன்னியனாகவிருப்பினும், அவ்வியல்பினராகிய அவரது செந்தாமரை மலர்போலும் அழகிய திருவடிகளைப் பிரக்ஷாளனஞ்செய்த திவ்யதீர்த்தத்தை உள்ளே பூரித்தேனாதலினால், தேவாமிர்தத்தை வேம்பு எனக் கசப்பாகக் கொண்டு வெறுத்தேன்" என்றார் குமாரகுருபரசுவாமிகளும்.

க0. இங்கே வேதவிருக்ஷத்து இலையினால் தார்க்கிகமதத்தினரும், தளிரினால் மீமாஞ்சகமதத்தினரும், அரும்பினாற் சாங்கியமதத்தினரும், மலரினால் யோகமதத்தினரும், பிஞ்சினாற் பாஞ்சராத்திரமதத்தினரும், காயினால் ஏகான்மவாதமதத்தினருமாக மூலப்பிரகிருதியைப்பற்றிய அறுவித சமயத்தினர் சூசிக்கப்பட்டார். உச்சியிற் பழுத்த பழத்தினாற் சிவாத்துவித வேதாந்தமும்,

கக. ஸித்தாந்தோ வேதஸாரத்வாத்|

சித்தாந்தோ வேதசாரத்வாத்।

கஉ. "சைவசித்தாந்தம் வேதசாரமாயிருத்தலான்" என்று சுப்பிரபேதாகமமும்,

கங. வேதஸாரமிதம் தந்த்ரம்|

வேதசாரமிதந்தந்திரம்।

கச. "இந்தச் சித்தாந்தம் வேதசாரம்" என்றும்,

கரு. 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌶𑍁𑌭𑌂।

வேதாந்தார்த்தம் இதம் ஞானம் சித்தாந்தம் பரமம் சுபம்!

கசு. "வேதாந்தார்த்தமாகிய இந்தச் சைவசித்தாந்தஞானமானது பரமோசிதமாம்" என்றும் மகுடாகமமும், வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தம் என்று சிவப்பிரகாசமும் கூறுமாற்றால்,

கஎ. உச்சியிற் பழுத்த சிவாத்துவிதவேதாந்தமாகிய பழத்தின் சாரத்தினாற் சைவசித்தாந்தமும் சூசிக்கப்பட்டனவாம் என்க.

கஅ. ஏகான்மவாதமானது வேதாந்தம் என வழங்கப்படுவதேயாக, அதனையே வேதவிருக்ஷத்தின் பழம் என்று கூறினால் என்னை எனின், அது பொருந்தாது; இந்தச் சிவஞானபோதவசனாலங்காரதீபத்து ஒன்பதாஞ் சூத்திரத்து ருஎ-ம் பிரிவிற் குறிக்கப்பட்டவாறு, (விமலசத்துவப்பிரதானமூலப்பிரகிருதிமாயோபாதிகனும், கற்பித ஆபாசனுமாகிய (தாழ்ந்த) ஈசுவரனது சகுணவழிபாட்டை உணர்த்தும் பௌதிகயோகத்துக்கும், (மூலப்பிரகிருதி கடந்து, அதற்கப்பாலுள்ள சூக்குமப்பிரகிருதி கடந்து, அதற்கப்பாலுள்ள பரப்பிரகிருதிப்பாற்பட்டுக்) கற்பிதரும் ஆபாசகருமாகாது நித்தியராய், சாத்விதாதி குணங்களிலராய், சர்வஞ்ஞதாதி குணங்களையுடையராயுள்ள மகாருத்திரசமஷ்டிரூபசதாசிவதாண்டவேசுவரரது வழிபாட்டுக்குரிய அத்தியாசிரமயோகத்துக்கும் இடையிலே, (மூலப்பிரகிருதிக்கு மேலேயுள்ள ஏகான்மவாதிகளது நிர்க்குணப்பிரமத்துக்குரிய) சாங்கியயோகம் நிலைத்தமையானும்,

கக. ஈசகேனாதி பரோபநிடதங்களினும், இவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ள வைதிகசைவவேதாந்தசூத்திரங்களினும் நித்தியபதார்த்தங்களாகப் பேசப்படும் பதி பசு பாசங்கள் சொரூபநிலை பேசும் சைவசித்தாந்தத்தில் முறையே சிவம், ஆன்மா, மலம் என நிற்பனவேயாக, பசுவாகிய (ஆன்மப்பிரமம்) ஒன்றனையே நித்தியபதார்த்தமாகக் கூறும் ஏகான்மவாத வேதாந்தம் உச்சிவேதாந்தப்பழமாய் முற்றாதாதலினானுமாம் என்க.

உ0. வைதிகசைவப்பகைவரால் உடைக்கப்படாத வச்சிரமலைபோன்றும், அதிலே கட்டப்பட்ட மனோஹர ஆனந்தசுவர்ணமாளிகை போன்றும் முறையே உள்ளன வேதாந்தசூத்திரசைவபாஷ்யமும், அதின் சாரமா சிவஞானபோதசைவசித்தாந்தசாஸ்திரமுமாம் என்க.

---

## பரீக்ஷை விஞக்கள்.

க. முதற்கண்ணே எந்தச் சமயத்தார்களின் குறைவு கூறப்படுகின்றது? க.

உ. உடைப்பொருள் எத்தனை வகைப்படும்? உ.

ங. அடிமைப்பொருள்கள் யாவை? உ.

ச. உடைமைப்பொருள்கள் யாவை? உ.

ரு. சேதனப்பிரபஞ்சம் யாது? உ.

சு. அசேதனப்பிரபஞ்சம் யாது? உ.

எ. தம்மியல்பினை உணர்ந்தவர் யாவர்? ங.

அ. நின்மலதுரியாதீதத்தின்கண்ணே நின்றவர் யாவர்? ங.

கூ. தம்மியல்பினை உணர்ந்து தலைவனை உணர்ந்தவர் யாவர்? ங.

க0. மெய்கண்டார் தம்மை எவருக்கு அடிமைப்பொருள் என்று கூறுகின்றார்? ங.

கக. சிவஞானபோதத்து நிகழும் வழுஉக்களைப் பொருட்படுத்தாது, அதிலுள்ள சிறந்த பொருளைப் பாராட்டுபவர் யாவர்? ங.

கஉ. சிவபெருமானுக்குத் தம்மை அடிமை என்று உணராதவர் யாவர்? ச

கங. அகச்சமயத்தார் அறுவரும் நூலையும் ஆக்கியோனையும் எவ்விடத் திகழ்ந்து கூறுவர்? ச.

கச. அகச்சமயத்தார் புறத்தே இகழ்வாராயின், அவரல்லாத ஏனையோர் எங்கே இகழ்வார்? ச.

கரு. புறச்சமயத்தார் யாவர்? (1).

கசு. லோகாயதர்முதலிய அறுவர் சமயமும் புறப்புறச்சமயம் என்று கூறப்படுவதற்குக் காரணம் என்னை? (1).

கஎ. வேதசிவாகமம் இரண்டையும் நிந்திக்கும் நாஸ்திகர் யாவர்? (1).

கஅ. தார்க்கிகர்முதலிய அறுவரும் எங்ஙனம் வேதத்தைக் கொள்கின்றார்? (2).

ககூ. தார்க்கிகர் வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளாது மற்றென் செய்கின்றார்? (2).

உ0. மீமாஞ்சகர் எவற்றைப் பிரமாணமாகக்கொண்டு, எவற்றை இகழ்கின்றார்? (2).

உக. ஏகான்மவாதிகளுக்கு எந்த உபநிடதங்கள் பிரமாணமாய்ப் போந்தன? (2).

உஉ. எந்த உபநிடதங்களைத் தமது மாயாவாதோபநிடதங்களுக்கியையப் பொருள் திரித்துள்ளார்? (2).

உங. சாங்கியரும் யோகமதத்தினரும் எவற்றைப் பிரமாணமாகக் கொள்ளுகின்றார்? (2).

உச. பாஞ்சராத்திரிகளுக்குரிய உபநிடதங்கள் யாவை? (2).

உரு. அப்பாஞ்சராத்திரிகள் தமது உபநிடதங்களுக்கிசைய எவ்வுபநிடதங்களைப் பொருள்திரித்துள்ளார்? (2).

உசு. அவைதிகபாசுபதர்முதலிய ஐவரும் பொதுவகையால் எவற்றைப் பிரமாணமாகக்கொண்டார்? (3).

உஎ. அவர்கள் எவற்றைச் சிறப்புவகையாற் பிரமாணமாகக் கொண்டார்? (3).

உஅ. ஐக்கியவாதசைவர் எவற்றைச் சிறப்புவகையாற் பிரமாணமாகக் கொண்டார்? (3).

உகூ. இவர்கள் முப்பாசங்களுள் எதனைப் பொருட்படுத்துகின்றாரில்லை? (3).

ங0. அகச்சமயத்தார் யாவர்? (4).

ஙக. அகச்சமயத்தார் எவ்வியல்பினர்? (4).

ஙஉ. அவர்கள் எவைபற்றி மாறுபடுகின்றனர்? (4).

ஙங. லோகாயதர் யாவர்? (1).

ஙச. மாத்துமிகர் யாவர்? (2).

ஙரு. யோகாசாரர் யாவர்? (3).

ஙசு. சௌத்திராந்திகர் யாவர்? (4).

ஙஎ. வைபாடிகர் யாவர்? (5).

ஙஅ. ஆருகதர் யாவர்? (6).

ஙகூ. ஆருகதம் அநேகாந்தவாதம் எனப்படுதற்குக் காரணம் என்னை? (6).

௪௦. தார்க்கிகர் எத்தனை வகைப்படுவர்? (7).

௪௧. வைசேஷிகர் யாவர்? (7).

௪௨. நையாயிகர் யாவர்? (7).

௪௩. மீமாஞ்சகர் எத்தனை வகைப்படுவர்? (8).

௪௪. பாட்டாசாரியன் யாவன்? (8).

௪௫. பிரபாகரன் யாவன்? (8).

௪௬. ஏகான்மவாதிகள் யாவர்? (9).

௪௭. சாங்கியர் யாவர்? (10).

௪௮. யோகமதத்தினர் யாவர்? (11).

௪௯. பாஞ்சராத்திரர் யாவர்? (12).

௫௦. அவைதிகபாசுபதர் யாவர்? (13).

௫௧. மாவிரதர் யாவர்? (14).

௫௨. காபாலர் யாவர்? (15).

௫௩. வாமமதத்தினர் யாவர்? (16).

௫௪. வைரவமதத்தினர் யாவர்? (17).

௫௫. ஐக்கியவாதசைவர் யாவர்? (18).

௫௬. பாடாணவாதசைவர் யாவர்? (19).

௫௭. பேதவாதசைவர் யாவர்? (20).

௫௮. சிவசமவாதசைவர் யாவர்? (21).

௫௯. சிவசங்கிராந்தவாதசைவர் யாவர்? (22).

௬௦. ஈசுரவவிகாரவாதசைவர் யாவர்? (23).

௬௧. சிவாத்துவிதசைவர் யாவர்? (24).

௬௨. சிவாத்துவிதசைவருடைய தியானஸ்தானம் யாது? ௫.

௬௩. ஈசகேநமுதலிய உபநிடதங்களால் முடித்துப் பேசப்பட்ட நிலை எது? ௫.

௬௪. வேதசாரமாகிய சைவசித்தாந்தத்துக்கு ஆதாரமாய் நின்றது எது? ௫.

சுரு. இங்கே பதி பசு பாசங்கள் எந்நிலையில் வைத்துக் கூறி முடிக்கப்பட்டன? ரு.

சுசு. லோகாயதர்முதல் ஐக்கியவாதசைவர் இறுதியாகிய பதினெட்டுச் சமயிகளும் எத்தத்துவங்களிலே நிலையுறுவர்? சு.

சுஎ. பாடாணவாதசைவர்முதலிய அறுவரும் எத்தத்துவங்களில் நிலையுறுவர்? சு.

சுஅ. சிவஞானபோதத்து ஒன்பதாம் பத்தாம் சூத்திரங்களாற் போதிக்கப்பட்டது யாது? சு.

சுகூ. ஈசகேநாதி சைவோபநிடதங்களாலும், வேதாந்தசூத்திரசைவ பாஷ்யத்தினாலும் போதிக்கப்பட்டது யாது? சு.

எ0. இருதிறத்து ஞானயோகத்தினர்க்கு முத்திஸ்தானம் யாது? சு.

எக. சைவசித்தாந்தத்துக்கு அடுத்த படியினர் யார்? எ.

எஉ. ஞானபாதத்தினர் எவற்றுக்கு உரியர்? எ.

எரு. இதற்குப் பிரமாணம் என்னை? எ.

எச. இருபத்துநான்கு சமயங்களுள்ளும் தலையாயது சிவாத்துவிதம் என்றதற்கு உமாபதிசிவாசாரியர் விடுத்த பிரமாணம் யாது? எ.

எரு. அத்தியாச்சிரமவைதிகபாசுபதர் யாவர்? எ.

எசு. குமாரகுருபரசுவாமிகள் எதெதை வயலாகவும், வித்தாகவும், நீராகவும், விருக்ஷமாகவும் உருவகஞ் செய்தார்? அ, கூ.

எஎ. அவ்வேதவிருக்ஷத்தின் இலைமுதலிய ஆறு உறுப்புக்களும் எந்தெந்த மதங்களைக் குறித்தன? க0.

எஅ. எது மரத்துச்சியிற் பழம்? க0.

எகூ. அப்பழத்தின் சாரம்போலுள்ளது யாது? கஎ.

அ0. அதற்குப் பிரமாணங்கள் யாவை? கக—ககூ.

அக. ஏகான்மவாதத்தைக்காய் என்று கூறுது பழம் என்றால் என்னை கஅ, ககூ.

அஉ. வேதாந்தசூத்திரசைவபாஷ்யமும் சிவஞானபோதசைவசித்தாந்த சாஸ்திரமும் எவற்றை நிகர்ப்பன? உ0.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதநூல்.

வேதாமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே.

க. அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் ஆன்மாக்கள்பொருட்டு அருளிச்செய்த முதனூல்கள் வேதம் சிவாகமம் என்னும் இரண்டுமாம்.

உ. வேதம் நான்கு: அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவாம.

௩. சிவாகமம் இருபத்தெட்டு: அவை காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லலிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என்பனவாம். இவை மூலாகமங்கள் எனப் பெயர் பெறும்.

௪. இக்காமிகாதி ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு.

ரு. வேதம் ஆகமம் என்னும் இரண்டும் கன்மகாண்டம் ஞானகாண்டம் என இருவகைப்படும்.

௬. வேதத்தின் கன்மகாண்டத்தில் யாகாதி கன்மங்கள் பெரும்பான்மை விரிவாயும், பதி பசு பாச முதலிய ஞானகாண்டப்பொருள், ஞானயோகம் என்பன சிறுபான்மை சுருக்கமாயும் கூறப்படும்.

எ. வேதத்துக் கன்மகாண்டத்திற் சுருக்கிக் கூறப்பட்ட பதி பசு பாச முதலிய ஞானகாண்டப்பொருளை, வேதத்தின் ஞானகாண்டம் விரித்துக் கூறும்; இது வேதசிரசு எனவும், உபநிடதம் எனவும், வேதாந்தம் எனவும் பெயர்பெற்று நிலவும்.

அ. ஆகமத்தின் கன்மகாண்டத்திலே சரியையாதிகள் கூறப்படும்.

௯. ஆகமத்தின் ஞானகாண்டத்தில் ஞானபாதம் கூறப்படும். ஞானபாதம் ஞானத்துச் சரியை, ஞானத்துக் கிரியை, ஞானத்து யோகம், ஞானத்து ஞானம் என நான்காக வகுக்கப்படும்.

க0. வேதாந்தம் பதிபசுபாசமுதலியவற்றை நித்திய பதார்த்தங்கள் என்று விரித்துக் கூறும்.

கக. ஈண்டு வேதாந்தங்கள் எனப்படுவன ஈசாவாசியம், கேனம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், ஐதரேயம், தைத்திரீயம், சாந்தோக்கியம், பிருதகதாரணியம், மைத்திராயணம், மகோபநிடதம் எனப்படும் மகாநாராயணம், கௌஷீதகிப்பிராம்மணம், காலாக்கினிருத்திரம், கைவல்லியம், சுவேதாசுவதரம், அதர்வசிரசு, அவர்வசிகை, பஸ்மஜாபாலம், பிருகஜ்ஜாபாலம், உருத்திராக்ஷஜாபாலம், சரபம், சிவசங்கற்பமுதலிய உபநிடதங்களே.

கஉ. சிவாகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம் என நான்குவகைப்படும்.

கங. புறத்தொழின்மாத்திரையாற் சிவபெருமானது உருவத்திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடு சரியாபாதம் எனப்படும்.

கச. புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டானும் சிவபெருமானது அருவுருவத்திருமேனியைநோக்கிச் செய்யும் வழிபாடு கிரியாபாதம் எனப்படும்.

கரு. அகத்தொழின் மாத்திரையானே சிவபெருமானது அருவத்திருமேனியைநோக்கிச் செய்யும் வழிபாடு யோகபாதம் எனப்படும்.

கசு. வேதாந்தங்கள் சூத்திரம்போலப் பொதுவாகப் பிரதிபாதித்த பதி பசு பாசங்களைச் சிவாகமத்தின் ஞானபாதம் பாஷ்யம்போலச் சிறப்புறத் தெளிவாகப் பெரிதும் விரித்து, அவற்றின் இலக்கணங்களை அறிவித்து, உருவமுதலிய முத்திறத்திருமேனியையும் கடந்த அகண்டாகாரநித்தவியாபகசச்சிதானந்தப்பிழம்பாகிய சிவத்தை ஞானத்துச்சரியையாகிய கேட்டல், ஞானத்துக்கிரியையாகிய சிந்தித்தல், ஞானத்துயோகமாகிய தெளிதல், ஞானத்துஞானமாகிய நிஷ்டை என்னும் அறிவுத்தொழின்மாத்திரையினால் வழிபடுவதை உணர்த்துவதாம்.

கஎ. இந்த ஞானபாதம் சரியையாதி மூன்று பாதங்களின் முடிவிலே பேசப்படலான், அது ஆகமாந்தம் எனப்படும்.

கஅ. ஆகமாந்தம் எனினும் சித்தாந்தம் எனினும் பொருந்தும்.

ககூ. காமிகமுதல் வாதுளம் இறுதியாகிய இருபத்தெட்டு ஆகமங்களிற் சரியையாதி நான்கு பாதங்களுண்மையால், ஞானபாதங்களெல்லாஞ் சித்தாந்தம் எனப் பெயர் பெறும்.

உ0. இங்ஙனம் வேதத்தின் அந்தமாகிய வேதாந்தமும், ஆகமத்தின் அந்தமாகிய ஆகமாந்தமும் பதி பசு பாசமுதலியவற்றைச் சாமியமாகப் பிரதிபாதித்தலினாலன்றோ திருமூலநாயனார் "நாடிலிரண்டந்தம் பெரியோர்க்கபேதமே" என்றருளிச்செய்தார்.

உக. இருபத்தெட்டு ஆகமங்களுள்ளே, ஈண்டு பதி பசு பாசம் என்னும் ஞானபாதப்பொருளை ஆராயும்பொருட்டுச் சித்தாந்தமாக எடுத்துக்கொள்ளப்பட்ட சாஸ்திரம் இரௌரவாகமத்துப் பன்னிரு சூத்திரகளாற் கூறப்பட்ட சிவஞானபோதமேயாம்.

உஉ. இங்ஙனம் வேதாந்தத்துக்கும் சித்தாந்தத்துக்கும் பொருளொற்றுமை இருத்தலான், சிவஞானபோதமானது வைதிகசைவசித்தாந்தம் எனப் பெயருடைத்தாயிற்று.

உங. பரஞ்சோதிமுனிவர் ஆஞ்ஞைப்பிரகாரம் மெய்கண்டதேவரால் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்ட சிவஞானபோதமும் அங்ஙனம் வைதிக சைவசித்தாந்தமென்றே பெயர் பெறும்.

உச. இனி வைதிகசைவசித்தாந்த திராவிடசிவஞானபோதசாஸ்திரத்தைப்புகுந்து ஆராயப்புகுங்கால் எழும் ஆசங்கைகள் எட்டு:—

1. ஞானபாதப்பொருளை ஆராய்தலினாற் பெறப்படும் பிரயோஜனம் யாது? எனவும்,

2. இந்த ஞானபாதத்தைச் சிரவணஞ் செய்தற்கு உரியார் யாவர்? எனவும்,

3. இச்சாஸ்திரத்திலே கூறப்படும் பொருள்கள் யாவை? எனவும்,

4. இந்த நூல் படித்தற்கு முதற்கண்ணே எந்த நூல்களைக்கற்றறிந்து கொள்ளல்வேண்டும்? எனவும்,

5. இந்த நூல் யாது பெயரிட்டு வழங்கப்படுகின்றது? எனவும்,

6. இந்த நூல் எங்கே வழங்கப்படுகின்றது? எனவும்,

7. இதற்கு முதனூல் யாது? எனவும்,

8. இந்த நூல் செய்தார் யாவர்? எனவும் பலபிரகாரமாக உண்டாகும் ஆசங்கைகளை அறுத்து மனசிலே ஊக்கம் பிறக்குமாறுசெய்தல் ஆவசியகமாம்.

உரு. உடலின் இழிவு:—இரு கால்கள் நாட்டி, அவற்றில் இரு கைகள் மூட்டி, முதுகுபுறத்து வீணதண்டு முகட்டிலே பழு எலும்புகள் மாட்டி, நரம்புக்கயிறுகொண்டு கட்டி, மாமிசமண்கொண்டு சுவரெடுத்து, மயிருடைத் தோல்கொண்டு வேய்ந்து, ஐம்பொறிச் சாளரங்கள் அமைத்து, பூரணபொற் குடத்தலையை நிறுத்தி, கூந்தற்கொடியைத் தூக்கி அமைக்கப்பட்டுள்ளது இந்தத் தேகமாகிய மனை; இந்தத் தேகம் என்புக் குப்பையையுடையது; பறவை, நாய், நரிக்கு உணவாவது; திரைதனுக்குச் சயனமாயது; புலானுக்குக் கடலாயது; துன்பத்துக்கு உறைவிடமாயது; வேர்வைக்கு விளைநிலமாயது; தசையைத் திரளாயுடையது; மூளைக் குழம்பையுடையது; முழுமலத்தொகுதியையுடையது; பூளைப்பஞ்சுபோல நிலையிலாப் பொதியாயது; வெள்ளை நிணத்தது; புண்பொதிந்தது; கொடுமைக்கு மலையாயது; சினத்துக்குச் செறிவாயது; இராகத்துவேஷங்களுக்கு ஒளியாயது; அழுக்குக்கூரையையுடையது; குற்றத்துக்கு வலியாயது; அக்கினிக்கு இரையாவது; பிறப்புக்கு அறையாவது; நரைக்கு வயலாயது; குறும்பிக்கு மேகமாயது; உதிரும் பற்களுக்கு உறைவிடமாயது; கிருமிக்குப் படைவீடாயது; தீமைக்குச் செல்வமாயது; மனமுதலிய அந்தக்கரணப்பாகரால் நடாத்தப்படும் பஞ்சேந்திரிய மதயானைகளுக்குக் காடாயது; அகிர்த்திய சர்ப்பத்துக்குப் பொந்தாயது; ஆற்றின் அருவிபோல நவத்துவாரத்தால் நுரையைச் சொரிவது; வாதமதயானை கட்டும் தறியாயது; பித்தத்துக்கு ஊராயது; சிலேஷ்மத்துக்குப் புரையாயது; காமத்துக்குக் காடாயது; கவலைக்கு எல்லையாயது; அச்சத்துக்கு அரணாயது; பொறாமைக்கு வீதியாயது; இறுமாப்புக்கு மலையாயது; மனோதோஷச் சுறாமீன் ஒலிக்கும் கடலாயது; மறத்துக்கு நிலையாயது; அறியாமைக்குத் தேசமாயது; சாவுக்குக் கொடிதூக்கியது.

உசு. பரமான்ம சீவான்மாக்களாகிய பதி பசுக்கள்:—இங்ஙனம் தோல், எலும்பு, தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், இரசம் என்னும் சப்ததாதுக்களாலாய்த் துயரங்களுக்கெல்லாம் இருப்பிடமாயுள்ள இந்த உடல் மனையகத்தே 1 ஆன்மா பரமான்மா என்னும் இரண்டும் உளவாம் என்று அநுமா

---

1 அவ்விரு ஆன்மாக்களும் சரீரமும் முறையே இரண்டு அழகிய பட்சிகளாகவும், அரசவிருக்ஷமாகவும் உருவகஞ் செய்யப்பட்டிருக்கின்றன. எங்ஙனமெனிற் கூறுதும்:—

2 𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 । 𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 ॥

துவாசுபர்ணாசயுஜா சகாயா சமானம் விருக்ஷம் பரிஷஸ்வஜாதே।
தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்யநச்நந்யோபிசாகசீதி॥

"ஒரே விருக்ஷத்தில் இரண்டு அழகிய பட்சிகள் நண்பினோடு கூடிக்கொண்டு வசிப்பனவாயின; அவ்விரண்டில் ஒன்று அரசமரத்தின் இனிய பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணாது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்று இருக்குவேதத்து, க-ம் மண்டலத்து, கசுச-ம் சூக்தத்து, உ0-ம் மந்திரம் கூறுகின்றது.

னத்தினல் ஆராய்ந்து, அவற்றின் தடஸ்தலக்ஷணம் எனப்படும் பொதுவி யல்பை உணர்தல்வேண்டும்; சூரியன் உதயகிரியின்கண்ணே உதித்தபோது, பூவுலகின்கண்ணே புறத்துளதாகிய இருளானது நீங்கக் கண்ணெளி பார்வை அடையுமாறுபோல, அவ்விரு ஆன்மாக்களின் பொதுவியல்பை உணரும் உணர்ச்சியினற் கருத்தில் உணரப்படுவதாகிய அகவிருள் எனப்படும் ஆணவ மலத்தினின்று நீங்கி, அது நீங்கியபோது எல்லாநூற் பொருள்களையும் தன் னுள்ளே கொண்ட சித்தாந்தமகாவாக்கியத்தினல் எடுத்துரைக்கப்படும் சிவபெருமானது திருவருளினல் ஆன்மா பரமான்மா என்னும் இரண்டு பொருள்களின் சொரூபலக்கணம் எனப்படும் சிறப்பியல்பை அநுபூதியிற் கண்டு, மயக்கவாசனை அறுத்து, சிவானந்தாநுபவமடைதலே பிரயோசனம். இது முதலாவது ஆசங்கைக்கு விடை.

உஎ. சிவாகமத்திலே விதிக்கப்பட்டவாறு முதற்கண்ணே தீக்ஷை பெற்றுச் சிவாகமங்களை ஓதி, அதன்பின்னர்ச் சரியை கிரியை யோகம் என் னும் மூன்று பாதங்களையும் கூறும் நூல்களைக் கேட்டு, மனம் தூயவராய் நித் தியமாகிய மெய்ப்பொருள் இன்னது என்றும், அநித்தியமாகிய பொய்ப்பொ ருள் இன்னது என்றும் உணர்ந்தவராய்; கல்லாயும், புல்லாயும், செடியாயும், மரமாயும், புழுவாயும், பாம்பாயும், பறவையாயும், மிருகங்களாயும், பேயாயும்,

---

இவ்விரு பட்சிகளும் முறையே புருஷனுகிய ஆன்மாவையும் சிவபெருமானையும் உணர்த்துகின்றன என்பது முண்டகோபநிடதத்தினல் அறியப்படுகின்றது.

3 𑌸𑌮𑌾𑌨𑍇 𑌵𑍃𑌕𑍍𑌷𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑍋𑌽𑌨𑍀𑌶𑌯𑌾 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 । 𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌮𑍀𑌶𑌮𑌸𑍍𑌯 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑌃॥

சமானே விருக்ஷே புருஷோ நிமக்நோநீசயா சோசதி முஹ்யமாநஃ।
சுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்யமகிமாநமிதிவீதசோகஃ॥

“ஒரே (சரீரமாகிய) விருக்ஷத்திற் புருஷன் (ஆன்மா) சுவதந்திரமின்மையால் மயக்க முற்றுத் துன்பத்தில் மூழ்கிக்கிடக்கின்றான்; எப்போது அவன் இன்பத்தையுடைய சிவபெருமானை அறிந்து அவருடைய மகிமைக்குணத்தை அடைகின்றானே, அப் போது துன்பம் நீங்கினோனகின்றான்” என்று முண்டகோபநிடதமந்திரம் (ங. க. க) கூறுகின்றது.

இங்கே “அரசமரம்” என்றது மாயாகாரியமாகிய சரீரத்தையும், “இனிய பழம்” என்றது கன்மத்தையும் உணர்த்துகின்றன. உண்ணாத பட்சி ஈசர் எனப்படும் பரமான் மாவாகிய பதியாம் என்றும், உண்ணும் பட்சி புருஷனுகிய சீவான்மா எனப்படும் பசு என்றும், அது மயங்குதற்கும் சுவதந்திரமில்லாதிருத்தற்கும் காரணம் ஆணவமலம் என் றும், எனவே, இந்த இருக்குவேத முண்டகோபநிடதமந்திரங்களாற் பதி, பசு, ஆண வம், மாயை, கன்மம் என்னும் ஐந்தும் பெறப்பட்டனவாம் என்றும் அறியற்பாற்று.

கணங்களாயும், அசுரராயும், முனிவராயும், மனிதராயும், தேவராயும், நரகராயும், இங்ஙனம் பூமியினும், சுவர்க்கத்தினும், நரகத்தினும் காற்றாடியும் கொள்ளிவட்டமும் போலப் பிறவிக்கடலிலேகிடந்து வருந்தவேண்டுமே! என்று ஜனனத்துக்கு அஞ்சி மோக்ஷத்திலே ஆசை மிக்குடையாராயுள்ள அதிகாரிகளே இந்தச் சாஸ்திரத்தைச் சிரவணஞ் செய்தற்கு உரியர். இது இரண்டாவது ஆசங்கைக்கு விடை.

உஅ. பொதுவதிகாரத்தானும் சிறப்பதிகாரத்தானும் கூறப்படும் பதி பாசம் பசு என்னும் முப்பொருள்களுமே சிவஞானபோதத்திற் கூறப்பட்ட பொருள்களாம். இது மூன்றாவது ஆசங்கைக்கு விடை.

உகூ. சரியாபாதம் கிரியாபாதம் யோகபாதம் என்னும் மூன்று பாதப்பொருள்களையும் உணர்த்தும் சோமசம்புபத்ததி வருணபத்ததி என்னும் நூல்களை உணர்ந்த பின்னரே இந்த நூல் கற்கற்பாலதாம். இது நான்காவது ஆசங்கைக்கு விடை.

௩௦. இந்த நூல் சிவஞானபோதம் என்னும் பெயரிட்டு வழங்கப்படுகின்றது. இது ஐந்தாவது ஆசங்கைக்கு விடை.

௩க. வடக்கின்கண்ணே சுப்பிரமணியக்கடவுளின் வெற்பாகிய திருவேங்கடமலையையும் கிழக்கின்கண்ணும் தெற்கின்கண்ணும் மேற்கின்கண்ணும் கடலையும் எல்லையாகக்கொண்ட தமிழ்நாடே இந்த நூல் வழங்கும் இடமாம். இது ஆறாவது ஆசங்கைக்கு விடை.

௩உ. ஸ்ரீகண்டபரமசிவனார் சிவஞானபோதத்தை * நந்திபெருமானுக்கு அருளிச்செய்ய, நந்திபெருமான் அவரை நமஸ்கரித்துநின்று,

௩௩. சிவாகமங்கடோறும் சரியாபாதமுதலிய நான்கும் சிறுபான்மை வேறு வேறாகக் கூறப்படுகின்றன; அவற்றின் உண்மை யாது என்று அருளிச்செய்தல்வேண்டும் என்று விஞ்ஞாபனஞ் செய்தபோது, ஸ்ரீகண்டருத்திர முதல்வர் கருணைகூர்ந்து, ''அனந்ததேவநாயனார் எமக்கு அருளிச்செய்தவாறே கூறுகின்றோம் கேட்பாயாக'' என்று அருளி,

௩ச. கற்பங்கடோறும் படைப்பு வேறுபடலானும் கேட்போர் கருத்து வேறுபடலானும், அவற்றுக்கியையச் சரியாபாதமுதலிய மூன்றும் ஆகமங்களிலே வெவ்வேறாகக் கூறப்படுகின்றன; ஆகலின் எந்த ஆகமப்பிரகாரம் எவர் தீக்ஷைபெற்றிருக்கின்றாரோ அவர் அந்த ஆகமப்பிரகாரம் ஒழுகக்கடவர்;

---

* இதனையுற்றுப் ''பூமிகை''யின் உ-ம் பக்கத்திற் காண்க

௩௫. பதிபசுபாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் இரண்டையும் வேறுவேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஓரோவொன்றேபற்றி ஐக்கியவாதமுதற் பலதிறத்தினால் வேறுபட்டுத் தம்முள்ளே மாறுபட்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்தது இரௌரவாகமத்து எ௩-வது பாசவிமோசனபடலம் எனப்படும் இந்த ஞானபாதத்ததாகிய பன்னிரு சூத்திரமுடைய * சிவஞானபோதம் என்றும், இதனைக்கேட்டார்க்கு எல்லா ஆகமபொருளும் மாறுபடாது நன்குவிளங்கும் என்றும் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். பின்னர் நந்திபெருமான் சிவஞானபோதத்தைச் சனற்குமாரமுனிவர்க்கும், அவர் அதனைச் சத்தியஞானதரிசனிகளுக்கும், அவர் அதனைப் பரஞ்சோதிமுனிவர்க்கும் அருளிச்செய்தார். பரஞ்சோதிமுனிவர் வடமொழிச்சிவஞானபோதத்தை மெய்கண்டதேவரிடத்திற் கொடுத்து இதனை "ஈண்டுள்ளார் உணர்ந்து உய்தற்பொருட்டுத் தமிழிலே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்க" என்று அருளிச்செய்தார். இந்த வடமொழிச் சிவஞானபோதமே தென்மொழிச்சிவஞானபோதத்துக்கு முதனூலாம். இது ஏழாவது ஆசங்கைக்கு விடை.

௩௬. அங்ஙனமே வடமொழிச்சிவஞானபோதத்தைத் தமிழிலே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளினவர் சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாமமுடைய மெய்கண்டதேவரேயாம். இது எட்டாவது ஆசங்கைக்கு விடை.

---

* 𑌰𑍌𑌰𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌶𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍋𑌧𑌾𑌖𑍍𑌯𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍।

ரௌரவதந்திராந்தர்கதம் சிவஞாநபோதாக்யம் சாஸ்திரம்।

"இரௌரவதந்திரத்துள்ளே அடங்கியது சிவஞானபோதம் எனப்பெயரியசாஸ்திரம்" என்று அதிவருணாச்சிரம ஆசாரியவரிய சைவசமயபரிபாலக ஸ்ரீலஸ்ரீசிவாக்கிரயோகீந்திரஞானசிவாசாரியசுவாமிகள் தமது பாஷ்யத்தில் வரைந்தருளியிருக்கின்றார்கள்.

## பரீக்ஷாவினாக்கள்.



க. வைதிகசைவத்துக்குரிய முதனூல்கள் யாவை? க.

உ. வேதம் நான்கும் யாவை? உ.

ங. சிவாகமம் இருபத்தெட்டும் யாவை? ங.

ச. இவைகள் எங்ஙனம் பெயர் பெறும்? ங.

ரு. உபாகமங்கள் எத்தனை? ச.

சு. வேதாகமங்கள் எத்தனை காண்டங்களையுடையன? ரு.

எ. வேதத்தின் கன்மகாண்டத்தில் விரித்துப் பேசப்படுவன யாவை? சு

அ. அதிற் சுருக்கிப் பேசப்படுவன யாவை? சு.

கூ. வேதத்து ஞானகாண்டம் எதனை விரித்துக் கூறும்? எ.

க0. வேதத்தின் ஞானகாண்டம் மற்றெப்பெயர்களாற் கூறப்படும்? எ.

கக. ஆகமத்தின் கன்மகாண்டத்திற் கூறப்படுவன யாவை? அ.

கஉ ஆகமத்தின் ஞானகாண்டத்திற் கூறப்படுவது யாது? கூ.

கங. ஞானபாதம் எத்தனை வகைப்படும்? கூ.

கச. வேதாந்தம் பதி பசு பாசங்களை அநித்தியம் என்று? அல்லது நித்தியம் என்று கூறுகின்றது? க0.

கரு. வேதாந்தங்கள் எனப்படுவன யாவை? கக.

கசு. சிவாகமங்கள் எத்தனை பாதங்களையுடையன? கஉ.

கஎ. சரியாபாதமாவது யாது? கங.

கஅ. கிரியாபாதமாவது யாது? கச.

கக. யோகபாதமாவது யாது? கரு.

உ0. ஞானபாதமாவது யாது? கசு.

உக. ஆகமாந்தம் என்று கூறப்படுதற்குக் காரணம் என்னை? கஎ.

உஉ. அது மற்றெப்பெயராற் கூறப்படும்? கஅ.

உஙு. ஞானபாதங்கள் எப்பெயர் பெறும்? கசு.

உச. திருமூலநாயனர் "நாடிலிரண்டந்தம் பெரியோர்க்கபேதம்" என்று யாதுபற்றிக் கூறினர்? உ0.

உரு. சிவஞானபோதம் எந்த ஆகமத்துள்ளது? உக.

உசு. சிவஞானபோதம் வைதிகசைவசித்தாந்தம் என்று கூறப்படுதற்குக் காரணம் என்? உஉ.

உஎ. தமிழிலே மொழிபெயர்க்கப்பட்ட சிவஞானபோதம் எங்ஙனம் பெயர் பெறும்? உங.

உஅ. சிவஞானபோதத்துள்ள ஆசங்கைகள் எட்டும் யாவை? உச(1-8.)

உகூ. இந்தத் தேகம் எங்ஙனம் இழிவுடைத்து? உரு.

ஙு0. இந்தத் தேகத்துள்ளே உள்ளன யாவை? உசு.

ஙுக. இரு ஆன்மாக்களும் இருக்குவேதத்தில் எங்ஙனம் கூறப்பட்டுள்ளன? (1.)

ஙுஉ. இருக்குவேதத்தில் எங்கே கூறப்பட்டுள்ளன? (2.)

ஙுங. இரு பட்சிகளாலும் குறிக்கப்பட்டவர் யாவர்? (2.)

ஙுச. அதற்குப் பிரமாணம் என்னே? (3.)

ஙுரு. அரசமரம் என்றது யாது? (3.)

ஙுசு. இனிய பழம் என்றது யாது? (3.)

ஙுஎ. ஆணவமலம் உளதென்று எங்ஙனம் அறியப்படுகின்றது? (3.)

ஙுஅ. இருக்குவேதத்திற் பதிமுதலிய ஐந்தும் கூறப்பட்டனவா? (3.)

ஙுகூ. ஆன்மா பரமான்மா என்பவற்றை அநுமானத்தினல் ஆராய்ந்து, பின் அறியற்பாலதாய்க் கிடந்தது யாது? உசு.

ச0. அகவிருள் யாது? உசு.

சக. எல்லா நூற்பொருளையும் தன்னுள்ளே கொண்டது யாது? உசு.

சஉ. சிவபிரான் திருவருளினல் அறியற்பாலதாய்க் கிடந்தது யாது? உசு.

சங. ஆன்மா பரமான்மாவின் சிறப்பியல்பை அநுபூதியிற் கண்டுணர்தலால் எய்தும் பயன் யாது? உசு.

சச. எவர்கள் இந்தச் சாஸ்திரத்துக்கு அதிகாரிகள்? உஎ.

சரு. சிவஞானபோதத்திற் கூறப்பட்ட பொருள்கள் யாவை? உஅ.

சசு. எந்த நூல்களை உணர்ந்தபின் சிவஞானபோதம் கற்கற்பாலது?உகூ

சஎ. சிவஞானபோதம் வழங்குமிடம் யாது? ௩க.

சஅ. நந்திபெருமான் ஸ்ரீகண்டருத்திரர்க்கு எங்ஙனம் விஞ்ஞாபனம் செய்தார்? ௩௩.

சகூ. சரியாபாதமுதலியன ஒவ்வோர் ஆகமங்களிலே வெவ்வேறாகக் கூறப்படுதற்குக் காரணம் என்னை? ௩ச.

௫0. பதிபசுபாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை ஒற்றுமையுற உணர்த்தும் நூல் யாது? ௩௫.

௫க. இரௌரவாகமத்துள்ளது சிவஞானபோதம் என்று எவர் கூறுகின்றார்? சிவாக்கிரயோகிகள்.

௫உ. பரஞ்சோதிமகாமுனிவர்க்குச் சிவஞானபோதம் எங்ஙனம் எய்திற்று? ௩௫.

௫௩. பரஞ்சோதிமுனிவர் அதனை எவர்க்கு அருளிச்செய்தார்? ௩௫.

௫ச. பரஞ்சோதிமுனிவர் மெய்கண்டதேவரிடத்து எங்ஙனம் ஆஞ்ஞைசெய்து அதனைக் கொடுத்தார்? ௩௫.

௫௫. தமிழ்ச்சிவஞானபோதத்துக்கு முதனூல் யாது? ௩௫.

௫சு. மெய்கண்டதேவருடைய பிள்ளைத்திருநாமம் யாது? ௩சு.

௫எ. முதலாம் ஆசங்கை முதலாயுள்ள எட்டுக்கும் விடைகள் எந்தெந்தப் பிரிவுகளிலே காணப்படுகின்றன? உசு, உஎ, உஅ, உகூ, ௩0, ௩க, ௩௫, ௩சு.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோத

# வசனாலங்காரதீபம்.



## பொதுவதிகாரம்.

### பதிப்பிரமாணவியல்.

### முதலாஞ்சூத்திரம்.

க. வடமொழிச் சிவஞானபோதத்துட் கூறியவாறே இத்தென்மொழிச் சிவஞானபோதத்துள்ளும் பொதுவதிகாரம் உண்மை (சிறப்பு) அதிகாரம் என இருவகை அதிகாரங்கள் பகுக்கப்பட்டு, பொதுவதிகாரத்திலே பிரமாணவியலும் இலக்கணவியலும், சிறப்பதிகாரத்திலே சாதனவியலும் பயனியலும் கூறப்படும்.

உ. பிரமாணவியலிற் கூறப்படும் பதி பாசம் பசு என்னும் முப்பொருள்களுள் முதற்கண்ணே உலகத்துக்கு முதற்கடவுளாகிய பதி ஒருவர் சிறப்புவகையால் உளர் என்று அநுமானப் பிரமாணங்கொண்டு வலியுறுத்தப்படுகின்றது.

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍।
𑌅𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸 𑌕𑍃𑌤𑍍𑌵𑍈𑌤𑌤𑍍 𑌸𑍃𑌜𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍍𑌹𑌰𑌃॥

ஸ்திரீபும்நபும்சகாதித்வாஜ்ஜகத:கார்யதர்சநாத்।
அஸ்திகர்த்தா சகிருத்வைதத்சிருஜத்யஸ்மாத்பிரபுர்ஹர:॥

ங. (இதன்பொருள்.) 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍=பெண் ஆண் அலி (என்று சுட்டி அறியப்படுவதாகிய சேதனாசேதனப்) பிரபஞ்சம் உற்பத்தி முதலிய வுடைமையால்; 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 = காரிய ரூபமாய்க் காணப்படலால்; 𑌜𑌗𑌤𑌃 = பிரபஞ்சத்துக்கு; 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌅𑌸𑍍𑌤𑌿 = கர்த்தா உளராகின்றார்; 𑌸 𑌏𑌤𑌤𑍍 𑌹𑍃𑌤𑍍𑌵𑌾 𑌸𑍃𑌜𑌤𑌿 = அவர் இதனை (பிரபஞ்சத்தைக் கன்மமலம் பரிபாகமாம்பொருட்டு) ஒடுக்கி, (ஆணவமலம் பரிபாகமாகும் பொருட்டு மீளப்) படைக்கின்றார்; 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌹𑌰𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 = ஆகலின் அந்த மகாசங்கார உருத்திரரே முதற்கடவுள் என்றவாறு.

௪. அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

ரு. (இ-ள்.) அவன் அவள் அது எனுமவை = ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்று என்றும் (சுட்டப்படும் பிரபஞ்சத்) தொகுதி; மூவினைமையின் = (சிருஷ்டியாதி) முத்தொழில் உடைமையால்; தோற்றிய திதியே = (ஒருவனால்) தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளேயாம்; ஒடுங்கி மலத்து உளதாம் = (அது கன்மமலம் பரிபாக மாகும்பொருட்டுத் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய) கடவுளினின்றும் மலம் நீங்கும்பொருட்டு (மீளத்) தோன்றுவதாம் (ஆகலான்); அந்தம் ஆதி = அச்சங்கார கருத்தாவே (உலகத்துக்கு) முதற் கடவுளாம்; என்மனார் புலவர் = என்று சொல்லுவர் அறிஞர் எ - று.

சூ. (சூத்திரக் கருத்துரை.) சங்கார காரணராயுள்ள முதல்வரையே கருத்தாவாகவுடைத்து இவ்வுலகம் என்பதாம்.

எ. (சூத்திரக் கருத்துரைப்பொருள்.) நிவிர்த்திகலைமுதற் சாந்தியதீத கலை இறுதியாகிய ஐவகைச் சங்காரத்துள், இறுதிக்கண்ணதாகிய மகாசங்காரத்தைச் செய்யும் முதல்வரையே தனக்கு முதலாக உடைத்து அவன் அவள் அது என்று சுட்டி உணரப்படுவதாகிய உலகம் என்று வேதாகமங்களிற் கூறப்படுகின்றது எ-ம்.

அ. (சூத்திரத்தின் பிண்டப்பொருள்.) ஆண் பெண் அலி என்றாற் போலும் பிரபஞ்சத்தொகுதி சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் மூன்று தொழிலுடைமையால், ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டு நின்றுளதேயாம். அங்ஙனமாயின் அப்பிரபஞ்சம் எவரினின்று தோற்றியதாமெனின், அது தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய கடவுளினின்றும் தோற்றியதாம்; அது ஒடுங்கியவாறே நில்லாது மீளத் தோற்றுவது எதன்பொருட்டாமெனின், (ஆன்மாக்களைப்பற்றிய) சகசமாகிய ஆணவமலம் தீர்ந்தொடுங்காமையால்தோற்றுவதாம்; இங்ஙனமாதலின் மகா சங்காரத்தொழில் செய்யும் கடவுளே முதற்கடவுள் என்று அறிவுடையார் கூறுவர். எ-ம்.

கூ. சங்காரம் ஐவகைப்படும்; அவை:—

க0. நிவிர்த்திகலா சக்கரத்தில் அடங்கிய பிருதிவி தத்துவத்தினதும், அதில் அடங்கிய காலாக்கினி புவனமுதல் வீரபத்திரபுவனம் இறுதியாகிய நூற்றெட்டுப் புவனங்களினதும் சங்காரம் ஒன்று.

கக. பிரதிஷ்டாகலா சக்கரத்தில் அடங்கிய அப்பு தத்துவமுதற் பிரகிருதிதத்துவம் இறுதியாகிய இருபத்துமூன்று தத்துவங்களினதும், அதில்

அடங்கிய அமரேச புவனமுதல் ஸ்ரீகண்டபுவனம் இறுதியாகிய ஐம்பத்தாறு புவனங்களினதும் சங்காரம் இரண்டு.

௧௨. வித்தியாகலா சக்கரத்தில் அடங்கிய புருடதத்துவமுதல் அசுத்த மாயாதத்துவம் இறுதியாகிய ஏழு தத்துவங்களினதும், அதில் அடங்கிய வாமபுவனமுதல் அங்குஷ்டமாத்திரபுவனம் இறுதியாகிய இருபத்தேழு புவனங்களினதும் சங்காரம் மூன்று.

௧௩. சாந்திகலா சக்கரத்தில் அடங்கிய சுத்தவித்தியா தத்துவமுதற் சாதாக்கிய தத்துவம் இறுதியாகிய மூன்று தத்துவங்களினதும், அதில் அடங்கிய வாமைபுவனமுதற் சதாசிவபுவனம் இறுதியாகிய பதினெட்டுப் புவனங்களினதும் சங்காரம் நான்கு.

௧௪. சாந்தியதீதகலா சக்கரத்தில் அடங்கிய சத்திதத்துவம் சிவதத்துவம் என்னும் இரு தத்துவங்களினதும், அதில் அடங்கிய நிவிர்த்திபுவனமுதல் அநாசிருதைபுவனம் இறுதியாகிய பதினைந்து புவனங்களினதும் சங்காரம் ஐந்து என்றுணர்க.

௧௫. ஓர் இராசதானிச் சக்கரத்துள் ஜில்லாக்களும், அந்த ஜில்லாக்களுள்ளே தாலுகாக்களும் அடங்கிய பிரகாரமே, ஒவ்வொரு கலாசக்கரத்துள்ளும் தத்துவங்களும், அத்தத்துவங்களுள்ளே புவனங்களும் அடங்கிநிற்பனவென்றுணர்க.

௧௬. சென்னை இராசதானிச் சக்கரத்துக்குமேலே பம்பாய் இராசதானியும், அதற்குமேலே டில்லி இராசதானியும் ஒன்றுக்கொன்று மேன்மேல் வியாபகமாய் நின்றாற்போலவே, நிவிர்த்திகலா சக்கரத்துக்குமேற் பிரதிஷ்டாகலா சக்கரமும், அதற்குமேல் வித்தியாகலா சக்கரமும், அதற்குமேற் சாந்திகலா சக்கரமும், அதற்குமேற் சாந்தியதீதகலா சக்கரமும் ஒன்றுக்கொன்று மேன்மேலாய் வியாபித்து நிற்கும் என்க.

௧௭. இந்த ஐவகைச் சங்காரத்துள்ளும் சாந்தியதீதகலா சக்கரப்பாலதாய் நின்ற சங்காரமே மகா சங்காரம் எனப்படும்.

௧௮. 1 𑌪𑌞𑍍𑌚𑌾𑌰𑍇 2 𑌚𑌕𑍍𑌰𑍇 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑍇 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌨𑌾𑌤𑌸𑍍𑌤𑍁𑌰𑍍 𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾।

பஞ்சாரே சக்ரே பரிவர்த்தமாநே தஸ்மிந் நாதஸ்துர் புவநாநி விச்வா।

---

1 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿𑌪𑌞𑍍𑌚𑌾𑌵𑌯𑌵𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌰𑌮𑌿𑌤𑌿 𑌕𑌥𑍍𑌯𑌤𑍇।

ஸிருஷ்டியாதிபஞ்சாவயவம் பஞ்சாரமிதிகத்யதே।

௧௯. "(சிருஷ்டியாதி) பஞ்ச (கிருத்திய அவயவங்களாகிய) ஆரங்களைத் (தனித்தனியே கொண்ட ஐந்து) சக்கரங்கள் மேன்மேல் வியாபித்து இருக்கும் என்றும், அவற்றிலே (காலாக்கினிபுவனமுதல் அநாசிருதைபுவனம் இறுதியாகிய) சமஸ்த புவனங்களும் நிலையுறுவன" என்றும் இருக்குவேதத்து, ௧-ம் மண்டலத்து, ௧௬௪-ம் சூக்தத்து, ௧௩-ம் மந்திரம் கூறுகின்றது.

௨௦. "வேதங்களை இதிகாச புராணங்கள் கொண்டு பொருள் செய்க" என்று வேதவியாச முனிவர் ஆணை தந்தமையின், அவர் ஆஞ்ஞையைச் சிரமேல் வகித்து, சுப்பிரமணியப்பெருமான் வாமதேவ முனிவருக்கு உபதேசித்தருளிய இருக்குவேத மந்திரப்பொருள் கைலாசசங்கிதை எனப்படும் புராணத்தைக்கொண்டு ஈண்டுச் சுருக்கி வரையப்படுகின்றது.

௨௧. 3 நிவிர்த்திகலை சிருஷ்டி சக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் பிரமா; அவருக்கு இரணியகருப்பர், விராட்டு, புருஷர், காலர் என நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் சிருஷ்டித்தொழிலையன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

௨௨. 4 பிரதிஷ்டாகலை ஸ்திதிசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் விஷ்ணு; அவருக்கு வாசுதேவர், அநிருத்தர், பிரத்தியும்நர், சங்கர்ஷணர் என நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் காத்தற்றொழிலையன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

---

"படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களாகிய அவயவங்களே ஐந்து ஆரங்கள் எனப்படுகின்றன" என்று கைலாசசங்கிதை ௧௦-ம் அத்தியாயத்து, ௭௭-ம் சுலோகம் கூறுகின்றது.

2 𑌪𑌰𑌿𑌤𑍋 𑌵𑌰𑍍𑌤𑍍𑌤𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌮𑍍।

பரிதோவர்த்ததே யஸ்மாத் தஸ்மாச் சக்ரமிதீரிதம்।

"யாண்டும் வியாபித்தலின் சக்கரம் எனப்பட்டது" என்று கைலாசசங்கிதை ௧௦-ம் அத்தியாயத்து, ௭௮-ம் சுலோகம் கூறுகின்றது.

3 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌬𑍁𑌧𑍈𑌃।
𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚 𑌪𑌦𑌮𑍇𑌤𑌦𑍍𑌧𑌿 𑌶𑍋𑌭𑌿𑌤𑌮𑍍।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑍋𑌽𑌥 𑌵𑌿𑌰𑌾𑌟𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌕𑌾𑌲 𑌏𑌵 𑌚।
𑌜𑌗𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌵𑌪𑌿 𑌮𑍁𑌨𑍇 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌵𑌿𑌭𑍋𑌃॥

நிவிர்த்திரூபமாக்யாதம் சிருஷ்டிசக்ரமிதம்புதை꞉।
பிதாமஹாதிஷ்டிதஞ்ச பதமேதத்திசோபிதம்।
ஹிரண்யகர்ப்பாத்யஸ்யைவ வியஷ்டிரூபசதுஷ்டயம்।
ஹிரண்யகர்ப்போதவிராட்புருஷ꞉ காலஏவச।
ஜகத்சிருஷ்டாவபிமுநேகிருத்யாநாம் பஞ்சகம்விபோ꞉॥

[கைலாசசங்கிதை, அத்தி, ௧௦; ௯௧, ௭௨, ௭௩]

4 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑌮𑍀𑌰𑌿𑌤𑌮𑍍।

உங. 5 வித்தியாகலை சங்காரசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் உருத்திரர்; அவருக்குச் சிவன், அரர், மிருடர், பவர் என்னும் நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் சங்காரத்தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

உச. 6 சாந்திகலை திரோதான சக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் மகேசுவரர்; அவருக்கு ஈசர், விசுவேசுவரர், பரமேசுவரர், சர்வேசுவரர் என நான்கு வியூகர் உளர். அவர் அச்சக்கரத்திலே திரோதானத் தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

---

𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌚 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌰𑌮𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌤𑍋 𑌵𑌾𑌮𑍇 𑌸𑌰𑍍𑌵𑌰𑌕𑍍𑌷𑌾𑌕𑌰𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍 ।
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑌿 𑌚𑌤𑍁𑌷𑍍𑌕𑌂 𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌧𑌾𑌮𑌕𑌮𑍍 ।
𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌶𑍍𑌚 𑌤𑌤𑌃 𑌸𑌙𑍍𑌕𑌰𑍍𑌷𑌣𑌃 𑌪𑌰𑌃 ।
𑌪𑍍𑌰𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌪𑌰𑌮𑍍 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌵𑌪𑌿 𑌤𑍁 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌵𑌿𑌭𑍋𑌃 ।
𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌨𑌾𑌮𑌿𑌦𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌸𑌾𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌦𑌿𑌪𑌦𑌪𑍍𑌰𑌦𑌮𑍍 ॥

ஸ்திதிசக்ரமிதம்பிரம்மங் பிரதிஷ்டாரூபமுத்தமம்।
ஜநார்த்தநாதிஷ்டிதஞ்ச பரமம்பதமுச்சயதே।
ரமாசக்தியுதோவாமே ஸர்வரக்ஷாகரோமஹாந்।
அஸ்யைவவாசுதேவாதி சதுஷ்கம்வியஷ்டிதாம்கதம்।
வாசுதேவோநிருத்தச்ச ததஃசங்கர்ஷணஃபரஃ।
பிரத்யும்நச்சேதிவிக்யாதம் ஸ்திதிசக்ரமிதம்பரம்।
ஸ்திதாவபிதுசிருஷ்டியாதி கிருத்யாநாம்பஞ்சகம்விபோஃ।
வைஷ்ணவாநாமிதம்சக்ரம் சாலோக்யாதிபதபிரதம்॥

[கைலாச, அத்தி, கO; சுக, சுஉ, சுச, சுரு.]

5 𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌖𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑍂𑌪𑌕𑌲𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌚 𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣 𑌪𑌦𑌮𑍇𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑌂 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑌿𑌵𑌾𑌦𑍍𑌯𑌥 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 ।
𑌶𑌿𑌵𑍋 𑌹𑌰𑍋 𑌮𑍃𑌡𑌭𑌵𑍌 𑌵𑌿𑌦𑌿𑌤𑌂 𑌚𑌕𑍍𑌰𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍 ।
𑌸𑌂𑌹𑍃𑌤𑌾𑌵𑌪𑌿 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌵𑌿𑌭𑍋𑌃 ।

சங்ஹாராக்யமிதம்சக்ரம் வித்யாரூபகலாமயம்।
அதிஷ்டிதஞ்சருத்ரேண பதமேதந்நிராமயம்।
அஸ்யைவவியஷ்டிரூபம் ஸ்யாச்சிவாத்யதசதுஷ்டயம்।
சிவோஹரோமிருடபவௌ விதிதஞ்சக்ரமத்புதம்।
சம்கிருதாவபிசிருஷ்டியாதி கிருத்யாநாம்பஞ்சகம்விபோஃ।

[கைலாச, அத்தி, கO; ருஉ, ருங, ருஎ, ருஅ.]

6 𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌨𑌾𑌖𑍍𑌯𑌕𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌮𑌹𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌪𑍍𑌰𑌦𑌮𑍍 ।
𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌚 𑌪𑌦𑌮𑍇𑌤𑌦𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।

உரு. 7 சாந்தியதீதகலை அநுக்கிரகசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் சிதாகாச பதிப்பிரபுவாகிய சமஷ்டிரூப சதாசிவர்; அவருக்கு, மேலே கூறப் பட்ட (சாந்தியதீதகலா சக்கரத்து) மகேசுவரர், (வித்தியாகலாசக்கரத்து) உருத்திரர், (பிரதிஷ்டாகலாசக்கரத்து) விஷ்ணு, (நிவிர்த்திகலாசக்காத்துப்) பிரமா என்னும் நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்தில் அநுக்கிரகத் தொழில் செய்தலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

உசு. இன்னும் சாந்தியதீதகலாசக்கரப்பாலராய் நின்ற அந்தச் சமஷ்டி ரூப பஞ்சகிருத்திய பரப்பிரம சதாசிவராகிய மகாருத்திரருக்குத்தான் மகா சங்கார காலத்தில் நிவிர்த்திகலைப்பாற்பட்ட பிருதிவி தத்துவபுவனமுதற் சாந்தியதீதகலாசக்கரத்துச் சுத்தமாயா தத்துவபுவனுந்தஞ் சங்கரிக்கும் வன்மை உளதாம். ஏனைக் கலாசக்கரங்களிலே உள்ள பிரமா, விஷ்ணு, உருத் திரர், மகேசுவரராயினோர்க்குத் தத்தம் கலாதத்துவ புவனங்களுக்கு மேற் பட்ட கலாதத்துவபுவனங்களைச் சங்கரிக்கும்வன்மை இலதாம் என்க.

உஎ. மகாசங்காரகாலத்தில் அந்தக் கலாதத்துவபுவனங்களோடு அவ ற்றிற்கு அதிபதிகளாகிய பிரம விஷ்ணு முதலாயினோரும் ஒருங்கு சங்கரிக் கப்படுவாரோ எனின், அவர்களும் ஒருங்கு சங்கரிக்கப்படாதொழிவாராயின் அது மகாசங்கார மெனப்படாதாகலான், சங்கரிக்கப்படுவாரென்க.

---

𑌅𑌸𑍍𑌯𑍈𑌵𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑌂𑌸𑍍𑌯𑌾𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌦𑌿𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍|
𑌈𑌶𑍋𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑍇𑌶𑌸𑍍𑌤𑌤𑌃𑌪𑌰𑌮𑍍|
𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌇𑌤𑍀𑌦𑌨𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌚𑌕𑍍𑌰𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍||

திரோபாவாத்மகம்சக்ரம் பவேச்சாந்திகலாமயம்।
மஹேச்வராதிஷ்டிதஞ்ச பதமேதத நுத்தமம்।
அஸ்யைவவியஷ்டிரூபம் ஸ்யாதீச்வராதிசதுஷ்டயம்।
ஈசோவிச்வேச்வரஃ பச்சாத்பரமேசஸ்ததஃபரம்।
சர்வேச்வர இதீதந்து திரோதாசக்ரமுத்தமம்॥

[கைலாச, அத்தி, கO; சரு, சசு, சக.]

7 𑌅𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌮𑌯𑌂𑌚𑌕𑍍𑌰𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍀𑌤𑌕𑌲𑌾𑌮𑌯𑌮𑍍|
𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚𑌪𑌰𑌮𑌂𑌪𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇|
𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃𑌸𑌮𑌷𑍍𑌟𑌿𑌃𑌸𑍍𑌯𑌾𑌦𑌾𑌕𑌾𑌶𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃|
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌤𑌾𑌪𑌨𑍍𑌨𑌂𑌮𑌹𑍇𑌶𑌾𑌦𑌿𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍|
𑌅𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑍇𑌽𑌪𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂𑌪𑌞𑍍𑌚𑌕𑌂𑌵𑌿𑌭𑍋𑌃||

அநுக்கிரஹமயம்சக்ரம் சாந்தியதீதகலாமயம்।
சதாசிவாதிஷ்டிதஞ்ச பரமம்பதமுச்யதே।
சதாசிவஃசமஷ்டிஃ ஸ்யாதாகாசாதிபதிஃபிரபுஃ।
அஸ்யைவவியஷ்டிதாபந்நம் மஹேசாதிசதுஷ்டயம்।
அநுக்ரஹேபிசிருஷ்டியாதி கிருத்யாநாம்பஞ்சகம்விபோஃ॥

[கைலாச, அத்தி, கO; உசு, உஎ, சஉ.]

௨அ. 𑌅𑌰𑍍𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌵𑌾 𑌅𑌸𑍍𑌯 𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌨𑍇𑌨𑌾𑌥𑌾 𑌕𑍋 𑌵𑍇𑌦 யத 𑌆𑌬𑌭𑍂𑌵 [இருக்கு, ௧0, ௧௨௯, ௬.]

அர்வாக்தேவா அஸ்ய விசர்ஜநேநாதா கோ வேத யத ஆபபூவ ।

௨௯. தேவர்கள் உலகசிருஷ்டிக்குப் பின்னர்த்தான் உளராயினர்கள்; அங்ஙனமாயின், அது எங்கிருந்து உளதாயிற்று என்று யார் அறிவார்? என இருக்கு வேதம் வினவி,

௩0. 𑌯𑍋 𑌅𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍𑌸𑍋 𑌅𑌙𑍍𑌗 𑌵𑍇𑌦 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌨 𑌵𑍇𑌦 [இருக்கு, ௧0, ௧௨௯, ௭.]

யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வியோமந்சோ அங்கவேத யதிவா நவேத।

௩௧. "பரமவியோமமாகிய திருச்சிற்றம்பலத்தின்கண்ணே எவர் பிரபஞ்சத்துக்கு அத்தியக்ஷராய் (அதிபதியாய்) நின்றாரோ, அவரே அதனை அறிவார்; மற்றெவரும் அறியார்" என்று உத்தரம் கூறுதலான், (கைலாசசங்கிதை கூறியவாறு) பிரமாதி தேவர்களெல்லாம் சங்கரிக்கப்பட்டுப்போக, சிதாகாயப் பிரபுவாகிய சதாசிவரே சேஷித்து நின்றார் என்றும், அவரே சிருஷ்டியாதி கிருத்தியங்களுக்குக் காரணராகிய முதல்வராம் என்றும், அவரே மகாசங்காரஞ் செய்யவல்ல மகாருத்திரராகிய முதல்வராம் என்றும், இவரையே முதலாக உடைத்து உலகம் என்றும் ஒருதலையாக உணரற்பாற்றும்.

௩௨. இருக்குவேதத்திலே (அதிபதியாகிய) அத்தியக்ஷராகக் கூறப்பட்டவர் யாரெனில்,

௩௩. 𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑌰𑌦𑌯 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌞𑍍𑌛𑍇𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌶𑍀 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃 [பிருகதாரணியம், ௬, ௪, ௨௨.]

ய ஏஷோந்தர்ஹிருதய ஆகாசஸ் தஸ்மிஞ்சேதே சர்வஸ்ய வசீ சர்வஸ்யேசாந: சர்வஸ்யாதிபதி:।

௩௪. "எது இதயத்துள் ஆகாசமாய் (சிற்றம்பலமாய்) இருக்கின்றதோ, அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபதியும், அனைத்துக்கும் ஈசானருமாயினார் அமர்கின்றார்" என்று பிருகதாரணியோபநிடதம் சுட்டிக் கூறிய அந்த அத்தியக்ஷராகிய ஈசானரே அநுக்கிரக சக்கரத்துச் சதாசிவராம். இருக்குவேதத்திற் கூறப்பட்ட வியோமமும், பிருகதாரணியத்துக் கூறப்பட்ட ஆகாயமும் திருச்சிற்றம்பலத்தை உணர்த்துவனவாம் என்க.

௩௫. பசுவும், பாசமும், அதிகாரஞ் செய்து நிற்பதாகிய பதியும், அதிகாரத்தினொழிந்து தன்னியல்பில் நிற்பதாகிய சிவமும் எனப் பதார்த்தம்

நான்கு என்று சர்வஞ்ஞானோத்தராகமம் எடுத்துக் கூறிய பின்னர், அதிகாரஞ் செய்து நிற்பதாகிய பதியையுற்றுக் கூறுங்கால்,

௩௬. பதிஸ்ஸதாஶிவோ ஜ்ஞேயோ மந்த்ராத்மா மந்த்ரவிக்ரஹ:|
ஸர்வமந்த்ராதிபஸ்ஸோ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரக:||

பதிஃ சதாசிவோ ஞேயோ மந்திராத்மா மந்திரவிக்ரஹஃ।
சர்வமந்திராதிபச்சாஸெள கிருஷ்டிசம்ஹாரகாரகஃ।

௩௭. "பதியாகிய சதாசிவர் மந்திரான்மாவாயும், மந்திரசொரூபியாயும், சர்வமந்திரங்களுக்கும் அதிபராயும், சிருஷ்டிசங்காரங்கள் செய்பவராயும் உள்ளார்" என்று கூறுகின்றமையால், மகாசங்கார ருத்திரரே அந்த அதிகாரத்தோடு கூடிய சதாசிவராம். இவரும் கைலாச சங்கிதையிற் கூறப்பட்ட சமஷ்டிரூப சதாசிவரும் ஒருவராமென்க. இவரை இருக்கு வேதத்து, ௨-ம் மண்டலத்து, ௩௬-ம் சூக்தத்து, ௨-ம் மந்திரம் பரதர் என்று கூறுகின்றது. சிருஷ்டியாதி பஞ்சகிருத்திய நடனஞ் செய்தலினாலன்றோ சிவபிரான் பரதர் எனப்படும் தாண்டவேசுவர மூர்த்தியெனப்பட்டார் என்க. அரதத்தாசாரியரும் இங்ஙனம் பொருள்கொண்டமை சதுர்வேத தாற்பரியசங்கிரகத்து (நாய) "நாத" என்றற் றொடக்கத்து ௯௪-ம் சுலோகத்தினால் அறிக.

௩௮. ஶிவம் ஶக்திஞ்ச ஸாதாக்யமீஶம் வித்யாக்யமேவச|

சிவம் சக்திஞ்ச சாதாக்யமீசம் வித்யாக்யமேவச।

[பிருகச்சாபாலம், ௪, ௧௯.]

௩௯. "சிவதத்துவம், சத்திதத்துவம், சாதாக்கியதத்துவம், ஈசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம்" என்னும் சிவதத்துவங்கள் ஐந்தையும் பிருகச்சாபாலோபநிடதம் கூறிற்று. இச் சுருதியிற் கூறப்பட்ட சிவதத்துவம் ஐந்தனுள்ளே, சிவதத்துவம் சத்திதத்துவம் என்னும் முப்பத்தாறும் முப்பத்தைந்தாம் தத்துவங்கள் இரண்டும் அருவத்திருமேனியையுடைய இலயசிவனார்க்கும், சாதாக்கிய தத்துவம் என்னும் முப்பத்துநான்காம் தத்துவம் அருவுருவத் திருமேனியையுடைய போகாவஸ்தையினராகிய வியஷ்டிரூப சதாசிவனார்க்கும், ஈசுரம் சுத்தவித்தை என்னும் முப்பத்துமூன்றும் முப்பத்திரண்டாம் தத்துவங்கள் இரண்டும் உருவத்திருமேனியையுடைய அதிகாராவஸ்தையினராகிய மகேசுவரனார்க்கும் ஸ்தானங்களாமென்று பவுட்காதி ஆகமங்கள் கூறுகின்றன. அங்ஙனமாகவும், சாதாக்கிய தத்துவத்தினராகிய சதாசிவனார்க்குமேல் இலயசிவனே உளராக, திருச்சிற்றம்பலத்து நிருத்தரூப தாண்டவேசுவராகிய(பஞ்சகிருத்திய) அதிகாரத்தினீங்காத சதாசிவர் ஒருவர் உளர் என்று கூறுதல் பொருத்தமன்றாமெனிற் கூறுதும்:—

சo. [illegible]

சாதாக்யஸ்ய ததூர்த்வேது விங்யசேங் நிருத்தரூபகம்।

சக. "சதாசிவனார்க்குமேல் தாண்டவேசுவரரை நியசிக்க" என்று மகுடாகமம் கூறுகின்றது.

சஉ. [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பிரம்மதத்வமதோங்யஸ்ய விஷ்ணுதத்வம்ததூர்த்வதஃ।
தத்பரம்ருத்ரதத்வஞ்ச தத ஊர்த்வம்மகேச்வரம்।
சாதாக்யதத்வம்தங்மூர்த்நி பிந்துதத்வமதஃபரம்।
ததூர்த்வம்நாததத்வஞ்ச சக்திதத்வமதஃபரம்।
தத்பரம்சிவதத்வஞ்ச பூஜயேஜ்ஞானமூர்த்திகம்।
சர்வகாரணதேவேசம் தியாத்வாதாண்டவமீச்வரம்।
ஆவாஹயேத்ததோதேவம் புஷ்பஹஸ்தம் சுகாசநஃ॥

சங. "பிரமாவுக்குமேல் விஷ்ணு; அவருக்குமேல் உருத்திரர்; அவருக்குமேல் மகேசுவரர்; அவருக்குமேற் சதாசிவர்; அவருக்குமேல் விந்து; அதற்குமேல் நாதம்; அதற்குமேற் சத்தி; அதற்குமேல் (சிருஷ்டி திதி சங்காரம் என்னும்) அனைத்துக்கும் காரணரும், தேவநாயகரும், ஞானமூர்த்தியுமாகிய சிவதத்துவதாண்டவேசுவரர். அவரைச் சுகாசனத்திருந்து புஷ்பத்தைக் கையிலே கொண்டு சாதாக்கியதத்துவத்துச் சதாசிவரில் ஆவாகனஞ் செய்க" என்று அந்த மகுடாகமம் கூறுமாற்றால், தாண்டவேசுவரர் சிவதத்துவத்தினர் என்பது பெறப்பட்டது. படவே, இலயசிவனுக்கும் தாண்டவேசுவரனுக்கும் சிவதத்துவமே இடமென்பதறியக்கிடத்தலின் விரோதமுறுமோ எனின், விரோதமுறாது; என்னை ?

சச. [illegible]
[illegible]

லயசிவ சாமீப்யாங்நவதத்வ சமஷ்டி ரூபத்வாச்ச லயசிவே தஸ்யாந்தர்பாவோ ஜ்ஞேயஃ।

சரு. "இலயசிவத்துக்குச் சமீபித்துள்ளாராதலினாலும், பிரமா முதலிய ஒன்பது தத்துவ சமஷ்டி ரூபாயிருத்தலாலும், இலயசிவத்திலே

அந்தத் தாண்டவேசுவரர் அந்தர்ப்பாவமாயுளராக அறியற்பாலர்" என்று கூறப்படுதலாலும் இலயசிவமும் நிருத்தமூர்த்தியும் நிஷ்களத்தால் ஒன்றுகக் கொள்ளப்படுதலினென்க. இன்னும் இதனாலே, மகேசுவரமூர்த்தம் இருபத்தைந்தனுட்பட்ட தாண்டவேசுவரர் வேறு, மகுடாகமங் கூறிய தாண்டவேசுவரர் வேறு என்பதும் தெள்ளிதினுணர்க.

சசு. இந்த மகாருத்திரதாண்டவேசுவரர் பிரமா விஷ்ணு உருத்திரர் என்னும் மூவர்க்கும் துரியமூர்த்தி யென்று கைவல்லியம் தைத்திரீய ஆரணியகமுதலிய சுருதிகள் முழங்கும் உண்மை உணரமாட்டாது, அம்மூவருளொருவராகிய காரியருத்திரர் என்றும், பிரமாவின் நெற்றியினின்று ஓர்கால் தோற்றிய நீலலோகிதருத்திரர் என்றும் உரைத்து இடர்ப்படுவாரை நோக்கியன்றே,

சஎ. "தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர் மூவராய் நின்ற தோரார்" எனவும்,

சஅ. "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை, மூவர்கோ னாய்நின்ற முதல்வன்" எனவும்,

சகூ. "மூந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச், சிந்துரச் சேவடியானை" எனவும்,

௫௦. "அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பா னரனா யழிப்பவனுந் தானே" எனவும் திருவாக்குகள் எழுந்தனவென்று உணர்க.

௫க. காணப்பட்ட காரியமாகிய குடத்தைக்கொண்டு அதனை வனைதற்குரிய காரணனாகிய குலாலன் ஒருவன் உளன் என்று அநுமானித்தல் போன்று, காணப்பட்ட காரியப் பிரபஞ்சத்தைக்கொண்டு அதனைப் படைக்கவல்ல காரணராகிய கடவுள் ஒருவர் சிறப்புவகையால் உளர் எனவும், அந்தக் கடவுள் மகாருத்திரரேயாம் எனவும், பிறப்பிறப்பிற் பட்டுழலும் பிரமா விஷ்ணு முதலாயினோர் அன்னரல்லர் எனவும் மேலே காட்டிய சுருதிப்பிரமாணங்களாலே தெற்றெனவறிக.

## முதலாஞ் சூர்ணிகை.



௫௨. ஜகம் பிறப்பு இருப்பு இறப்பாகிய முத்தொழி லுடையது.

௫௩. (சூர்ணிகைப் பொருள்.) அவன் அவள் அது (ஆண் பெண் அலி, ஒருவன் ஒருத்தி ஒன்று) என்று இவ்வாறு அவயவப் பகுப்புடைத்தாயிருக்கும் காரணத்தானும்,

௫௪. பலபிரகாரமாய் ஜடமாயிருக்கும் காரணத்தானும்,

ருரு. சுட்டி அறியப்படாத முயற்கோடு முதலியன போலப் பொய்ப் பொருள் ஆகாது, மெய்யாகச் சுட்டி அறியப்படும் காரணத்தானும்,

ருசு. பிரபஞ்சமாகிய ஜகம் தோன்றுதலாகிய பிறப்பும், நிலையுறுதலாகிய இருப்பும், அழிதலாகிய இறப்பும் என்னும் முத்தொழில்களையுடையது என்பதாம்.

இதனாற் பிரபஞ்சம் நித்தமாய்க் காணப்படுவதேயாக, அதனை முத்தொழிலுடையதெனல் பொருந்தாதென்று கூறும் மீமாஞ்சகர் மறுக்கப்பட்டார்.

ருஎ. உலகத்துக்கு உளவெனக் கூறும் படைத்தலாதி முத்தொழில்கள் கண்ணுக்குப் புலப்படவில்லையே என்று கூறும் உலகாயதரை மறுத்து அதனை உதாரணங்கொண்டு விளக்குவாம்:—

ருஅ. (வெண்பாப் பொருள்.) (1) பிரபஞ்சத்துக்கு ஸ்திதிகிருத்தியம் நிகழுங்கால், அது படைத்தற்றொழிலையும் சங்காரத்தொழிலையும் துணையாகக்கொண்டே நிகழும்; எங்ஙனமெனின், தாய்தந்தையர் நிலையுற்றிருக்குங்கால் மக்கள் பிறக்கவும், இருக்கவும், இறக்கவும் காணப்படுகின்றமை போலாம்;

(2) அங்ஙனமாயின், ஒன்று பிறக்க, ஒன்று இருக்க, ஒன்று அழிவதன்றி ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழியக் கண்டிலம் எனின்,

(3) கார்ப்பருவமாகிய காலவிசேஷத்தில் ஒவ்வோர் ஜாதிச் செந்துக்கள், செடிகண்முதலியன ஒருங்கே தோற்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் காண்டலானும், பூகம்பம், எரிமலை, ஜலப்பிரவாகம், யுத்தமுதலியவற்றால் ஒருங்கே இருந்தவரும் இருந்தனவுமாகிய எல்லாப் பொருள்களும் ஒருங்கே அழியக் காண்டலானும், அங்ஙனமே என்றைக்காயினும் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் பூதங்களை முதலாகவுடைய அப்பிரபஞ்சத்தொகுதியும் ஒருங்கே அழிதற்குரிய காலம் வருமென்று அக்காட்சி யளவைகள் பற்றி ஆராய்ந்தறிந்துகொள்க.

ருகூ. இரட்டுறமொழிதலால் அவன் அவள் என்பதினாற் பெறப்படும் உயர்திணையும், அது என்பதினாற் பெறப்படும் அஃறிணையும் என்னும் இருதிணைப் பகுதியினையுடைத்தாகிய சொற்பிரபஞ்சக்கூட்டம் இங்ஙனம் அவயவப் பகுப்புடைமையானும், ஜடமுமாய்ப் பலவு மாகலானும், சுட்டி அறியப்படுதலானும், ஸ்திதியின்கண்ணே சிருஷ்டியும் சங்காரமுமாகிய இரண்டு தொழிலும் காணப்படலானும், அது தோன்றி நின்று அழிதலையுடைத்து எனவும் பொருள்கொள்ளப்படும்.

சு௦. வேதமாகிய சொற்பிரபஞ்சம் தோன்றி நின்று அழிதலாகிய முத்தொழிலுடைத்தென்று பெறப்பட்டு வேதம் நித்தியமென்று கூறும் சுருதிகளோடு மாறுபடுமே எனின், மாறுபடாது; என்னே? நித்தியராகிய சிவபெருமானால் அருளப்பட்டமையானும், இறுதிக்காலத்திலே பரமசிவனிடத்து ஒடுங்கிய வேதம் படைப்புக்காலத்தில் முன்போலவே தோன்றுதலானும், அது நித்தியமென்று உபசரித்துக் கூறப்படுதலினாலென்றுணர்க.

## இரண்டாஞ் சூர்ணிகை.



சுக. அது அரனாலே உடையது.

சுஉ. (சூ. பொ.) ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் சிருஷ்டியாதி முத்தொழிலையும் சிவபெருமானாலே உடையது என்பதாம்.

சுங. இல்பொருளாகிய முயலின் கொம்புக்கு இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலத்தினும் உற்பத்தி இன்மையானும், பிரபஞ்சத்துக்கு உற்பத்தியாதி காணப்படலானும் அது சற்காரியப்பொருளே (உள்பொருளே)யாம்; ஆகலின், பிரபஞ்சம் தோன்றி அழியுமேனும், அது இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி அழியுமென்று புத்தர் கூறுவது பொருந்தாது.

சுச. மண்முதலாகிய முதற்காரணத்தினின்று உளவாகிய கடமுதலிய காரியப்பொருள்களுக்குக் குலாலன்முதலிய நிமித்தகாரணராகிய செய்வோரையின்றி வனைதன்முதலிய செய்தொழில்கள் நிகழமாட்டாமைபோல, மாயையாகிய முதற்காரணத்தினின்று உண்டாகும் பிரபஞ்சமாகிய காரியப்பொருளுக்கு நிமித்தகாரணனாகிய ஓர் கருத்தாவின்றிப் படைத்தல் முதலிய செய்தொழில்கள் நிகழமாட்டாவாம்; ஆதலாற் பிரபஞ்சத்திற்கு ஒரு கருத்தாவாகிய செய்வோன் உண்டு என்க.

உள்பொருளாகிய பிரபஞ்சம் தத்தம் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றி அழியும், அதற்கு ஓர் கருத்தா வேண்டாம் என்னும் சாங்கியர் கூற்றுப் பொருந்தாதென்க. இதனாற் போதுவகையாற் பிரபஞ்சத்துக்குக் கர்த்தனொருவன் உளன் என்று சாதிக்கப்பட்டது.

சுரு. (வெ. பொ.) (1) மகாசங்காரகாலத்திலே ஒடுங்கிநின்ற பிரபஞ்சம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய மகாசங்காரகர்த்தாவினின்றே சிருஷ்டிகாலத்தில் உளதாம்;

(2) ஒடுங்கிய உலகம் ஒடுங்கியவாறே நில்லாது மீள உண்டாகவேண்டாம், அங்ஙனம் உண்டாகவேண்டுமாயின் முதற்கண்ணே ஒடுங்காது நிலை

பெறலே சாலும்; அங்ஙனம் நிலைபெறாது ஒடுங்குதலும் மீளத் தோற்றுதலும் எதன்பொருட்டாம்? எனின்,

(3) பிரபஞ்சம் கன்மமலம் பரிபாகமாகும்பொருட்டே ஒடுங்கும் எனவும், ஆணவமலம் பரிபாகமாகும்பொருட்டே மீளத் தோற்றும் எனவும் ஓர்க.

(4) அங்ஙனமாயின், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாய்விட மற்றோர் பிரபஞ்சம் தோன்றும் என்று கூறாது, அந்தப் பிரபஞ்சந்தான் ஒடுங்கிநின்று மீள உளதாம் என்றற்குப் பிரமாணம் யாதோ? எனின், நெல்லானது கமுகாய் முளைக்காது நெல்லாயே முளைத்து நீளுதலும், பாக்கானது நெல்லாய் முளைக்காது கமுகாயே முளைத்து நீளுதலும் போல, எஃது எவ்வாறு நின்று ஒடுங்கியதோ, அஃது அவ்வொடுங்கியவாறே உளதாம் என்னும் நியமமே பிரமாணம் என்பது.

கூசா. குடமுதலிய காரியங்கள் தத்தம் முதற்காரணமாகிய மண்முதலியவற்றில் ஒடுங்குமெனவே கொள்ளப்படுதலின், பிரபஞ்சமாகிய காரியத்துக்கு முதற்காரணமாகிய மூலப்பிரகிருதி மாயையானது நாராயணரது வடிவமேயாதலான், அந்தப் பிரபஞ்சமானது அந்த நாராயணரிடத்து ஒடுங்குமெனக் கொள்ளுதலே பொருத்தமாமன்றி, முதற்காரணத்தின் வேறாகிய நிமித்தகாரணர் எனப்படும் சங்காரகர்த்தாவினிடத்து ஒடுங்குமென்று கூறுதல் பொருந்தாதென்னும் பாஞ்சராத்திரிகள் கூற்றை மறுத்து உதாரணவாயிலாக விளக்குவேம்.

கூஎ. (வெ. பொ.) (1) பிரபஞ்சமானது அந்த மூலப்பிரகிருதி வடிவினராகிய திதிகர்த்தா எனப்படும் நாராயணரிடத்தில் ஒடுங்கியதெனில், மூலப்பிரகிருதிக்கு மேலுள்ள (வித்தியாகலையைச் சார்ந்த) அசுத்தமாயாதத்துவபுவனங்களும், அதற்கு மேற்பட்ட (சாந்தி, சாந்தியதீத கலைகளைச் சார்ந்த) சுத்தமாயாதத்துவபுவனங்களும் அம்மூலப்பிரகிருதி மாயையினால் வியாபிக்கப்படாமையின், அதற்குக் கீழுள்ள ஏகதேசத்தனவாகிய (நிவிர்த்தி, பிரதிஷ்டாகலைகளைச் சார்ந்த) தத்துவபுவனங்கள்மாத்திரம் அம்மூலப்பிரகிருதியில் ஒடுங்குவனவாமன்றி (அசுத்த சுத்த) மாயாகாரியத் தொகுதி முழுவதும் அதில் ஒடுங்காதென்க.

(2) அங்ஙனமாயின், மாயாகாரியத்தொகுதி முழுதும் எங்கே ஒடுங்குமெனில், அது ஸ்திதிகருத்தாவாகிய நாராயணரோடும், சிருஷ்டிகருத்தாவாகிய பிரமாவோடும் தான் தோன்றுதற்குக் காரணமாயுள்ள அந்த மகா சங்காருத்திரதாண்டவேசுவரரிடத்தே ஒடுங்கும் என்பது.

சுஅ. இதனற் பிரமவிஷ்ணுக்களும் அழிவரென்பது பெறப்பட்டது; படவே, ஒடுங்கின மகாசங்காரகருத்தாவினன்றி உற்பத்தியில்லை என்று சிறப்புவகையால் முதற்கடவுளது உண்மை சாதிக்கப்பட்டது.

சுகூ. இதனல் நாராயணரிடத்திற் பிரபஞ்சம் ஒடுங்கும் என்னும் பாஞ்சராத்திரர் கூற்று மறுக்கப்பட்டதாயிற்று.

எ0. மகாசங்காரகர்த்தாவின்மாட்டுப் பிரபஞ்சம் ஒடுங்கி உளதாதலின், இந்த ஒடுங்கிய அவஸ்தையிற் பிரபஞ்சத்தின் அவயவகாரிய சத்தி சமூகமாய், சூக்குமமாய் நிற்பது ஒன்று உண்டு; அதுவே, பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாகிய மாயையாமெனத் தெளிக.

எக. பிரபஞ்சமானது தனக்கு முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்குவதன்றி, நிமித்தகாரணரிடத்தில் ஒடுங்குமெனில் பொருந்தாது என்றும், எஃது எதில் ஒடுங்குகின்றதோ, அஃது அதனில் உற்பத்தியாம் என்னும் முறைமைபற்றி, மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும் அதற்கு ஓர் கருத்தா வேண்டாம் என்றும் சாங்கியர் கூறின், அது மண்ணில் ஒடுங்கிய குடத்தை மண்ணே மீளத் தோற்றுவிக்கும், அதனைத் தோற்றுவித்தற்கு ஓர் குலாலன் வேண்டாம் என்றமைபோலா மாதலின், அக்கூற்றுப் பொருந்தாது; ஆதலின் முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்கிய பிரபஞ்சத்தை நிமித்தகாரணகருத்தாவானவர் அதனினின்று மீளத் தோற்றுவிப்பார் என்பதை உதாரணங்கொண்டு விளக்குதும்.

எஉ. (வெ. பொ.) (1) முளைக்கு ஆதாரம் வித்து; வித்துக்கு ஆதாரம் நிலம்; அதுபோலப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம் மாயை; மாயைக்கு ஆதாரம் சிவசத்தி; அச்சத்தி சிவனுக்கு வேறுதலின்மையின் சிவன் ஆதாரமாதல் தானே பெறப்படும்; அதனை,

𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌖𑌲𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑍍𑌯𑌾𑌕𑌾𑌶 𑌓𑌤𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑍋𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌿।
ஏதஸ்மிந் கல்வக்ஷரே கார்க்யாகாச ஓதச்ச புரோதச்சேதி।

"கார்க்கியே! இந்த அக்ஷரப்பிரம சிவனிலேதான் (அருண்ஞானசத்தி எனப்படும்) ஆகாயம் குறுக்கும் மறுக்குமாய் அமைந்தது" என்னும் பிருகதாரணிய சுருதியானும்,

𑌗𑍁𑌣𑌭𑍂𑌤𑌾 𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑌾𑌶𑍍𑌰𑌯 𑌗𑍁𑌣𑍀 𑌶𑌿𑌵𑌃।
குணபூதா பராசக்திஸ்ததாசிரய குணீ சிவஃ।

"சிவசத்தியார் குணம்; அவர்க்கு ஆசிரயகுணிப்பொருளாயினர் சிவபிரான்" என்னும் காலோத்தர சுருதியானும் உணர்க.

(2) நிலம் குளிர்ந்தபோது வித்து அதனிடத்து உளதாக, அதினின்றும் முளை தோற்றுமாறுபோல, சிவனாது அபின்னசத்தி சங்கற்பித்தபோது, அதனையாதாரமாகக்கொண்ட மாயையினின்று பிரபஞ்சம் தோன்றும்;

(3) அந்த மாயையானது சத்தியின்கண்ணுள்ளதாய்நின்று, அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக அவ்வக் காரியங்களை மாறுபடாது தோற்றுவிக்கும் வன்மையுடையதேயன்றி, அல்லாவிடத்து அதனை உடைய தன்று; அது நிலம் குளிர்ந்தவிடத்து வித்து அதன்கட் கிடந்தன்றி முளையைத் தோற்றுவிக்காத முறைமைபோலாம்;

(4) ஆதலால் மாயையில் ஒடுங்கித் தோற்றிய பிரபஞ்சம் தனக்கு ஆதாரமாய் நின்ற சிவபிரானது சத்தியில் ஒடுங்கித் தோன்றியதேயாம் என்பது.

எங. இதனாற் சிவனாரது ஸ்தூலபஞ்சகிருத்தியம் உரைக்கப்பட்ட வாறு காண்க.

எச. வேட்டைவாளி எனப்படும் குளவியாதற்கு விரும்பும் புழுவுக்கு வேட்டைவாளியானது அப்புழு விரும்பிய வடிவாக அதனை ஆக்குமாறு போல, சிவபெருமான் அவ்வவர் வேண்டிய உருவத்தை அவ்வவர்க்குக் கொடுத்து, அவ்வக்கன்மங்களுக்கு இயைந்த பயனை அவ்வவர்க்கு அருளுவார்.

எரு. ஒரு காரியத்தை, "இஃது இவ்வாருகுக" என்று கருதுதலாகிய சங்கற்ப ஆற்றல்கொண்டு செய்பவரும், கை முதலிய அவயவ ஆற்றல்கொண்டு செய்பவரும் எனக் கர்த்தாக்கள் இருவகைப்படுவர்; சங்கற்பவாற்றலாற் செய்யவல்லவர் சிவபெருமான் ஒருவரேயாம்; அவயவ ஆற்றலாற் செய்பவர் குலாலன்முதலியோராம். சங்கற்பமாத்திரத்தினாற் செய்யும் சிவபெருமானுக்குக் குலாலனாதியோர்போலக் கட்டுண்டு தொடக்குறுதலாதிய குற்றங்கள் எய்தாவாம்; ஆதலால் அக்குற்றங்களுடைய குலாலனாதியோருவமை சிவபெருமானுக்கு ஒருபுடை உவமையாய்ச் செல்வதன்றி முற்றுவமையாகச் செல்லாதென்க.

எசு. (வெ. பொ.) (1) காலமானது இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமுதலியவாக வெவ்வேறு வகைப்பட நின்று தொழிலனைத்துஞ் செய்தும் தான் விகாரமுருது நிற்றல்போல, அவயவ ஆற்றலாற் படைக்காமலும், காக்காமலும், அழிக்காமலும், சங்கற்ப ஆற்றலினாலே அவற்றைச் செய்தும் வருதலால், அநாதிமலமுத்தராகிய சிவபெருமானுக்கு விகாரமுதலிய குற்றங்கள் நேராவாம்;

(2) அவர் பந்தங்களாற் றொடக்குணுதிருத்தல் எவற்றை ஒக்குமோ எனில், ஒருவன் கற்ற நூலிலே உள்ள சொல்லும் பொருளும் அவனுள்ளத்திலே உதிக்குங்கால், அவன் உள்ளமானது அவற்ருற் றொடக்குண்ணுத தன்மையினையும், சொப்பனத்தின்கண்ணே கண்டவைகளைச் சாக்கிரத்தின் கண்ணே நன்கு புலப்படுமாறு அறிந்தவன் அப்பொழுது அக்கனவினுல் தொடக்குண்ணுத தன்மையினையும் ஒக்கும் என்பது.

## மூன்ருஞ் சூர்ணிகை.

எஎ. மற்றிருவரும் முத்தொழிற்படுவோர்கள்.

எஅ. (சூ. பொ.) மகாசங்காரத்தொழில் செய்யும் பெருமான் ஒருவரே பிரபஞ்சததுக்கு முதற்கடவுளாக, பிரமவிஷ்ணுக்களாகிய மற்றிருவரும் அம்மகாசங்காரகருத்தாவினுற் சிருஷ்டியாதி முத்தொழிற்பட்டுச் சுவதந்திரமின்றி நிற்பார் என்பது.

எகூ. ஒன்ருென்ருய்ச் சுட்டி அறிகின்ற சேதனப்பிரபஞ்சமானது அங்ஙனஞ் சுட்டுணர்வின்றி நின்று பிரபஞ்சமனைத்தையும் ஒருங்கு அறிந்து நிற்கும் சங்காரகர்த்தாவின்வழிப் பாதந்திரமாய் நிற்பதன்றிச் சுவதந்திரமாய் நிற்கமாட்டாமையாற் சங்காரகர்த்தா ஒருவரே முதற்கடவுள் ஏனையோர் முதற்கடவுளல்லரென்பது கடைப்பிடிக்க.

அ0. தேர் முதலியவற்றைப் பலர் கூடிச் செய்கின்ருர்; அது 8 "நாராயணர் ஒருவரே இருந்தார்" என்றும், 9 "பிரமா முதற்கண்ணே இருந்தார்" என்றும், 10 "இந்திரனே, உன்னில் மிக்கவன் இல்லை" என்றும், 11 "தேவர்களுக்கெல்லாம் முதன்மையாயுள்ளவன் அக்கினி" என்றும், 12 "இறந்ததும் நிகழ்வதுமாகிய உலகத்துக்கு ஆன்மாவாயுள்ளான் சூரியன்" என்றும் சுருதிகள் கூறுகின்றமையால், தேரினும் பார்க்க அதிவிசித்திரமாயுள்ள பிரபஞ்சத்தைப் படைத்தற்கு நாராயணர், இந்திரன், அக்கினி, சூரியன் முதலாகிய அநேகரையெல்லாம் கடவுளராகக்கொண்டால் என்னை ? என்று அநேகேசுவரவாதிகள் கூறின், அவரெல்லாம் குடமுதலியவற்றுக்குக் குலாலன்முதலாயினேர் உளராதல்போல, பிரபஞ்சத்தின் ஏகதேசத்துக்கு அவாந்தரகாரணராய் இருப்பாரன்றி முதற்கடவுளாகார் என்க.

---

8 ஏகோ ஹவை நாராயண ஆஸீத் (இராமாநுஜசூத்திரபாஷ்யம், உ, உ, ௩கூ.)

ஏகோஹவைநாராயண ஆசீத்।

9 ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே (இருக்குவேதம், க0, கஉக, க.)

ஹிரண்யகர்ப்பஃ சமவர்த்தத அக்ரே।

10 நகிரிந்த்ர த்வதுத்தர꞉ (இருக்குவேதம், ச, ௩0, க.)

நகிரிந்திரதுவதுத்தரஃ।

11 அக்நிரக்ரே ப்ரதமோ தேவதாநாம் (தைத்திரீயப்பிராம்மணம், உ, ச, ௩, உ௩.)

அக்நிரக்ரேபிதமோ தேவதாநாம்।

12 ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஶ்ச (சிவகர்ணுமிர்தம்.)

சூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷச்ச।

அக. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌗𑍍𑌨𑌿𑌮𑌾𑌹𑍁𑌰𑌥𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌃 𑌸 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑍋 𑌗𑌰𑍁𑌤𑍍𑌮𑌾𑌨𑍍 । 𑌏𑌕𑌂 𑌸𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿.................................।
(இருக்கு, க, ககச, சசு.)

இந்திரம் மித்ரம் வருணமக்நிமாகுரதோ திவ்யஃ ஸசுபர்ணோ கருத்மாந்।
ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி...............................।

அஉ. "சத்தாகிய ஒருவரையே இந்திரன், மித்திரன், வருணன், அக்கினி, அழகிய திவ்ய கருடன் என்றும் அநேக பிரகாரமாக (என்றமையால் இயமன், வாயு, நாராயணன், பிரமா என்றும்) அந்தணர் கூறுகின்றார்" என்று இருக்குவேதம் கூறுமாறு, அந்நாராயணர் முதலிய பெயரெல்லாம் சங்கார காரணராகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்குமாதலான், செய்துஞ்செய் வித்தும் எல்லாத்தொழில்கட்கும் கர்த்தாவாய்நிற்கும் முதற்கடவுள் மகாசங் காரகர்த்தாவாகிய உருத்திரரேயாம்;

அங. 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌸𑌨𑍍𑌮𑌹𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

புருஷோவை ருத்ரஃ சந்மஹோநமோநமஃ।

அச. "புருஷராவார் மகானாகிய (13) சத்து எனப்படும் உருத்திரரே; (அவருக்கு) நமஸ்காரம் நமஸ்காரம்" என்னும் சுருதியினால், இருக்குவேதத்திற் சத்து என்று கூறப்பட்டவர் சிவபெருமானேயாம்.

அரு. சுட்டுணர்வுடைய சேதனப்பிரபஞ்சமாகிய பசுக்கள் பலவாயினாற்போல, சுட்டுணர்வின்றிநின்ற சங்காரக்கடவுளும் பலர் எனக்கொண்டால் என்னை? ஒருவரே என்று கொள்ளுதற்குப் பிரமாணம் என்னை? எனிற் கூறுதும்:—

அசு. (வெ. பொ.) (1) பிரமவிஷ்ணுமுதலிய சேதனப்பிரபஞ்சத் தொகுதிக்குட்படாத பரப்பிரமசிவபெருமானாலே அப்பிரபஞ்சத்தொகுதியானது படைக்கப்பட்டு, காக்கப்பட்டு, அப்பரமசிவனிடத்தே சங்காரமுறுதலால், அந்தச் சங்காரக்கடவுள் ஒருவர்தான் பிரபஞ்சத்துக்கு முதற் கடவுளாவாரன்றி ஏனையோர் அவ்வியல்பினராகார் என்க.

(2) காரியமாகிய பிரபஞ்சம் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சமாகிய பசுக்களும் ஆணவாதி பாசத்தினாற் கட்டுண்டு சுட்டுணர்வினவாய் நிற்றலானும், அவற்றை நடாத்துமாறு அவற்றுக்கு வேறாய் ஓர் கடவுள் உளர் என்று உணரப்படும்; படவே, பிரபஞ்சம் விசித்திரமாய்த் தோற்றுதலால் அதனைத் தொழிற்படுத்தும் முதற்கடவுள் முற்றறிவு முற்றுத்தொழில் என்னும் இறைமைக்குணங்களுடையர் என்பதும் பெற்றும்; பெறவே, இவ் விறைமைக்குணங்களையுடைய கடவுளே அமையுமாதலின் மேலும் அவ் வியல்பினராகிய மற்றொரு கடவுள் உளர் எனக் கோடல் மிகை என்னும் குற்றத்தின்பாலதாம்;

(13) இவ்விஷயத்தையுற்று ஸ்ரீநீலகண்டசிவாசாரியசுவாமிகளருளிய சைவ பாஷ்யத்து ஈக்ஷத்தியதிகரணத்திற் காண்க. (1. 1. 5-12.)

அங்ஙனமாயின்,

(3) 𑌤𑌦𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿।

ததா வித்வாந் புண்யபாவே விதூய நிரஞ்சந: பரமம் சாம்யமுபைதி (முண்டகம், ௩. க. ௩.)

(4) 𑌤𑌥𑌾𑌚 𑌶𑌿𑌵𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌧𑌾𑌰𑍍𑌮𑌿𑌕𑌾𑌃।
𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌸𑌾𑌮𑍍𑌯𑌪𑌕𑍍𑌷𑍋 𑌨𑌿𑌰𑍂𑌪𑌿𑌤𑌃॥

ததாசிவவந் முக்தா: சர்வஞ்ஞத்வாதிதார்மிகா:।
இத்யேவம் குணசங்கிராந்தசாம்யபக்ஷோநிரூபித:॥

(5) "வித்துவான் நன்மை தீமை ஒழித்து மலம் நீங்கினவனுப் பரமசாமியத்தை அடைகின்முன்" என்றும், "அங்ஙனமே சிவபெருமானைப்போல முக்தராயினோரும் சர்வஞ்ஞத்துவாதிகுணங்களையுடையராகின்முர்; அங்ஙனம் குணங்கள் ஆன்மாவிற் சங்கிரமிக்கும் என்னும் சாமியபக்ஷம் நிரூபிக்கப்பட்டது" என்றும் வேதத்தினும் சிவாகமத்தினும் காணப்படுதலின், அச்சேதனப்பிரபஞ்சமாகிய பசுக்கள் முதற்கடவுளாவரோ எனின், முத்திதசையினும் அவ்வான்மாக்கள் பலவாற்ருனும் அடிமையேயாம்; எங்ஙனமெனின், இருணீங்கியவிடத்தும் கண்ணுக்குக் காட்சி சூரியனையின்றி அமையாதவாறுபோல, மலம் நீங்கப்பெற்ற முத்திதசையினும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாதல் உடனின்று அறிவிக்குஞ் சிவத்தையின்றி அமையாமையானும், கண் ஸ்படிகம் ஆகாயம்போல, ஆன்மா சார்ந்ததின்வண்ணமாய் நிற்பதன்றிச் சிவபெருமானைப்போலத் தனித்துநிற்கும் ஆற்றலின்மையானும், விளக்கொளியுள் அடங்கிய கண்ணொளிபோல, சிவவியாபகத்துள் அவ்வான்மா வியாப்பியமாய் அடங்கிநிற்கும் இயல்பினதாய், சிவாநுபவம் ஒன்றினுக்கே உரியதாதலானும் அது சிவபெருமானைப்போலப் பஞ்சகிருத்தியஞ் செய்தற்கு உரித்தாதலின்றிப் பலவாற்ருனும் அப்பரம்பொருளுக்கு அடிமையேயாம் என்பது. (இதனுல் ஆன்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்யும் என்னும் சிவசமவாதிகள் மதம் மறுக்கப்பட்டது.)

## முதற் சூத்திரத் தொகைப்பொருள்.



அஎ. பிரபஞ்சம் நித்தப்பொருள், அது முத்தொழிலுடையது எனக்கூறல் பொருந்தாதென்னும் மீமாஞ்சகர் கொள்கையும், பிரபஞ்சத்தின் தோற்றக்கேடுகள் கண்ணுக்குப் புலப்படாமையின் பிரபஞ்சம் நித்தப்பொருளென்னும் உலகாயதர் கொள்கையும், பிரபஞ்சம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி அழியுமென்னும் புத்தர் கொள்கையும், பிரபஞ்சம் உள்பொருளாயின் கருத்தா வேண்டாம் என்னும் சாங்கியர் கொள்கை

யும், ஸ்திதிகர்த்தாவாகிய நாராயணரே முதற்கடவுளாதல்வேண்டுமென்னும் பாஞ்சராத்திரிகள் கொள்கையும், அதிவிசித்திரமாகிய பிரபஞ்சம் ஒருவனாற் செய்யக்கூடாமையின், பிரமாமுதலிய அநேகர் வேண்டுமென்னும் அநேகேசுவரவாதிகள் கொள்கையும், ஆன்மாக்கள் மலம் நீங்கிய முத்திதசையிற் பஞ்சகிருத்தியஞ் செய்வரென்னும் சிவசமவாதிகள் கொள்கையும் மறுத்துச் சித்தாந்தஞ் செய்து, பதிப்பொருளாகிய மகாசங்காரருத்திரசமட்டிரூபசதாசிவதாண்டவேசுவரப்பெருமான் ஒருவரே உளர் என்று சிறப்புவகையால் காட்டப்பட்டதாமென்பது.

## முதலாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.



க. வடமொழிச்சிவஞானபோதம் எத்தனை அதிகாரமுடையது? தென்மொழிச்சிவஞானபோதம் எத்தனை அதிகாரம் உடையது? அவை யாவை? க.

உ. பிரமாணவியலிலே கூறப்படும் முப்பொருள்களுள் முதற்கண்ணே கூறப்படுவது எப்பொருள்? உ.

ரு. வடமொழிச்சூத்திரப்பொருள் யாது? ரு.

ச. தென்மொழிச்சூத்திரப்பொருள் யாது? ரு.

ரு. முதற்சூத்திரக்கருத்துரை யாது? சு.

சு. அதன் பொருள் யாது? எ.

எ. முதற்சூத்திரத்தின் பிண்டப்பொருள் யாது? அ.

அ. சங்காரம் எத்தனை வகைப்படும்? கூ.

கூ. நிவிர்த்திகலாசக்கரத்தில் அடங்கிய தத்துவபுவனங்கள் யாவை? க0.

க0. பிரதிஷ்டாகலாசக்கரத்தில் அடங்கிய தத்துவபுவனங்கள் யாவை? கக.

கக. வித்தியாகலாசக்கரத்தில் அடங்கிய தத்துவபுவனங்கள் யாவை? கஉ.

கஉ. சாந்திகலாசக்கரத்தில் அடங்கிய தத்துவபுவனங்கள் யாவை? கங.

கங. சாந்தியதீதகலாசக்கரத்தில் அடங்கிய தத்துவபுவனங்கள் யாவை? கச.

கச. புவனமுதலியன ஒன்றிலொன்று அடங்கி நிற்றற்கு உவமை யாவை? கரு.

கரு. கலாசக்கரங்கள் ஒன்றுக்குமேலொன்று வியாபித்து நிற்றற்கு உவமைகள் யாவை? கசு.

கசு. எது மகாசங்காரம் எனப்படும்? கஎ.

கஎ. இங்ஙனம் நிவிர்த்தியாதி ஐந்து கலாசக்கரங்கள் கோடற்குரிய சுருதி யாது? கஅ.

கஅ. ஆரங்கள் யாவை? 1.

கசு. சக்கரம் என்பதற்குப் பொருள் என்னை? 2.

உ௦. இந்த ஐந்து சக்கரங்களுள்ளே சமஸ்த புவனங்களும் அடங்கியுள்ளன என்றற்குப் பிரமாணச்சுருதி என்னை? அப்பிரமாணத்தை அச்சுருதியில் எம்மண்டலத்து எச்சூக்தத்து எம் மந்திரங் கூறுகின்றது? கசு.

உக. வேதங்களின் பொருள் எவற்றால் அறியற்பாலது? உ௦.

உஉ. நிவிர்த்திகலை யாது சக்கரம் எனப்படும்? அதனை அதிஷ்டிப்பவர் யாவர்? அவர்க்குரிய வியூகர் யாவர்? அவர் அச்சக்கரத்திற் செய்யுங் கிருத்தியங்கள் யாவை? உக.

உங. பிரதிஷ்டாகலை யாது சக்கரம் எனப்படும்? அதனை அதிஷ்டிப்பவர் யாவர்? அவர்க்கு வியூகர் யாவர்? அவர் அச்சக்கரத்திற் செய்யுங் கிருத்தியங்கள் யாவை? உஉ.

உச. வித்தியாகலை யாது சக்கரம் எனப்படும்? அதனை அதிஷ்டிப்பவர் யாவர்? அவர்க்குரிய வியூகர் யாவர்? அவர் அச்சக்கரத்தில் செய்யுங் கிருத்தியங்கள் யாவை? உங.

உரு. சாந்திகலை யாது சக்கரம் எனப்படும்? அதனை அதிஷ்டிப்பவர் யாவர்? அவர்க்குரிய வியூகர் யாவர்? அவர் அச்சக்கரத்திற் செய்யுங் கிருத்தியங்கள் யாவை? உச.

உசு. சாந்தியதீதகலை யாதுசக்கரம் எனப்படும்? அதனை அதிஷ்டிப்பவர் யாவர்? அவர்க்கு வியூகர் யாவர்? அவர் அச்சக்கரத்திற் செய்யுங் கிருத்தியங்கள் யாவை? உரு.

உஎ. சதாசிவர் எதற்குப் பதிப்பிரபுவாய் உள்ளார்? உரு.

உஅ. அவர் எவ்வடிவினர்? உரு.

உகூ. அவர் மற்றெப் பெயர் பெறுவர்? உசு.

ங௦. அவர் வேறு யாது செய்தற்கு வன்மையுள்ளர்? உசு.

ஙக. ஏனைக் கலாசக்கரங்களிலுள்ள பிரமாமுதலாயினோர்க்கு எல்லாத் தத்துவபுவனங்களையும் சங்கரித்தற்கு வன்மை உண்டா? உசு.

௩உ. கலாதத்துவபுவனங்களோடு பிரமாதி தேவர்களும் சங்கரிக்கப் படுவார்களா? உஎ.

௩௩. அவர்கள் சங்கரிக்கப்படாதொழியின் என்னை? உஎ.

௩௪. சங்காரத்தொழில் செய்ய வல்லார் யாரென்று இருக்குவேதம் கூறுகின்றது? ௩௦.

௩௫. திருச்சிற்றம்பலவரொழிந்து மற்றெவரும் யாதுபற்றி உலக சிருஷ்டியை அறிந்தாரல்லர்? உகூ.

௩௬. இருக்குவேதத்திற் பரமாகாயத்து "அத்தியக்ஷ"ராகக் கூறப் பட்டவரும், மகாசங்காரகர்த்தாவும் ஒருவரா? வேறா? ௩௦.

௩எ. இருக்குவேதத்திற் கூறப்பட்ட பரமவியோமத்தினராகிய அத் தியக்ஷர் பெயர் யாது? ௩௪.

௩அ. உ௫-ம் பிரிவிலே கூறப்பட்ட சமஷ்டிரூபசதாசிவரும், ௩எ-ம் பிரிவிற் கூறப்பட்ட சதாசிவரும் ஒருவரா? வேறா? ௩எ.

௩கூ. சிதாகாயபதியாகிய சதாசிவர் இருக்குவேதத்தில் எங்ஙனம் கூறப்படுகின்றார்? ௩எ.

௪௦. இவர் பரதர் எனப்படுதற்குக் காரணம் என்னை? ௩எ.

௪க. இங்ஙனம் பொருள் கொண்டவர் யாவர்? ௩எ.

௪உ. பரதர் என்று இருக்குவேதத்தில் எங்கே கூறப்படுகின்றது? ௩எ.

௪௩. சிவதத்துவங்கள் ஐந்தும் எந்த உபநிடதத்திற் கூறப்பட்டிருக் கின்றன? ௩கூ.

௪௪. சிவதத்துவம் சத்திதத்துவம் இரண்டும் எவர்க்கு ஸ்தா னங்கள்? ௩கூ.

௪௫. சாதாக்கியதத்துவம் எவர்க்கு ஸ்தானம்? ௩கூ.

௪௬. ஈசுரதத்துவம் சுத்தவித்தியாதத்துவம் இரண்டும் எவர்க்கு ஸ்தானங்கள்? ௩கூ.

௪எ. இங்ஙனம் எங்கே கூறப்பட்டிருக்கின்றது? ௩கூ.

௪அ. மகுடாகமத்திற் பிரமாமுதலிய ஒன்பதின்மரும் எங்ஙனம் கூறப்பட்டிருக்கின்றார்? ௪௩.

௪கூ. சாதாக்கியதத்துவத்துச் சதாசிவனார்க்குமேல் எவரை ஆவாக னஞ் செய்யுமாறு மகுடாகமம் கூறுகின்றது? ௪க.

௫௦. நிஷ்களர் எனப்படும் இலயசிவனாருக்கு இடமாகிய சிவதத்துவத் தைப் பஞ்சகிருத்திய அதிகாரஞ் செய்யும் தாண்டவேசுவர சமஷ்டிரூப சதாசிவனாருக்கு இடமாகக் கூறுதல் பொருத்தமாகுமா? ௪௫.

ருக. மூப்பத்தாறும் தத்துவத்தினராகிய தாண்டவேசுவரர் மகேசுவரர்க்குரிய இருபத்தைந்து மூர்த்தங்களுள் ஒருவராகிய சபாபதியாவாரா? சரு.

ருஉ. இந்த மகாருத்திரர் பிரமாமுதலிய மூவர்க்கும் துரியரென்று எவ்வுபநிடதங்கள் கூறுகின்றன? சசு.

ருங. அதற்குத் திராவிடசுருதிப்பிரமாணங்கள் என்னை? சஎ, சஅ, சகூ, ருo.

ருச. உலகத்தைப் படைத்தவர் என்று எங்ஙனம் அநுமானிக்கப்பட்டது? ருக.

ருரு. முதலாஞ் சூத்திரத்து முதற்சூர்ணிகை யாது? ருஉ.

ருசு. அச்சூர்ணிகைப் பொருள் யாது? ருங.

ருஎ. யாது காரணங்களினால் உலகம் முத்தொழிலுடையது என்று அறியப்படுகின்றது? ருச, ருரு.

ருஅ. அவைபற்றி எக்கொள்கையுடைய மதத்தார் மறுக்கப்பட்டார்? ருசு.

ருகூ. முத்தொழில் கண்ணுக்குப் புலப்படவில்லை என்று கூறுபவர் யாவர்? ருஎ.

சுo. திதிகிருத்தியம் நிகழுங்கால் அதற்குத் துணையாக நிகழும் கிருத்தியங்கள் என்னை? ருஅ, (1).

சுக. உலகம் ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் காணப்படவில்லை என்றமைக்குச் சமாதானம் என்னை? ருஅ, (3).

சுஉ. பொருட்பிரபஞ்சமாத்திரமன்றிச் சொற்பிரபஞ்சமும் முத்தொழிலுடையதா? ருகூ.

சுங. சொற்பிரபஞ்சம் முத்தொழிலுடையதாயின், சொற்பிரபஞ்சத்துட்பட்ட வேதத்தை நித்தியம் என்று கூறற்குச் சமாதானம் என்னை? சுo.

சுச. இரண்டாஞ் சூர்ணிகை யாது? சுக.

சுரு. அதன் பொருள் யாது? சுஉ.

சுசு. யாதுகாரணத்தினால் உலகம் சற்காரியப்பொருளாம்? சுங.

சுஎ. சற்காரியம் என்பதின் பொருள் யாது? சுங.

சுஅ. புத்தர் பிரபஞ்சத்தை எங்ஙனம் கூறுவர்? சுங.

சுகூ. கடத்துக்கு முதற்காரணம் யாது? சுச.

எ0. நிமித்தகாரணன் யாவன்? சூச.

எக. பிரபஞ்சத்துக்கு முதற்காரணம் யாது? சூச.

எஉ. அதனால் யாது சாதிக்கப்பட்டது? சூச.

எங. அதற்கு நிமித்தகாரணர் யாவர்? சூச.

எச. மகாசங்காரகாலத்திற் பிரபஞ்சம் ஒழிந்துபோதற்கும், பின்னர்த் தோற்றுதற்கும் காரணம் என்னை? சூரு, (2), (3).

எரு. முன்னின்ற பிரபஞ்சம் ஒழியின் மற்றோர் பிரபஞ்சம் தோன்றுது அதுவே தோன்றுமென்றற்குப் பிரமாணம் என்னை? சூரு, (4).

எசு. மூலப்பிரகிருதி எவரது வடிவம்? சூசு.

எஎ. நாராயணருக்கு எதுவரையிற் சங்கரிக்க வன்மையுண்டு? சூஎ.

எஅ. அந்த மூலப்பகுதியில் எத்தனை கலாதத்துவபுவனங்கள் அடங்கும்? சூஎ, (1).

எகூ. மாயாகாரியதத்துவபுவனகலைகளெல்லாம் எவரிடத்தில் ஒடுங்கும்? சூஎ, (2).

அ0. சிறப்புவகையால் எவர் முழுமுதற்கடவுளாகக் கொள்ளப்பட்டார்? சூஅ.

அக. அதனால் எவர் மதம் மறுக்கப்பட்டது? சூகூ.

அஉ. மாயை என்றது யாது? எ0.

அங. பிரபஞ்சம் எதிலே ஒடுங்கும்? எக.

அச. மாயையில் ஒடுங்கிய உலத்தை எவர் தோற்றுவிப்பர்? எக.

அரு. மாயையில் ஒடுங்கிய உலகத்தை அம்மாயையே தோற்றுவிக்குமெனல் எதனை ஒக்கும்? எக.

அசு. முளைக்கு ஆதாரம் யாது? வித்துக்கு ஆதாரம் யாது? பிரபஞ்சத்திற்கு ஆதாரம் யாது? மாயைக்கு ஆதாரம் யாது? சிவசத்திக்கு ஆதாரம் யாவர்? அது எதனாற் பெறப்பட்டது? வேறுதலின்மைக்குப் பிரமாணங்கள் எச்சுருதிகளிற் கூறப்பட்டன? அவை எவை? எஉ, (1).

அஎ. வித்து எதன்கட் கிடக்க எப்போது முளை தோன்றும்? எஉ, (2).

அஅ. மாயை எதன்கட் கிடக்க எப்போது பிரபஞ்சம் தோன்றும்? எஉ, (1), (2).

அகூ. மாயை எவ்வியல்பினது? அதற்கு உவமை யாது? எஉ, (3).

கூ0. பிரபஞ்சம் மாயையில் ஒடுங்கித் தோன்றியதேனும் அது வாஸ்தவத்தில் எங்கே தோன்றி ஒடுங்கியது? எஉ, (4).

கூக. இதனாற் சிவபிரானது எந்தக் கிருத்தியம் கூறப்பட்டது? எஙு.

கூஉ. புழு எதனை விரும்புகின்றது? எச.

கூஙு. அப்புழுவுக்கு விரும்பிய வடிவத்தைக் கொடுப்பது யாது? எச.

கூச. அங்ஙனம் சிவபெருமான் ஆன்மாக்கள்பொருட்டு யாது செய்கின்றார்? எச.

கூரு. கர்த்தாக்கள் எத்தனை வகைப்படுவர்? எரு.

கூசு. குலாலன் எதைக்கொண்டு குடத்தைச் செய்கின்றான்? எரு.

கூஎ. சிவபெருமான் பிரபஞ்சத்தை எங்ஙனம் செய்கின்றார்? எரு.

கூஅ. குலாலனுதியோர்க்குப் போலச் சிவபெருமானுக்கு எவ்வியல்பினவாகிய குற்றங்கள் நேரா? எரு.

கூகூ. சிவபெருமான் எதுபோல விகாரமுறார்? எசு, (1).

க00. அவர் பந்தத்தினாற் றொடக்குறார் என்றமைக்குக் காட்டிய உதாரணங்கள் எவை? எசு, (2).

க0க. மூன்றாஞ் சூர்ணிகை யாது? எஎ.

க0உ. அதன் பொருள் யாது? எஅ.

க0ஙு. சேதனப்பிரபஞ்சம் எவ்வியல்பினது? எகூ.

க0ச. சேதனப்பிரபஞ்சம் யார் வழிப் பரதந்திரமாய் நிற்கின்றது? எகூ.

க0ரு. தேர்முதலிவற்றுக்குப்போல பிரபஞ்சத்தைப் படைத்தற்குக் கடவுளர் பலர் உளர் எனக் கோடல் கூடாதென்றமைக்கும் பிரமாணம் யாது? அ0.

க0சு. நாராயணர், பிரமா, இந்திரன், அக்கினி, சூரியன் என்போர் தலைவர்களாக எங்கே கூறப்பட்டார்? அ0. 8, 9, 10, 11.

க0எ. பலரைக் கடவுளாகக் கொள்பவர்க்கு யாது பெயர்? அ0.

க0அ. நாராயணர்முதலிய பெயர்களெல்லாம் எவரைச் சுட்டுகின்றன? அஉ.

க0கூ. இருக்குவேதத்திற சத்தெனப்பட்டவர் யாவர்? அச.

கக0. சத்தைப்பற்றி நீலகண்டபாஷ்யகாரர் எங்கே கூறியிருக்கின்றார்? 13.

ககக. சுட்டுணர்வுடைய பசுக்கள் பலவாயினாற்போல, சுட்டுணர்வின்றி நின்ற சங்காரக்கடவுளும் பலர் என்றால் என்னை? அசு, (1.)

ககஉ. இறைமைக்குணங்கள் யாவை? அசு, (2.)

ககங. இறைமைக்குணங்களையுடைய கடவுளே பிரபஞ்சத்துக்குக் கர்த்தாவாயமைய, மற்றொருவரைக் கடவுளாகக் கொள்ளலாமா? அசு, (2.)

ககச. ஆன்மாக்கள் முத்திதசையில் இறைமைக்குணங்களை யெய்துவரெனக் கூறும் சாமானிய சுருதி யாது? விசேட சுருதி யாது? அசு, (3) (4.)

ககரு. ஆன்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்யும் என்னும் எவர் மதம் மறுக்கப்பட்டது? அசு, (5.)

ககசு. முதலாஞ் சூத்திரத் தொகைப்பொருள் யாது? அஎ.

---

## பொதுவதிகாரம்.

### பாசப்பிரமாணவியல்.

## இரண்டாஞ் சூத்திரம்.



க. அந்யஸ்ஸந் வ்யாப்திதோ நந்ய: கர்த்தா கர்மாநுஸாரத:|
கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயா ஸமவேதயா||

அந்ய: சந் வியாப்திதோ நந்ய: கர்த்தா கர்மாநு சாரத:।
கரோதி சம்சிருதிம் பும்ஸா மாஞ்ஞயா சமவேதயா ॥

உ. (இ-ள்.) கர்த்தா = மகாசங்காரக் கடவுளாகிய சிவபிரான்; அந்ய: ஸந் = (கண்ணும் ஒளியும்போல) வேறாயினும்; வ்யாப்தித: (ஸந்) = (கலப்பினால் உடல் உயிர் போல) வியாபகத்தினால் உயிர்களேயாய்; அநந்ய: (ஸந்) = (உயிர்க்கு உயிராதற் றன்மையினால்) கண்ணொளியும் ஆன்மபோதமும் போல உடனுமாய் (நின்று); ஆஜ்ஞயா ஸமவேதயா = (தமது) ஆணை எனப் பெயரிய தம்மைவிட்டு நீங்காத சிற்சத்தினாலே; பும்ஸாம் = ஆன்மாக்களுக்கு; கர்மாநுஸாரத: = அவற்றின் இருவினைகளுக்கு ஈடாக; ஸம்ஸ்ருதிம் கரோதி = (சிருஷ்டி முதலிய) கிருத்தியங்கள் செய்கின்றார்.

ங. அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

சு. (இ-ள்.) அவையே ஆய்=(சிவபிரான்) உயிர்களேயாய்; தானே ஆய்=(உயிர்களுக்கு) வேறுமாய்; அவையே தானே ஆய் =(உயிர்க்குயிராதற் றன்மையால்) உடனுமாய்; இருவினையிற் போக்கு வரவு புரிய =(தமது ஆஞ்ஞா சத்தியினால் ஆன்மாக்கள்) இருவினை காரணமாக இறத்தலையும் பிறத்தலையுஞ் செய்ய; ஆணையின் நீக்கமின்றி அன்றே நிற்கும் = (தமது சமவேத) ஆஞ்ஞா சத்தியினின்றும் பிரிப்பின்றி அநாதி தொடுத்து நின்றருளுவர் எ-று.

ரு. (சூ. க. ரை.) * புநருற்பவம் வருமாறு உணர்த்துத னுதலிற்று.

சு. (க. பொ.) மகாசங்காரருத்திரரினின்றும் பிரபஞ்சம் மீள உளதாமென்று வகுத்து உணர்த்துதல்வாயிலாக, நிமித்தகாரணராகிய சிவபெருமானுக்குச் சிற்சத்தியாகிய துணைக்காரணமுதலிய உள என்று உணர்த்துகின்றது.

எ. (சூ. பி. பொ.) மேலைச் சூத்திரத்தினால் உலகத்துக்கு நிமித்தகாரணரெனப் பெறப்பட்ட பதியாகிய சிவபெருமான்,

(1) கலப்பினால் உடல் உயிர்போல அவ்வுயிர்களேயாய்,

(2) பொருட்டன்மையாற் கண்ணின் ஞாயிறுபோல அவ்வுயிர்களின் வேறுமாய்,

(3) உயிர்க்குயிராதற் றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம் போல உடனுமாய் நின்று, ஆணை எனப்படும் தமது சிற்சத்தியினால் வரும் நல்வினை தீவினைகளால் அவ்வான்மாக்கள் இறப்பினையும் பிறப்பினையும் எய்துமாறு, தாம் அந்தச் சிற்சத்தியினின்று பிரியாது சமவேதமாய் நிற்பர்.

அ. இதனாற் சங்காரகாரணராகிய சிவபெருமானது தடஸ்தலக்ஷணம் எனப்படும் பொதுவியல்பு கூறப்பட்டதாயிற்று.

## முதலாஞ் சூர்ணிகை.

கூ. அரன் உயிர்களில் இரண்டற நிற்பன்.

க0. (சூ. பொ.) (மேலைச் சூத்திரத்தில் முதற் கடவுள் அன்றென நீக்கப்பட்ட) சேதனப்பிரபஞ்சமாகிய ஆன்மாக்களும் முதல்வரும் பொன்னும் பணியும்போல அபேதமாமென்று மாயாவாதிகளும், இருளும் ஒளியும் போலப் பேதமென்று மத்துவரும், சொல்லும் பொருளும்போலப் பேதாபேதம் என்று பாஞ்சராத்திரிகளும் கூறுதல் பொருத்தமாகாதென்பது போதர, ஆன்மாக்கள் பலவற்றினுஞ் சிவபெருமான் றுனேயாய் நிற்பர் என்பது கூறப்படுகின்றது.

* புநருற்பவம் — மீளச் சிருஷ்டித்தல்.

கக. ஒருவன் விஷயத்தை நோக்குங்கால் ஆன்மபோதமானது கண்ணொளி என்றும் தான் என்றும் வேறுபடாது உடனாய் நின்று நோக்குமாறு போல, சிவபெருமான் மீளச் சிருஷ்டிக்குங்கால் ஆன்மாக்களோடு உடனாய் நின்று செய்வரென்பது பெறப்படும்.

கஉ. 𑌤𑌤𑍍𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑌲𑍍𑌪𑌤𑌾।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌨𑌞𑌰𑍍𑌥𑌾𑌃 𑌷𑌟𑍍𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃॥

தத்சாதிருச்ய மபாவச்ச ததங்யத்வம் ததல்பதா।
அபிராசஸ்தம் நிரோதச்ச நஞர்த்தா: ஷட்பிரகீர்த்திதா:॥

கங. "நஞ்ஞுக்கு சாமியம், இன்மை, பேதம், சிறுமை, இழிவு, மறுதலை என்னும் ஆறு பொருள்கள்" உண்டென்று சப்தகற்பத்ருமம் கூறுகின்றது. இந்த ஆறு பொருள்களுள் ஏகான்மவாதிகளால் இன்மைப்பொருளும், மத்துவர்களாற் பேதப்பொருளும், சிவாத்துவிதிகளாலும் சைவசித்தாந்திகளாலும் சாமியப்பொருளும் கொள்ளப்படுகின்றன. சாதிருசியம் சாமியம் என்பன ஒரு பொருட்சொற்கள்; சாமியப்பொருளே அன்மைப் பொருளிற் செல்வதாம் என்க. அவ்வுண்மை,

கச. 𑌨𑌞𑌿𑌵𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑌨𑍍𑌯𑌸𑌦𑍃𑌶𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍇 𑌤𑌥𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌗𑌤𑌿𑌃।
நஞிவயுக்த மங்ய சதிருசாதிகரணே ததாஹ்யர்த்தகதி:।

என்னும் பரிபாஷேந்துசேகர இலக்கணத்தினால் உணரப்படுகின்றது.

கரு. இந்தப் பரிபாஷையின் தாற்பரியம் வருமாறு:—"அநசுவத்தைக் கொணர்க" என்று தேவதத்தனுக்கு யஞ்ஞதத்தன் ஆஞ்ஞாபிக்குங்கால், தேவதத்தன் (அநசுவம்) குதிரை யல்லாதது மண்கட்டியுமாகலாம் என்று கொண்டு, அம்மண்கட்டியை எடுத்துக் கொடுப்பானல்லன்; பின் குதிரை யல்லாததாயும் (பேதமாயும்), குதிரையின் தோற்றமுதலியன ஒருவாறு ஒப்பதாயும் (அபேதமாயும்) உள்ள கோவேறுகழுதையைப் பிடித்துக்கொணர்ந்து விடுவன் எனப் பொருள் கொள்ளப்படும் என்று கூறப்படுகின்றது. இங்ஙனம் வேறுயும், வேறன்மையாயும் இருக்கும் அன்மைப்பொருளே சைவசித்தாந்திகளால் அத்துவிதத்திலுள்ள அகாரத்துக்குப் பொருளாகக் கொள்ளப்படுகின்றது. இந்த ஆறு பொருள்களுள் முதற்கணின்ற இந்தச் சாதிருசியமாகிய அன்மைப்பொருளையே பதஞ்சலி மகாபாஷ்யகாரரும் உ-ம் அத்தியாயத்து, உ-ம் பாதத்து, க-ம் ஆந்நிகத்து, கூ-ம் சூத்திரத்தில் எடுத்தாண்டிருக்கின்றார். மேலும், இந்தச் சாமியப்பொருளே (க-ம் சூத்திரத்து அகூ, (3)-ம் பிரிவிற் கண்டவாறு) முண்டகோபநிடதத்தினும் கொள்ளப்பட்டிருக்கின்றது.

௧௬. 𑌏𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌯 𑌤𑌸𑍍𑌥𑍁𑌃।

ஏகோ ருத்ரோ நதுவிதீயாய தஸ்து꞉ ।

௧௭. "உருத்திரர் ஒருவரே; அவர் அத்துவிதீயராய் இருந்தார்" என்று யசுர்வேத (க. அ. சூ.) மும், சுவேதாசுவதரோபநிடத (௩. ௨.) மும் கூறுகின் றன. இங்கே நஞ் என்பதிலுள்ள ஞகாரம் நீங்கிவிட, நகாரம் நின்றது. இந்த யசுர்வேதத்திற் காணப்பட்ட சுருதியை ஆதாரமாகக்கொண்டே,

௧௮. 𑌸𑌦𑍇𑌵 𑌸𑍌𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍। 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍।

சதேவ செளம்யேத மக்ர ஆசீத்। ஏகமேவாத்விதீயம்।

௧௯. "செளமிய! ஏகமாகிய சத்துத்தானே முதற்கண் அத்துவிதீய மாய் இருந்தது" என்று சாந்தோக்கியோபநிடதம் கூறுகின்றது. இங்கே சத் எனப்பட்டவரும், உருத்திரர் எனப்பட்டவரும் ஒருவராமெனக்கொண்டு உரைக்கப்பட்டிருப்பதை முதலாஞ் சூத்திரத்து, அசு-ம் பிரிவிற் காண்க.

௨௦. யசுர்வேதத்தினும் சுவேதாசுவதரத்தினும் நதுவிதீயாய (𑌨𑌦𑍍𑌵𑌿𑌤𑍀 𑌯𑌾𑌯) என்னும் மொழியின்கண்வந்த (நகர) உயிர்மெய்யில் நின்ற (நகர) ஒற்று நீங்கிவிட, அகரம் நின்றது; நகாமும் அகரமும் ஒரு பொருளுடைய னவேயாம்.

௨௧. அகரம் இன்மைப்பொருள்பற்றி வருங்கால், அபோசனம் என் பது உணவினபாவம் (உபவாசம்) எனப் பொருள்படும்.

௨௨. அகரம் மறுதலைப்பொருள்பற்றி வருங்கால், அதர்மம் என்பது தருமத்துக்கு மறுதலையாகிய பாவம் எனப் பொருள்படும்.

௨௩. துவிதம் என்னும் எண்ணுப்பெயருக்குமுன் (அகரம்) எய்தி, அத்துவிதம் என நிற்குங்கால், அது சாமியமாகிய அன்மைப்பொருளையே உணர்த்திப் பொதுமையில் நிற்கும்; இந்த எண்ணுப்பெயர்மேல் வந்த அக ரம் "அபோசனம்" "அதர்மம்" என்பவற்றிற் போந்த அகரம்போல, இன் மைப்பொருளையேனும் மறுதலைப்பொருளையேனும் உணர்த்தி நிற்றல் வழக் கத்தின்கண்ணே இல்லை; எங்ஙனமெனிற் கூறுதும்:—

௨௪. ஒருவன் தன்னிடத்திலே மாம்பழம் இரண்டு இல்லை என்றால், அவனிடத்தில் மாம்பழம் இல்லை என்றும் பொருள்படும்; இன்றேல் ஒரு மாம்பழந்தானுண்டு என்றும் பொருள்படும்; இன்றேல் அவனிடத்தில் இரண் டுக்கு மேற்பட்ட மூன்று நான்குமுதலிய அநேக மாம்பழங்கள் உண்டு என்றும் பொருள்படும். ஆகலான், மாம்பழம் இரண்டில்லை என்றால், மாம் பழம் ஒன்றுதான் உண்டு என்று வரைவுபடுத்திப் பொருள் கோடற்கிடனின் றாம். ஆதலின் மாயாவாதிகள் அத்துவிதம் என்றதற்கு இன்மைப்பொருள்

கூறி ஒன்றேன்பதும், மத்துவர் மறுதலைப்பொருள் கூறி இரண்டு என்பபதும் ஒவ்வாவாம்; அத்துவிதம் என்ற சொல்மாத்திரையானே ஒரு பொருளென்று பொருள் கொள்ளுதல் பொருத்தமுடைத்தன்று; தானே தன்னை ஒன்றெனக் கருதவேண்டாமையின், அவ்வாறு கருதும் பொருள் வேறுண்டென்று பெறப்படுகின்றமையினாலாம். ஆதலால் அத்துவிதம் என்னும் மொழிதானே வேறு காரணம் வேண்டாது வேறன்மையை உணர்த்தி நிற்கும்.

உரு. சிவபெருமான் ஆன்மாக்களேயாய் நிற்குமியல்பை உணர்த்துதற்கு உதாரணம் வருமாறு:—

உசூ. (வெ. பொ.) (1) ஆன்மாவானது உடம்பினையும் ஐம்பொறி முதலியவற்றையும் கைக்கொண்டு நிற்க, மற்றொருவன் உடம்புக்கிட்ட பெயராற் சாத்தா! கொற்றா! என்று அழைக்குமிடத்து, தான் "என்னை" என்று நிற்றல் காணப்படலானும், இருவர் கைகோத்துக்கொண்டு நிற்க, அவருள்ளே அழைக்கப்பட்டோனேயன்றி மற்றவன் "என்னே" என்றல் உலகத்தின் கண் இல்லாமையானும், அவ்வாறன்றி உடம்பின் பெயர்கொண்டு அழைத்த போது உயிர் "என்னே" என நிற்றற்குக் காரணம் அவ்வான்மாவானது உடம்பெனத் தானென வேற்றுமையுறாது அபேதமாய் நின்றமையேயாம்;

(2) அதுபோலச் சிவபெருமான் ஆன்மாக்களிடத்து வேறுபடாது இயைந்து நிற்பர்; அங்ஙனம் இயைந்தவிடத்தும், ஆன்மா ஆன்மாவே; உடல் உடலே; ஆன்மா உடலாகாது; உடல் ஆன்மாவாகாது; அவ்வாறாயினும் ஆன்மா உடலாயும், அதற்கு வேறாயும் நிற்கும்; உடம்பு அங்ஙனம் நில்லாது; அதுபோல,

(3) சிவபெருமான் சிவபெருமானே; ஆன்மா ஆன்மாவே; சிவபெருமான் ஆன்மா ஆகார்; ஆன்மா சிவபெருமான் ஆகமாட்டாது; அவ்வாறாயினும், சிவபெருமான் ஆன்மாவாயும் அதனின் வேறாயும் நிற்பர்; ஆன்மா அங்ஙனம் நிற்கமாட்டாது என்பது.

உஎ. இதனால் ஆன்மாவும் சிவனும் அபேதமாயும், பேதமாயும் நிற்றற்கு அநுபவம் காட்டப்பட்டது.

உஅ. (உ-ஞ் சூத்திரத்து கசூ, கஅ-ம் பிரிவுகளிற் கூறப்பட்ட) ஏகம் அத்துவிதீயம் என்னும் இரண்டனுள்ளே, ஏகம் என்பதின் பொருள் உதாரணவாயிலாகக் கூறப்படுகின்றது:—

உகூ. (வெ. பொ.) (1) வேதமானது ஏகம் என்று கூறினமைக்குப் பொருள் ஒன்றேன்பதேயாம், வேறு பொருள்படாது;

(2) அதற்குத் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்றே, இரண்டில்லை என்பதாம்;

(3) இங்ஙனம் பதிப்பொருள் ஒன்றென்று கூறுபவன் அப்பதிப்பொருளுக்கு வேறாகிய பசு எனப்படும் ஆன்மாவாம்;

(4) பதியும் அறிவுடைப்பொருளேயாக, ஆன்மாவும் அறிவுடைப் பொருளேயாக, (ஆன்மாவைப் பதியாகிய பிரமமென்று மாயாவாதிகள் கொள்ளுமாறு உரையாது), அவ்வான்மாவைப் பசு என்றது எதனாலெனின்,

(5) அவ்வான்மா ஆணவமலத்தோடு கட்டுண்டு நின்றமையாற் பசு எனப்படும்;

(6) இங்ஙனம் பதிக்கும் பசுவுக்கும் வேற்றுமை கூறின், பிரமமில்லையேல் ஒரு பொருளுமின்றாம் என்னும் சுருதியின் தாற்பரியம் என்னை எனில்,

(7) 𑌚𑌰𑌾𑌚𑌰𑌾𑌦𑌿 𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌂 𑌶𑌿𑌵𑍈𑌕𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌯𑌾 𑌤𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌾 𑌮𑌕𑌾𑌰𑌵𑌤𑍍॥

சராசராதி ஜந்தூநாம் சிவைகஃ பிராண உச்யதே।
தம் விநா ந பிரவிருத்திஃ ஸ்யாதக்ஷராணு மகாரவத்॥

(8) "அகாவுயிரில்லையேல் (ஏனைய) உயிரெழுத்து மெய்யெழுத்துக்களுக்கு இயக்கமில்லையாம்" (என்னும் முறைபற்றி),

(9) "சேதனாசேதனப் பிரபஞ்சத்துக்குச் சிவபெருமான் பிராணன் எனப்படுகின்றமையின், (பிரமமாகிய) அவரையின்றி அவற்றுக்கு இயக்கம் இன்றென்பதேயாம்".

௯௦. இதனாற் சிவபெருமான் ஆன்மாக்களுக்கு வேறாயும், வேறன்மையாயும் நிற்றற்கு அநுபவம் காட்டப்பட்டது.

௯௧. இனி அத்துவிதம் என்பதின் பொருள் உதாரணவாயிலாகக் கூறப்படுகின்றது:—

௯௨. (வெ. பொ.) பண்ணும் அதனின் வேறாக எண்ணப்படும் இசையும் போன்றும், பழமும் அதனின் வேறாய் எண்ணப்படும் சுவையும் போன்றும், சர்வவியாபகராகிய சிவபெருமானது திருவருள் ஆன்மாக்களிடத்தில் வேற்றுமையின்றி நிற்கும்; இதனையுற்றே வேதம் அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும் என்பது.

ஏகராகிய பதியாய் நின்ற பரப்பிரமசிவபிரான் ஆன்மாக்கண்மாட்டு வேறன்றி நிற்றலான், ஏகமேவாத்துவிதீயம் (𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂) என்று சுருதி கூறியதாம் என்க.

௯௩. இசையாகிய குணமும் பண்ணாகிய குணியும், சுவையாகிய குணமும் பழமாகிய குணியும் வியாப்பிய வியாபகமாயிருக்கும் ஒப்புமைமாத்

திரையாயிருத்தல் நோக்கியன்றே, ஆன்மாக்கள் சிவபிரானில் வியாப்பிய வியாபகமாயிருக்கும் முறைபற்றி, அக்குணகுணிகள் உவமையாக எடுத்தாளப்பட்டன. குணகுணிகள்போல ஆன்மாக்களும் சிவபெருமானும் உடனாதற்கும், அவ்வாறு உடனாகாமைக்கும் அநுபவம் கூறப்பட்டது.

ருச. இரண்டாஞ் சூத்திரத்து உகூ-ம் பிரிவில் ஆன்மாவும் சிவமும் வேறன்று என்றும், உகூ-ம் பிரிவில் வேறு என்றும் ருரு-ம் பிரிவில் உடனாய் என்றும் தனித்தனி வெவ்வேறு உவமைகள் எடுத்துக்காட்டப்பட்டன வன்றோ; இப்போது அம்மூன்றும் ஓர் உவமைக்கண் நிகழுமாறு காட்டப்படுகின்றது:—

ருரு. (வெ. பொ.) (1) உருக்கிய அரக்கோடு செறிந்த கற்பொடியானது,

(2) அவ்வரக்கினோடு ஒன்றாய் (பேதமாய்), ஒருங்கியைந்து (அபேதமாய்), நீக்கமின்றி (உடனாய்) நின்றாற்போல,

சிவபெருமான் ஆன்மாக்கண்மாட்டு,

(3) ஒருங்கு கூடி (அபேதமாய்), நின்று (பேதமாய்), நீக்கமின்றியுடனாதலால்,

(4) (கலப்பினால் அபேதமாய்) உலகேயாம், பொருட்டன்மையாற் பேதமாய்த்) தானேயாம், (உயிர்க்குயிராதற் றன்மையால் உடனேயாய்த்) தானே உலகேயாம் என்று கூறப்பட்டது; *

ருசூ. மேலே கூறிய பொருள் ஞானாவரணபாஷ்யத்தில்,

(ருஎ) 𑌲𑌾𑌕𑍍𑌷𑌾𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌂 𑌶𑌿𑌲𑌾𑌚𑍂𑌰𑍍𑌣𑌂 𑌯𑌥𑌾 𑌤𑌨𑍍𑌮𑌯𑌤𑌾𑌂 𑌗𑌤𑌮𑍍।
𑌤𑌥𑌾 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌶𑌂 𑌵𑌦𑌾𑌮𑍍𑌯𑍇𑌨𑌂 𑌜𑌗𑌨𑍍𑌮𑌯𑌮𑍍॥

லாக்ஷாசிலிஷ்டம் சிலாசூர்ணம் யதா தந்மயதாம் கதம்।
ததா ஸ்வாத்மநி திருஷ்ட்வேசம் வதாம்யேநம் ஜகந்மயம்॥

ருஅ. "அரக்கினோடு சேர்ந்த கற்சூர்ணமானது அரக்கினியல்பை அடைந்தவாறுபோல, எனது ஆன்மாவிற் சிவபெருமானைக் கண்டு, இவரை உலகமேயாயுள்ளார் என்று கூறுகின்றேன்" என்றும்,

ருகூ. "சடையார் புனலுடையான்" என்றற் றொடக்கத்த திருவீழிமிழலைத் தேவாரத்திருப்பதிகத்தில், "எட்டுத்திசை தானாய், வேறாயுடனானிடம் வீழிம்மிழலையே" என்றும்,

---

* இந்த வெண்பாப்பொருளின் எஞ்சிய பாகத்தை சஅ, (5)-ம் பிரிவிற் காண்க.

௪௦. "புறச்சமயத்தவர்க் கிருளாய்" என்றற் றொடக்கத்துச் சிவப்பிர காசச் செய்யுளில், "பொற்பணிபோலபேதப்பிறப்பிலதா யிருள்வெளி போற் பேதமுஞ் சொற்பொருள்போற் பேதாபேதமுமின்றிப் பெருநூல் சொன்ன வறத்திறனல் விளைவதாய், உடலுயிர், கண்ணருக்கன், அறி வொளிபோற் பிரிவறு மத்துவிதமாகும்" என்றும் காணப்படுகின்றமையால் ௧௦-ம் பிரிவிற் கூறப்பட்ட மதத்தினர் கூற்று மறுக்கப்பட்டவாறும், சைவ சித்தாந்திகள் கொள்கை நிறுத்தப்பட்டவாறும் காண்க.

௪௧. அஹம் மநுரபவம் ஸூர்யஶ்சாஹம் கக்ஷீவா ந்ருஷிரஸ்மி விப்ர:।
அஹம் குத்ஸமார்ஜுநேயம் ந்ய்ருஞ்ஜேஹம் கவிருஶநா பஶ்யதா மா॥

அஹம் மநுரபவம் சூர்யச்சாஹம் கக்ஷீவா ந்ருஷிரஸ்மி விப்ரஃ।
அஹம்குத்ஸமார்ஜுநேயங்ந்யிருஞ்ஜேஹம் கவிருசநா பச்யதா மா॥

(பதச்சேதம்) அஹம், மநு:, அபவம், ஸூர்ய:, ச, அஹம், கக்ஷீவாந், ருஷி:, அஸ்மி, விப்ர:, அஹம், குத்ஸம், ஆர்ஜுநேயம், நி, ருஞ்ஜே, அஹம், கவி:, உஶநா, பஶ்யதா, மா.

௪௨. "நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன், நான் கக்ஷீவான் என்னும் இருஷியாயினேன், விப்பிரனுகின்றேன், அர்ஜுநிகுமாரனுகிய குற் சருக்கு அருள்பாலிக்கின்றேன், மேதாவியாகிய உசனராயுள்ளேன், என்னைப் பாருங்கள்" என்று இருக்குவேதத்து, ௪-ம் மண்டலத்து, உ௬-ம் சூக்தத்து ௧-ம் மந்திரத்தினும்,

௪௩. ருஷிர் வாமதேவ: ப்ரதிபேதேஹம் மநுரபவம் ஸூர்யஶ்சேதி।
ய ஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மி ஸ இதம் ஸர்வம் பவதி।

ருஷிர் வாமதேவஃ பிரதிபேதேஹம் மநுரபவம் சூர்யச்சேதி।
ய ஏவம் வேதாஹம் பிரம்மாஸ்மி ச இதம் சர்வம் பவதி।

௪௪. "நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன் என்றும், நான் பிரமமாயிருக்கின்றேன் என்று எவன் அறிகின்றுனே அவன் இவையெல் லாம் ஆகின்றுன் என்றும், வாமதேவரிஷி கூறினர் என்று பிருகதாரணியத்து, ௩-ம் அத்தியாயத்து, ௪-ம் பிராம்மணத்து, ௧௦-ம் மந்திரத்தினும், சிவோகம் பாவனையுற்று வாமதேவமுனிவர் யானே உலகெலாமாயினேன் என்று கூறுதலானும்,

௪௫. மயா வ்யாப்தமிதம் ஸர்வம் த்ருஶ்யாத்ருஶ்யம் சராசரம்।
அஹமேவ ஜகந்நாதோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே।
அஹமேவ பரம்ப்ரஹ்ம அஹம் ஜ்ஞேயமநக்ஷரம்।
மயா வியாப்தமிதம் சர்வம் திருச்யாதிருச்யம் சராசரம்।
அஹமேவ ஜகந்நாதோ மத்தஸ் சர்வம் பிரவர்த்ததே।
அஹமேவ பரம்பிரம்ம அஹம் ஞேயமநக்ஷரம்।

௪௬. "காணப்படுவதும் காணப்படாததுமாகிய ஈதெல்லாம் என்னால் வியாபிக்கப்பட்டன; நானே உலகத்துக்கு நாதன், என்னிலிருந்தே அனைத்தும் பிரவர்த்திக்கின்றன; நானே பிரமம், நானே அநக்ஷரமாக அறியற்பாலன்" என்று சர்வஞ்ஞானோத்தரம் ஆன்மா எல்லாமாய், அல்லனுமாய், உடனுமாய் நிற்குமென உயிர்கண்மேல் வைத்துக் கூறுதலானும்,

௪௭. ஆன்மாக்களுஞ் சிவபெருமானைப்போல அபேதமாயும், பேதமாயும், உடனாயும் நிற்கும் சிவனது இலக்கணத்தை யுடையனவோ எனின், அன்று;

௪௮. (5) பாசக்கூட்டத்தினின்று நீங்கித் தனியாய் நின்ற ஆன்மாவினகத்துச் சோகம்பாவனை எனப்படும் சிவோகம்பாவனையினாற் சிவபெருமான் புகுந்து வேற்றுமையின்றித் தோற்றுதலான், இந்த முத்திநிலையில் யானே உலகெலாமாயினேன் என்று கூற நேர்ந்ததாம். அதுபற்றி ஆன்மாக்கள் அவ்வாறுகமாட்டா என்க.

௪௯. மகாபாரதம், அரிவம்சம், வாயுசங்கிதை, கூர்மபுராணம், லிங்கபுராணம், ஸ்காந்தபுராணம் என்னும் இதிகாசபுராணங்கள் கூறுமாறு, உபமன்னியுவினிடத்துக் கிருஷ்ணர் வைதிக பாசுபததீக்ஷை எனப்படும் மந்திரசம்ஸ்காரதீக்ஷை பெற்று, தம்மையும் தமது தலைவராகிய சிவபெருமானையும் உணர்ந்து, சிவோகம்பாவனையில் தோய்ந்து நின்றமையாலன்றோ, வாமதேவமுனிவரைப்போல, அந்தக் கிருஷ்ணர்

௫௦. 𑌅𑌹𑌮𑌿𑌦𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑍇𑌕𑌾𑌂𑌶𑍇𑌨 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌜𑌗𑌤𑍍।

அஹமிதம் கிருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோ ஜகத்।

(பகவற்கீதை, ௧௦. ௪௨.)

௫௧. "நான் இவ்வுலகமனைத்தையும் ஓர் அம்சத்தினாலே வியாபித்திருக்கின்றேன்" என்று பகவற்கீதை கூறுமாறு, யானே உலகெலாமாயினேன் என்று கூறற்கும்,

௫௨. 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃।
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍॥

ஏவமுக்த்வா ததோ ராஜந் மஹாயோகேச்வரோ ஹரி꞉।
தர்சயாமாஸபார்த்தாய பரமம் ரூபமைச்வரம்॥

(பகவற்கீதை, ௧௧. ௯.)

௫௩. "இங்ஙனஞ் சொல்லி மஹாராஜாவே, மகாயோகீசுவரராகிய கிருஷ்ணர் அர்ச்சுனர்க்கு மேலாகிய விசுவரூபத்தைத் தரிசிப்பித்தார்" என்று கூறுமாறு, அர்ச்சுனர்க்கு விசுவரூபம் காட்டற்கும்,

௫

௫௪. 𑌤𑌞𑍍𑌚𑍋𑌪𑌹𑌾𑌰𑌂 𑌸𑍍𑌵𑌕𑍃𑌤𑌂 𑌨𑍈𑌶𑌂 𑌨𑍈𑌕𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃।
𑌦𑌦𑌰𑍍𑌶 𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍𑌬𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌶𑍇 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍇 𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑌮𑍍॥

தஞ்சோபஹாரம் ஸ்வகிருதம்நைசம் நைகமாத்மநः।
ததர்ச திரியம்பகாப்யாசே வாசுதேவே நிவேதிதம்.

(துரோணபருவம், அக. ௨.)

௫௫. "அருச்சுனர் தாம் இராப்போதிலே தம்மாற் கிருஷ்ணர்க்கு நிவேதிக்கப்பட்டவற்றைச் சிவபிரான் பக்கத்திற் கண்டார்" என்று துரோண பருவம் கூறுமாறு, தம்மேல் அர்ச்சிக்கப்பட்ட புஷ்பங்களைச் சிவபிரான் திருமுடிமேற் காட்டற்கும் வன்மையுடையராயினர்.

௫௬. இரண்டாஞ் சூத்திரத்து ௩-ம் பிரிவிற் கூறப்பட்டவாறு, அபேதம், பேதம், உடனுதல் என்னும் மூவகை இயல்பும் தன்கண்ணே தோன்ற நிற்கும் அத்துவிதத்தின் உண்மை உரைக்கப்பட்டது.

## இரண்டாஞ் சூர்ணிகை.



௫௭. ஆன்மாக்களுக்குக் கன்மபலன்களை அரனே கொடுப்பன்.

௫௮. (சூ. பொ.) ஒரு பட்டணத்தைக் காக்கும் அரசன் தனது சிறைச்சாலைத்தொழிலை ஒருவனிடத்து வைத்தல்போல, முற்றறிவும் பேரருளுமுடைய நிமித்தகாரணராகிய சிவபெருமான் உயிர்களோடியைந்து நின்று பிரபஞ்சத்தை மாயையினின்று தோற்றுவிக்குங்கால், அவர் அங்ஙனம் செய்வதாகிய தமது துணைக்காரணமாகிய ஆஞ்ஞாசத்தியை இருவினைகளிடத்து வைத்து நடாத்துதல் முறைமையாகலால், ஆன்மாக்களுக்கு இரு கன்மங்களையும் சிவபெருமான் தமது ஆஞ்ஞையினுல் அருளுவர் என்பதாம்.

௫௯. இருவினை எனப்படுவது முற்செனனங்களில் ஈட்டப்பட்டு மாயையிலே கட்டுண்டு கிடந்த புண்ணிய பாவங்களாம்; இதனுல் மாயை ஒன்று உளதாதலும் பெறப்பட்டது. இங்ஙனம் தமது ஆஞ்ஞாசத்திகொண்டு சிவபெருமான் செய்யுங்கால், அவரது சுவதந்திரத்துக்கு யாதும் இழுக்கில்லையாம்.

௬0. வினை ஒன்று உண்டு என்பதற்கும், அதுவே உயிர்க்குப் பயனுய் எய்தும் என்பதற்கும், மறுசெனனத்தில் வினை ஏறும் என்பதற்கும், அது சிவபெருமானையின்றி எய்தாது என்பதற்கும் பிரமாணம் என்னை எனிற் கூறுதும்:—

௬௧. (வெ. பொ.) (1) இல்லது தோன்றாது என்பது முதலாஞ் சூத்திரத்து ௬௩-ம் பிரிவினாற் பெறப்படுகின்றமையின்,

(2) மூன் உளதாகும் புண்ணிய பாவம் என்னும் இருவகைத்தாகிய சஞ்சித வினையானது தன் பயனாகிய இன்பதுன்பங்களையும், அவை நுகர்தற்குரிய இடமாகிய உடலையும் தோற்றுவிக்க,

(3) அவ்வின்ப துன்பங்களின் நுகர்ச்சி ஆன்மாக்களுக்கன்றி உடலுக்கின்மையால், அவ்வான்மாக்கள் உடலை அடைந்து இன்பதுன்பங்களை அநுபவிக்கும்,

(4) மூன் வினையானது அநுபவிக்கப்பட்டொழிந்தால் மறுபிறவியாகிய மேலைக்கு வினை எங்ஙனம் உண்டாகுமெனில்,

(5) மூன் செய்த வினையை இப்போது அநுபவிக்குங்கால் அதற்குத் துணைக்காரணமாய் நேரும் விருப்பு வெறுப்புக்களே மேலைக்கு வினையாய் ஏறும்.

(6) அங்ஙனமாயில் அந்த வினையே பயனாக வருதல் சாலும். சிவபெருமான் என ஓர் கடவுள் எதன்பொருட்டோ? எனில்,

(7) உழவர் செய்யும் தொழிலுக்குத் தக்கபயனை விளைநிலம் பிறப்பிப்பதன்றி அத்தொழில் தானே உண்டாக்கமாட்டாதவாறுபோல, உணவும் வித்துமாய் முன் தொடுத்து முறையேவரும் பிராரத்தவினை ஆகாமியவினை என்பவற்றைச் சிவபெருமான் அவ்வான்மாக்களுக்குக் கூட்டுவாரன்றி, அவ்வினைகள் தாமே வந்து ஆன்மாக்களுக்குப் பயன்களாக எய்தாவாம்.

௬௨. இருவினை ஜடமாதல்பற்றி ஆன்மாவைச் சென்றடையமாட்டாதாயினும், ஆன்மாக்கள் அறிவுடைப்பொருள்களாதலில் அவ்விருவினைப் பயனை அறிந்து எடுத்து அநுபவிக்கும், அதற்கு ஓர் கர்த்தா எற்றுக்கெனிற் கூறுதும்:—

௬௩. (வெ. பொ.) ஒருவன் இரும்பினை எடுத்து நேரே பிடிக்குங்காற் காந்தமானது அதனை வலித்துக்கொள்ளுமாறுபோல, சிவபெருமான் வினைப் பயன்களைப் பிறழாமல் நுகர்விக்குங்காற் புண்ணிய பாவங்களைச் செய்யும் ஆன்மாக்கள் தமக்கு நிலைக்களமாகிய உடம்பின்கண்ணேயிருந்து அவ்வினைப் பயன்களை அநுபவிக்கும். ஆன்மாக்களுக்குத் தமக்கெனச் சுதந்தர அறிவின்மையானும், வினை ஜடமாதலானும், மாயை சிவபெருமானது ஆணையையே தனக்குத் தாரகமாகக்கொண்டுநிற்றலானும், சிவபெருமானொழிந்து அவ்வினைப் பயன்களை மற்றெவர்தாம் பெத்தகாலத்தில் அறிந்து ஆன்மாக்களுக்குக் கூட்டுவார்? எவருமிலர் என்பதாம்.

௨௰௪. அவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதி எனில், முன்பில்லாதது இடையே தோற்றும் எனல் சற்காரியவாதத்துக்கு ஏலாது; அநாதியாயின், ஒருவர் கூட்டவேண்டுவதில்லையாமெனின், கூறுதும்

௨௰௫. (வெ. பொ.) (1) நெல்லின்கண்ணே உமியும், செம்பின்கண்ணே களிம்பும் எக்காலத்து உளவாயின என்று ஆராயுங்கால், அந்த நெல்லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தன அன்றாம்;

(2) 𑌤𑌾𑌮𑍍𑌰𑌕𑌾𑌳𑌿𑌕𑌵𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌸𑌹𑌜𑌸𑍍𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌃।

தாம்ர காளிகவத் யோகாத் ஸஹஜஸ் சமுதாஹ்ருத:।

(3) "செம்பிற் களிம்புபோல ஆணவம் (ஆன்மாவைப்பற்றி யிருத்தலால்) அது சகசம் எனப்பட்டது" எனச் சிவாகமம் கூறுகின்றது. அதுபோல மலம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியே உள்ளனவாம். சூரியனால் தாமரைப் பூவுக்கு அலர்தலும் கூம்புதலும் நிகழுமாறுபோல, சிவபெருமானது திரோதான சத்தியினால் மும்மலங்களும் தத்தம் காரியங்களைச் செய்யும் என்பதாம்.

௨௰௬. மூலமலத்தின் காரியம் மயக்கத்திற்கேதுவாதலாகிய மோகமும், மதித்தற்கேதுவாதலாகிய மதமும், ஆசைமிகுதிக்கேதுவாதலாகிய இராகமும், கவலுதற்கு ஏதுவாதலாகிய கவலையும், தபித்தற்கு ஏதுவாதலாகிய தாபமும், வாடுதற்கு ஏதுவாதலாகிய வாட்டமும், நானாவித ஏதுவாதலாகிய விசித்திரமுமென எழுவகைப்படும். இங்ஙனம் பவுஷ்கராகமத்துப் பசுப்படலத்திற் கூறப்படுகின்றது.

௨௰௭. மாயையின் காரியம் தனுகரணமுதலாயின.

௨௰௮. இருவினையின் காரியம் இன்பதுன்பமுதலாயின.

௨௰௯. திரோதானசத்தியானது பாகம் வருவித்தற்பொருட்டு ஆணவமலத்தின்வழிநின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்துக்கு ஏதுவாதல்பற்றி மலம் என்று உபசரிக்கப்படும்.

௭௰. இங்ஙனம் மலம் கன்மம் மாயை திரோதானம் மாயாகாரியம் எனப் பாசம் ஐவகைப்படும். இச்சூத்திரத்தினாற் பாசத்தினுண்மை சாதிக்கப்பட்டது.

௭௧. மாயையானது சுத்தமாயை எனவும், அசுத்தமாயை எனவும் இருவகைப்படும்.

௭௨. சுத்தமாயையானது ஊர்த்துவமாயை எனவும், அசுத்தமாயையானது அதோமாயை எனவும்படும்.

௭௩. சிவபெருமானது தாதான்மியசத்தியாகிய கிரியாசத்தியைப் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயை என்று சிலர் கூறுவது பொருந்தாதாம் என்க. பரிக்கிரகசத்தி என்பது வேண்டும்போது தொழிற்குக் காரணமாகக் கொள்ளப்படுவது.

௭௪. தாதான்மிய சத்தி என்பது எக்காலத்தும் விட்டுப்பிரியாதசத்தி எனப் பொருள்படும்.

௭௫. சுத்தமாயையானது (இலய, போக, அதிகாரத்துக்குரிய) சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன் என்போர்க்கும், விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்கும், சரியை கிரியாயோகத்துற்றோர்க்கும் தனு கரண புவன போகங்களைப் பிறப்பிப்பதாய், நித்தியமாய், வியாபகமாய், அருவமாய், ஜடமாய், சொல்வடிவும் சுத்தமாகிய பொருள் வடிவும் தோன்றுதற்கு முதற்காரணமாய், மயக்கஞ் செய்யாததாய் இருப்பது.

௭௬. 𑌲𑌯𑌾𑌦𑌿 𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌤𑍍𑌰 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌧𑍍𑌵𑌾 𑌯𑌤𑍋𑌽𑌜𑌨𑌿।
𑌸𑌾 𑌤𑍁 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌿𑌨𑍀 𑌶𑌂𑌭𑍋𑌰𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑍇𑌯𑌰𑍂𑌪𑌿𑌣𑍀॥

லயாதி வ்யாவிருதிர் யத்ர சுத்தாத்வா யதோஜநி।
ஸாது குண்டலிநீ சம்போர் நித்யாதிஷ்டேய ரூபிணீ॥

௭௭. "எந்த வஸ்துவிலே சிவபெருமானுடைய லய, போக, அதிகாரம் உளதோ, எதினின்று சுத்தாத்துவாவானது பிறக்கின்றதோ, அது சிவபெருமானுக்கு அதிஷ்டானரூபமாகிய சுத்தமாயை எனப்படும்" என்று பவுட்கராகமம் கூறுகின்றது.

௭௮. சுத்தமாயையினின்றும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நால்வகை வாக்கும் தோன்றும். இந்த வாக்குக்களில் இலக்ஷணங்களை முறையே சிவஞானசித்தியார் ௧-ஞ் சூத்திரத்து ௨௩, ௨௨, ௨௧, ௨௦-ஞ் செய்யுள்களிற் காண்க.

௭௯. சுத்தமாயையினின்று * சிவதத்துவம், சத்திதத்தும், சாதாக்கியதத்துவம், ஈசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம் என்னும் சிவதத்துவம் ஐந்தும் தோன்றும்.

௮௦. அசுத்தமாயை, காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருஷன் என்னும் ஏழும் வித்தியாதத்துவங்களாம். இதற்குப் பிரமாணம்,

௮௧. 𑌕𑌾𑌲𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋 𑌨𑌿𑌯𑌤𑌿𑌰𑍍𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍋𑌨𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍍।

காலஃ சுவபாவோ நியதிர் யதிருச்சா பூதாநி யோநிஃ
புருஷ இதி சிந்தியம்।

---

* முதலாஞ் சூத்திரத்து ௩௮-ம் பிரிவிலே சிவதத்துவங்கட்குப் பிரமாணம் காண்க.

என்னும் சுவேதாசுவதரோபநிடதத்து க-ம் அத்தியாயத்து உ-ம் மந்திரமே. இம்மந்திரம் வித்தியாதத்துவம் ஏழையும் உணர்த்தும் என்பதற்கும் பிருகச்சாபாலோபநிடதத்திற் கூறப்பட்ட சிவதத்துவம் ஐந்துக்கும் உபப்பிருங்கணப் பிரமாணம் வருமாறு:—

அஉ. ……………………𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌤𑍁।
𑌅𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗𑌤𑌯𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍।
𑌨𑌿𑌯𑌤𑌿𑌃 𑌕𑌾𑌲𑌰𑌾𑌗𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌚 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍।
𑌕𑌲𑌾 𑌚 𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑌿𑌦𑌂 𑌮𑌾𑌯𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌮𑍁𑌨𑍀𑌶𑍍𑌵𑌰।
(𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑍍 𑌮𑌾𑌯𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌾);
𑌤𑌜𑍍𑌜𑌾𑌨𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃।
𑌕𑌾𑌲𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋 𑌨𑌿𑌯𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍।
𑌏𑌤𑌤𑍍𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌪𑌞𑍍𑌚𑌕𑌞𑍍𑌚𑍁𑌕𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌅𑌜𑌾𑌨𑌨𑍍 𑌪𑌞𑍍𑌚𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌪𑌿 𑌵𑌿𑌮𑍂𑌢𑌧𑍀𑌃।
𑌨𑌿𑌯𑌤𑍍𑌯𑌧𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍁𑌪𑌰𑌿𑌸𑍍𑌥𑌃 𑌪𑍁𑌮𑌾𑌨𑌯𑌮𑍍।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑍌।
𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌶𑍍𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌶𑌿𑌵𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌤𑍁 𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍍।
𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌕𑍍𑌯𑌤𑌃॥

……………புருஷஸ்யது।
அந்தரங்கதயா தத்வபஞ்சகம் பரிகீர்த்திதம்।
நியதிः காலராகச்ச வித்யாச ததநந்தரம்।
கலாச பஞ்சகமிதம் மாயோத்பந்நம் முநீச்வர।
(மாயாந்து பிரகிருதிம் வித்யாங் மாயாசுருதி ரிதீரிதா।)
தஜ்ஜாந்யேதாநி தத்வாநி சுருத்யுக்தாநி ந ஸம்சயஃ।
காலஃ ஸ்வபாவோ நியதிரிதிச சுருதிரப்ரவீத்।
ஏதத்பஞ்சகமேவாஸ்ய பஞ்சகஞ்சுக முச்யதே।
அஜாநந் பஞ்சதத்வாநி வித்வாநபி விமூடதீஃ।
நியத்யதஸ்தாத் பிரகிருதேருபரிஸ்தஃ புமாநயம்।
வித்யாதத்வமிதம் புரோக்தம் சுத்தவித்யா மஹேச்வரௌ।
சதாசிவச்ச சக்திச்ச சிவச்சேதந்து பஞ்சகம்।
சிவதத்வமிதம்பிரம்மந் பிரஞ்ஞாந பிரம்ம வாக்யதஃ॥.

அங. "புருஷனுக்கு (1) நியதி, (2) காலம், (3) இராகம், (4) வித்தை, (5) கலை என்னும் தத்துவங்கள் ஐந்தும் அந்தரங்கமாகக் கூறப்பட்டன எனவும், இவை (6) மாயையினின்று உண்டாயின எனவும், இதற்குப் பிரமாணம் "காலஸ்வபாவோநியதி" என்னும் (சுவேதாசுவதர) சுருதியாம் எனவும், (7) புருஷனுக்கு இந்த ஐந்தும் பஞ்சகஞ்சுகம் எனப்படும் எனவும்,

இதனை உணராதோன் வித்துவானாயினும் மூடனே எனவும், பிரகிருதிக்கு மேலும் நியதிக்குக் கீழுமுள்ளான் (7) புருஷன் எனவும், (இங்ஙனம்) இந்த வித்தியாதத்துவம் கூறப்பட்டது எனவும், சுத்தவித்தியாதத்துவம், ஈசுவர தத்துவம், சாதாக்கியதத்துவம், சத்திதத்துவம், சிவதத்துவம் என்னும் ஐந்தும் சிவதத்துவங்களாம் எனவும், இந்தச் சிவதத்துவம் முற்றறிவு முற்றுற்தொழிலுடைய பிரமம் என்னும் வாக்கியத்தோடியைந்தது எனவும் கைலாசசங்கிதை கூ—ம் அத்தியாயத்து உகூ—ம் சுலோகமுதலியவற்றிற் கூறப்பட்டிருக்கின்றது.

அச. ஆன்மதத்துவம் இருபத்திநான்கும் ச—ம் பிரசிநோபநிடதத்து அ—ம் மந்திரத்தினும், மாயாவாதிகட்குரிய வராகோபநிடதத்தினும், சூத கீதையினும், சாங்கியநூலினும் பிரசித்தமாதலின், அவை ஈண்டுக் கூறப் படாது விடப்பட்டன.

அரு. சிவதத்துவம் ஐந்தும், வித்தியாதத்துவம் ஏழும், ஆன்மதத்து வம் இருபத்திநான்குமாகச் சேர்ந்த முப்பத்தாறு தத்துவங்களும் பொதுவும், சிறப்பும், பொதுச்சிறப்பும் என மூவகைப்படும்.

அசு. புவனவடிவாகிய தத்துவங்கள் எல்லோர்க்கும் பயன்படுதலிற் பொது எனப்படும்; சூக்குமதேக வடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போக நுகர்தற்குக் கருவியாதலிற் சிறப்பு எனப்படும் ஸ்தூலதேகவடிவாகிய தத்து வங்கள் தனக்குப் போகநுகர்தற்கும், சந்தனம் பூமாலைபோல மனைவிமுதலி யோர் அநுபவித்தற்கும் பயன்படுதலிற் பொதுசிறப்பெனப்படும்.

அஎ. சிவசத்திக்குரிய ஞானேச்சாக்கிரியை மூன்றனுள்ளே, யாண் டும் ஒருபெற்றித்தாய் வியாபரிக்கும் இச்சாசத்தி யொழிந்து, மற்ற ஞான மும் கிரியையுமாகிய இரண்டும் தனித்தனி வியாபரிக்குங்கால்,

(1) சிவதத்துவம் ஞானமாயும்,

(2) சத்திதத்துவம் கிரியையாயும்,

ஒத்து வியாபரிக்குங்கால்,

(3) சாதாக்கியதத்துவம் ஞானமும் கிரியையும் ஒத்ததாயும்,

ஏறிக்குறைந்து வியாபரிக்குங்கால்,

(4) ஈசுவரதத்துவம் கிரியை ஏறி ஞானம் குறைந்தும்,

(5) சுத்தவித்தியாதத்துவம் ஞானம் ஏறிக் கிரியை குறைந்தும் நிற்கும்.

(6) அசுத்தமாயாதத்துவம் நித்தமாய், அரூபியாய், ஒன்ருய், பிரபஞ்சத்துக்கு வித்தாய், முதல்வனுக்கு ஓர் பரிக்கிரகசத்தியாய், புவனம், போகம், தனு, கரணங்களை உயிர்களுக்குக் கொடுப்பதாய் உள்ளது.

(7) காலதத்துவமானது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என முத்திறப்பட்டுக் காரியப்பிரபஞ்சத்தைக் காலவரையறை செய்து கன்மத்தை எல்லைப்படுத்தி நிற்பது.

(8) நியதிதத்துவமானது அவரவர் செய்த கன்மத்தை அவரவரே நுகருமாறு நியமிப்பது.

(9) கலாதத்துவமானது ஆன்மாவைப்பற்றிய ஆணவத்தை ஏகதேசத்தில் நீக்குவது.

(10) வித்தியாதத்துவமானது ஆன்மாவின் ஞானசத்தியை ஏகதேசத்தில் விளக்குவது.

(11) இராகதத்துவமானது ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கிப் போகத்திற் செலுத்துவது.

(12) புருஷதத்துவமானது (மாயையினின்று தோற்றிய கலை வித்தை இராகம் என்பன ஆன்மாவின் கிரியை ஞானம் இச்சை என்பவற்றை விளக்கியபோது, காலம் நியதிகளுட்படப் பஞ்சகஞ்சுகமுடையதாய் அந்த இச்சை முதலிய மூன்றையும் ஏகதேசத்தில் மருவிப் போகத்தில் உன்முகமாய் நிற்பது.

(13) குணதத்துவமானது (கலையினின்றும் அவ்வியக்தமாய்த் தோன்றிய) மூலப்பிரகிருதியின்கண்ணே சாத்துவிகம், இராசசம், தாமசம் என வியக்தமாகி மூவகைத்தாய், ஒவ்வொன்று முத்திறப்பட்டு ஒன்பதுவகைப் படுவதாம்.

(14) புத்திதத்துவமானது குணதத்துவத்தினின்றும் தோன்றி ஆன்மாக்கள் செய்யும் இருவினைக்கீடாக வந்த விடயத்தை இன்னதென நிச்சயிப்பது.

(15) அகங்காரதத்துவமானது என்னேடொப்பாரில்லை என்னும் அகந்தைப்படுதற்குக் காரணமாய், யான் என்றும், எனது என்றும் ஒருப்பட்டெழுந்திருப்பது.

(16) மனத்தத்துவமானது தைசசவகங்காரத்தினின்றும் தோன்றி, எதிர்ப்பட்டதொரு விடயத்தை இஃது யாதாகற்பாற்றெனச் சித்தரூபமாய் நின்று சிந்தித்தும், பின் அதன்மீது ஐயமுற்று நிச்சயிக்குமாறு ஆசை பிறப்பித்து நிற்கும்.

(17) செவி ஆகாயத்தினிடமாகநின்று (*) சத்தத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

(18) மெய் வாயுவினிடமாக நின்று பரிசத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

(19) கண் அக்கினியினிடமாக நின்று ரூபத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

(20) வாய் அப்புவினிடமாக நின்று இரசத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

(21) மூக்கு பிருதிவியினிடமாக நின்று கந்தத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

(22) வாக்கு ஆகாயத்தினிடமாக நின்று வசனிக்கும்.

(23) பாதம் வாயுவினிடமாக நின்று கமனஞ் செய்யும்.

(24) பாணி தேயுவினிடமாக நின்று இடுதல் ஏற்றல் செய்யும்.

(25) பாயுரு அப்புவினிடமாக நின்று மலசலங்களைப் பிரிக்கும்.

(26) உபஸ்தம் பிருதிவியினிடமாக நின்று ஆனந்தஞ் செய்விக்கும்.

(27) சப்தம் ஆகாயம் தோற்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

(28) பரிசம் வாயு தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

(29) ரூபம் தேயு தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

(30) இரசம் அப்பு தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

(31) கந்தம் பிருதிவி தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

(32) ஆகாயதத்துவம் வெளியாதல் இடங்கொடுத்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

---

(*) இந்தச் சத்தம் பரிசமுதலியன, ஆகாயம் வாயு முதலிய பூதங்களின் குணங்களாம். 27, 28, 29, 30, 31-ம் இலக்க முதலியவற்றிற் காணப்படும் சத்தம் பரிச முதலியன, சூக்குமபூததன்மாத்திரைகளாம். அதுபற்றி அவ்விருதிறத்துச் சத்தாதிகளுக்குள்ள பேதம் கண்டு கொள்க.

(33) வாயுதத்துவமானது சலித்தல், பரந்தவற்றைத் திரட்டுதலாகிய குணமும் தொழிலுமுடையது.

(34) தேயுதத்துவமானது சுடுதல், ஒன்றுவித்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

(35) அப்புதத்துவமானது குளிர்தல், பதஞ்செய்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

(36) பிருதிவிதத்துவமானது கடினமாதல், தரித்திடுதலாகிய குணமும் தொழிலுமுடையது.

அஅ. இங்ஙனம் சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்களின் தொழிலை அறிதலே தத்துவரூபம் எனப்படும்.

அகூ. வினையானது ஈட்டப்படுங்கால், அது மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினாலும் மந்திராத்துவா முதலிய அத்துவாக்களிடமாக ஈட்டப்பட்டு,

(1) ஸ்தூல கன்மமாய் ஆகாமியம் எனப் பெயர்பெறும்;

(2) பின்னர்ப் பக்குவமாகும் வரையும் சூக்கும கன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே கிடந்து சஞ்சிதம் எனப் பெயர் பெறும்;

பின்னர்,

(3) சாதி, ஆயுசு, போகம் என்னும் மூன்றிற்கும் ஏதுவாய், முறையே,

(4) (*) சனகம், (†) தாரகம், (‡) போக்கியம் என்னும் மூவகைத்தாய்,

(5) (¶) அபூர்வம், சஞ்சிதம், புண்ணியபாவம் என்னும்பரியாயப் பெயர் பெற்று,

(6) ஆதிதெய்விகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம்

(*) சனகமானது சரீராதிகளை உண்டாக்குவது.

(†) தாரகமாவது குறித்த காலம் வரையும் சரீரமாகத் தாங்குவது.

(‡) போக்கியமாவது விஷயரூபம்.

(¶) அபூர்வம் காணப்படாதது.

என்னும் முத்திறத்தினாற் பலதிறப்பட்டு, அதிசூக்கும கன்மமாகிய பிராரத்தம் எனப்பெயர் பெறும்.

(1) ஆதிதெய்விகமானது தாய்வயிற்றின்கண்ணே கருப்பாசயத்து வேதனை, பிரசவவேதனை, உடம்பு திரைதல் முதலிய மூப்பால் வரும் துன்பம், அளவிலா அஞ்ஞானத்தால் வரும் சங்கற்பவேதனை, யமன் உயிர்கொண்டு போகும்போது எய்தும் மரணவேதனை, நரகத்துன்பம் முதலியவாக இங்ஙனம் தெய்வத்தையே காரணமாகக்கொண்டு வருவதாம்.

(2) ஆத்தியான்மிகமாவது தேகத்தைப்பற்றி வரும் விதனமும், மனசைப்பற்றி வரும் விதனமுமாக இருதிறப்படும்; அது ஜடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவதாம்; அவ்விரண்டனுள்ளே,

(3) வாதபித்த சிலேஷ்மங்களாலும், குஷ்டவியாதியாலும், நீரிழிவாலும், வெதுப்பினாலும், சூலை வியாதியினாலும், சத்துருக்கள், மனிதர், விலங்குகள், பேய், கள்வர் என்பவராலும், கொசுகு ஈ முதலியவற்றாலும், இராக்ஷதர்களாலும், ஆண் பெண் கூடிப்பிரிதலாலும், குருலிங்கசங்கமமாதி தேவதா காரிய பரிபாலனம், தவசு என்பவற்றாலும், சம்பத்து மிகுதியினால் அடாதன செய்து அநுபவித்தலாலும் உண்டாவன சரீரத்தைப்பற்றிய விதனமாம்.

(4) மனைவி மைந்தரைப் பிரிதலாலும், திரவிய முதலியன தம்மைவிட்டு நீங்குதலாலும் உண்டாகும் சோகம், அறிவுடையோரை, வடிவுடையோரை, சம்பத்துடையோரைக் காண்டலாலும் கேட்டலாலும் உண்டாகிய அழுக்காற்றினால் எய்தும் விதனம், மானத்துக்கு ஆனிவந்த காலத்தில் உண்டாய விதனம், பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமாயுள்ள பதார்த்தங்களின்மீது வைத்த ஆசையால் வரும் துன்பம், கோபத்தினால் வரும் விதனம் என்னும் இவை மனத்தைப்பற்றிய விதனமாம்.

(5) ஆதிபௌதிகமாவது குளிரால் வரும் துக்கம், மழையினால் வரும் நடுக்கம், உஷ்ணமுடைய கோடைக்காலத்தால் வரும் துன்பம், காற்றினால் வரும் துன்பம், மின்னல் இடி என்பவற்றால் வரும் துன்பம் என்பவைகளாம். ஆதிபௌதிகமானது ஜடப்பொருள் காரணமாக வருவதாம்.

(6) இவ்வினைகள் உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று உயர்வுடையதாய் முறையே நிவிர்த்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்பவைகளில் அடங்கி, அசுத்தபோகம், மிச்சிரபோகம், சுத்தபோகம் என்பவைகளைக் கொடுக்கும்; கூவல், தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றை அமைத்தல் உலகபுண்ணியம்; யாகமுதலியவற்றைச் செய்தல் வைதிகபுண்ணியம்; சிவபூசை முதலியவற்றைச் செய்தல் அத்தியான்மிக புண்ணியம்; யோகஞ் செய்தல் அதிமார்க்கபுண்ணியம்; மந்திரோச்சாரணம், ஞானசாஸ்திர முதலியவற்றை ஓதுதல் மாந்திரபுண்ணியமாம்.

## மூன்றுஞ் சூர்ணிகை.



கூ0. உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும்.

கூக. (சூ. பொ.) தோற்றமும் நாசமும் தொடர்ச்சியாய் உரிமையாயுள்ள பொருட்கே யன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தி கூடாமையால், ஆன்மாக்கள் உடல் மாறியே பிறக்கும் என்பதாம்.

கூஉ. (1) (வெ. பொ.) கண் காது முதலிய அங்கங்களையுடைய இவ்வுடம்பு கெட்டவிடத்து, ஆன்மாவானது படைப்புக் காலந்தொடுத்துச் சங்காரகாலமளவும் அழியாதுள்ள சூக்குமதேகம் வாயிலாகப் பூதசாரசரீரம் யாதனாசரீரம் என்பவற்றை எடுத்துக்கொண்டு முறையே சுவர்க்கத்திலும் நரகத்திலுஞ் சென்று இன்பதுன்பங்களை அநுபவித்து,

(2) பின்னர்ச் சாக்கிராவஸ்தையிற் கண்டவைகளைச் சொப்பனம் காணும் காலத்திலே மறந்து அறிவு வேறுபட்டாற்போல, முன்னரே உடம்பு நீங்குங்காற் கண்ணும் காதும் கெட்டமையும், பூதசாரசரீர முதலியவற்றை எடுத்துச் சுவர்க்க முதலியவற்றிலே சென்றமையும், அங்கே இன்பமுதலியவற்றை அநுபவித்தமையுமாகிய இவற்றை மறந்து அறிவு வேறுபட்டு,

(3) முன்னுடம்பு நீங்குங்கால் அடுத்த வினையினாற் காட்டப்படும் தெய்வப்பிறப்பு, மக்கட்பிறப்பு, விலங்கின் பிறப்பு, நாகர்ப்பிறப்பு என்னும் நால்வகைப் பிறப்பைப்பற்றி ஆன்மா அவாவுமாறு மனஞ் செலுத்துதலால், அந்தப் பிறவியின் கண்ணே செல்லுதற்கு ஏதுவாகிய புண்ணியபாவ சேஷத்தினாலே சூக்கும தேகத்தோடேயே சென்று, அம்மனம் தள்ளிய பிறவிக்கு வாய்ந்த கருவின்கண்ணே விழும்.

கூங. இதனாற் பிறவி யெடுக்குங்காற்படும் இயல்புகள் கூறப்பட்டவாறு காண்க.

கூச. சூக்கும உடம்பாவது சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம என்னும் காரண தன்மாத்திரை ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டினாலும் ஆக்கப்பட்டது. இந்தச் சூக்குமவுடம்பின் காரியமே ஸ்தூலவுடம்பு; இறக்குங்கால் ஐம்பொறிகளுள்ளே கண்ணும் காதுமே முதற்கண்ணே கெடும்.

கூரு. ஸ்தூல சரீரம் கெட்டுப்போகச் சூக்கும தேகத்தோடு ஆன்மாவானது பூதசாரமாகிய தேவசரீர முதலியவற்றை எடுக்கும் என்றமையால் உடல் மாறுதலும்,

கூசு. சுவர்க்கலோக முதலியவற்றிற் செல்லும் என்றமையால் இடம் மாறுதலும்,

கூஎ. நனவின் கண்ணே கண்டவற்றைக் கனவின் கண்ணே மறந்தாற் போல, கண் செவி கெட்டமை, சுவர்க்கமடைந்தமை, ஆண்டு அநுபவித் தமை, என்பவற்றை மறக்கும் என்றமையால் அறிவுமாறுபடுதலும்,

கூஅ. கண் செவி கெட்டுச் சுவர்க்கஞ் சென்று, கன்மசேஷத்தினாற் கருவில் வீழும் என்றமையாற் பஞ்சாக்கினி வித்தையினியல்பும் பெறப்படும்.

கூகூ. (1) இந்தச் சரீரத்தை விடுத்துப் போகுங்கால், இச்சரீரத் துள்ள மற்றைப் பூதங்களோடியைந்த சூக்குமபூத ஜலத்தினோடு கூடி அக்கினி யாகக் குறிக்கப்படும் சுவர்க்கலோகத்தை அடைந்து, அந்த அமிர்தமயமா கிய தேகத்தின் வடிவமாய் உருத்திரிந்த ஜலங்களோடு சேரப்பெற்றுத் தேவர் களுக்கு உபயோகமாகி, அத்தேவர்களோடுதானே அங்கே விசேஷபோகங் களை அநுபவித்து, பிராம்மணாதி சரீரத்தைக் கொடுக்கும் எஞ்சிய கன்மத் தோடு அவ்வான்மாவானது கன்மங்களைச் செய்யும்பொருட்டு இவ்வுலகத்தை நோக்கி,

(2) அக்கினியாகக் குறிக்கப்பட்ட மேகத்தை அடைகின்றது;

(3) பின்னர் மழைத்துளிகளோடு அக்கினியாகக் குறிக்கப்படும் பூமி க்கு வருகின்றது;

(4) அங்கிருந்து நெல் முதலிய தானியங்களோடு சேர்ந்து உணவு வடிவாகி அக்கினியாகக் குறிக்கப்பட்ட புருஷசரீரத்தை அடைந்து,

(5) இந்திரியமயமாகிய அந்த அப்புவோடு கூடி மற்றோர் அக்கினி யாகக் குறிக்கப்படும் பெண்ணை அடைகின்றது; புருஷ சரீரம் என்று கூறற் கியன்ற சரீரமாக மாறிய அப்புவோடு சேர்ந்து கன்மத்துக்கியைந்தவாறு பிராம்மணாதி சரீரமாகப் பிறக்கின்றது. இதுவே பஞ்சாக்கினி வித்தையி னியல்பு. இவ்வுண்மை பிரமசூத்திரத்து ௩-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து க-ம் சூத்திரத்துக்கு ஸ்ரீநீலகண்ட சிவாசாரிய சுவாமிகளருளிய பாஷ்யத்தி னால் உணரப்படும். இதனால் துறக்கம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாய் என்னும் இவ்வைந்திடத்தையும் அக்கினியாகவும், அவ்விடங்களில் எய்திய ஆன்மாவை ஆகுதியாகவும் வைத்துத் தியானித்தலே, பஞ்சாக்கினிவித்தை யாம் என்று பெறப்படுகின்றது.

க00. (1) (வெ. பொ.) பாம்பு தோலை உரித்துப் பிறிது ஒருதோலைப் போர்த்துச் செல்லுதலும், புருஷன் நனவுடம்பினின்று நீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தமது உடம்பை விடுத்து மற்றோர் சரீரத்திற்போய்

மீளுதலுமாகிய இம்மூன்றும் ஆன்மா ஸ்தூல சரீரம் விட்டுப் போதற்கு உவமைகளாகவும்,

(2) குடாகாயம் ஆகாயத்தோடு கூடுதல் என்பது ஆன்மா மகாசங்கார காலத்திற் சூக்குமதேகம் விட்டுப்போதற்கு உவமையாகவும் போந்தன.

ஆதலாற் குடாகாய உவமை ஸ்தூலசரீரம் விட்டுப்போதற்கு உவமையாகக் கூறப்படுவதின்றாம்.

## நான்காஞ் சூர்ணிகை.



௧௦௧. அரன் சர்வவியாபகன்.

௧௦௨. (சூ. பொ.) சிவபெருமான் ஒன்றே, வேறே என்னும் இருதன்மையுமின்றி, அவ்விரண்டற்கும் பொதுவாய் யாங்கணும் வியாபகமாய் நிற்றலால், அவர் ஆன்மாக்களுக்கு மீளச் செனனம் உளதாதற்குக் காரணமாய், இருவினைகளைச் செலுத்தி நிற்கும் தமது ஆணை எனப்படும் சிற்சத்தியோடு சமவேதமாய் நீக்கமின்றிச் சர்வவியாபகராய் நிற்பர் என்பதாம்.

(௧௦௩) 𑌶𑌕𑍍𑌤𑌯𑍋𑌽𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍁 𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌦𑍍𑌰𑍂𑌪𑌾𑌦𑍍 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌂 𑌨 𑌵𑌾𑌞𑍍𑌛𑌤𑌿।
𑌤𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌨𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌹𑍍𑌨𑌿𑌦𑌾𑌹𑌕𑌯𑍋𑌰𑌿𑌵।
𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍋𑌰𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌭𑍇𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃॥

சக்த யோஸ்ய ஜகத்கிருத்ஸ்நம் சக்திமாம்ஸ்து மஹேச்வரః।
சக்திஸ்து சக்திமத்ரூபாத் வ்யதிரேகம் நவாஞ்சதி।
தாதாத்மிய மநயோர் நித்யம் வஹ்நிதாஹகயோரிவ।
சக்திசக்தி மதோர்ய ஸ்மாதபேதஸ் சர்வதா ஸ்திதః॥

௧௦௪. "இவ்வுலகெலாம் அவர் சத்திகளே; மகேசுவரர் சத்திமான்; சத்திமானை விடுத்துச் சத்தி வேறுபடாது; (சத்தியும் சிவமுமாம்) இருவரின் தாதான்மியம் அக்கினியும் சூடும்போல நித்தியம்; சத்திக்கும் சத்திமானுக்கும் எக்காலத்திலும் பிரிவில்லையாமாகலின்" என்று ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் பிரமசூத்திரத்து, ௧-ம் அத்தியாயத்து, ௨-ம் பாதத்து, ௧-ம் சூத்திர பாஷ்யத்தில் உதகரித்தமைபற்றி உணர்ந்துகொள்க.

௧௦௫. வடசொல்லாகிய * அன்னியயோக வியவச்சேதம் என்பது பிறிதினியல்பு நீக்குதல் எனவும்,

---

* அன்னியயோக வியவச்சேதம் அயோக வியவச்சேதம் என்பன நன்னூல்விருத்தியுரை ௨௮௪-ம் சூத்திர வுரையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

கoசு. அயோக வியவச்சேதம் என்பது இயல்பின்மை நீக்குதல் எனவும் தமிழிலே மொழிபெயர்க்கப்படுமாறுபோல,

கoஎ. சமவாயம் என்னும் வடசொல் நீக்கமின்றி நிற்றல் என மொழிபெயர்க்கப்படும்.

கoஅ. சமவாயம் என்றது தாதான்மிய சம்பந்தத்தையேயாம்.

கoகூ. தாதான்மியம் என்பது பொருளான் ஒன்றேயாயும் ஒருவாற்ருற் பேதமாதற்கும் உரிமை உடையது.

ககo. (1) (வெ. பொ.) ஆன்மாக்கள் பலவும் தாமேயாம் என்னும்படி நிற்பவரென்று மேலே கூறிய பிரமாணத்தினுல், சிவபெருமான் ஒரு பொருளாதல் கூடாது; எங்ஙனமெனின்,

(2) ஒன்றேயாமாயின், கங்காதீரத்திலே நின்ற ஒரு மனிதன் காவிரி தீரத்தினும் ஒருங்கு நிற்கமாட்டாமைபோல, ஒரு பொருள் ஓரிடத்திருப்பதன்றி யாங்கணும் வியாபிக்கமாட்டாமையான் என்க.

(3) அங்ஙனமாயின், சிவபெருமான் இருபொருளாய் நிற்பரெனக் கொண்டால் என்னை எனின், யாங்கணும் அவையே தாமாய் உளனுதல் கூடாது; அஃதாவது தன்னிடத்தே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருளின்கண் வேற்றுமை யின்றி வியாபித்து நிற்றல் கூடாதாமாதலின் என்பது.

(4) எவ்விடத்தும் அவர் உளரல்லர் எனக்கொண்டால் என்னை எனின், எவ்விடத்து எத்திறப் பொருள்கள் உண்டோ அவ்விடத்து அவையெல்லாம் (உஅ, 16–ம்பிரிவிற் கண்டவாறு) அகரவுயிரெழுத்தில்லையேல் அக்கரங்களெல்லாம் இயங்கமாட்டாமைபோல, சிவபெருமானையின்றி இயங்கமாட்டாவாமாதலின், யாண்டும் அவர் இல்லை எனல் பொருந்தாது.

(5) பின் இதற்குச் சமாதானம் என்னை எனில், எங்கும் உளராகிய முதல்வர், சூரியனும் கிரணமும்போல ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் (தாதான்மியத்தினுற்) சிவமும் சத்தியுமாய் இயைந்து நிற்பர் என்பதாம்.

(6) அங்ஙனமாயின், பசுபாசங்களும் வியாபகம் உடையன எனப்படுதலின், அவைகளும் ஒன்று வேறு என்னும் இரண்டுமின்றிச் சிவபெருமானைப்போல வியாபகமாய் நிற்பனவாம் எனப்பெறப்பட்டு, அவை சிவபெருமானேடு சமமாமாறு செல்லுமோ எனின், அவை சிவபெருமானது வியாபகத்தைநோக்கவியாப்பியமாதலினுலும், பாசங்கள் சிவபெருமானுக்கு உடைமைப் பொருள்களும், பசுக்களாகிய ஆன்மாக்கள் அவருக்கு எப்போதும் மீளா அடிமைகளும் ஆதலினுலும் செல்லாதென்க.

ககக. இதுபற்றியே சுந்தரமூர்த்திநாயனர், திருவாரூர்த் தேவாரத்தில், ''மீளாவடிமை யுமக்கே யாளாய்'' என்றும், கச்சியப்பமுனிவர் திருத்தணிகைப்புராணத்தில், ''பாய வாருயிர் முழுவதும் பசுபதி யடிமை, யாய வெவ்வகைப் பொருள்களு மவனுடைப் பொருள்கண், மேய விவ்வண மலது வேறின்றென வுணர்ந்த, தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம்'' என்றும் ஓதியருளியதூஉம் என்க.

ககஉ. தன்னை விளக்குவதும் விஷயங்களை விளக்குவதும் தானேயாய சூரியனே,

ககங. விடயங்களை விளக்குங்காற் கதிர் எனவும், தன்னை விளக்குங்காற் கதிரோன் எனவும் இருதிறப்பட்டு இயைந்து நின்றாற்போல,

ககச. அநாதி முத்த சித்துருவாகிய முதல்வர் புறப்பொருளை நோக்காது ஒன்றிலும் தோய்வின்றித் தாமே சுயம்பிரகாசமாய் நிற்கும் தம் உண்மையிற் சிவம் எனவும்,

ககரு. புறப்பொருளை நோக்கி உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இங்ஙனம் ஆன்மாக்களிடத்து நிற்கும் தன்மையிற் சத்தி எனவும், தாதான்மியத்தால் இருதிறப்பட்டு,

ககசு. பின்னர்ச் சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியஞ் செய்யுந்தன்மையிற் பதி எனவும் பெயர் பெறுவர் என்பதாம்.

ககஎ. தீயின் சத்தி ஒன்றுதானே சுடுதல், அடுதல், விளக்குதல் முதலிய வேறுபாட்டினால், அடும் சத்தி, சுடும் சத்தி, விளக்கும் சத்தி என்றற்றொடக்கத்தனவாகப் பலவேறு வகைப்படுமாறுபோல, சிவசத்தி ஒன்றே காரிய வேறுபாட்டினால்,

ககஅ. 𑌪𑌰𑌾𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌚 ।

பராஸ்ய சக்திர் விவிதைவ சுரூயதே ஸ்வாபாவிகீ ஞாநபலக்கிரியாச।

ககக. என்று சுவேதாசுவதரம் கூறுமாறு, சிவசத்தியானது பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனப் பஞ்சசத்திகளாயும்,

கஉ0. ஈசானத்துக்குரிய பஞ்சகலா சத்திகளாகவும், தற்புருஷத்துக்குரிய நான்கு கலாசத்திகளாகவும், அகோரத்துக்குரிய அஷ்டகலா சத்திகளாகவும், வாமதேவத்துக்குரிய பதின்மூன்று கலாசத்திகளாகவும், சத்தியோசாதத்துக்குரிய அஷ்டகலா சத்திகளாகவும் சேர்ந்த அஷ்டத்திரிம்சத்கலா சத்திகளாயும்,

கஉக. ஆரிணி, ஜனனி, ரோதயித்திரி என்னும் மூவகைச் சத்திகளாயும்,

கஉஉ. நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐவகைச் சத்திகளாயும்,

கஉங. வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி கலவிகரணி, பலவிகரணி, சர்வபூததமனி, மனோன்மனி என்னும் அஷ்டமூர்த்திகளின் சத்திகளாயும்,

கஉச. (பரவாகீசுவரியாகிய) சத்தி, (அபரவாகீசுவரியாகிய) விந்துச் சத்தி, மனோன்மனி, மகேசை, உமை, திரு, வாணி என்னும் எழுவகைச் சத்திகளாயும்,

கஉரு. ஆத்தியான்மிகம் எனப்படும் உன்மனை, சமனை, அநாசிருதை, அனந்தை, அநாதை, வியோமரூபை, வியாபினி முதலிய ஷோடசப் பிராசாதகலாசத்திகளாயும் நின்றருளுவர்.

## இரண்டாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.



கஉசு. சிவபெருமான் ஆன்மாக்களிடத்து மாயாவாதி கூறுமாறு பொன்னும் பணியும்போல அபேதமாகாது, உடலும் ஆன்மாவும்போல (அபேதமாய்) ஒன்றாயும், மத்துவர் கூறுமாறு இருளும் ஒளியும்போலப் பேதமாகாது, கண்ணும் ஒளியும்போலப் (பேதமாய்) வேறாயும், பாஞ்சராத்திரிகள் கூறுமாறு சொல்லும் பொருளும்போலப் பேதாபேதமாகாது, ஆன்மபோதமும் கண்ணொளியும்போல உடனாயும் நிற்பர் என்றும், ஆன்மாக்கள் பிறந்து இறத்தற்குக் காரணமாகத் தமது ஆஞ்ஞாசத்திவாயிலாக அவ்வான்மாக்களுக்குக் கன்மபலனைக் கொடுப்பார் என்றும், ஆன்மாக்கள் தமது ஸ்தூலவுடம்பு நீங்கிய வுடனே சூக்குமதேகத்தோடு பூதசாரசரீரமுதலியவற்றைப் பொருந்தித் துறக்கமுதலியவற்றிலே போய் இன்பம் அநுபவித்து, எஞ்சிய கன்மசேஷத்தினாற் சூக்குமதேகமாத்திரையேகொண்டு மனஞ் செலுத்திய மானிட விலங்குமுதலிய பிறவிக்கமைந்த கருவிலே படும் என்றும், சிவபெருமான் ஒருவரே சிவமும் சத்தியுமாய்த் தாதான்மியத்தினால் இருதிறப்பட்டுச் சர்வவியாபியாய்ப் பொதுமையினிற்பர் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## பரீக்ஷை வினாக்கள்.



க. இரண்டாஞ் சூத்திரப் பொருள் யாது? ச.

உ. சூத்திரக் கருத்துரை யாது? ரு.

ங. இதன் பொருள் யாது? சு.

ச. சூத்திரப் பிண்டப்பொருள் யாது? எ.

ரு. சூத்திரப்பிண்டப் பொழிப்பினால் எவரது தடஸ்தலக்ஷணம் கூறப்பட்டது? அ.

சு. முதற் சூர்ணிகை யாது? கூ.

எ. அதன் பொருள் யாது? க௦.

அ. மாயாவாதிகள் சீவனும் பிரமமும் அபேதம் என்றமையை உணர்த்துதற்கு விடுக்கும் உவமை யாது? க௦.

கூ. மத்துவர் பேதம் என்றமைக்கு விடுக்கும் உவமை யாது? க௦.

க௦. பாஞ்சராத்திரிகள் பேதாபேதம் என்றமைக்குக் கூறும் உவமை யாது? க௦.

கக. நஞ்னுக்கு எத்தனை பொருள் உண்டு? கங.

கஉ. இந்த ஆறு பொருள்களுள்ளே மாயாவாதியும் மத்துவரும் எப்பொருள்களைக் கொண்டார்? கங.

கங. சிவாத்துவிதிகளும் சைவசித்தாந்திகளும் எப்பொருள் கொண்டார்? கங.

கச. சாதிருசியம் அன்மைப்பொருளை உணர்த்தற்கு இலக்கணப்பிரமாணம் யாது? கச.

கரு. பரிபாஷேந்துசேகரம் அன்மைப்பொருளை விளக்குதற்கு விடுத்த உதாரணம் யாது? கரு.

கசு. பதஞ்சலிமகாபாஷ்யகாரர் சாதிருசியப்பொருளை எங்கே எடுத்து ஆண்டிருக்கின்றார்? கரு.

கஎ. இந்தச் சாதிருசியப்பொருள் சுருதிசம்மதமுமாம் என்று நிரூபிக்க? கரு.

கஅ. ஏகர், நதுவிதீயர் என்பன முதன்முதல் எந்த மூலவேதத்திலே காணப்படுகின்றன? கசு, கஎ.

ககூ. இங்கே ஏகர் அத்துவிதீயர் எனப்பட்டவர் யாவர்? கஎ.

உ௦. இந்தச் சுருதியை ஆதாரமாகக்கொண்டு எந்த உபநிடதச்சுருதி பிறந்தது? கஅ, ககூ.

உக. ஏகமும் அத்துவிதீயமும் காணப்படும் சாந்தோக்கியத்தில் உருத்திருக்குப் பதிலாக எந்தப் பதம் பிரயோகிக்கப்பட்டுள்ளது? ககூ.

உ௨. சத்தும் உருத்திரரும் ஒருவர் என்றமையை நிரூபிக்க? முதலாஞ் சூத்திரம், ௮௪.

உ௩. நஞ், ந, அ என்பன ஒருபொருட் சொற்களா? வேறு? ௧௭, ௨௦.

உ௪. அகரம் இன்மைப்பொருளில் வருதற்கு உதாரணம் விடுக்க? உ௧.

உரு. அகரம் மறுதலைப்பொருளில் வருதற்கு உதாரணம் விடுக்க? உ௨.

உ௬. துவிதம் (இரண்டு) என்னும் எண்ணுப்பெயர்மேல் வந்த அகரம் எப்பொருள் உணர்த்தும்? உ௩.

உ௭. அகரம் எண்ணுப்பொருளிலே வந்து, வழக்கத்தில் இன்மை மறுதலைப் பொருள்களை உணர்த்துவதுண்டா? உ௩.

உ௮. இதனை உதாரணங்கொண்டு விளக்குக? உ௪.

உ௯. சிவபெருமான் ஆன்மாக்கள்மாட்டுச் சைவசித்தாந்தப்பிரகாரம் அபேதமாய் நின்றமையை உதாரணங்கொண்டு விளக்குக? உ௯.

௩௦. சிவபெருமான் ஆன்மாக்கள்மாட்டுப் பேதமாய் நின்றமையை விளக்குக? ௩௦.

௩௧. பிரமமில்லையேல் ஒரு பொருளும் இல்லை என்றமைக்குப் பிரமாணம் கூறுக? உ௯, (7), (8), (9).

௩௨. ஏகம் என்றதின் பொருள் யாது? உ௯, (1), (2).

௩௩. சிவபெருமான் ஆன்மாக்கள்மாட்டு உடனாய் நின்றமைக்கு உதாரணம் கூறுக? ௩௩.

௩௪. அத்துவிதம் என்றதின் பொருள் யாது? ௩௨.

௩௫. பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றும் ஓரிடத்திலே காணற்கியன்ற உதாரணம் கூறுக? ௩௫. 1, 2, 3, 4.

௩௬. மெய்கண்டதேவநாயனார் சிவஞானபோதசித்தாந்தத்திற் சிவபெருமான் ஆன்மாக்கள்மாட்டு ஒன்றாய், வேறாய், உடனாய் நின்றார் என்று பொருள் கொண்டாற்போல, திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் அப்பொருள்கொண்டார் என்றமைக்குத் திராவிட சுருதிப்பிரமாணம் கூறுக? ௩௬.

௩௭. உமாபதிசிவாசாரியசுவாமிகள் அம்மூவகைப்பொருள்கொண்டு மாயாவாதிமுதலிய மூவரையும் எங்ஙனம் மறுத்துள்ளார்? ௪௦.

௩௮. இருக்குவேதத்தினும், பிருகதாரணியத்தினும், சர்வஞ்ஞானோத்தரத்தினும் கூறப்பட்டவாறு, ஆன்மா முத்திகாலத்தில் உலகெலாமாயினேன் என்று உயிரின்மேல் வைத்துக் கூறினாலும், அவை சிவனது இலக்கணத்தினையுடையனவாமோ? ௪௨, ௪௪, ௪௯, ௫௭.

௩௯. கிருஷ்ணர் உபமன்னியுமகாமுனிவரிடத்து வைதிகபாசுபத தீக்ஷை பெற்றமை எங்கே கூறப்பட்டிருக்கின்றது? ௪௯.

௪௦. வைதிகபாசுபததீக்ஷை வேறு யாது பெயர் பெறும்? ௪௯.

௪௧. சிவோகம்பாவனையினால் தேர்ந்தவராகிய கிஷ்ணரைப் பகவற் கீதை எங்ஙனம் கூறுகின்றது? ௫௩.

௪௨. அவர் உலகெலாமாயினார் என்று எங்கே கூறப்பட் டிருக்கின்றது? ௫௧.

௪௩. சிவோகம்பாவனையினாற் கிருஷ்ணர் எவற்றுக்கு வல்ல ராயினார்? ௫௧, ௫௩, ௫௫.

௪௪. அபேதமுதலிய மூவகை இயல்பும் எதிலே தோன்று கின்றன? ௫௯.

௪௫. இரண்டாஞ் சூர்ணிகை யாது? ௫௭.

௪௬. அதன் பொருள் யாது? ௫௮.

௪௭. இருவினை என்பது யாது? ௫௯.

௪௮, புண்ணியபாவங்கள் எங்கே கட்டுண்டு கிடந்தன? ௫௯.

௪௯. சஞ்சிதவினை எத்தனை வகைத்து? ௯௧, (2.)

௫௦. சஞ்சிதவினை எவற்றைப் பிறப்பிக்கும்? ௯௧, (2).

௫௧. இன்பதுன்பங்கள் உடலுக்கா ஆன்மாவுக்கா எய்தும்? ௯௧, (3).

௫௨. வினை அனுபவிக்கப்பட்டொழிந்தால், மறுபிறவிக்கு வினை எங் ஙனம் ஏறும்? ௯௧, 5.

௫௩. வினையே பயனைப் வருதலின், சிவபெருமான் என ஓர் கடவுள் எற்றுக்கு? ௯௧, 7.

௫௪. ஆன்மா அறிவுடைப் பொருளாதலின், அது அவ்வினைப் பயனை அறிந்து எடுத்து அநுபவிக்கும் என்றால் என்னை? ௯௩.

௫௫. மும்மலங்களும் ஆதியோ? அநாதியோ? ௯௫, 1, 3.

௫௬. சகசமலம் எனப்பட்டது யாதுபற்றியோ? ௯௫, (3.)

௫௭. மும்மலங்களும் எதுபோலத் தத்தம் காரியங்களிலே நிலைபெறு கின்றன? ௯௫, (3.)

௫௮. மூலமலத்தின் காரியங்கள் யாவை? ௯௯.

௫௯. மாயையின் காரியங்கள் யாவை? ௯௭.

சுo. இருவினையின் காரியங்கள் யாவை? சுஅ.

சுக. திரோதானசத்தி யாது? சுசு.

சுஉ. பாசம் எத்தனை வகைப்படும்? எo.

சுங. இதனால் எதனது உண்மை சாதிக்கப்பட்டது? எo.

சுச. மாயை எத்தனை வகைப்படும்? எக.

சுரு. சுத்தமாயையும் அசுத்தமாயையும் எங்ஙனம் கூறப்படும்? எஉ.

சுசு. சிலர் சிவபெருமானது தாதான்மியசத்தியாகிய கிரியாசத்தியை யாது என்று கூறுகின்றார்? எங.

சுஎ. பரிக்கிரகசத்தி என்றது யாது? எங.

சுஅ. தாதான்மியசத்தி என்றதின் பொருள் யாது? எச.

சுகூ. சுத்தமாயையின் இலக்கணம் யாது? எரு.

எo. சுத்தமாயை எவர்க்கு அதிஷ்டானமாய் உள்ளது? எஎ.

எக. சுத்தாத்துவா எதினின்று பிறக்கின்றது? எஎ.

எஉ. சுத்தமாயையினின்று தோற்றும் வாக்குக்கள் நான்கும் யாவை? எஅ.

எங. சுத்தமாயையினின்று தோற்றுவன யாவை? எகூ.

எச. சிவதத்துவம் ஐந்துக்கும் சுருதிப்பிரமாணம் கூறுக? முதலாஞ் சூத்திரம், ஙஅ.

எரு. வித்தியாதத்துவங்கள் யாவை? அo.

எசு. இதற்குச் சுருதிப்பிரமாணம் யாது? அக.

எஎ. வித்தியாதத்துவசிவதத்துவங்கட்கு உபப்பிருங்கணம் கூறுக? அஉ, அங.

எஅ. ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் எங்கே கூறப்பட்டிருக்கின்றன? அச.

எகூ. முப்பத்தாறு தத்துவமும் பின் எத்தனை வகைப்படும்? அரு.

அo. அங்ஙனம் கூறப்படுதற்குக் காரணம் யாது? அசு.

அக. சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்களின் தொழில்களைக் கூறுக? அஎ, (1–36.)

அஉ. தத்துவரூபம் யாது? அஅ.

அரு. மனம் வாக்கு காயம் என்னும் மூன்ருனும் வினை எங்கே ஈட்டப் பட்டுக் கிடக்கும்? அகூ.

அச. ஸ்தூலகன்மம் யாது? அகூ, (1.)

அரு. ஆகாமியம் பக்குவமாகும்வரையும் எதனைப்பற்றி நிற்கும்? அகூ, 2.

அசு. அப்போது அது யாது பெயர் பெறும்? அகூ, (2.)

அஎ. ஆகாமியவினை, எவை மூன்றற்கும் ஏதுவாய் நிற்கும்? அகூ, (3.)

அஅ. சாதிமுதலிய மூன்றற்கும் ஏதுவாய் முறையே அது எத்தனை வகைப்படும்? அகூ, (4.)

அகூ. சனகமுதலிய மூன்றும் மற்றெப்பெயர் பெறும்? அகூ, (5.)

கூ0. அபூர்வமுதலிய பெயர்பெற்றுப் பின் அது எத்தனை வகைப் படும்? அகூ, (6.)

கூக. ஆதிதைவிகமுதலிய மூவகையாய் நிற்கும்போது யாது பெயர் பெறும்? அகூ, (6.)

கூஉ. ஆதிதைவிகமாவது யாது? அகூ, (1.)

கூரு. ஆத்தியான்மிகம் எத்தனை வகைப்படும்? அகூ, (2.)

கூச. சரீரத்தைப்பற்றிய விதனம் யாது? அகூ, (3.)

கூரு. மனசைப்பற்றிய விதனம் யாது? அகூ, (4.)

கூசு. ஆதிபௌதிகமாவது யாது? அகூ, (5.)

கூஎ. வினைகள் பின் எத்தனை வகைப்படும்? அகூ, (6.)

கூஅ. உலகவினைமுதல் மந்திரவினை யீருகிய ஐந்தும் முறையே எந் தெந்தக் கலையில் நிலைபெறும்? அகூ, (6.)

கூகூ. உலகபுண்ணியமுதலிய ஐவகைப் புண்ணியங்களின் இலக்க ணம் யாது? அகூ, (6.)

க00. மூன்ருஞ் சூர்ணிகை யாது? கூ0.

க0க. அதன் பொருள் யாது? கூக.

க0உ. சங்காரகாலமளவும் அழியாதுள்ள உடம்பு யாது? கூஉ, (1.)

க0ரு. பூதபரிணமமாகிய உடம்பு கெட்டவுடனே ஆன்மா சூக்கும சரீரத்தோடு போய்ச் சுவர்க்கத்தில் யாது சரீரம் எடுத்து இன்பமனுப விக்கும்? கூஉ, (1.)

க0ச. நாகத்திலே போய் யாது சரீரம் எடுத்துத் துன்பம் அநுபவிக்கும்? கூஉ, (1.)

காரு. இறக்குங்கால் ஐம்பொறிகளுள்ளே எவை முதற்கண்ணே கெடுகின்றன? கூஉ, (2.)

க0சூ. நனவிற் கண்டவற்றைக் கனவில் மறந்து அறிவு வேறுபட்டாற் போல, இறக்குஞான்று எவற்றை மறந்து அறிவு திரியும்? கூஉ, (2.)

க0எ. முன் உடம்பு நீங்குங்கால் அடுத்த வினை எவற்றைக் காட்டுகின்றது? அஉ., (3.)

கூ0அ. இந்தப் பிறவிகளுள் ஒன்றை அவாவுவது யாது? கூஉ, (3.)

கூ0கூ. ஆன்மா அங்ஙனம் அவாவுமாறு செய்வது யாது? கூஉ, (3.)

கக0. பிறவிக்கண்ணே செல்லுதற்கு ஏதுவாய் நின்றது யாது? கூஉ,(3.)

ககக. சூக்குமதேகத்தோடு ஆன்மா எங்கேபோய் விழும்? கூஉ, (3.)

ககஉ. சூக்குமதேகம் எதனுல் ஆயது? கூச.

ககங. உடல் மாறுதல், இடம் மாறுதல், அறிவு மாறுபடல் என்னுமிவை எங்ஙனம் உளவாம்? கூரு, கூசு, கூஎ.

ககச. சுவர்க்கஞ்சென்று பின் பூமியிலுள்ள ஓர் கருவிலே ஆன்மா விழும் என்றமையினுற் பெறப்படுவது யாது? கூஅ.

ககரு. பஞ்சாக்கினிவித்தையாவது யாது? கூகூ, (1-5.)

ககசு. பஞ்சாக்கினிவித்தை எங்கே கூறப்பட்டிருக்கின்றது? கூகூ, (5.)

ககஎ. ஆன்மா ஸ்தூல சரீரம் விடுத்துப் போதற்குக் கூறப்பட்ட உவமைகள் யாவை? க00, 1.

ககஅ. சூக்குமதேகம் விடுதற்குப் போந்த உவமை யாது? க00, (2.)

ககக. நான்காஞ் சூர்ணிகை யாது? க0க.

கஉ0. அதன் பொருள் யாது? க0உ.

கஉக. சத்திக்கும் சத்திமானுக்கும் பேதம் உண்டா? க0ச.

கஉஉ. அதற்கு விடுக்கப்பட்ட உவமை யாது? க0ச.

கஉங. அன்னியயோகவியவச்சேதம் யாது? க0ரு.

கஉச. அயோகவியவச்சேதம் யாது? க0சு.

கஉரு. சமவாயம் என்றதின் பொருள் யாது? க0எ.

கஉசு. சமவாயம் என்றது எதனைச் சுட்டும்? க0அ.

கஉஎ. தாதான்மியம் என்பது யாது? க0கூ.

கஉஅ. சிவபெருமான் ஒருபொருளாதல் கூடாதென்று ஆக்ஷேபிப்பவர் விடுக்கும் உவமை யாது? கக0, (2)

கஉகூ. சிவபெருமான் இருபொருளாய் நிற்பர் எனல் பொருந்தாது என்றமையை விளக்குக? கக0, (3.)

கஙூ0. அவரை எங்குமிலர் என்று கொண்டால் என்னை? கக0, (4.)

கஙூக. அங்ஙனமாயின் அதற்குச் சமாதானம் என்னை? கக0, (5.)

கஙூஉ. சிவபெருமானைப்போலப் பசுபாசங்கள் ஒன்று வேறு என்னும் இரண்டுமின்றி வியாபகமாய் நிற்பனவாதலின், அவற்றைச் சிவபெருமானோடு சமத்துவமாய்க் கூறினால் என்னை? கக0, (6.)

கஙூஙூ. ஆன்மாக்களும் ஜடப்பொருள்களும் முறையே அடிமைப்பொருளும் உடைமைப்பொருளுமாம் என்றமைக்குப் பிரமாணம் என்னை? கக்க.

கஙூச. சூரியனுக்கு எத்தனை குணம் உண்டு? ககஉ.

கஙூரு. சூரியன் எப்போது கதிர் எனப்படுவன். ககஙூ.

கஙூசு. எப்போது அவன் கதிரோன் எனப்படுவன்? ககஙூ.

கஙூஎ. சிவபெருமான் எப்போது சிவம் எனப்படுவர்? ககச.

கஙூஅ. எப்போது சத்தி எனப்படுவர்? ககரு.

கஙூகூ. அவர் எப்போது பதி எனப்படுவர்? ககசு.

கச0. தீயின் சத்தி எத்தனை வகைப்படும்? ககஎ.

கசக. சிவசத்தி எத்தனை வகைப்படும்? கககூ.

கசஉ. ஈசானமுதலிய ஐந்துக்கும் தனித்தனி எத்தனை கலாசத்திகள் உண்டு? கஉ0.

கசஙூ. மூவகைச் சத்திகளின் பெயர் என்னை? கஉக.

கசச. அஷ்டமூர்த்திகட்குரிய சத்திகள் யாவை? கஉஙூ.

கசரு. எழுவகைச் சத்திகள் யாவை? கஉச.

கசசு. உன்மனை யாது சத்தி எனப்படும்? கஉரு.

கசஎ. ஷோடசப்பிராசாதகலைகளிற் சில கூறுக? கஉரு.

---

## பொதுவதிகாரம்.

பசுப்பிரமாணவியல்.

## மூன்றாஞ் சூத்திரம்.

௧. 𑌨𑍇𑌤𑌿𑌤𑍋 𑌮𑌮𑌤𑍋𑌦𑍍𑌰𑍇𑌕𑌾𑌦𑌕𑍍𑌷𑍋𑌪𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌤𑌃।
𑌸𑍍𑌵𑌾𑌪𑍇 𑌨𑌿𑌰𑍍𑌭𑍋𑌗𑌤𑍋 𑌬𑍋𑌧𑍇 𑌬𑍋𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌸𑍍𑌤𑍍𑌯𑌣𑍁𑌸𑍍𑌤𑌨𑍌॥

நேதிதோ மமதோத்ரேகா தக்ஷோபரதி போததः।
ஸ்வாபே நிர்போகதோ போதே போத்திருத்வாதஸ்திய ணுஸ்தநௌ॥

௨. (இ-ள்.) 𑌨 𑌇𑌤𑌿𑌤𑌃 = (ஆன்மா) இலது என்றலானும்; 𑌮𑌮𑌤𑌾 𑌉𑌦𑍍𑌰𑍇𑌕𑌾𑌤𑍍 = (உடம்பை) எனது எனப் (பிறிதின்கிழமைப்பொருள்பட வழங்கும்) மிகுதிப்பாட்டானும்; 𑌅𑌕𑍍𑌷 𑌬𑍋𑌧𑌤𑌃 = ஐம்பொறிகளைக்கொண்டு அறிதலானும்; 𑌉𑌪𑌰𑌤𑌿 𑌬𑍋𑌧𑌤𑌃 = ஒடுக்கத்தை அறிதலானும் (அஃதாவது, கனவின்கண் நிகழ்ந்தவற்றை நனவின்கண்ணே மயங்கி அறிதலானும்); 𑌸𑍍𑌵𑌾𑌪𑍇 𑌨𑌿𑌰𑍍𑌭𑍋𑌗𑌤𑌃 = நித்திரையிற் (பிராணவாயுவுக்கு) இன்ப துன்ப நுகர்ச்சி இன்மையானும்; 𑌬𑍋𑌧𑍇 𑌬𑍋𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 = சாக்கிரத்தில் அறிவிக்க அறிதலானும்; 𑌤𑌨𑍌 𑌅𑌣𑍁𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿 = (இவை அனைத்தும் கூடிய) உடலகத்தே ஆன்மா என்பது ஒன்று உண்டு.

௩. உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

௪. (இ-ள்.) இலது என்றலின் உளது = இல்லை என்று சொல்லுதால் (இலதென்று கூறும்) ஆன்மா உளது; எனது உடல் என்றலின் உளது = எனது உடம்பு என்று கூறுதலால் (உடம்புக்கு வேறாக) ஆன்மா உளது; ஐம்புலன் அறிதலின் உளது = (சத்தமுதலிய) ஐம்புலன்களை (வேறாக) அறிதலால், (அவற்றுக்கு வேறாக) ஆன்மா உளது; ஒடுக்கம் அறிதலின் உளது = (ஐம்புலனும் ஒடுங்கப்பெறும் சூக்குமதேகம்வாயிலாக எய்தும்) சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை (வேறாக) அறிதலின், ஆன்மா உளது; கண்படில் உண்டி வினையின்மையின் உளது = துயிலுமிடத்து (இன்பதுன்ப) நுகர்ச்சியும் (உடம்பின்) சேட்டையும் (பிராணவாயுவுக்) கின்மையில், (அதற்கு வேறாக) ஆன்மா உளது; உணர்த்த உணர்தலின் உளது = அறிவிக்க அறிதலின் (அறிந்தாங்கு

அறிந்து நிற்கும் பிரமத்துக்கு வேறாக) ஆன்மா உளது; மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது = மாயாகாரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப்பாவை போலும் உடம்பின்கண்ணே (எல்லாம் கூடிய சமுதாயத்துக்கு) வேறாக ஆன்மா உளது.

ரு. (சூ. க. ரை.) ஆன்மாவின் உண்மை உணர்த்துகின்றது.

சு. (க. உ.) சிவபெருமான் ஆன்மாக்கள் பலவும் தாமேயாய் நிற்பர் என்று இரண்டாஞ் சூத்திரத்தினால் எடுத்துக்கொள்ளப்பட்ட ஆன்மாவானது சூனியமுதலியவற்றுள் ஒன்றாம் என்று அவ்வம் மதத்தினர் கூறுகின்றனவற்றை மறுத்து, அந்தச் சூனியமுதலியவற்றுக்கு வேறாயுள்ளது அவ்வான்மா என்று உணர்த்துகின்றது என்பதாம்.

எ. உலகத்தைக்கொண்டு சிவபதி ஒருவர் உளர் என்று சாதிக்கப்பட்டாற்போல, உடலைக்கொண்டு ஆன்மா ஒன்று உளது என்று சாதிக்கப்படுகின்றது.

அ. (சூ. பி. பொ.) இல்லை என்னும் அறிவுடன் கூறுதலானும், எனது உடல் என்று தன்னின் வேறாகக் கூறுதலானும், ஐம்புலனையும் ஒருவனே அறிதலானும், கனவுடலை விட்டு நனவுடலிலே வருதலானும், நித்திரையிற் பிராணவாயு தொழில் செய்தவிடத்தும் உடலுக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாமையானும், மறந்து மறந்து நினைத்தலானும், உருவகந்தமுதலிய மாயா காரிய தத்துவங்களுக்கும் வெவ்வேறு பெயர்கள் உளவாதலானும், சூனியம், ஸ்தூலதேகம், இந்திரியமுதலியவற்றுக்கு வேறாய் இவ்வுடம்பினுள்ளே ஆன்மா என்பதொன்று உண்டு.

## முதலாஞ் சூர்ணிகை.

கூ. இல்லை என்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

க0. (சூ. பொ.) ஆன்மா இலது என்று கூறுதல்பற்றி, அஃது உண்டெனக்கொள்ளுதல் முயற்கோடு இல்லை என்று கூறுதல்பற்றி அது உண்டு எனச் சாதித்தலோடு ஒக்குமென்று கூறும் சூனியான்மவாதிகளை மறுத்து, ஆன்மா இல்லை என்று கூறும் அச்சூனியான்மவாதிகளும் இல்லை என்று வாளா கூறுதல் கூடாமையால், உடல் பொறி முதலியனவற்றை யெல்லாம் முறையே ''இஃது ஆன்மா அன்று, இஃது ஆன்மா அன்று'' என்று ஒவ்வொன்றாகக் கழித்து, அங்ஙனம் இல்லை என்னும் அறிவுடனே கூறிக்கொண்டு நிற்கும் ஓர் அறிவு உளதாதலின், அவ்வறிவே ஆன்மா என்று உணரப்படும்; அந்த அறிவையும் சூனியமென்று சூனியான்மவாதிகள் கூறில், அது என் தாய் மலடி என்பதனோடொக்கும்; ஆகலின், அங்ஙனம் கூறுதல் இயையாதாம் என்க.

கக. சூனியமாவது உள்ளது மன்று, இல்லது மன்று, இரண்டுமாவது மன்று, வேறு மன்று எனப்படும் பாழாம்.

கஉ. அவ்வறிவை உடல் பொறிமுதலியவற்றுக்கு வேறாகப் பிரித்துக் காணுமியல்பை உதாரணங்கொண்டு கூறுவேம்;

கரு. (வெ. பொ.) (1) உடல் பொறி முதலிய அனைத்தும் அதுவது தானாக நின்று, பின் முறையே "இது நானன்று, இது நானன்று" என ஒரோவொன்றாகக் கண்டு கழித்தபோது, அகாமுதலிய சூக்குமபஞ்சாக்கரரூபமாய் அறிந்து வந்ததோர் அறிவுநிலை பெற்றுளதன்றோ; அந்த அறிவே ஆன்மா எனப்படும் (சூக்குமபஞ்சாக்கரமாய் நின்று அறிவதை நான்காஞ் சூத்திரத்து கச, 2-ம் பிரிவிற் காண்க);

(2) இரண்டாஞ் சூத்திரத்தினால் மாயேயமும், முதலாஞ் சூத்திரத்தினாற் சிவமும் உள என்பது பெறப்பட்டமையால், அவ்விரண்டுமே அவ்வறிவையும் அறிந்து நிற்பனவாம் என்று கொண்டால் என்னை எனில், அந்த மாயையானது பிருதிவி முதலிய தத்துவகாரிய மனைத்துமாய் ஆன்மாவோடு விரவி நின்று பெத்தகாலத்திற் கண்ணுக்குக் கண்ணாடிபோல, (அஎ-ம் பிரிவின் கீழே காணப்படுமாறு "மாயையினின்று தோன்றிய 10, 11, 9-ம் தத்துவங்களாகிய வித்தை, இராகம், கலை என்பன) ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியைகளை விளக்கி நிற்பதுமாத்திரையேயன்றி, அந்த மாயை அறிவன்றாம்; மாயையான் விளங்கி நிற்கும் அறிவாகிய ஆன்மாவானது அதற்கு அதீதமாகிய சிவமுமன்றாம்; ஆதலால், "இது அன்று, இது அன்று" எனக் கழித்து நீங்கி நின்ற ஆன்மாவானது அந்த மாயேயத்துக்கும் சிவத்துக்கும் வேறாம் என்க.

## இரண்டாஞ் சூர்ணிகை.

கச. எனது உடல் என்று பொருட்பிரிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிர் உண்டு.

கரு. (சூ. பொ.) "நான் பருத்தேன், நான் சிறுத்தேன், நான் பெரியேன், நான் மனிதன், நான் பார்ப்பான்" என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தினால் உயிருக்கு ஏற்றி வழங்கினாலும் "யான் உடம்பு, யான் கை, யான் கால்" என உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி, எனது என வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலான், உடம்புக்கு வேறாய் ஆன்மா என்பது ஒன்றுண்டு; ஆதலால் அவ்வுடம்பே ஆன்மாவாகும் என்று தேகான்மவாதி கூறுவது ஒவ்வாதென, அவன் பின்னரும் "எனது உடல்" என்பது பிறிதின்கிழமைப்பொருள்படாது தலைமாத்திரையாய் நிற்கும் இராகுவை இராகுவின்றலை என்று வழங்குமாறுபோல, அபேதம்பற்றி "எனது உடல்" என்றற்றொடக்கத்தனவாக வழங்கப்படும் எனக் கூறினால் என்னை? என,

கசு. இராகுவின்றலை என்றாற் போல்வன சிறுபான்மையாய் வழங்கும் வழக்கமேயாதலின், ஆண்டு (தலையும் இராகுவும் ஒன்றுதானே என) ஒற்றுமைப்பொருள் கொள்வது பொருத்தமாகும்; அங்ஙனமன்றி "என்பதி, என்மனைவி, என்பொருள் என்றாற்போல, என்கை, என்கால், என்கண், என்செவி, என்பொறி, என்பிராணன், என்அறிவு" எனப் பலவாற்றானும் பெரும்பான்மையும் உலகத்தில் வழங்கக் காணப்படலான், இவ்வழக்கம் மிகுதியும் பிறிதின்கிழமைப்பொருட்கணன்றி வாராமையான், அங்ஙனம் கூறி நிற்கும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுகின்றது; அந்தப் பொருளே ஆன்மாவாம்.

கஎ. (வெ. பொ.) ஒருவன் உலகாயதநூல் கேட்டற்கு முன்னரே பதி, மனைவி முதலிய புறப்பொருள்களையே ஆன்மா எனக்கொண்டு மயங்கி நின்றான்; அக்காலத்திலே அப்பதி, மனைவி முதலியவற்றைத் தனது அன்றென வேறு காணாது தனித்தனி தனது என்றே (தன்னோடு ஒற்றுமையுடைய) தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல, தனது அன்றாகிய தன் கை, கால் முதலியவற்றைத் தனித்தனி தன்னுடைய என்றும், அந்தப் பாச அறிவைத் தன் அறிவு என்றும் தற்கிழமைப்பொருளாகக்கொண்டு ஆன்மா என்னும் ஓர் பொருள் வேறாக நின்றதன்றோ; உலகாயதநூல் உணர்ந்த பின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்களைத் தனக்கு வேறாகக் கண்டாற்போல, கைகால் முதலியவற்றையும் ஆராயின், அக்கைகால் முதலியவை ஆன்மாவுக்கு வேறாம் என்று உணரப்படும்.

## மூன்றாஞ் சூர்ணிகை.



கஅ. ஐந்தையும் ஒருவனே அறிதலில் ஒவ்வொன்றைமாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

கசு. (சூ. பொ.) செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐந்து இந்திரியங்களும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐம்புல விஷயங்களை அறியும் என்பது யாவர்க்கும் ஒப்பமுடிந்தமையானும், அவை உடல்போலச் சடமல்லாமையானும், அவற்றை எனது என்னும் வழக்கம் பெரும்பான்மையுமில்லாமையானும், அவைகளே ஆன்மாவாம் என்னும் இந்திரிய ஆன்மவாதிகளை மறுத்து, ஐம்புலன்களுள் ஒன்றறிந்ததை ஒன்றறியாமையின் இந்த ஐந்து புலனுலும் ஐம்புல விஷயங்களையும் அறியும் அறிவு ஒன்று உளது; அதுவே ஆன்மாவாம்.

உ0. ஐந்து இந்திரியங்களையும் ஆன்மா எனக்கொண்டால் எய்தும் தோஷம் இன்றாம் என்றும், ஐம்புல விஷயங்களையும் ஒரு பொருளே அறியும்

என்பதற்குப் பிரமாணம் இல்லை என்றும் கூறுவோரை மறுத்து, ஐம்புலன்களுக்கும் வேறாய் ஆன்மா உண்டு என்று வலியுறுத்தப்படுகின்றது.

உக. (வெ. பொ.) உடலின்கண்ணே இருந்து ஒரு விஷயத்தை அறிந்த இந்திரியம் மற்றோர் விஷயத்தை அறியாது தம்முள்ளே மாறுபடும் சத்த முதலிய ஐம்புலவிஷயங்களை (நான்காஞ் சூத்திரத்து கச, 2-ம் பிரிவிற் கூறப்பட்டவாறு), சூக்குமபஞ்சாக்கரத்தினாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்து அறிகின்ற ஐம்பொறிகளின் தொழிற்பாட்டை (கண் உருவத்தை அறிவது செவி ஓசையை அறிவதென்று இவ்வாறு) உணர்தலையுடையதொரு பொருள் உளதாம்; அங்ஙனம் அறிகின்ற அப்பொருள் ஆன்மாவாம்; அவ்வாறு அறிவனவும் இந்திரியங்களே யாமாயின், அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங்களை வெவ்வேறாகக் காண்கின்றனவேயன்றி, தாம் இத்தொழிற்பாட்டை உடையேம் என்று அறியமாட்டாமையால், அந்த ஐம்பொறிகளின் தொழில்களையும் அறிந்து, அவற்றான் வரும் பயன்களையும் அடைகின்ற ஆன்மா அந்த இந்திரியங்களின் வேறாம் என்று உணரப்படும்.

உஉ. அந்தக்கரணான்மவாதி மறுக்கப்படுதலை (நான்காஞ் சூத்திரத்து கக, 4-ம்) பிரிவிற் காண்க.

## நான்காஞ் சூர்ணிகை.



உங. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

உச. (சூ. பொ.) இந்திரியங்களின் வேறாய் நின்று அறிவது சூக்குமவுடம்பேயாம் என்றும், அது புறத்து நிகழாதாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்தே செலுத்தி அறியும் என்றும் சூக்குமதேகான்மவாதிகள் கூறுவது ஒவ்வாது என்றும், இந்திரியங்கள் ஒடுங்கியவிடத்தே உளதாதாகும் சொப்பனம் கண்ட சூட்சும உடம்பே ஜாக்கிரத்தின்கண் சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றை அறியுமாயின், அது கண்டவாறு அறியுமேயன்றி மயங்கி அறிதல் கூடாமையின், ஆன்மாவுக்காயின் அதுபோல ஒருதன்மைத்தாகாது உள்ளே போதலும் வெளியே போதலுமாகிய வேறுபாடுடைமையின் அதுபற்றி மயங்கி அறிதல் கூடுமாமென்றும், அதனால் அங்ஙனம் அறியும் ஆன்மா சொப்பனம் கண்ட சூக்குமவுடம்புக்கு வேறாக உண்டு என்றும் கோடற்பாலது என்பதாம்.

உரு. இதனாற் கனவின்கண்ணே செல்வதும், ஆங்கு நிகழ்வதும், மீளவருவதுமாகிய இவற்றை உணர்த்தி, ஆன்மா சூக்குமதேகத்துக்கு வேறாம் என்று கூறப்படுகின்றது.

உகூ. (வெ. பொ.) ஆன்மா அன்றெனச் சாதிக்கப்பட்ட ஸ்தூல உடம்பின்கண்ணே உயிர்ப்பனவாகிய ஐம்பொறிகள் அவ்வுடம்பகத்தே தொழிற்பாடின்றிக் கிடப்பனவாக, அவை அங்ஙனம் கிடந்தபோது புறத்தே நிகழும் தொழிற்பாடெல்லாம் அடங்கி அவ்வுடம்பினுள்ளே வருத்தமில்லா மற்போய் அந்தத் தூல உடம்புபோல அதற்கு வேறாகியதோர் உடம்பை எடுத்துக்கொண்டு மற்றோர் பிரகாரமாகக் கண்டு, கேட்டு, உயிர்த்து, உற்று, விளையாடிப் பின்னர் அதனை மாறி மேற்செல்லுதலான் ஆன்மா அச்சூக்கும தேகத்துக்கு வேறாம் என்பது.

## ஐந்தாஞ் சூர்ணிகை.

உள. நித்திரையிலும் பிராணவாயு தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலுமில்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

உஅ. (சூ. பொ.) துயிலின்கண்ணே உடம்பு உயிரன்மையால், அவ்வுடம்புக்கு இன்ப துன்ப நுகர்ச்சியும் உடம்பு சேட்டித்தலும் இல்லை என்பதுபற்றி யாதும் இழுக்கு இல்லை; துயின்றெழுந்த பின்னர்ச் சுகமாய்த் துயின்றேன் எனப்படுதலின், துயிலின்கண்ணே இன்ப துன்ப நுகர்ச்சி உளதாதலின், அது பிராணவாயுவுக்காமெனின், கருவிகளெல்லாம் ஒடுங்கிய நித்திரையின்கண்ணே அப்பிராணவாயு இயங்குங்கால் (இன்ப துன்ப நுகர்ச்சியாகிய) புசிப்பு, (உடம்பு சேட்டித்தலாகிய) தொழில் என்னும் இரண்டும் உடம்பின்கண்ணே நிகழாமையானும், கருவிகள் ஒடுங்காத சாக்கிரத்தின் கண்ணே புசிப்பும் தொழிலுமாகிய அவ்விரண்டும் நிகழக் காண்டலானும், அந்த நிகழ்ச்சி நிகழாமை என்னும் இரண்டுக்கும் காரணமாகக் கருவிகளை ஒடுக்கியும் ஒடுக்காமலும் நிற்பது யாது, அதுதான் அப்பிராணவாயுவுக்கு வேறாகிய ஆன்மா என்பதாம்.

உகூ. பிராணவாயு ஆன்மா அன்று என்று கூறப்படுகின்றது.

ருo. (வெ. பொ.) சூக்குமதேகம் போலாகாது சுழுத்தி துரியங்களிலே தொழிற்படும் பிராணவாயுவே அடங்கி விடுதல் செய்யும் ஆன்மாவாகும் என்று பிராணான்மவாதிகள் கூறுவர்; கண்டறிதற்கு நிலைக்களமாகிய உடம்பின்கண்ணே கருவிகள் தொழிற்படாதொடுங்கவும், அங்ஙனம் ஒடுங்கியவிடத்து விஷயங்களால் வரும் இன்ப துன்பப் புசிப்பு உடம்புக்கு இலதாகவும், அங்ஙனம் பிராணவாயு இயங்கிக்கொண்டிருந்தவிடத்தும் அதற்கு அப்புசிப்பு இலதாகவும் போதலால், கருவிகளின் தொழிற்பாட்டாலாகிய இன்பதுன்பங்களைக் கண்டறியும் உரிமையுடைய ஆன்மா அப்பிராணவாயுவுக்கு வேறாய் உண்டு என்பது.

## ஆறாஞ் சூர்ணிகை.

௩௧. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

௩௨. (சூ. பொ.) பிரமமானது ஜடப்பொருளாகாத சித்துப்பொருளாகலின் அதுவே ஆன்மாவாகும் என்று விஞ்ஞானான்மவாதிகள் கூறில், அவ்வான்மாவானது கேவலாதீதத்திலே நின்றபோது யாதும் அறியமாட்டாது, பின்னர்ச் சாக்கிரத்திலே கலாதிதத்துவக் கருவிகளால் அறிந்து வருதலானும், கருவிகளோடு நின்றபோதும், அவிச்சை நீங்காமையின் தன்னியல்பினை அறியமாட்டாமையானும், மறந்து மறந்து அறியாது அறிந்தவாறே அனைத்தையும் அறிந்துநிற்கும் பேரறிவுடையர் பரப்பிரமசிவபெருமானே என்று வேதாகமங்கள்வாயிலாக ஞானாசாரியர் அறிவுறுக்கும் உபதேசமொழியைப் பெற்றுடைய பொருள் ஒன்று உண்டு; அந்தப் பொருள் பரப்பிரம சிவபிரானார்க்கு வேறாகிய ஆன்மா என்பதாம்.

௩௩. ஆன்மா கருவிகளோடு கூடியவிடத்தும், அவிச்சை நீங்காமையின் விடயங்களைமாத்திரம் அறியும்; அங்ஙனம் அறியுமிடத்தும் உளவாம் வேறுபாடுகள் கூறப்படுகின்றன.

௩௪. (வெ. பொ.) கருவிகளெல்லாவற்றோடும் கூடிச் சாக்கிரஸ்தானத்தில் நின்று விடயங்களை அறியுங்கால், ஒருங்கே அறியமாட்டாது ஒன்றனையே அறிந்தும், மற்றொன்றை அறியப்புகுந்தும், முன் அறிந்ததை அறியாதொழிந்தும், இங்ஙனம் ஒவ்வொன்றாக அறிந்த விஷயத்தையும் இடையீடின்றி அறியமாட்டாது விட்டுவிட்டு ஐந்தவத்தைப்பட்டு அடங்கி, மீள அறிந்து வருதல் பிரத்தியக்ஷமாகக் காணப்படுதலான், அங்ஙனம் அறிந்து வந்த பொருள் ஜடமுமன்று, இயல்பாக உணரும் பேரறிவுமன்று, பின் அது யாதெனின், காட்டும் ஒளிக்கு வேறாகிய கண்ணொளிபோல, அந்தப் பேரறிவுப்பொருளாகிய பரப்பிரமசிவத்துக்கு வேறாய், அது அதுவே தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் தன்மையுடைய ஆன்மாவாம்.

௩௫. இதனாற் சிவபெருமான் அறிந்தவாறே அனைத்தையும் அறிபவர் என்பதும், உயிர் மறந்து மறந்து அறியும் என்பதும் உணர்த்தப்பட்டன.

## ஏழாஞ் சூர்ணிகை.

௩௬. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

௩எ. (சூ. பொ.) உருவகந்தம், வேதனகந்தம், ஞானகந்தம், குறிக் கந்தம், வாசனகந்தம், என்னும் ஐந்து கந்தமெனக்கொண்ட மாயாகாரியங் கள் (சமுகான்மவாதிகள் கூறுமாறு) ஆன்மா எனப் பெயர் பெறாது வெவ் வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான், மாயாகாரியங்களால் ஆக்கப்பட்டுச் சூத்திரப்பாவை போலுள்ள உடம்பின்கண்ணே அவ்வுருவகந்தமுதலியவற் றுக்கு வேறாய் ஆன்மா உண்டு என்பதாம்.

௩அ. உருவகந்தமுதலியன மாயாகாரியங்களாம் என்றும்; அவை கூடிய சமுதாயத்தினும் ஆன்மா எனப் பெயர் பெறாது வேறு பெயர் பெறும் என்றும் கூறப்படுகின்றது.

௩கூ. (வெ. பொ.) சமுதாயவாதிகளாற் சமுதாயமாகக் கொள்ளப் பட்டன யாவை எனின், கலைமுதற் பிருதிவியீறாகிய தத்துவங்களேயாம். அவையெல்லாம் மாயையின் காரியங்களாதலின், சில காலம் நிலைத்து அழி வனவேயாம். அவை தொக்க சமுதாயத்தில் விளங்குவதாகிய ஞானத்தின் இயல்பைக் கருத்தொருங்கி முன்னுணர்ந்து பின் அச்சமுதாயத்தை ஆரா யின், அந்தச் சமுதாயம் கண்ணுக்கு விளக்குப்போல உயிருக்கு ஸ்தூல சூக்கும பரங்களாகிய உடலாம். கண் விளக்குக்கு வேறாயினாற்போல, ஆன்மா வானது சூத்திரப்பாவைபோலும் உடம்புக்கு வேறாம்.

௪0. இந்த மூன்றாஞ் சூத்திரத்தினால் ஆன்மா ஒன்று உளது என்று சாதிக்கப்பட்டது.

௪க. முதலாம் இரண்டாம் மூன்றாஞ் சூத்திரங்களாற் சைவாகமங்க ளுட் கூறப்படும் பதி, பாச, பசுக்களினுண்மை அநுமானப்பிரமாணத்தினால் வலியுறுத்தப்பட்டது. ஆகமப்பிரமாணமே அமைவதாயிருப்ப, அநுமானப் பிரமாணம் எற்றுக்கெனின்? கூறுதும். மந்தவுணர்வுடைய மாணாக்கர் வேறு சமயநூல்களைப் பார்த்தவிடத்துச் சைவாகமப்பொருளில் மலைவுகொள்வர்; அங்ஙனம் மலைவு பிறவாமைப்பொருட்டும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டை என்னும் நான்கு பிரகாரத்தினாலும் அநுபவம் எய்துமாதலினால், சிந்தனை செய்து பிரபல துர்ப்பலங்களை உணர்ந்து தெளிந்துகொள்ளும் பொரு ட்டும் அநுமானப்பிரமாணம் கூறப்பட்டதாம் என்க.

## மூன்றாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.



௪உ. சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்கும தேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுதாயான்மவாதி என்னும் எழுவரும் முறையே அச்சூனியம், தேகம், இந்திரியம், சூக்கும தேகம், பிராணன், விஞ்ஞானம், சமுதாயம் என்பவற்றை ஆன்மா என்று கூறிய கூற்றுக்களை மறுத்து, ஆன்மா அவற்றுக்கு வேறாம் என்று சாதிக் கப்பட்டது.

## மூன்றாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.



௧. மூன்றாஞ் சூத்திரப் பொருள் யாது? ௪.

௨. அதன் கருத்துரை யாது? ௫.

௩. இதன் பொருள் யாது? ௬.

௪. உலகத்தைக்கொண்டு எவர் உளராகச் சாதிக்கப்பட்டார்? ௭.

௫. உடலைக்கொண்டு எது உளதென்று சாதிக்கப்படுகின்றது? ௭.

௬. சூத்திரத்தின் பிண்டப்பொருள் யாது? ௮.

௭. முதலாஞ் சூர்ணிகை யாது? ௯.

௮. அதன் பொருள் யாது? ௧௦.

௯. சூனியமாவது யாது? ௧௧.

௧௦. சூனியான்மவாதிகள் எங்ஙனம் மறுக்கப்படுகின்றார்? ௧௦.

௧௧. "இது நானன்று" "இது நானன்று" என்றற் றொடக்கத்தனவாகக் கழித்த விடத்துளதாய அறிவு யாது? ௧௩, (1.)

௧௨. சூக்குமபஞ்சாக்கரத்துள் ஆன்மா எவ்வெழுத்தாய் நிற்கும்? ௧௩.

௧௩. ஆன்மாவை மாயை என்றால் என்னை? ௧௩, (2.)

௧௪. ஆன்மாவைச் சிவம் என்றால் என்னை? ௧௩, (2.)

௧௫. இரண்டாஞ் சூர்ணிகை யாது? ௧௪.

௧௬. அதன் பொருள் யாது? ௧௫.

௧௭. இராகுவின் தலை என்பது சிறுபான்மை வழக்கா? பெரும்பான்மை வழக்கா? ௧௬.

௧௮. இராகுவின்தலை என்றதற்கு யாதுபொருள் கோடல் வேண்டும்? ௧௬.

௧௯. தேகான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? ௧௭.

௨௦. மூன்றாஞ் சூர்ணிகை யாது? ௧௮.

உக. அதன் பொருள் யாது? ககூ.

உஉ. இந்திரியான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? உக.

உ௩. அந்தக்கரணான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? உஉ.

உச. நான்காஞ் சூர்ணிகை யாது? உ௩.

உரு. அதன் பொருள் யாது? உச.

உசூ. சூக்கும தேகான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? உசூ.

உஎ. ஐந்தாஞ் சூர்ணிகை யாது? உஎ.

உஅ. அதன் பொருள் யாது? உஅ.

உகூ. பிராணான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? ௩௦.

௩௦. ஆறாஞ் சூர்ணிகை யாது? ௩க.

௩க. அதன் பொருள் யாது? ௩உ.

௩உ. விஞ்ஞானான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? ௩ச.

௩௩. அனைத்தையும் அறிந்தவாறே அறிந்து நிற்பவர் யாவர்? ௩ரு.

௩ச. மறந்து மறந்து நினைப்பவன் யாவன்? ௩ரு.

௩ரு. ஏழாஞ் சூர்ணிகை யாது? ௩சூ.

௩சூ. அதன் பொருள் யாது? ௩எ.

௩எ. சமுதாயான்மவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? ௩கூ.

௩அ. முதன் மூன்று சூத்திரங்களாற் பதி பாச பசு உண்மை எது கொண்டு வலியுறுத்தப்பட்டது? சக.

௩கூ. ஆகமப்பிரமாணம் உளதேயாக, அநுமானப்பிரமாணம் எற்றுக்கு? சக.

ச௦. எப்பிரகாரத்தினால் அநுபவம் எய்துகின்றது? சக.

---

# பொதுவதிகாரம்.

## பசுலக்ஷணவியல்.

## நான்காஞ்சூத்திரம்.



௧. 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌵𑌿𑌤𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍।
𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌤𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃॥

ஆத்மாந்த꞉ கரணாதந்யோப்யந்விதோமந்திரிபூபவத்।
அவஸ்தாபஞ்சகஸ்தஸ்ஸ்யாந்மலருத்தஸ்வதிருக்கிரிய꞉॥

---

௨. (இ-ள்.) 𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 = ஆணவமலத்தினால் மறைப்புண்ட தனது ஞானக்கிரியையுடைய ஆன்மா; 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌅𑌪𑌿 = (மனமுதலிய) அந்தக்கரணங்களுக்கு வேறாயினும்; 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 = மந்திரியோடு (கூடி நிற்கும்) அரசன்போல; 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 = (அவ்வந்தக்காரணங்களோடு) கூடினவனாகி; 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾 𑌪𑌞𑍍𑌚𑌕𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 = (சாக்கிரமுதலிய) ஐந்து அவஸ்தையில் உளனாவன்.

௩. அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

௪. (இ-ள்.) ஆன்மா அந்தக்கரணமவற்றின் ஒன்று அன்று = ஆன்மாவானது மனமுதலிய அந்தக்கரண நான்கனுள் ஒன்றன்று (ஆயினும்); சகசமலத்து உணராது=சகசமாய் நின்ற மலத்தினால் உணர்வின்றி; அமைச்சு அரசு ஏய்ப்ப = மந்திரிமாரோடு கூடிநின்ற அரசன்போல; அவை சந்தித்து = அவ்வந்தக்காரணங்களோடு கூடிநின்று; ஐந்தவத்தைத்தே = ஐந்தவத்தையுடையதாம்.

௫. (க. ரை.) ஆன்மலக்ஷணம் கூறுகின்றது.

௬. (க. பொ.) மேலே முதலாஞ் சூத்திரத்தினாற் பதி உண்டென்றும், இரண்டாஞ் சூத்திரத்தினாற் பாசம் உண்டென்றும், மூன்றாஞ் சூத்திரத்தினாற் பசு உண்டென்றும் ஸ்தாபிக்கப்பட்ட பதி பாசம் பசு என்பவற்றுக்கு இலக்ஷணம் கூறத் தொடங்கி, முதற்கண்ணே ஆன்மாவின் இலக்ஷணம் கூறப்படுகின்றது என்பதாம்.

எ. (சூ. பி. பொ.) ஆன்மாவானது அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கனுள்ளே ஒன்று அன்றாயினும், அரசன் நுண்ணிய அறிவில்லாமையால் ஆலோசனைத் துணைவர்களாகிய மந்திரிமாரோடும், (பொறிமுதலிய சேனைகளோடும்) கூடி நின்று தன் தொழில் நடாத்துமாறு போல, அவ்வான்மாவானது ஆணவமல மறைப்பினால் அறிவின்றிச் சட்டைபோலும் கலைமுதலிய தத்துவங்களாற் பொதுவகையாய் அறியப்பெறுமேனும், சிறப்புவகையால் உணருமாறு தனக்கு ஆலோசனைத் துணைவராகிய அந்தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவஸ்தையைப் பொருந்தும்.

அ. அந்தக்கரணங்களோடு ஆன்மா நின்று சாக்கிரமுதலிய ஐந்து அவஸ்தைப்படுதல் அவ்வான்மாவுக்குத் தடஸ்தலக்ஷணமாம்.

## முதலாஞ் சூர்ணிகை.

---

கூ. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

க0. (சூ. பொ.) ஆன்மாவினால் அதிஷ்டிக்கப்பட்டு ஐம்பொறிகள் அறிந்த விஷயங்களுள் ஒன்றை இஃது யாதாகற்பாற்றெனச் சித்தம் சிந்தித்து அறியும், யான் சிந்தித்தேன் என்று அறியமாட்டாது; மனம் அதனை அஃதாமோ அன்றோ எனச் சங்கற்ப விகற்பஞ் செய்யும், சங்கற்ப விகற்பஞ் செய்தேன் என்று அறியமாட்டாது; அகங்காரம் அதனை இன்னது எனத் துணிவேன் யான் என்று ஒருப்பட்டு எழுந்து அறியும், யான் ஒருப்பட்டு எழுந்தேன் என்று அறியமாட்டாது; புத்தி அதனை இன்னது இது என நிச்சயித்து அறியும், நான் நிச்சயித்தேன் என்று அறியமாட்டாது. ஆதலால், அவ்வாறின்றி அவற்றோடு கூடி யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன், நிச்சயித்தேன் என்றும், அதன்பின் அதுவதுவாய் மாறிய சுகதுக்க மோகரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களாகிய இன்ப துன்ப மோகங்களைக் கலாதிகளோடு கூடி நின்று, "இது சுகம், இது துக்கம், இது மோகம்" என்று அறிந்தும், யான் சுகித்தேன், நான் துக்கித்தேன், நான் மோகித்தேன் என்று அறிந்தும், இங்ஙனம் தன்னை நோக்கியும் பிறவற்றை நோக்கியும் சித்தாயுள்ள ஆன்மாவானது தன்னை நோக்கஜடமாயுள்ள சித்தம், மனம், அகங்காரம், புத்தி என்னும் அந்தக்கரணங்களுக்கு வேறாயுள்ளது என்பதாம்.

கக. (வெ. பொ) (1) ஐம்பொறிகளால் உணரப்படுவன புறத்துள்ள சப்தாதி விஷயங்களாம்; இது வாயிற்காட்சி எனப்படும்.

(2.) இந்த ஐம் பொறிகளால் உணரப்படும் விஷயங்கள் மனமுதலிய புற அந்தக்கரணங்களால் அறியப்படுவனவாம்; இது மானதக்காட்சி எனப்படும்.

(3) அந்தக்கரணங்களுள்ளே மனத்துக்கு மேலாய்ப் புத்தியிற் றோன்றியவைகளே ஆன்மாவினால் உணரப்படும்; இது தன்வேதனைக்காட்சி எனப்படும்.

(4.) வாயிற்காட்சி, மானதக்காட்சி என்பன கடலின்கண்ணே எழுந்து கரையை அடையும் திரைபோன்று ஆன்மாவினிடத்திற் பரம்பரையாய் வந்து தோன்றும். பரம்பரையாய் வந்து தோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சியும், பின்னர் மானதக்காட்சியும், அதன்பின்னர்த் தன்வேதனைக்காட்சியும் ஆன்மாவின்கண்ணே தோன்றுதலாம். அதனால் மனமுதலிய அந்தக்கரணங்கள் சப்தமுதலிய ஐம்புலவிஷயங்களுக்கு வேறாயினாற்போல, ஆன்மாவும் அம்மனமுதலியவற்றுக்கு வேறாம். (இதனால் அந்தக்கரணான்மவாதி மறுக்கப்பட்டான்.)

கஉ. அந்த ஐம்பொறிகளினாலும் புத்தியினாலும் முறையே தோற்றும் வாயிற்காட்சி மானதக்காட்சி இரண்டும் திரையையும், ஆன்மா கடலையும் ஒப்பனவாம்.

கங. அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்பன சூக்குமபஞ்சாக்கரங்களாம்; இவ்வக்கரங்கள் பகுக்கப்படாது நிற்குங்காற் பிரணவம் எனப்படும்.

கச. (வெ. பொ.) (1) ஞாயிறு முதலியவற்றோடு கூடிநின்று நாழிகை, நாள், பக்கம், மாசம், வருஷமுதலியவாகப் பாகுபாடு செய்யும் காலதத்துவமானது அந்த ஞாயிறு முதலியவற்றுக்கு வேறாயினாற்போல, செவிமுதலிய ஐம்புலன்களால் அறியப்படும் சப்தமுதலிய விஷயங்களுள் ஒன்றை

(2) சதாசிவத்தை அதிதெய்வமாகக்கொண்ட நாதத்தினாற் செலுத்தப்பட்டு உணரும் புருஷதத்துவமாகிய ஆன்மாவானது

(3) மகேசுவரனை அதிதெய்வமாகக்கொண்ட விந்துவினாற் செலுத்தப்பட்ட சித்தமாய் நின்று, இஃது யாதாகற்பாற்றெனச் சிந்தித்தும்,

(4) உருத்திரரை அதிதெய்வமாகக்கொண்ட மகாரத்தாற் செலுத்தப்படும் மனசாய்நின்று, இஃது இன்னதாகற்பாற்றெனப் பற்றியும்,

(5) அதன்பின், பிரமாவை அதிதெய்வமாகக் கொண்ட அகாரத்தினாற் செலுத்தப்படும் அகங்காரமாய் நின்று, இஃதாமோ அன்றோ, இஃது இன்னதெனத் தெளிவேன் யான் என எழுந்தும்,

(6) அதன்பின்னர், விஷ்ணுவை அதிதெய்வமாகக் கொண்ட உகாரத்தினாற் செலுத்தப்பட்ட புத்தியாய் நின்று, இஃது இன்னது எனத் தெளிந்தும்,

(7) இங்ஙனம் போந்த ஆன்மாவானது அந்த மனமுதலிய அந்தக்கரணங்களுக்கு வேறும்.

கரு. ஆன்மா என்பது வியாபகம் எனப் பொருள்படும். இந்த மனமுதலிய அந்தக்கரணம் புற அந்தக்கரணம் எனப்படும். கலாதிகள் அக அந்தக்கரணம் எனப்படும்.

## இரண்டாஞ் சூர்ணிகை.

கசு. மல மறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

கஎ. (சூ. பொ.) ஆன்மா சிவபெருமானைப்போல அந்தக்கரணமுதலியவற்றுக்கு வேறுய அறிவுடைப் பொருளாயினும், செம்பிற் களிம்புபோல வேறு காரணமின்றித் தன்னோடு உடனுய் நிற்கும் மலத்தின் மறைப்பினல் தன்னியல்பை உணருமாறு இல்லை என்பதாம்.

கஅ. (வெ. பொ.) ஆன்மாவானது (*) ஆகந்துகமலம் எனப்படும் மாயாகாரியமாகிய உடம்பு தனக்குக் காண்பிப்பது கொண்டு காணுதாயின், அது ஒரு விடயத்தையும் அறியுமாறில்லையாம். சகஜமலமாகிய ஆணவம் ஆன்மாவை அநாதியேமறைத்து நிற்றல், விறகினுள்ளே மறைந்தபோது விறகேயாயும், சூரியகாந்தத்துள்ளே மறைந்தபோது அதுவேயாயும் நின்றும் தனக்குக் கேடில்லாத தீயைத் தமக்குள்ளே மறைத்து வைத்து (அத்துவிதமாய்) ஒன்றேயாய் நிற்கும் காட்டம், சூரிய காந்தம் என்பன போலாம்.

கக. இரண்டாஞ் சூத்திரத்து அஎ-ம் பிரிவிற் காணப்படும் கூ-ம் தத்துவமுதலிய கலை, வித்தை, இராகம் என்பன வாயிலாக விஷயங்களை அறியும்வண்ணம் ஆன்மாவுக்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்கை; அவ்வறிவைத் தடைசெய்து நிற்பது மலத்தின் செய்கை, ஆதலால் ஆணவமலம் இருளையும் கலை வித்தை இராகமுதலிய மாயேயம் ஒளியையும் நிகர்க்குமாம் என்க.

உ௦. ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தில் நிகழும் இயல்பே மலத்துக்குத் தன்னியல்பெனப்படும் சிறப்பிலக்கணமாம். அது ஆன்மாவுக்குப் பொதுவியல்பெனப்படும் தடத்தலக்ஷணமாம்.

உக. அவ்வான்மாவானது ஐம்புலன்முதலிய கருவிகளோடு கூடி அவஸ்தையுறுவதாகிய விபரீதவுணர்வைச் செய்யும் சகலத்தில் நிகழும் இயல்பே மலத்துக்குப் போதுவியல்பெனப்படும் தடஸ்தலக்ஷணமாம். இதனல் மலத்துக்கு இரு இலக்ஷணங்களும் கூறப்பட்டவாறு உணர்க.

(*) ஆகந்துகம் இடையிலே வந்து கூடிய மாயேயமாகிய உடம்பு முதலியவாம்.

௨௨. ஒவ்வோர் சமயத்தார் மலத்தை ஞானாபாவம் என்றும், பிராந்தி ஞானம் என்றும், தமோகுணம் என்றும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சை என்றும், மாயா கன்மங்கள் என்றும் தந்தஞ்சமய நூல்பற்றி மயங்குவார்.

௨௩. இந்தச் சகஜமலமாகிய ஆணவமலம் ஞானத்தை மறைப்பதாய், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய், செம்பிற் களிம்புபோல உயிரின் குற்றமாய், அநாதிபந்தமாய், ஒன்றேயாய், உயிர்கடோறும் தனித்தனி வெவ் வேறாய், தத்தம் காலவெல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பற்பலவுடைத் தாய், ஆன்மாக்கள் கேவலாவஸ்தை முதலிய மூன்று அவஸ்தை அடைதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகமாகிய உயிரை அணுத் தன்மை யுறுமாறு செய்தலினால் ஆணவம் எனப் பெற்றதாய்,

௨௪. 𑌪𑌶𑍁𑌤𑍍𑌵𑌪𑌶𑍁𑌨𑍀𑌹𑌾𑌰𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍂𑌰𑍍𑌚𑍍𑌛𑌾𑌮𑌲𑌾𑌞𑍍𑌜𑌨𑍈𑌃।
𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑌿𑌰𑍁𑌕𑍍𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌪𑌾𑌪𑌮𑍂𑌲𑌕𑍍𑌷𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃॥

பசுத்வ பசுநீஹாரமிருத்யு மூர்ச்சா மலாஞ்ஜனைः।
அவித்யாவிருதி ருக் கிலாநி பாபமூல க்ஷயாதிபிः॥

௨௫. (என்று மிருகேந்திராகமம் கூறுமாறு), "பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி, ருக்கு, கிலானி, பாவமூலம், க்ஷயம்" என்னும் காரணப்பெயர்களுடையதாய் நிற்ப தெனவும், படலம் படர்ந்த கண்ணானது சூரியன் சந்நிதியில் நிற்பினும் படலத்தினால் அவ்வொளியை இழந்து இருளில் அழுந்துமாறுபோல, சிவசன்னிதி யில் நிற்பினும் படிமுறையினால் அறிவிக்க அறியும் தன்மைத்தாய ஆன்மா அநாதியே அறிவித்தால் அறியமாட்டாமையின், அதுபற்றி அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின், அந்த ஆணவமலம் அவ்வுயிர்க்குப் பந்தமாயிற்று என்க.

௨௬. அநாதியே மலத்தினின்று நீங்குதல் முதல்வன் வினையாய், முற்றறிவு எனப்படும் சர்வஞ்ஞதை, வரம்பிலின்பமுடைமை எனப்படும் திருப்தி, இயல்பாகவே பாசங்களி னீங்குதலாகிய அநாதிமுத்தத்தன்மை எனப்படும் அநாதிபோதம், பேரருட்சத்தி எனப்படும் அலுப்தசத்தி, முடிவி லாற்றல் எனப்படும் அனந்தசத்தி, தன்வயம் எனப்படும் சுதந்திரத்துவம், தூயமேனி எனப்படும் விசுத்ததேகம், இயற்கை யுணர்வினனாதல் எனப்படும் நிராமயான்மா என்னும் எண் குணங்களுள்ளே, அநாதிமுத்தத்தன்மை என ஓர் குணம் வைத்தெண்ணப்படுவது சிவாகமங்களுக்கு ஒப்பமுடிந்த பக்ஷமா மாறுபோல, அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய், கிஞ்சிஞ் ஞதை, அதிருப்தி, ஆதிபோதம் எனப்படும் அநாதிபந்தத்துவம், லுப்தசத்தி, அந்தசத்தி, பரதந்திரத்துவம், அசுத்ததேகம், ஆமயான்மா என்னும் ஆன்

மாவுக்குரிய எண்குணங்களுள்ளே அநாதிபந்தத்துவம் என்பதோர் குணம் வைத்தெண்ணப்படுவது அவ்வாகமங்கட் கெல்லாம் ஒப்பமுடிந்த பக்ஷமாம்.

உஎ. 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌵𑌿𑌮𑌲𑍋 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌕𑌾𑌰𑌕𑌃।
𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌮𑌲𑌿𑌨𑌾𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌜𑍀𑌵𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾𑌃॥

ஸ்வபாவ விமலோ யத்வத் சர்வாநு கிரஹகாரகஃ।
ஸ்வபாவமலிநாஸ் தத்வதாத்மானோஜீவசம்ஞிதாஃ॥.

உஅ. "சர்வாநுக்கிரகஞ் செய்யும் சிவபெருமான் எங்ஙனம் இயல்பாகவே மலமிலராய் உளரோ, அங்ஙனம் இயல்பாகவே மலத்தோடியைந்தமையால் ஆன்மாவுக்குச் சீவன் என்னும் பெயர் உளதாம்" என்று வாயுசங்கிதையும்,

உகூ. 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌲𑌮𑍁𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍇𑌨 𑌤𑌚𑍍𑌛𑌿𑌵𑌃।
𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌲𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑍍𑌞𑍋𑌽𑌯𑌂 𑌮𑌯𑍋𑌦𑌿𑌤𑌃॥

அநாதிமல முக்தத்துவாத் சர்வஞ்ஞஸ்தேநதச்சிவஃ।
அநாதிமல சம்பந்தாத் கிஞ்சிஞ்ஞோயம் மயோதிதஃ॥

௩0. "சிவன் அநாதிமல முத்தராதலின் அவர் முற்றறிவினர்; ஆன்மா அநாதிமல சம்பந்தமுடைத்தாதலினால் அது சிற்றறிவினது என்று எம்மாற் கூறப்பட்டது" என்று கிரணாகமமும் கூறியிருப்பது காண்க.

௩க. சூனியம், ஸ்தூலதேகம், இந்திரியம், சூக்குமதேக முதலியவற்றுக்கு வேறெனப்பட்டதாய், மலத்துக்குப் பற்றுக்கோடாயுள்ள ஆன்மாவை ஜடமென்றும், குணிப்பொருள் என்றும், சுவதந்திர அறிவுடைய பிரமம் என்றும், அவ்வுடம்பளவினதென்றும், அணுவளவினதென்றும், உருவென்றும், அரு என்றும், உருவரு என்றும் பலதிறப்படக் கூறி மயங்கும் பலதிறப்பட்ட சமயிகள் உளராம் என்க.

## மூன்றாஞ் சூர்ணிகை.

௩உ. உயிர் மூன்றவஸ்தைப்படும்.

௩௩. (சூ. பொ.) ஆன்மா மலத்தினால் மறைப்புண்டபோது சூக்கும தேகம் எனப்படும் அருவுடம்பாகிய தத்துவசொரூபியாயிருத்தலால், அத்தத்துவங்கள் தொழிற்படும் அவஸ்தை வேறுபாடுபெற்றி, ஆன்மாவானது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து காரியாவஸ்தை யுறுதற்குக் காரணமாகிய கேவலாவஸ்தை, சகலாவஸ்தை, சுத்தாவஸ்தை என மூன்று அவஸ்தையுறும் என்பதாம்.

### சகலத்திற் கேவலம்.

௩ச. (வெ. பொ.) (1) சாக்கிரத்தானமாகிய இலாடத்திலே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு, பாதம்,

பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தும், சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்னும் சப்தாதி விஷயம் ஐந்தும், வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் வசனுதி ஐந்தும், பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் பிராணுதி பத்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும், புருஷனுமாகிய முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படும்;

சாக்கிராவஸ்தையில் எய்தும் வான்முறை கூறின், செவிக்கண்ணே நின்று போகம் துய்க்கும் வாயின் மிலேச்சராகிய அநாரிய மெய் காவலரும்; சரீரத்துநின்று போகம் துய்க்கும் சாரணராகிய ஒற்றரும்; கண்ணிடத்து நின்று போகம் துய்க்கும் தூதிடைச் செல்வாரும்; வாயிலே நின்று போகங் கொள்ளும் நின்றுதுதிப்போராகிய சூதர், இருந்து ஏத்துவாராகிய மாகதர் என்னும் புகழ்வோரும்; மூக்கிலே நின்று போகம் கொள்ளும் புரோகிதருமாகிய ஞானேந்திரியவர்க்கமும்;

வாக்கினின்று போகம் துய்க்கும் குதிரைவீரரும், காலிலே நின்று போகம் துய்க்கும் யானைவீரரும், கையில் நின்று போகம் துய்க்கும் தேர் செலுத்தும் வீரரும், பாயுருவில் நின்று போகம் துய்க்கும் காலாள் வீரரும், உபஸ்தத்தினின்று போகம் துய்க்கும் சேனுதிபதிகளுமாகக் கூறப்படும் கன்மேந்திரியவர்க்கமும்;

சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்த, வசன, கமன, தான, விசர்க்க, ஆனந்தம் என்னும் விஷயமாகிய பரிவாரங்களும்;

இந்திரநீலநிறத்தினையுடையதாய் இடை பிங்கலை சுழுமுனையிற் போக்கு வரவு செய்யும் பிராணவாயுவும், இந்திரகோபநிறத்தினதாய்க் குதத்தில் மலசலங்களைப் பிரிக்கும் அபானவாயுவும், மின்னிறத்ததாய் நாபியில் அக்கரங்களைப் பிரிக்கும் உதானவாயுவும், பால்நிறத்ததாய் உடல்முழுதும் வியாபித்துச் சுழித்தல் முதலிய தொழில்கள் செய்யும் வியானவாயுவும், காயாமலர் நிறத்தினதாய்க் கண்டத்திலே அன்னசாரத்தை நாடிதோறும் செலுத்தும் சமானவாயுவும், பாலசூரியனின் நிறத்தினதாய் நகைப்புமுதலிய தொழில்கள் செய்விக்கும் நாகவாயுவும், குருந்தமலர் நிறத்தினதாய்க் கண்ணிமைப்பிக்கும் கூர்மவாயுவும், மஞ்சள் நிறத்தினதாய்த் தும்மல் செய்விக்கும் கிருகரவாயுவும், பளிங்கு நிறத்தினதாய்க் கொட்டாவி செய்விக்கும் தேவதத்தவாயுவும், நீலாஞ்சன நிறத்தினதாய்த் தேகத்தை வீங்கி வெடிக்கச்செய்யும் தனஞ்சயவாயுவுமாகிய தசவாயுக்கள் எனப்படும் உறுதிச் சுற்றத்தாரும்; சித்தம் சிந்தித்தும், புத்தி விசாரித்தும், அகங்காரம் துணிந்தும், மனம் செய்வித்தும் போதரும் அந்தக்கரண சதுஷ்டய மந்திரிமாருமாகிய இவரோடு ஜாக்கிரஸ்தா

ஸம் எனப்படும் இலாடத்தானமாகிய அத்தாணிமண்டபத்தில் ஆன்மாவாகிய அரசன் இங்ஙனம் இசைந்து அமர்வன் என்பதாம்.

(2) சொப்பனஸ்தானமாகிய கண்டத்திலே சப்தாதி விஷயம் ஐந்தும், வசனாதி ஐந்தும், பிராணாதி பத்தும், அந்தக்கரணம் நான்கும் புருஷனுமாகிய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும்;

(3) சுழுப்திஸ்தானமாகிய இதயத்திலே சித்தம், பிராணன், புருஷன் என்னும் மூன்றும் தொழிற்படும்;

(4) துரியத்தானமாகிய உந்தியிலே பிராணவாயு, புருஷன் என்னும் இரண்டும் தொழிற்படும்;

(5) துரியாதீதம் எனப்படும் மூலாதாரத்திலே புருஷன் ஒன்றே தொழிற்படும்.

௩ரு. இங்ஙனம் துரியாதீதத்திலே மலத்தோடுமாத்திரம் சம்பந்தப்பட்டு அறிவின்றிப் புருஷன் நிற்பது கேவலாவஸ்தை எனப்படும்.

௩சு. கலாதிகளும் சிவதத்துவமுதலிய சுத்ததத்துவமும் அவஸ்தைக் கேதுவாகாமையால் உடன் எண்ணப்படவில்லை.

சகலத்திற்சகலம்.

௩எ. (வெ. பொ.) (1) இலாடத்தானத்தினின்று அங்கங்கே அவஸ்தைப்பட்டு, ஈண்டுக் கூறியவாறு கீழேபோந்து மூலாதாரத்தை அடைந்த பின்னர், பின்னரும் அங்ஙனம் ஆண்டாண்டு அவஸ்தைப்பட்டு மேலேபோய் இலாடத்தானத்தில் ஜாக்கிரஸ்தானத்தை அடைந்த புருஷன்,

(2) அச்சாக்கிராவஸ்தையின்கண்ணும் ஜாக்கிரஜாக்கிரமுதலிய ஐந்து அவஸ்தைப்படும். அங்ஙனம் அவஸ்தையுறுமிடத்து,

(3) சாக்கிரசாக்கிரத்திற் சிவதத்துவமுதற் சுத்தவித்தியாதத்துவம் இறுதியாகிய ஐந்து கருவிகளும்,

(4) சாக்கிரசொப்பனத்திற் சிவதத்துவமுதல் ஈசுரதத்துவம் இறுதியாகிய நான்கு கருவிகளும்,

(5) சாக்கிரசுழுப்தியிற் சிவதத்துவமுதற் சாதாக்கியதத்துவம் இறுதியாகிய மூன்று கருவிகளும்,

(6) சாக்கிரதுரியத்திற் சிவதத்துவம் சத்திதத்துவம் என்னும் இரண்டு கருவிகளும்,

(7) சாக்கிரதுரியாதீதத்திற் சிவதத்தும் என்னும் ஒரு கருவியும் கலாதிகளைச் செலுத்திநிற்கும்.

(8) அந்தச் சாக்கிராதி அவஸ்தைகள் கருவிகளால் விஷயங்களை அறியும் செய்கைதோறும் அதிநுட்பமாய் இடையீடின்றி நிகழ்வதை நுண்ணுணர்வினாற் காண்க.

(9) சாக்கிரசாக்கிரமுதலிய ஐந்து அவஸ்தையினும் ஆன்மா அந்தக் கரணங்கள்வாயிலாக அவ்வப்பொறிகளால் அவ்வவ்விஷயங்களை உணர்ந்து அவ்வப்போது அவ்வவ்விடயங்களினின்று நீங்கும்.

(10) இங்ஙனம் சுத்தாவஸ்தையும் நின்மலசாக்கிரம், நின்மலசொப்பனம், நின்மலசுழுப்தி, நின்மலதுரியம், நின்மலதுரியாதீதம் என ஐவகைப்படும்.

## நான்காஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

ஆன்மாவானது மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களுள் ஒன்றன்று என்றும், அகாராதிசூக்கும பஞ்சாக்கரத்துள்ளே அகாரமுதலிய நான்கினாற் குறிக்கப்படுவன அகங்காரமுதலிய அந்தக்கரணம் நான்குமாம் என்றும், இறுதிக்கண்ணதாகிய நாதத்தினாற் குறிக்கப்படுவது ஆன்மாவாம் என்றும், இந்த அகாரமுதலிய ஐந்தும் பிரமன்முதலிய ஐவராலும் செலுத்தப்படுவனவாம் என்றும், கணந்தோறும் நினைப்பாகிய சகலமும் மறப்பாகிய கேவலமும் அதிநுட்பமாய்க் காற்றாடிபோல மாறிமாறி நிகழும் என்றும், சகலாவஸ்தையின்கண்ணே கணந்தோறும் அவ்வாறு அறிவு தோற்றியும் ஒடுங்கியும் வருவது கடலின்கண்ணே புதிது புதிதாய்த் திரைதோன்றியும் ஒடுங்கியும் வருதல் போலுமாம் என்றும், மலத்தின் சொரூபமும் தடஸ்தமும் இது இதுவாம் என்றும், ஆன்மாவின்மாட்டு மலமானது செம்பிற் களிம்புபோல அநாதிக்கண்ணுளதாம் என்றும், மலத்தினால் மறைப்புண்ட ஆன்மாவின் ஞான இச்சாக் கிரியைகளை (மாயாதத்துவ கருவிகளாகிய) வித்தை, இராகம், கலை என்பன தீபத்தையும் உபநேத்திரத்தையும் நிகர்த்து விளக்குவனவாம் என்றும், சகஜமலம் ஆணவம் என்றும், ஆகந்துகமலம் மாயாகாரிய உடம்புமுதலிய என்றும், ஆன்மாவானது கேவலாவஸ்தை, சகலாவஸ்தை, சுத்தாவஸ்தைகளிற் சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி, துரியம், துரியாதீதம் என ஐவகை அவஸ்தைகளை அடையும் என்றும், ஆன்மாவானது நெற்றித் தானமாகிய ஜாக்கிரத்தினின்றும் மூலாதாரத்துத் துரியாதீதம் இறுதியாகிய ஐந்து அவஸ்தைப்படுதலாகிய கேவலாவஸ்தை இந்த நான்காஞ் சூத்திரத்தினாற் கூறப்பட்டதாம் என்றும், சகலாவஸ்தை ஐந்தாஞ் சூத்திரத்தினாலும், சுத்தாவஸ்தை ஆறாஞ் சூத்திரத்தினாலும் கூறப்படும் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

---

## நான்காஞ் சூத்திரப்பரீக்ஷை வினுக்கள்.



க. நான்காஞ் சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக்கருத்துரை யாது? ரு.

ங. அதன் பொருள் யாது? சு.

ச. சூத்திரப்பிண்டப் பொருள் யாது? எ.

ரு. ஆன்மாவின் தடஸ்தலக்ஷணம் யாது? அ.

சு. முதலாஞ் சூர்ணிகை யாது? கூ.

எ. அதன் பொருள் யாது? க0.

அ. வாயிற்காட்சியாவது யாது? கக, (1).

கூ. மானசக்காட்சியாவது யாது? கக, (2).

க0. தன்வேதனைக்காட்சியாவது யாது? கக, (3).

கக. வாயிற்காட்சி முதலியன எதுபோல ஆன்மாவில் வந்து தோன்றும்? கக, (4).

கஉ. பரம்பரையாகத் தோன்றுதல் என்றதின் பொருள் யாது? கக, (4)

கங. ஆன்மாமனமுதலியவற்றுக்கு வேறு என்றமையால் எவன் மறுக்கப்பட்டான்? கக, (4).

கச. வாயிற்காட்சியும் மானசக்காட்சியும் எதனையும், ஆன்மா எதனையும் ஒப்பன? கஉ.

கரு. சூக்கும பஞ்சாக்கரங்கள் யாவை? கங.

கசு. அகாராதி பஞ்சாக்ஷரங்கள் பகுக்கப்படாது நிற்குங்கால் எங்ஙனம் பெயர் பெறும்? கங.

கஎ. காலதத்துவம் எங்ஙனம் பாகுபாடு செய்கின்றது? கச, (1).

கஅ. காலதத்துவம் ஞாயிறு முதலியவற்றுக்கு வேறு? வேறின்று? கச, (1).

ககூ. சப்தாதி விஷயங்களை ஆன்மா அறியுமாறு அதனைச் செலுத்தும் சூக்கும பஞ்சாக்கரம் யாது? கச, (2).

உ0. அந்த அக்ஷரத்துக்கு அதிதெய்வம் யாது? கச, (2).

உக. சித்தத்தைச் செலுத்தும் அக்ஷரம் யாது? அதற்கு அதிதெய்வம் யாது? கச, (3).

உஉ. ஆன்மா சித்தமாய் நின்று யாது செய்யும்? கச, (3).

உங. மனசைச் செலுத்தும் அக்ஷரம் யாது? அதற்கு அதிதெய்வம் யாது? கச, (4).

உச. ஆன்மா மனசாய் நின்று யாது செய்யும்? கச, (4).

உரு. அகங்காரத்தைச் செலுத்தும் அக்ஷரம் யாது? அதற்கு அதிதெய்வம் யாது? கச, (5).

உசு. ஆன்மா அகங்காரமாய் நின்று யாது செய்யும்? கச, (5).

உஎ. புத்தியைச் செலுத்தும் அக்ஷரம் யாது? அதற்கு அதிதெய்வம் யாது? கச, (6).

உஅ. ஆன்மா புத்தியாய் நின்று யாது செய்யும்? கச, (6).

உகூ. ஆன்மா அந்தக்கரணங்களுக்கு வேறு? வேறின்று? கச, (7).

௩0. ஆன்மா என்றதின் பொருள் யாது? கரு.

௩க. மனமுதலியவற்றுக்கும் கலாதிகளுக்கும் பேதம் என்னை? கரு.

௩உ. இரண்டாஞ் சூர்ணிகை யாது? கசு.

௩௩. அதன் பொருள் என்னை? கஎ.

௩ச. ஆகந்துகமலம் என்றது எது? கஅ.

௩ரு. ஆகந்துகமலம் என்றதின் பொருள் யாது? கஅ, (*).

௩சு. ஆன்மா ஒரு விஷயத்தையும் அறியுமாற்றலின்றி யிருப்பது எப்போது? கஅ.

௩எ. ஆன்மாவைச் சகஜமலமாகிய ஆணவம் எதுபோலப் பற்றியது? கஅ.

௩அ. விறகும் சூரிய காந்தமும் எதனை உள்ளே மறைத்து வைத்தன? கஅ.

௩கூ. மாயை எக்கருவிகள்வாயிலாக ஆன்மாவுக்கு அறிவை விளக்குகின்றது? ககூ.

ச0. மாயையின் செய்கை யாது? ககூ.

சக. மலத்தின் செய்கை யாது? ககூ.

சஉ. ஆணவமலம் எதனை நிகர்க்கும்? ககூ.

௪௩. மாயேயம் எதனை நிகர்க்கும்? ௧௯.

௪௪. மலத்தின் சிறப்பிலக்கணம் யாது? ௨௦.

௪௫. மலத்தின் தடஸ்தலக்ஷணம் யாது? ௨௧.

௪௬. சமயவாதிகள் மலத்தை எப்பெயரிட்டு வழங்குகின்றார்கள்? ௨௨.

௪௭. ஆணவமலத்தின் இலக்ஷணம் யாது? ௨௩, ௨௫.

௪௮. முதல்வராகிய சிவபிரானது இயற்கை யாது? ௨௬.

௪௯. ஆன்மாவின் வினை யாது? ௨௬.

௫௦. சிவனாரது எண்குணங்கள் யாவை? ௨௬.

௫௧. ஆன்மாவின் எண்குணங்கள் யாவை? ௨௬.

௫௨. சிவனாரது எண்குணங்களுள்ளே எந்தக் குணம் அவர் அநாதியே மலத்தினின்று நீங்கி நிற்றலை உணர்த்துகின்றது? ௨௬.

௫௩. ஆன்மாவின் எண்குணங்களுள்ளே எந்தக் குணம் அவன் அநாதியே மலத்தினாற் பந்திக்கப்பட்டிருத்தலை உணர்த்துகின்றது? ௨௬.

௫௪. சிவபிரான் நிர்மலராதலையும், ஆன்மாக்கள் மலமுடையனவாதலையும் உணர்த்துதற்குப் பிரமாணங்கள் யாவை? ௨௮, ௩௦.

௫௫. ஆன்மாவைச் சமயவாதிகள் எங்ஙனம் கூறுகின்றார்கள்? ௩௧.

௫௬. மூன்றாஞ் சூர்ணிகை யாது? ௩௨.

௫௭. அதன் பொருள் யாது? ௩௩.

௫௮. சகலத்தினின்று கேவலத்தையுறுங்கால் சாக்கிரத்தானமாகிய இலாடத்தில் ஆன்மா எத்தனை கருவிகளோடு நிலையுறும்? ௩௪, (1).

௫௯. சொப்பனத்தானமாகிய கண்டத்தில் எத்தனை கருவிகளோடு நிலையுறும்? ௩௪, (2).

௬௦. சுழுத்தியில் எத்தனை கருவிகளோடு நிலையுறும்? ௩௪, (3).

௬௧. துரியத்தில் எத்தனை கருவிகளோடு நிலையுறும்? ௩௪, (4).

௬௨. துரியாதீதத்தில் எதுமாத்திரம் தொழிற்படும்? ௩௪, (5).

௬௩. சாக்கிராவஸ்தையிலே ஆன்மா செவி முதலிய ஞானேந்திரியங்களின்வாயிலாக விஷயங்களை அறியுங்கால், அந்த ஞானேந்திரியவர்க்கங்கள் எங்ஙனம் உருவகஞ் செய்யப்பட்டுள்ளன? ௩௪, (1).

சுச. கன்மேந்திரியங்கள் எங்ஙனம் உருவகஞ் செய்யப் பட்டுள்ளன? ரு-ச, (1).

சுரு. சப்தாதிவிஷயங்கள் எங்ஙனம் உருவகஞ் செய்யப் பட்டன? ரு-ச, (1).

சுசு. தசவாயுக்களின் நிறம் யாது? ரு-ச, (1).

சுஎ. தசவாயுக்கள் எங்ஙனம் உருவகஞ் செய்யப்பட்டுள்ளன? ரு-ச, (1)

சுஅ. அந்தக்கரணங்கள் எங்ஙனம் உருவகஞ் செய்யப் பட்டன? ரு-ச, (1).

சுகூ. இலாடத்தானத்தினின்று ஆன்மா ஐந்து அவஸ்தையுறுமா? ரு-எ, (2).

எ0. சாக்கிரசாக்கிரத்தில் எந்தத் தத்துவங்கள் (ஆன்மாவின் அறிவு முதலியவற்றை விளக்குகின்ற) கலாதிகளைச் செலுத்தும்? ரு-எ, (3).

எக. சாக்கிரசொப்பனமுதலியவற்றில் எத்தனை எத்தனை கருவிகள் நிலையுற்றுக் கலாதிகளைச் செலுத்தும்? ரு-எ, (4, 5, 6, 7).

எஉ. சுத்தாவஸ்தை எத்தனை வகைப்படும்? ரு-எ. (10)

## பொதுவதிகாரம்.

### பாசலக்ஷணவியல்.

## ஐந்தாஞ் சூத்திரம்.

க. விதந்த்யக்ஷாணிபும்ஸாத்தாந்ஸ்வயம்ஸோபிஸம்புநா|
தத்விகாரீஶிவஶ்ஶேந்காந்தோயோவத்ஸதம்நயேத்||

விதந்தியக்ஷாணிபும்சார்த்தாந்நஸ்வயம்சோபிசம்புநா।
தத்விகாரீசிவச்சேந்நகாந்தோயோவத்சதம்நயேத்॥

உ. (இ-ள்.) பும்ஸா அக்ஷாணி அர்த்தாந் விதந்தி = ஆன்மாவினாலே செலுத்தப்பட்டு இந்திரியங்கள் விஷயங்களை அறிகின்றன; ஸ்வயந்விதந்தி = தாமே அறியமாட்டா; (அதுபோல) ஸம்புநா ஸ: அபி வெத்தி = சிவபெருமானாலே (செலுத்தப்பட்டு) ஆன்மாவும் (அனைத்தையும்) அறியும்; ஸ்வயம் ந வெத்தி = (அது) தானே அறியமாட்டாது; ஶிவ: விகாரீ ஊதி செத் = (அதனால்) சிவன் விகாரியாவாரோ எனின்; ஸ: = அவர்; காந்த: அயவத் = காந்தம் (விகாரமின்றி நின்று) இரும்பை (வலித்தல்) போல; தம் நயெத் =

ஆன்மாவை (சங்கற்பமாத்திரையினல்) செலுத்துவர்; தகைந = அதுபற்றி (விகாரமுறுவா)ரல்லர்.

ந. விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

ச. (இ—ள்.) விளம்பிய உள்ளத்து = (மேலே) கூறப்பட்ட ஆன்மாவினல்; மெய் வாய் கண் மூக்கு = மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன; அளந்து அறிந்து அறியா = தத்தமக்குள்ள விஷயங்களை (இஃதின்னதென்று) அளவிட்டறிந்தும் (தம்மையும், தம்மை அதிஷ்டித்துச் செலுத்தும்) ஆன்மாவையும் அறியமாட்டா; ஆங்கு அவைபோல=அந்த இந்திரியங்கள்போல; தாம் தம்முணர்வின் = (ஆன்மாக்களாகிய) தாம் தமது அறிவிற்கு வியஞ்சகமாகிய; தமி அருள் = முதல்வனது திரோதானசத்தியை (அறியமாட்டா); அவை காந்தம் கண்ட பசாசத்து = அவ்வான்மாக்கள் (அவ்வாறு உணர்தல்) காந்தத்தை (எதிர்ப்பட்ட) இரும்புபோலாம்.

ரு. (க. ரை.) ஆன்மாக்களிடத்துச் சிவபெருமான் செய்யும் முதல் உபகாரம் (எனப்படும் திரோதானசத்தியின் இலக்கணம்) உணர்த்துகின்றது.

சு. (க. பொ.) ஆன்மா சாக்கிரமுதலிய ஐந்து அவஸ்தைப்படும்போது, அவ்வான்மாவும் கருவிகளும் அரசனும் மந்திரியும் போல நிற்குமாயின், அவைகளே சாலுமாதலின் சிவபெருமானல் ஆகற்பாலதொன்றில்லைப் போலும் என்பாரை மறுத்து, அப்போதும் சிவபெருமானது முதல் (உதவியாகிய) உபகாரம் எனப்படும் திரோதானசத்தி இன்றியமையாது வேண்டப்படும் என்பதாம்.

எ. மாயை கன்மங்கள் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின், திரோதானசத்தியின் இலக்கணம் கூறவே, அம்மாயா கன்மங்களுடைய இலக்கணங்களும் கூறப்பட்டனவாய் முடியும்.

அ. (சூ. பி. பொ.) ஆன்மாவினல் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் தத்தம் விஷயங்களை விஷயீகரித்தவிடத்தும்; அங்ஙனம் விஷயீகரிக்கும் தம்மையும் தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வான்மாவையும் அறியுமாறின்றும்;

அங்ஙனம் ஆன்மாக்களும் சிவபெருமானது சிற்சத்தியினற் கேவலாவஸ்தையினும் சகலாவஸ்தையினும் சாக்கிரமுதலிய ஐந்து அவஸ்தைகளினின்று கன்மபயன்களை அறிந்து அநுபவிக்கும் தம்மையும் தம்மைச் செலுத்தும் திரோதானசத்தியையும் அறியமாட்டாவாம்;

காந்தத்துக்கு எதிர்ப்பட்ட இரும்பானது அதன் சன்னிதிமாத்திரையானே அக்காந்தத்தினால் இழுக்கப்படுவதுபோல, கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரையினாலே ஆன்மாக்களை அதிஷ்டிக்கும் சிவபெருமானது சந்நிதி மாத்திரத்தினால் அவ்வான்மாக்கள் இருவகை ஐந்தவத்தையினும் உணரும்; அதனாற் சிவபெருமான் விகாரமடைவாரல்லர்.

## முதலாஞ் சூர்ணிகை.

கூ. உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

க0. (சூ. பொ.) தாமரையிலையின் நீர்போலப் புருஷன் பற்றற்று நிற்ப, அவ்வான்மாவின் சந்நிதியின் புத்திதத்துவமே மெய், வாய் முதலிய ஐம்புலன்வாயிலாக அறியும் என்றும், அவ்வான்மா கருவிகளோடு கூடிப் புருஷன் என நின்று ஐந்து அவத்தையுறுதல் பொருந்ாதென்றும் கூறும் சாங்கியரை மறுத்து, ஐம்புலன்களோடும் ஆன்மா ஒற்றுமைப்பட்டு நின்றறிதலான் அவ்விந்திரியங்கள் ஒவ்வொரு விஷயங்களையும் அறிகின்றமையால், ஆன்மாவினால் ஐம்பொறித்தத்துவங்களெல்லாம் நடைபெறுகின்றன என்று வலியுறுத்தப்படும் என்பதாம்.

கக. ஆன்மா அங்ஙனம் ஐம்புலன்களோடு ஒற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும், அவ்வைம்பொறிகள் ஆன்மாவையின்றி நடைபெறாமையும் கூறப்படுகின்றன:—

க உ. (வெ. பொ.) (1) அரசனானவன் தனது அத்தாணிமண்டபத்திருந்து தன்கீழ்ச்சேவகரை அவ்வவர்க்குரிய காரியங்களிலே செலுத்தி ஆளுமாறுபோல, ஆன்மாவும் மெய் வாய் முதலிய புலன்களை அவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்திக்கொண்டு இலாடத்தானத்திருத்தலான், சேவகர்கள் ஏவிய கருமமாத்திரையேயன்றி மேற்பட்டுச் செல்லமாட்டாமைபோல, அவ்வைம்பொறிகள் ஆன்மாவை அறியமாட்டாவாயின; அங்ஙனமாயின்,

(2) ஐம்பொறிகள் ஆன்மாவினாலன்றி விடயத்தை அறியமாட்டாவாயினும், ஆன்மாவானது ஐம்பொறிகளை விடுத்து அறியமாட்டாதோ எனின், ஒரு கருமஞ் செய்தற்கு அரசனும் மந்திரிமுதலாயினோரும் தம்முள் இன்றியமையாதிருத்தல் போல, ஒரு விஷயத்தை அறிதற்கண்ணும் ஆன்மாவும் ஐம்பொறிகளும் தம்முள் இன்றியமையாவாம். இவ்வுண்மை இலாடத்தானத்தை விடுத்துச் சொப்பனத்தானத்து எய்தியவிடத்திற் காணப்படும்.

கங. இங்கே இலாடத்தானத்தில் மாயாதத்துவங்களோடு இயைந்து சிறிது அறிவு விளங்கிப் போகங்களை ஆன்மா புசித்துநிற்கும் சகலாவஸ்தை கூறப்பட்டவாறு காண்க.

## இரண்டாஞ் சூர்ணிகை.

கச. அரனலே உயிர்களெல்லாம் அறியும்.

கரு. (சூ. பொ.) ஐம்பொறி முதலிய கருவிகள் சடமாதலின், அவற்றுக்கு ஆன்மா இன்றியமையாது வேண்டப்படும். சித்தாகிய ஆன்மா சிவபெருமானது உபகாரத்தை அவாவுமென்பது பொருந்தாது; அங்ஙனம் அவாவுமெனக்கொள்ளின், அந்தச் சிவபெருமானும் பிறிதொன்றன் உபகாரத்தை அவாவுவாரெனப்பட்டு வரம்பின்றி ஓடுமாலோ எனின், அது பொருந்தாது. தத்துவங்களும் ஆன்மாவும் தமக்கொரு முதலையுடையனவாதலும் அவர்க்கு அங்ஙனம் ஓர் முதல் இல்லையாதலும் மேலே போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டமையின், ஆன்மாக்கள் சேதனமும் ஐம்பொறிகள் சடமுமாயிருக்கும் வேறுபாட்டினல் தம்முள் ஒவ்வாவாயினும், தம்மையும் தமது முதல்வராகிய சிவபிரானையும் உணரமாட்டாதிருத்தற்கண் ஐம்பொறியும் ஆன்மாவும் தம்முள் ஒக்குமாதலான், அவ்வான்மாக்கள் சிவபெருமானுலே அறிவிக்க அறியும் என்பதாம்.

கசு. ஆன்மாவினல் உணரும் இந்திரியங்களுக்கு வரும் பயன் அவற்ருேடு ஒற்றித்துக்காணும் அவ்வான்மாவுக் காயவாறுபோல, ஆன்மாவுக்கு வரும் சுகதுக்கங்கள் ஆன்மாவினேடு ஒற்றித்துக்காணும் சிவபெருமானுக்காம் என்பது ஒவ்வாதென்று கூறப்படுகின்றது:—

கஎ. (வெ. பொ.) (1) தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி।

தஸ்யபாசா சர்வமிதம் விபாதி।

(2) "அவாது (சத்திப்)பிரகாசத்தினல் ஈதெல்லாம் (பிரபஞ்சமெல்லாம்) பிரகாசிக்கின்றது" என்று கடவல்லி சுருதி கூறியவாறு, அவ்வக்காரியங்களில் உன்முகமாகும் சிவசத்தி எனப்படும் சங்கற்பமாகிய சிவனது சந்நிதியிற் பிரபஞ்சம் செயப்படுகின்றது;

(3) இங்ஙனம் கூறப்பட்ட சிவன் "மன்னுசிவன்" என்றும், இவர் பேரின்பத்துக்குக் காரணர் என்றும் கூறப்பட்டார்;

(4) தமக்கென ஓர் காரணமில்லாது ஆன்மாவின்பொருட்டு அறிகின்றனவாகிய பொறிகள் போலாகாமல்,

(5) யஃஸர்வஜ்ஞஃஸர்வவித் । மநோமயஃ ப்ராணஶரீரநேதா।

யஃசர்வஞ்ஞஃசர்வவித் । மநோமயஃ பிராணசரீரநேதா।

(6) "எவர் முற்றறிவினராய் அனைத்தையும் அறிந்துளரோ, அவர் ஞானமயராய், (ஆன்மாவின்) பிராணனையும் சரீரத்தையும் செலுத்துபவரா

யுள்ளார்" என்று முண்டகோபநிடதம் கூறுமாறு, ஆன்மாவானது தனக்குச் சிவன் காண்பித்துக்கொண்டுநிற்பத் தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை அறிந்து நிற்கும்;

(7) இங்கே கூறப்பட்ட சிவன் சொன்னசிவன் எனப்பட்டு முற்றுணர்வினர் என்னும் பொருட்டாய் ஆன்மாவுக்குக் காண்பித்துக்கொண்டு நிற்பவர் என்று பெறப்பட்டது.

(8) அங்ஙனம் ஆன்மாவுக்குக் காண்பித்துக்கொண்டு நிற்பினும், தமது சந்நிதியில் அசத்தெல்லாம் சூனியமாய் முனைக்கமாட்டாது போதலால் விசுத்ததேகர் (விஶுத்ததேஹ:) எனப்படும் மங்கலவடிவினராகிய சிவன் அவ்வான்மாவைப்போல அவற்றை அநுபவியார்.

(9) இங்கே கூறப்பட்ட சிவன் "எண்ணுஞ்சிவன்" எனப்பட்டு அசத்தை உணராமையினால், மங்கலவடிவாகிய அவரது தூயதன்மையை உணர்த்திநின்றது.

கஅ. (1) பிருதிவி நாற்கோணவடிவம்; பொன்னிறம்; இந்தப் பிருதிவியின் பகுதி நரம்பு, இறைச்சி, என்பு, மயிர், தோல் என்னும் ஐந்துமாம்.

(2) அப்பு பிறைவடிவம்; வெண்ணிறம்; அப்புவின் பகுதி நீர், மூளை, சுக்கிலம், நிணம், உதிரம் என்னும் ஐந்துமாம்.

(3) தேயு முக்கோணவடிவம்; செந்நிறம்; தேயுவின் பகுதி பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர்வேட்கை என்னும் ஐந்துமாம்.

(4) வாயு அறுகோணவடிவம்; புகைநிறம்; வாயுவின் பகுதி போக்கு, வரவு, நோய், கும்பித்தல், பரிசம் என்னும் ஐந்துமாம்.

(5) ஆகாயம் வட்டவடிவம்; நீலநிறம்; ஆகாயத்தின் பகுதி வெகுளி, மதம், மானம், ஆங்காரம், உலோபம் என்னும் ஐந்துமாம்.

(6) கந்தம் பொன்னிறம், ரசம் வெண்ணிறம், ரூபம் செந்நிறம், பரிசம் புகைநிறம், சப்தம் நீலநிறம்;

(7) உபஸ்தம் பொன்னிறம், பாயுரு வெண்ணிறம், பாணி செந்நிறம், பாதம் புகைநிறம், வாக்கு நீலநிறம்;

(8) மூக்கு பொன்னிறம், வாய் வெண்ணிறம், கண் செந்நிறம், மெய் புகைநிறம், செவி நீலநிறம்;

(9) மனம் வெண்ணிறம், புத்தி செந்நிறம், அகங்காரம் கருமைநிறம், சித்தம் வெண்ணிறம்;

(10) பிரகிருதி சங்குநிறம்;

(11) புருஷன் கருமை வெண்மைநிறம், ராகம் இருணிறம், வித்தை புகைநிறம், கலை குந்தபுஷ்பநிறம், நியதி பொன்னிறம், காலம் வெண்மை செம்மை கருமைநிறம், அசுத்தமாயை இருணிறம்;

(12) சுத்தவித்தை பொன்னிறம், ஈசுரம் இருணிறம், சாதாக்கியம் ஸ்படிகநிறம், சத்திதத்துவம் இரத்தநிறம், சிவதத்துவம் சுவேதநிறம்.

(13) அடியண்டகடாகத்து மேலுள்ள காலாக்கினிருத்திரருடைய கோயில் ஒருகோடி யோசனை; அவரது அக்கினிச்சுவாலை பத்துக்கோடி யோசனை; அதன் புகை ஐந்துகோடி யோசனை; அவரது சிங்காசன வ்யாசம் ஆயிரம் யோசனை; அதன் விலாசம் இரண்டாயிரம்யோசனை; அவர் திருமேனி உயர்வும் பதினாயிரம் யோசனை.

(14) காலாக்கினி புவனத்துக்கு மேல் இருபத்தெட்டுக்கோடி நரகம்.

(15) இதற்குமேற் கூர்மாண்டர் புவனம்.

(16) இதற்குமேல் ஆகாயவெளி ஒன்பது லக்கயோசனை.

(17) இதற்குமேற் சப்தபாதலம்.

(18) இதற்குமேற் கனிட்டபாதலம்.

(19) இதற்குமேல் ஆடகேசுவரர்புவனம்; இதற்குமேல் வெளி.

(20) இதற்குமேல் ஆதிசேஷனால் தாங்கப்படும் பூமி.

(21) பூமியிற் சம்புத்தீவுமுதலிய சப்த தீவுகளும், உவர்க்கடல்முதலிய சப்த சமுத்திரங்களும் உள்ளன.

(22) பிருதிவிதத்துவம் நூறுகோடி யோசனை நீளம் அகலம் உயரமுடையதாய் ஆயிரகோடி அண்டமுடையது.

(23) இந்தப் பிருதிவி தத்துவத்திற் பத்துமடங்கு விரிவுடையது அப்பு, இதிற் பத்துமடங்கு தேயு, இதிற் பத்துமடங்கு வாயு, இதிற் பத்துமடங்கு ஆகாசம், இதிற் பத்துமடங்கு (ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன்மாத்திரை, மனங்கள் அடங்கிய) அகங்காரம், இதிற் பத்துமடங்கு புத்தி, இதிற் பத்துமடங்கு குணம், இதிற் பத்துமடங்கு பிரகிருதி;

(24) இதில் நூறுமடங்கு இராகம்; இதில் நூறுமடங்கு வித்தை; இதில் நூறுமடங்கு நியதி, இதில் நூறுமடங்கு கலை, இதில் நூறுமடங்கு காலம், இதில் நூறுமடங்கு அசுத்தமாயை;

(25) இதில் ஆயிரமடங்கு சுத்தவித்தை, இதில் ஆயிரமடங்கு ஈசுவர தத்துவம், இதில் ஆயிரமடங்கு சாதாக்கியதத்துவம்,

(26) இதில் இலக்ஷமடங்கு சத்திதத்துவம், இதில் இலக்ஷமடங்கு சிவதத்துவம்.

ககூ. இங்ஙனம் கூறப்பட்ட பிருதிவி முதலிய தத்துவப் பிரபஞ்ச மனைத்தையும் ஆன்மாவானது அசத்தாகிய ஜடமென்று காண்டல் தத்துவ தரிசனம்.

உ0. சிவபெருமான் அறிவிக்க அறியுங்கால்; ஆன்மாவானது சிவ பெருமானின் வேறாய் நின்று உணருமோ? ஒன்றாய் நின்றுணருமோ? எனின், அவ்விரு தன்மையுமின்றி நிற்குமாறு கூறுதும்:—

உக. (வெ. பொ.) சூரியப்பிரகாசத்துள் அடங்கி, அதற்கு வேறாய் விளங்கித் தோன்றுதலும், அதுவா யொழிதலுமில்லாத நக்ஷத்திரங்கள் அச் சூரியனாலே ஒளியை உடையவாமாறுபோல, கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், தீண்டியும் அறியப்படும் ஐம்புல விஷயங்களையும் ஆன்மாவானது சிவபெருமான் அறிவித்தலாகிய முதலுபகாரம் எனப்படும் சூக்குமபஞ்ச கிருத்தியஞ் செய்யுங்கால், உணர்ந்து அவருக்கு வேறாதலும், ஒன்றாதலு மின்றி, அவ்விரண்டிற்கும் பொதுவாய் அவருள் அடங்கி உடனாய் நிற்குமாம் என்க.

உஉ. ஆன்மாக்களுக்குப் பலபிரகாரமாக அறிவு நிகழுகின்றமையான், அது சிவபெருமான் அறிவிக்கும் வேறுபாட்டினாலாயதெனல்வேண்டும்; அங்ஙனமாயின் அவர் நிர்விகாரி எனப்படுதல் போய், விகாரி எனப்படு வாரோ? எனின், அவர் விகாரியாகார் எனக் கூறப்படுகின்றது:—

உஙு. (வெ. பொ.) (1) ஆன்மாக்களுடைய பசுத்துவத்தை ஒழித் துச்*சிவத்துவத்தை விளக்குதற்கு உளதாகிய இரக்கம் சிவபெருமானுக்கு அநாதிக்கண்ணதேயாம்; அந்த இரக்கம் எனப்படும் அருள் பிறிதோர் பொருளன்று; சிவபெருமானுக்குளதாகிய சத்தியேயாம்; (இதற்குச் சுருதிப் பிரமாணம் சிறப்புப் பாயிரத்து ஙஉ – ம் பிரிவிற் காண்க.)

(2) இரக்கம் குணம்; அவ்விரக்கக் குணத்தையுடைய சிவபெருமான் குணி; அவ்வருட் குணம் அவரை விட்டில்லை, அவரும் அவ்வருளை விட்டிலர். இவ்வுண்மை,

(3) 𑌗𑍁𑌣𑌭𑍂𑌤𑌾 𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌗𑍁𑌣𑍀 𑌶𑌿𑌵𑌃।

குணபூதா பராசக்திஸ் ததாசிரயகுணீ சிவ:।

(4) "பராசத்தியார் குணம், இவர்க்குப் பற்றுக்கோடாயுள்ளார் குணி யாகிய சிவன்" என்று காலோத்தராகமம் கூறுகின்றது. சித்தாந்த நெறியுணர்ந்த ஞானக்கண்ணுடையார் உணர்வுக்கு, ஞாயிறு தன் ஒளியோடு தாதான் மியமாய் ஒற்றித்து நிற்குமாறுபோல, சிவபெருமான் அவ்வருளோடு தாதான்

மியமாய் இயைந்து நிற்பார் என்பது இனிது புலப்படும்; ஆதலாற் சுவதந்திர ராகிய அந்தச் சிவபெருமான் நிர்விகாரியாய் நின்றே தமது சத்தி சங்கற்ப மாத்திரையினுல் அனைத்தையுஞ் செய்யவல்லராம்;

(5) 𑌅𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇𑌷𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍।

அநவஸ்திதேஷ்வவஸ்திதம்।

(6) "விகாரமுறுபவற்றுள்ளே, அவர் விகாரமுருதவர்" என்று கடவல்லி சுருதி கூறினமையால், அவர் விகாரியாவாரில்லை என்று அறியப்படுகின்றது.

## ஐந்தாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

ஆன்மாவினுலே ஐம்புலன்கள் விஷயங்களை விஷயீகரிக்கும் என்றும், அங்ஙனம் விஷயீகரிக்கினும் அவ்விந்திரியங்கள் தம்மையும் தம்மை உஞற்றும் ஆன்மாவையும் உணரமாட்டா என்றும், சிவபெருமானுலே ஆன்மாவானது சகலாவஸ்தையிலே நின்று வினைப்பயன்களை அநுபவித்தும் அங்ஙனம் அநுபவிக்கும் தம்மையும் அங்ஙனம் அநுபவிக்குமாறு செலுத்தி நிற்கும் திரோதானசத்தியையும் உணரமாட்டா என்றும், ஒரு கருமஞ் செய்தற்கு அமைச்சரும் அரசரும் தம்முள் இன்றியமையாது ஒற்றித்து நிற்றல்போல, ஒரு விஷயத்தை விஷயீகரித்தற்கண்ணே ஆன்மாவும் இந்திரியங்களும் இன்றியமையாது ஒற்றித்து நிற்பனவாம் என்றும், ஆன்மாவானது சிவபெருமான் உபகாரத்தை அவாவுமாறுபோல, சிவபெருமான் தமக்கு மற்றென்றின் உபகாரத்தை அவாவுவாரல்லர் என்றும், அவர் சன்னிதிக்கண்ணே அசத்தாகிய பொறி முதலிய கருவிகள் முனைக்கமாட்டா என்றும், அதனுல் அவர் புலன்களால் எய்தும் விஷயங்களை அநுபவிப்பாரல்லர் என்றும, ஆன்மாக்கள் சிவபெருமான் அறிவிப்ப அறிவனவேயாயின், அவ்வான்மாக்கள் அவருக்கு வேருய் நின்று அறியாமலும், ஒன்ருய் நின்று அறியாமலும், பொதுவாய் அவரோடுடனுய் நின்றறியும் என்றும், சிவபெருமான் தமக்கு அநாதிக்கண்ணதாகிய இரக்கம் எனப்படும் அருட்சத்தியினின்று பிரியாதுளராகலின், ஆன்மாக்களுக்கு அங்ஙனம் உணர்த்துங்கால் தம்வயமுடைய அவர் ஓர் காலும் விகாரம் எய்தாது நிர்விகாரியாய் நிற்பர் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## ஐந்தாஞ் சூத்திரப் பரீக்ஷைவினுக்கள்.

க. ஐந்தாஞ் சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக் கருத்துரை யாது? ரு.

௩. அதன் பொருள் யாது? ௬.

௪. சூத்திரப் பிண்டப்பொருள் யாது? அ.

௫. முதலாஞ் சூர்ணிகை யாது? ௯.

௬. இதன் பொருள் யாது? ௧௦.

எ. ஆன்மா எவனைப் போலிருந்து பொறிகளை விடயங்களிற் செலுத்துகின்றது? ௧௨, (1).

அ. சேவகர் எதின்மாத்திரஞ் செல்வர்? எதிற் செல்லமாட்டார்? ௧௨, (1).

௯. சேவகர்களைப்போலப் பொறிகள் எதனை அறியமாட்டா? ௧௨,(1).

௧௦. எதன் சகாயத்தினால் ஐம்பொறிகள் விஷயங்களை அறிகின்றன? ௧௨, (2).

௧௧. அங்ஙனமாயின் ஐம்பொறிகளை விடுத்து ஆன்மா விஷயங்களை அறியமாட்டாதா? ௧௨, (2).

௧௨. எவரைப்போல ஆன்மாவுக்கு ஐம்பொறிகள் இன்றியமையாதன? ௧௨, (2).

௧௩. ஆன்மா எந்த அவஸ்தையிலிருந்து போகங்கள் துய்க்கும்? ௧௩.

௧௪. இரண்டாஞ் சூர்ணிகை யாது? ௧௪.

௧௫. அதன் பொருள் யாது? ௧௫.

௧௬. இந்திரியங்கள்வாயிலாக வரும் பயன் எதற்கு ஆகின்றது? ௧௬.

௧எ. அங்ஙனம் ஆன்மாவுக்கு வரும் இன்பதுன்பங்கள் சிவனுக்காமோ? ௧௬.

௧அ. சிவசன்னிதி என்றது யாது? ௧எ, (2).

௧௯. சங்கற்பம் என்றது யாது? ௧எ, (2).

௨௦. சிவனார் சந்நிதியில் எது நடை பெறுகின்றது? ௧எ, (2).

௨௧. சங்கற்பமாத்திரத்தினால் உலகத்தை இயக்குங்கால், அவர் எங்ஙனம் பெயர் பெறுவர்? ௧எ, (3).

௨௨. அதற்குச் சுருதிப்பிரமாணம் யாது? ௧எ, (2).

௨௩. அவர் எதற்குக் காரணர்? ௧எ, (3).

உச. ஆன்மா தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை அறியுமாறு காட்டிக்கொண்டு நிற்பவர் யாவர்? கள, (6).

உரு. அதற்குச் சுருதிப்பிரமாணம் யாது? கள, (6).

உசா. இங்ஙனம் காட்டிக்கொண்டு நிற்குங்காற் சிவபிரான் எங்ஙனம் பெயர் பெறுவர்? கள, (7).

உள. ஆன்மாவுக்குக் காட்டிக்கொண்டு நிற்பினும் அவர் அசத்தை அநுபவிப்பாரா? கள, (8).

உஅ. அசத்தை அநுபவியார் என்பது எங்ஙனம் அறியப்படுகின்றது? கள, (8).

உகூ. அங்ஙனம் அநுபவியாது இருக்கும் சிவன் யாது பெயர் பெறுவர்? கள, (9).

ஙo. பிருதிவிமுதற் சிவதத்துவாந்தம்வரையுமுள்ள தத்துவங்களின் வடிவு நிறங்களைக் கூறுக? கஅ, (1—12.)

ஙக. அடியண்டகடாகத்துள்ளார் யார்? கஅ, 13.

ஙஉ. காலாக்கினி புவனத்துக்கும் பூமிக்கும் இடையில் எவை உள்ளன? கஅ, (14, 20.)

ஙங. பூமியில் எத்தனை தீவுகளும் எத்தனை சமுத்திரங்களும் உள்ளன? கஅ, (21.)

ஙச. பிருதிவிதத்துவம் எத்தனைகோடியோசனை நீளம் அகலம் உயரங்களையுடையது? ககூ, (22.)

ஙரு. பிருதிவிதத்துவத்தில்எத்தனை அண்டங்கள் உள்ளன? கஅ, (22.)

ஙசா. பிருதிவியினும் பத்துப் பத்துமடங்காக மேலோங்கிநிற்கும் தத்துவங்கள் யாவை? கஅ, (23.)

ஙஎ. பிரகிருதியினும் நூறு நூறுமடங்காக விரிந்தோங்கிநிற்கும் தத்துவங்கள் யாவை? கஅ, (24.)

ஙஅ. அசுத்தமாயையினும் ஆயிரம் ஆயிரமடங்காய் விரிந்து ஓங்கி நிற்கும் தத்துவங்கள் யாவை? கஅ, (25.)

ஙகூ. சாதாக்கியத்தினும் இலக்ஷமடங்காக விரிந்தோங்கி நிற்கும் தத்துவங்கள் யாவை? கஅ, (26.)

சo. தத்துவதரிசனம் என்பது யாது? ககூ.

சக. சிவபெருமான் அறிவிக்க ஆன்மா ஒன்றை அறியுங்கால், அவ்வான்மா அவரின் வேறாய் நின்று உணருமா? அல்லது ஒன்றாய் நின்று உணருமா? உ0.

சஉ. ஆன்மாவுக்குச் சிவபெருமான் அறிவித்தலாகிய முதலுபகாரஞ் செய்யுங்கால், அது அவருக்கு வேறாதலும் ஒன்றாதலுமின்றி இரண்டற்கும் பொதுவாய் அவருள் அடங்கி உடனாய் நிற்றலை விளக்குதற்கு விடுத்த உவமை யாது? உக.

சங. இங்ஙனம் உணர்த்தும் உபகாரம் யாது பெயர் பெறும்? உக.

சச. அங்ஙனம் சிவபிரான் அறிவிக்க ஆன்மாவுக்குப் பலபிரகாரமாய் அறிவு நிகழ்கின்றமையின், அவர் விகாரம் எய்துவாரா? உஉ.

சரு. அதற்குச் சுருதிப்பிரமாணம் யாது? உங, (6).

சசு. யாதுபற்றி அவர் விகாரமுறார்? உங, (4).

சஎ. ஆன்மாக்களுக்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்கவேண்டும் என்னும் இரக்கம் எப்போதுள்ளது? உங, (1).

சஅ. அதற்குச் சுருதிப் பிரமாணம் யாது? உங, (1).

சகூ. அந்த இரக்கம் யாது? உங, (1),

ரு0. இரக்கமாகிய சத்தி குணமாயின் குணி யார்? உங, (2).

ருக. இதற்குப் பிரமாணம் யாது? உங, (4).

ருஉ. சிவபெருமான் எதுபோல அந்த அருட்சத்தியோடு இயைந்து நிற்பர்? உங, (4).

---

## பொதுவதிகாரம்.

### பதியிலக்கணவியல்.

## ஆருஞ் சூத்திரம்.

௧. 𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌦𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌜𑍍𑌜𑌡𑌿𑌮𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌶𑌂𑌭𑍋𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃॥

அதிர்ச்யம் சேதசத்பாவோ திருசியஞ் சேஜ்ஜடிமாபமேவத்।
சம்போ ஸ்தத்வியதிரேகேண ஞேயம் ரூபம் விதுர்புதா:॥

௨. (இ-ள்.) 𑌶𑌂𑌭𑍋𑌃 𑌰𑍂𑌪𑌂 = சிவனர் சொரூபமானது; 𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌤𑍍 = (ஒருவாற்ருனும்) அறியப்படாததாயின்; 𑌤𑌸𑍍𑌯 𑌅𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌃 𑌭𑌵𑍇𑌤𑍍 = அதற்கு (முயற்கோடுபோல) இலதாம் தன்மை உளதாம்; 𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌤𑍍 = (கடமுதலியபோலச் சுட்டி) அறியப்படுவதாயின்; 𑌤𑌸𑍍𑌯 𑌜𑌡𑌿𑌮𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 = அதற்குச் சடத்தன்மை உளதாம்; 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 = (அறியப்படாமையும் அறியப்படுகையுமாகிய) அவ்விரண்டுக்கும் வேருய் (பதிஞானத்தினல்); 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 இதி 𑌬𑍁𑌧𑌾𑌃 𑌵𑌿𑌦𑍁𑌃 = (அச்சிவசொரூபம்) அறியற்பாலதென்று அறிஞர் அறிகின்ருர்கள்.

௩. உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

௪. (இ-ள்.) உணர் உரு எனின் அசத்து = முதல்வர் அறியப்படும் பிரபஞ்சம் போல்வர் எனின் அசத்தாவர்; உணராது எனின் இன்மை = (ஒருவாற்ருனும்) அறியப்படாதவராயின், சூனியப்பொருளாம்; இன் = ஆதலின்; இருதிறன் அல்லது = (இருபகுதியு) மின்றி; இரண்டு வகையின் சிவசத்தாமென = (ஒருவாற்ருன் அறியப்படாமையும் ஒருவாற்ருன் அறியப்படுதலுமாகிய) இரண்டுவகையானும் சிவசத்தாமென்று; உலகு இசைக்குமன் = மெய்யுணர்வுடையர் கூறுவர்.

௫. (க. ரை.) சத்தும் அசத்தும் வரைசெய்துணர்த்துகின்றது.

௬. (க. பொ.) மேலைந்து சூத்திரங்களினுல் உணர்த்தப்பட்ட பொருள்களுள்ளே சத்தினியல்பையும் அசத்தினியல்பையும் மயக்கமுருவண்ணம் முடிவுசெய்துரைத்து, இலக்கணவியலிலே கூறப்படாது எஞ்சிநின்ற பதிப்பொருளிலக்கணம் கூறப்படுகின்றதென்பதாம்.

எ. (சூ. பி. பொ.) சிவபெருமான் பாசஞானம் பசுஞானங்களால் அறியப்படுவாரேல், அவர் அங்ஙனம் அறியப்படும் அசேதனப் பிரபஞ்சம் போல அழிபொருளாகிய அசத்தாய் முடிவர்; எப்பிரகாரத்தாலும் உணரப் படாத பொருளாவாரெனின், அவர் முயற்கோடு, ஆமைமயிர்க்கம்பலம் போலச் சூனியப்பொருளேயாவர். ஆதலான் இவ்விருவியல்புமின்றி ஒரு வாற்ருற் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாத சிவமாயும், ஒருவாற் ருற் பதிஞான மொன்றினுல் அறியப்படும் சத்தாயும் இருக்கும் இருவகையா லும் அவர் சிவசத்தேயாவர் என்பர் மெய்யுணர்விலோங்கினோர்.

## முதலாஞ் சூர்ணிகை.

---

அ. உயிர்அறிவினுலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

கூ. சத்தாகிய பிரபஞ்சம் சுட்டப்படுதன்மாத்திரத்தினுல் அதனை அசத்தென்று கூறுதல் சற்காரியவாதத்துக்கு ஏலாதாமெனின், அந்தச் சுட்டுப்பொருள்கள் இராசசகுணமிகுதியினுல் உள்ளதென்றறியும் உணர் வைப் பிறப்பித்து நிற்கும், பின் அவை தாமசகுணமிகுதியினுல் இல்லை என்னும் உணர்வைப் பிறப்பித்து நிற்கும். ஆதலான், இங்கே அறிவினுல் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் அசத்து என்பதாம்.

கூ0. ந ஸஸஷாஸீ்ஞோ ஊதி ஸஷாஸீஜ்|

ந அசதாசீந்நோ இதி சதாசீத்।

கக. "(மகாப்பிரளயகாலத்திலே அசத்துமில்லை, சத்தும் இல்லை" என்று இருக்குவேதம் கூறிய மந்திரத்துக்கு நீலகண்டசிவாசாரியர் பொருள் கூறுங்காற் சத்தாகிய பசுவினதும், அசத்தாகிய பாசத்தினதும் சொரூப சத்து நிஷேதிக்கப்படவில்லை என்றும், பின் நாமரூபவிபாகத்துக்கு அருகமா கிய ஸ்தூலரூபமே நிஷேதிக்கப்பட்டது என்றும்" அருளிச்செய்திருக்கின்ரு ராதலின், காரியாவஸ்தையில் தூலமாய் விளங்கிநின்ற பிரபஞ்சம் காரணு வஸ்தையிற் சூக்குமமாகிய சத்திவடிவாய் விளங்காது நிற்கும் வேறுபாடு பற்றியே பிரபஞ்சம் அசத்தெனப்பட்டதென்றுணர்க.

கஉ. பதியினது தடஸ்தலக்ஷணம் எனப்படும் பொதுவியல்பு இரண் டாஞ் சூத்திரத்து எ-ம் பிரிவிற் புனருற்பவம் கூறுமுகத்தாற் கூறப்பட்டது. அப்பதியின் சொரூபலக்ஷணம் எனப்படும் சிறப்பியல்பு இந்த ஆறும் சூத்தி ரத்தினுற் கூறப்படுகின்றது. சிவபெருமான் சித்து சத்து எனப்படலால், அவர்க்குரிய ஏனைய சொரூபத்துக்குளவாய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இந்த இரண்டனுள்ளே அடங்கும்.

கங. பசுபாசங்களின் சிறப்பியல்புகள் சிவஞானத்தினுலேதான் அறியப்படும். அங்ஙனமாயினும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும நான்கும் ஒரு விஷயத்தை அறிதற்குக் கருவியாக மருவி, இவைகளே கர்த்தா என்றுரைக்குமாறு ஆன்மாவோடு ஒற்றித்துநின்று நிகழ்வனவாம். கண்ணுக்கு விளக்குப்போல இவைகள் ஆன்மாவுக்குக் கருவிகளாய் வேறுநிற்பன என்றறிந்து நீங்கிநின்று, இவற்றைக்கொண்டு அறியும் கருத்தாவினுண்மை யாது என்று ஆராய்ந்தார்க்கு ஆன்மசொரூபம் இனிது விளங்கும்; அதன் பின் அங்ஙனம் ஆராயும் அறிவு பசுஞானமாகும். இது ஆன்மாவின் பொதுவியல்பு.

கச. சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களின் பகுதியவாய சொற்பிரபஞ்சம், பிருதிவி முதல் நாதமிறுதியாகிய பொருட்பிரபஞ்சமென்னும் இவை பற்றி நிகழும் ஏகதேசஞான மனைத்தும் பாசஞானமாகும். இது பாசஞானத்தின் பொதுவியல்பாகும்.

கரு. சற்காரியவாதம் கூறும் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையன்று; பசுபாசங்கள் பொதுவியல்பு பற்றி அசத்தெனப் படுமாயினும், சிறப்பியல்பு பற்றி அவை அசத்தாகமாட்டா; பின் சத்தெனவே படும்.

கசூ. காரியப்பிரபஞ்சமனைத்தும் ஏனைப் பசுபாசங்கள்போலன்றிப் பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் இருவகை இயல்பானும் காட்சிப்புலனுய், இத்துணைப்போது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நெடுங்காலம் நிலைபெறுவதுபோற் றேன்றி, காலம் வந்தபோது விரைந்துகெட்டு மறைந்து போகுந்தன்மைத்தாதலில் அப்பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது.

கஎ. 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌦𑍀𑌰𑌿𑌤𑌮𑍍।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌾𑌨𑍍𑌤𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌦𑍀𑌰𑌿𑌤𑌮𑍍।
𑌤𑌸𑍍𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌤𑍁𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍍𑌰𑌯𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍।
𑌏𑌵𑌂𑌸𑌰𑍍𑌵𑌂𑌕𑍍𑌰𑌮𑍇𑌣𑍈𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍍𑌰𑌯𑌂𑌲𑌯𑍋𑌭𑌵𑍇𑌤𑍍॥

*பிருதிவி யாத்யாத்ம தத்வாந்த மாத்மதத்வ முதீரிதம்।*
*வித்யா தத்வாதி மாயாந்தம் வித்யாதத்வ முதீரிதம்।*
*தஸ்யோர்த்வம் சிவதத்வந்து தத்வத்ரய முதாக்ருதம்।*
*ஏவம் சர்வம் க்ரமேணைவ தத்வத்ரயம் லயோபவேத்॥*

கஅ. *"பிருதிவியாதி தத்துவம் இருபத்திநான்கும் ஆன்மதத்துவம் எனவும், வித்தியாதத்துவமுதலிய ஏழும் வித்தியாதத்துவம் எனவும், அதற்கு மேலுள்ளது சிவதத்துவமெனவும் கூறப்படும்; இங்ஙனம் இந்த மூவகைத் தத்துவமனைத்தும் கிரமமாக ஒன்றிலொன்று லயத்தை அடையும்" என்று சிந்தியவிசுவாகமம் கூறுகின்றது.*

கக. பிருதிவி முதல் மூலப்பிரகிருதி யீருகிய இருபத்திஞன்கு தத்துவங்களும் ஸ்ரீகண்டருத்திரரால் ஒடுங்கும்; மூலப்பிரகிருதிக்கு மேலுள்ள ஆறு தத்துவமும் (முப்பத்துமூன்றும் தத்துவத்தினராகிய) அனந்தேசுரரால் ஒடுங்கும். அவற்றின் மேலுள்ள சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவமும் சத்திதத்துவ சிவதத்துவத்தின்பாலராகிய லயசிவனல் ஒடுங்கும். ஏனைச் சத்திதத்துவம் சிவதத்துவம் இரண்டும் சுத்தசிவத்திஞல் ஒடுங்கும்.

உ0. இங்ஙனம் இந்தத் தத்துவமனைத்தும் இடையிலே நீங்கிவிடும் என ஆன்மா காணுதல் தத்துவசுத்தி எனப்படும்.

உக. இங்கே அபாவத்தின் இயல்பாவது பாவத்திற்கு (உள்ளது என்றதற்கு) மறுதலைப்பொருள் என்றும், அதனல் அபாவம் என்பது இன்மை என்னும் பொருளதாம் என்றும் நையாயிகர் கூறுமாறுபோல, ஈண்டு அசத்தென்னும் மொழிக்கு அசத்தாகிய (உள்ளதற்கு மறுதலைப்) பொருளாயுள்ள இன்மையாகிய சூனியமாம் எனப் பொருள் கோடற்பாற்றன்று; பிரபஞ்சமானது காரியாவஸ்தையில் தூலமாய்த் தோற்றிநின்று கண்ணுக்குப் புலப்பட்டு, பின்னர் அது விரைந்து ஒழிந்து சூக்குமரூபமாய்க் காரணவஸ்தையில் முன்னர்ப்போலப் புலப்படாது நிற்கும் என்றும், இந்த வேறுபாட்டினல், அங்ஙனம் காட்சிப்படாத சத்தாகிய காரணப்பொருளை நோக்கிக் காரியப்பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது என்றும் பொருள் கோடற்பாற்றும்;

உஉ. (வெ. பொ.) சத்தினியல்பை இங்ஙனம் அறிந்தவன் ஆராய்வானுயின், அவனுக்கு அறிவினல் அறியப்பட்ட காரியப்பிரபஞ்சமெல்லாம் அசத்தேயாகும்; அங்ஙனம் தோன்றி ஒழிந்துபோவதாகிய பிரபஞ்சம் அசத்தாய்ப் போதல் எவற்றை ஒப்பதாமெனின், அது தோன்றியபோதே மறைந்துபோகும் நீர்மேல் எழுத்தையும், முடிவுபெறுதலின்றி இடையிலே மறைந்துபோகும் கனவையும் ஒப்பதாகும்.

## இரண்டாஞ் சூர்ணிகை.



உ௩. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

உச. (சூ. பொ.) வாக்கு மனங்களால் ஒதி உணரப்படுவதாகிய பொருள் ஒன்றை அறிதற்கு எவ்வகைச் சாதனங்களும் வேண்டப்படாமையானும், ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் ஒன்று எவ்வகைச் சாதனங்களாலும் அறியப்படுமாறின்மையானும், இவ்விரண்டு தன்மையுமின்றிப் பாசஞான பசுஞானங்களைக் கடந்து சிவஞானத்திஞல் ஒற்றுமைப்பட்டுநின்று உணரும் அநுபவஞானமாத்திரைக்கே புலப்படுவது சத்தாகிய சிவமென்பதாம்.

உடு. பரப்பிரமப்பொருள் அஞ்ஞானத்தினால் ஞாதா எனவும், ஞேயம் எனவும் பகுக்கப்பட்டு, முன்னர்க் கூறப்படும் சாதனங்களால் அஞ்ஞானம் நீங்கியபோது அந்த ஞாதா, ஞேயம் என்னும் பகுப்பின்மையாற் சத்தென் றேனும், அசத்தென்றேனும் ஒரு பிரகாரத்தானும் அறியப்படுமாறின்றிக் கேவலம் ஞானமாத்திரையாய் அந்தப் பிரமப்பொருள் நிற்பதாம் என்று கூறுதல் பொருந்தாது; எங்ஙனமெனிற் கூறுதும்:—

உகூ. (வெ. பொ.) விவகாரத்திலே கருதப்பட்ட சத்துமின்றி அசத் துமின்றி ஒரு பொருள் உண்டெனில் அதற்குப் பிரமாணம் யாது? பிரமாண மில்லாத சூனியமெனின், ஒருவாற்றானும் பிரமாணமில்லாத சூனியமும், காட்சிமுதலிய பிரமாணங்களுக்கு விடயமாவதுமாகிய இரண்டும் அசத் தென்று மேலே கூறப்பட்டமையான், பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னும் சுருதிகளோடு மாறுபடுமாகலின், சாந்தோக்கியோபநிடதம், தைத்திரீய ஆரணியகமுதலியவற்றுள்ளே சத்து என்று ஓதப்படும் சுட்டறி வினால் அறியப்படாத பரமார்த்தமாகிய மெய்ப்பொருள் சைவோபநிடதங் களினும் சைவாகமங்களினும் அன்னியமின்றி அநுபவமாத்திரையிலே கோச ரிப்பதாகிய சிவனருளேயாமன்றிச் சூனியமன்றாமென்பது.

உஎ. இதனாற் கேவலம் ஞானமாத்திரையாயிருப்பது பரம்பொருள் என்று கூறும் மாயாவாதிமதம் பொருந்தாதாம் என்க.

உஅ. (வெ. பொ.) (1) ஆன்மாவினால் அறியப்படும் கருவிகளெல் லாம் அசத்தாம்; அசத்தென்று கூறவே அசித்தாதலும் பெறப்படும். கருவி களுள் எந்தக் கருவியும் சிவமாகியபொருளை அறியமாட்டாது; (இதனாற் பாசஞானத்தினால் அறியப்படமாட்டாது என்பதாம்.)

(2) கருவிகளைக்கொண்டு அறிகின்ற ஆன்மாவும் அப்பொருளை அறிய மாட்டாது? (இதனாற் பசுஞானத்தினாலும் அறியப்படாது என்பதாம்.)

(3) ஆன்மாவானது அதனை ஆராயப்புகுந்தால், அங்ஙனம் அறியப் படும் (குடமுதலிய) பொருள்கள்போல, அந்தச் சிவப்பொருளும் உணர் கின்ற ஆன்மாவுக்கு வேறாம்;

(4) ஆன்மாவுக்கு அறிவு விளங்கும் உண்மையை அறிந்தவன் தன் அறிவு அச்சிவபிரான் திருவருளில் அடங்கி, அதுவாய்நின்று அந்தத் திருவரு ளினாலே சிவத்தை அறியுமாதலான், ஏனைப்பொருள்களை அறியுமாறுபோல அச்சிவப்பொருளுக்கு வேறாய்நின்று அந்தச்சிவமாகிய முதற்பொருள் அறி யப்படுவதன்றாம்.

உகூ. இதனால் தனியாய்நின்ற முதற்பொருளை அதனோடு ஒற்றித்து நின்றே காண்டல்வேண்டும் என்னும் நையாயிகமதம் மறுக்கப்பட்டதாம்.

௩௦. (வெ. பொ.) (1) ஆன்ம அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருள்களெல்லாம் அசத்தாய் முடியுமாதலின், ஏனைப் பாவனைகள்போல மனமுதலியவற்றோடு கூடிநின்று பாவிக்கும் பாவனையானது அந்தப் பரம்பொருளாஅது அசத்தாய் முடியுமாதலின்;

(2) கருவிகளினீங்கிப் பாவிப்பதே அந்தப் பாவனையாமெனின், கருவிகளை நீங்கியவிடத்து யாதும் அறியுமாறின்றிக் கேவலாவஸ்தை வந்து தலைப்படுமாதலின், அது எண்ணமாத்திரமாய் முடியுமேயன்றி அதனால் எய்தும் காது, பயன் ஒன்றுமின்றாம் என்பது;

(3) கருவிகளைக்கொண்டும் பாவியாது, கருவிகளினீங்கியும் பாவியாது, அநிர்வசனீயமாய் (சொல்லொணாததென்றுணர்ந்து) பாவிக்கப்படுவதாமெனின், அது சூனியமாயே முடியும்;

(4) பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாகவைத்துப் பாவித்தால் என்னை எனின், அதுபோலிப்பாவனையாய், பாவனாதீதம்போலப் பாவனைமாத்திரமேயன்றி, அதனாற் போதரும் பயன் ஒன்றுமின்றாம் என்க;

(5) அங்ஙனம் ஒருவாற்றானும் எய்தாத பொருளைப் பாழ் என்றால் என்னை எனின், அது பொருந்தாது;

(6) மேலே கூறிய பாவனையெல்லாம் விடுத்து, சிவபிரான் திருவருளாலே பாவிக்கப்படுவதாகும்.

இவ்வுண்மையை

௩௧. * மநஸைவேதமாப்தவ்யம்।

மநசைவேதமாப்தவ்யம்।

௩௨. "இந்தப் பிரமம் அருளினால் அடையற்பாற்று" என்று கடவல்லியும்,

௩௩. மநஸைவாநுத்³ரஷ்டவ்யம்।

மநசைவாநுதிரஷ்டவ்யம்।

௩௪. "பிரமம் அருளினாலே காணற்பாலது" என்று பிருகதாரணியமும்,

௩௫. ஸநோபு³த்⁴யா ஶுப⁴யா ஸம்யுநக்து।

சநோபுத்யா சுபயா சம்யுநக்து।

௩௬. "அவர் நம்மை அருளினாலே (தம்மோடு) கூட்டுவாராக" என்று சுவேதாசுவதாமும், "அவனருளே கண்ணாகக்காணி னல்லால்" "அவ

---

* மனசு புத்தி என்பன அருட்சத்திக்குப் பெயராதலைச் சிறப்புப்பாயிரத்து ஏ-ம் பிரிவின் குறிப்புகளிற் காண்க.

னருளாலே யவன்றுள்கண்டு" என்று திராவிடசுருதிகளும் கூறியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

ங௭. இதனல் வாக்குமனதீதப்பொருள் யோகநூலிலே கூறப்படும் தியானபாவனைகளுக்கு எய்தும் என்று கூறும் பாதஞ்சலமதம் மறுக்கப் பட்டது.

சிவனை அருளினுற் பாவிக்கவேண்டாம், ஆன்மா பசுத்துவத்தை நீங்கிச் சிவனைப்போல முற்றுணர்தலாதிய எண் குணங்களுமடைதலின், அந்த ஆன்ம ஞானம் சிவஞானத்தோடொப்பதாமாதலின், அந்த அறிவிற்கு எய்துவர் சிவபிரான் என்றது கூடாது என்று கூறுதும்:—

ஙஅ. (வெ. பொ.) (1) ஆன்மாவானது தனது அறிவால் அச்சிவப் பொருளை அறிதற்கு, அப்பொருள் அவ்வான்மாவுக்கு வேறன்றும்;

(2) ஆன்மாவும் சிவமும் சமமாதலின்றி ஆன்மா ஸ்தூலசித்தும், சிவப் பொருள் சூக்குமசித்துமாயிருத்தலின், சூக்குமசித்துள்ளே ஸ்தூலசித்து அடங்கிநிற்றலின், ஆன்மாவின் அறிவினல் அப்பொருள் அறியப்படமாட் டாது;

(3) ஆன்மஞானத்துக்கு வியஞ்சகமாய் நின்று அறிவிக்கும் உயிர்க் குயிராகிய சிவத்தைப் பசுத்துவம்நீங்கியவிடத்து ஆன்மாவின்சிற்சத்தியானது தான் கண்டறிந்து தன் குணியாகிய ஆன்மாவுக்குக் காட்டமாட்டாது; கண் ணொளியானது தனக்குக் காட்டிக்கொண்டிருக்கும் ஆன்மாவை அறியமாட் டாதவாறுபோலாம்.

ஙகூ. ஆன்மஞானம் ஆன்மசிற்சத்தி என்பவற்றில் ஆன்மா என்றது கண்ணையும், ஞானம் சிற்சத்தி என்பன கண்ணின் ஒளியையும் ஒப்பனவாம்.

சo. ஆன்மா பசுத்துவம் நீங்கியவிடத்துச் சிவனைப்போல முற்றுணர்வு முதலிய எண்குணங்களை யுடையதென்று வேதாகமங்கள் கூறுதலின், ஆன்ம ஞானம் சிவஞானத்தோடொப்பதன்றிப் பசுஞானம் எனப்படாதென்னும் சிவசமவாதிமதம் மறுக்கப்பட்டது. சிவன்றிருவருளாலே சிவபரம்பொருள் அறியப்படும் என்று கூறப்படுகின்றது:—

சக. (வெ. பொ.) (1) சத்தாகிய சிவம் ஞேயப்பொருளாய் விசிட்டமாய் நிற்பதன்றே; அது அநிர்வசனமாய்க் கூறப்படுவதொரு சூனியப்பொருள ன்றே; ஆதலின், அந்த ஞேயமாத்திரையேயன்றி அதற்கு வேருக வாக்கு மனதீதமாய் நிற்பது ஒருபொருளென்று அறிகின்ற ஞாதாவாகிய ஆன்மா ஆண்டுளதாம்;

(2) ஆன்மா ஆங்கு இல்லை எனல் கூடாது. உலகத்துப் பொருள் போல் அதுவென்று சுட்டி அறியப்படுமாறு சிவப்பொருள் ஆன்மாவுக்கு

வேறன்றும். நீரினை அணைந்த உப்புப்போல ஆன்மாவின்கண்ணே பரவி வேற்றுமை தோற்றாது நிற்குமாதலான், பாச பசு ஞான அறிவு கடந்து அருண் ஞானத்தினாற் சிவப்பொருளை அறிகின்ற அந்த ஆன்மா சிவமேயாம்.

சஉ. சிவபரம்பொருளைத் தலைப்பட்ட ஆன்மா அச்சிவத்தோடு ஒன்றாய்ப்போம் என்னும் சுத்தசைவர் கொள்கை மறுக்கப்பட்டவாறும் என்க.

சங. இச்சூத்திரத்து இரண்டாஞ் சூர்ணிகையின் கீழே மாயாவாதியும், நையாயிகரும், பாதஞ்சலரும், சிவசமவாதியும், சுத்தசைவரும் மறுக்கப்படுமுகத்தாற் சுத்தாவஸ்தை ஐந்தும் கூறப்பட்டனவாம் என்பது.

சச. பாசலக்ஷணம் கூறுங்கால், நான்காம் சூத்திரத்து மூன்றாஞ் சூர்ணிகையின் கீழே கேவலாவஸ்தை கூறப்பட்டது.

சரு. பசுலக்ஷணம் கூறுங்கால், ஐந்தாஞ் சூத்திரத்து முதற் சூர்ணிகையின் கீழ்ச் சகலாவஸ்தை கூறப்பட்டது.

சசு. பதிலக்ஷணம் கூறுங்கால் ஆறாஞ் சூத்திரத்து இரண்டாஞ் சூர்ணிகையின் கீழ்ச் சுத்தாவஸ்தை கூறப்பட்டது.

சஎ. கேவலமானது மருட்கேவலம், சகலகேவலம், பிரளயகேவலம், விஞ்ஞானகேவலம், அருட்கேவலம் என ஐவகைப்படும்.

சஅ. மருட்கேவலமாவது அநாதிகேவலம், அஃதாவது கேவலாவஸ்தைத் துரியாதீதத்தில் ஆன்மாவானது இருண்மலத்தோடு கூடிநிற்றலாம்.

சகூ. சகலகேவலமாவது சங்கரித்த பின்னர் மீளப்பிறத்தற்கேதுவாகப்படும் கேவலம், ஆங்குச் சூக்கும பஞ்சகிருத்தியம் உளது; இவ்வுண்மை,

ருO. 𑌸𑍍𑌵𑌾𑌪𑍇𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍 𑌬𑍋𑌧𑌯𑍋𑌗𑍍𑌯𑌾𑌨𑍍 𑌰𑍋𑌧𑍍𑌯𑌾𑌨𑍍
𑌰𑍁𑌨𑍍𑌧𑌨𑍍 𑌪𑌾𑌶𑌯𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌿 𑌕𑌰𑍍𑌮 । 𑌮𑌾𑌯𑌾𑌶𑌕𑍍𑌤𑍀𑌰𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌮𑍍 𑌯𑍋𑌗𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍍𑌯𑌥𑌾 𑌵𑌸𑍍𑌤𑍁𑌜𑌾𑌤𑌮𑍍 ॥

ஸ்வாபெப்யாஸ்தே போதயந் போதயோக்யாந் ரோத்யாந் ருந்தந் பாசயந் கர்மிகர்ம। மாயாசக்தீர் வியக்திம் யோக்யா: பிரகுர்வந் பச்யந் சர்வம் யத்யதா வஸ்துஜாதம்॥

ருக. "சாக்கிராவஸ்தையிற்போல் (மாயையில்) ஆன்மா ஒடுங்கிக் கிடக்குமிடத்தும், மலபரிபாக தாரதம்மியத்துக்கு இயைந்தவாறு, சிவபெருமான் ஆன்மாவுக்கு உணர்த்தற்பாலனவற்றை உணர்த்தியும், தடுக்கற்பாலனவற்றைத் தடுத்தும், கன்மங்களைப் பக்குவப்படுத்தியும், மாயாசத்திகளைப் பிரசவோன்முகங்களாகச் செய்தும், சமஸ்த சேதனாசேதனப் பொருளையும்

யதாப்பிரகாரம் பார்த்துக்கொண்டுமிருக்கின்றார்" என்று மிருகேந்திராகமம் மாற்றால் உணரப்படும்.

நிஉ. பிரளயகேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுளதாகிய கேவலம்.

நிங. விஞ்ஞானகேவலமாவது மாயாகன்மம் என்னும் இரண்டினோடும் இயைபின்றி ஆண்டுளதாம் கேவலம்.

நிச. அருட்கேவலமாவது தத்துவசுத்தியின் பின்னுளதாம் கேவலம்.

நிரு. சகலமும் சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தம் என மூவகைப்பட்டு, ஒவ்வொன்று ஐந்து வகைப்படும்.

நிசா. சகலத்திற் கேவலம் ஐந்தும் நாலாஞ் சூத்திரத்து ௩-ச, (1, 2, 3, 4, 5)-ம் பிரிவுகளிற் கூறப்பட்டுள்ளன.

நிஎ. சகலத்திற் சகலம் ஐந்தும் நான்காஞ் சூத்திரத்து ௩-எ, (2, 3, 4, 5, 6)-ம் பிரிவுகளிற் கூறப்பட்டுள்ளன.

நிஅ. சகலத்திற் சுத்தம் இருதயமுதற் றுவாதசாந்தமீறாகிய ஸ்தானங்களிற் புறக்கரண உட்கரணங்களைப் பற்றியும் பற்றாமலும் பிரத்தியாகார முதல் ஐவகைப்பட்டு நிகழும் யோகாவஸ்தையாய் ஒடுங்கியும் தோற்றியும் பயன்தரும் என்க.

நிகூ. சுத்தாவஸ்தையும் சீவன்முத்தி, அதிகாரமுத்தி, போகமுத்தி, லயமுத்தி பரமுத்தி, என ஐவகைப்பட்டு, சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி, துரியம், துரியாதீதம் எனப் பெயர் பெறும்.

## ஆறாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

சிவபெருமான் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாத சிவமாயும், பதிஞானமொன்றினால் அறியப்படும் சத்தாயுமுள்ளார் என்றும், அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் அசத்து என்றும், மகாசங்காரகாலத்திற் சத்தில்லை என்றாற் சத்தாகிய பசுவுக்குரிய தனுகரணாதி ஸ்தூலகாரியரூபமில்லை எனவும், அசத்தில்லை என்றவிடத்திலும் ஸ்தூலகாரியரூபமில்லை எனவும் பொருள்படுமேயன்றி, அந்தச் * சத்து அசத்துக்களின் சூக்குமசொரூபசத்து இல்லை எனப் பொருள்படுத்தப்படாது என்றும், பதியின் தடஸ்தலக்ஷணம் இரண்டாஞ் சூத்திரத்து எ-ம் பிரிவினாலும், அவரது சொரூபலக்ஷணம் இந்த கூ-ம் சூத்திரத்து எ-ம் பிரிவினாலும் கூறப்பட்ட

* இங்கே சத்து என்றது பசுவாகிய ஆன்மாவின்மேற்று.

தென்றும், பசுஞானம் க௩-ம் பிரிவினாலும், பாசஞானம் க௪-ம் பிரிவினாலும், பசு பாசங்கள் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படுமேனும், சிறப்பியல்புபற்றி அவை சத்தேயாம் என்றும், மாயாவாதி, நையாயிகர், பாதஞ்சலர், சிவசமவாதி, சுத்தசைவர் என்போரை மறுக்குமுகத்தாற் சுத்தாவஸ்தை ஐந்தும் முறையே கூறப்பட்டனவாம் என்றும் உணரற்பாற்று.

## ஆறாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.

க. சூத்திரப்பொருள் யாது? ௪.

உ. சூத்திரக் கருத்துரை யாது? ரு.

௩. அதன் பொருள் யாது? எ.

௪. சூத்திரப் பிண்டப்பொருள் யாது? எ.

ரு. முதலாஞ் சூர்ணிகை யாது? அ.

௬. அதன் பொருள் யாது? ௬.

எ. அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் எங்ஙனம் கூறப்படும்? ௬.

அ. சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதல்பற்றி அசத்து என்று கூறலாமா? ௬.

௯. சுட்டுப்பொருளெல்லாம் எதுபற்றி உள்ளது என்னும் அறிவைப் பிறப்பிக்கின்றது? ௬.

க0. அப்பொருளெல்லாம் எதுபற்றி இல்லை என்னும் உணர்வைப் பிறப்பிக்கின்றது? ௬.

கக. மகாப்பிரளயகாலத்திற் சத்தில்லை என்றால், அதன் பொருள் என்னை? கக.

கஉ. அசத்து இல்லை என்றால் அதன் பொருள் என்னை? கக.

க௩. இங்ஙனம் பொருள் கொண்டவர் யாவர்? கக.

க௪. காரியாவஸ்தையில் ஸ்தூலமாய் விளங்கிநின்ற பிரபஞ்சம் காரணாவஸ்தையில் எங்ஙனம் விளங்கும்? கக.

கரு. தூலரூபமொழிந்து காரணாவஸ்தையிற் சூக்கும சத்தாரூபமாய் நிற்கும் பிரபஞ்சம் எங்ஙனம் கூறப்பட்டது? கக.

கசு. பதியின் தடத்தலக்ஷணம் எங்கே கூறப்பட்டது? கஉ.

கள. பதியின் சொரூபலக்ஷணம் எங்கே கூறப்படுகின்றது? எ.

கஅ. சிவபெருமானுக்குரிய (சர்வஞ்ஞதைமுதலிய) சிறப்புக்குணங்களெல்லாம் எவற்றில் அடங்கும்? கஉ.

கசு. பசுபாசங்களின் சிறப்பியல்புகள் எதனல் அறியப்படும்? கங.

உ0. ஒரு விஷயத்தை அறிதற்குக் கருவியாய்க் கர்த்தா என்னும்படி நிற்பன யாவை? கங.

உக. மனம் புத்தி முதலியன எதுபோல ஆன்மாவுக்கு வேறும்? கங.

உஉ. மனமுதலிய பற்றினின்று நீங்கி, அவற்றைக்கொண்டு அறிபவன் யார் என்று ஆராய்ந்தார்க்கு யாது விளங்கும்? கங.

உங. பசுஞானமாவது யாது? கங.

உச. பிரபஞ்சம் எத்தனை வகைப்படும்? கச.

உரு. பாசஞானமாவது யாது? கச.

உசு. சைவசித்தாந்தப்பிரகாரம் அசத்து என்றதற்கு எப்படிப் பொருள்கோடல் ஆகாது? கரு.

உள. பசு பாசங்கள் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படினும் சிறப்பியல்புபற்றி எங்ஙனம் கூறப்படும்? கரு.

உஅ. காரியப்பிரபஞ்சம் எங்ஙனம் காட்சிப்படுகின்றது? கசு.

உகூ. காரியப்பிரபஞ்சம் எப்படித் தோன்றுகின்றது? கசு.

ங0. காலம் வந்தபோது பிரபஞ்சம் எங்ஙனமாகும்? கசு.

ஙக. மூவகைத் தத்துவமும் எங்ஙனம் லயமடையும்? கஅ.

ஙஉ. ஸ்ரீகண்டரால் ஒடுங்குந் தத்துவங்கள் யாவை? ககூ.

ஙங. அனந்தேசுரரால் ஒடுங்கும் தத்துவங்கள் யாவை? ககூ.

ஙச. லயசிவனல் ஒடுங்கும் தத்துவங்கள் யாவை? ககூ.

ஙரு. சுத்தசிவத்தினல் ஒடுங்கும் தத்துவங்கள் யாவை? ககூ.

ஙசு. தத்துவசுத்தியாவது யாது? உ0.

ஙள. நையாயிகர் அபாவத்துக்கு யாது பொருள் கூறுகின்றார்? உக.

ஙஅ. அங்ஙனம் அசத்துக்குப் பொருள் கூறுங்காற் சத்தில்லே, அதாவது, சூனியம் என்று பொருள் கொள்ளலாமா? உக.

ஙகூ. காரியாவஸ்தையிற் பிரபஞ்சம் எதற்குப் புலப்படுகின்றது? உஉ, (1).

சo, அது காரணாவஸ்தையிற் கண்ணுக்குப் புலப்படுமா? உக.

சக. காரியப்பிரபஞ்சம் யாது பற்றி அசத்தெனப்படும்? உஉ.

சஉ. எதுபோலப் பிரபஞ்சம் தோன்றி ஒழிந்துபோம்? உஉ.

சங. இரண்டாஞ் சூர்ணிகை யாது? உங.

சச. அதன் பொருள் யாது? உச.

சரு. பரப்பிரமப்பொருள் அஞ்ஞானத்தினுல் எங்ஙனம் பகுக்கப்படுகின்றது என மாயாவாதி கூறுகின்ருன்? உரு.

சகூ. அஞ்ஞானம் நீங்கியபோது எந்தப் பாகுபாடு ஒழிந்துபோகின்றது என்கின்ருன்? உரு.

சஎ. அந்தப்பிரமம் எங்ஙனம் அறியப்படுமாறின்றி எங்ஙனம் நிற்கும் என்கின்ருன்? உரு.

சஅ. சாந்தோக்கியாதி சுருதிகளிற் சுட்டறிவினுல் அறியப்படாத சத்தானது சிவாகமங்களிலே எங்ஙனம் கூறப்படுகின்றது? உகூ.

சகூ. இதனுல் எவன் மறுக்கப்பட்டான்? உஎ.

ருo. சிவப்பொருள் எதனுல் அறியப்படமாட்டாது? உஅ, (1).

ருக. நையாயிகர் மெய்ப்பொருளே எங்ஙனம் அறிதல்வேண்டும் என்கின்ருர்? உகூ.

ருஉ. ஆன்மா தனது அறிவை எதனில் அடக்கவேண்டும்?உஅ, (4).

ருங. ஆன்ம அறிவினுல் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் எங்ஙனமாகும்? ஙo, (1).

ருச. கருவிகளினின்று நீங்கிப் பரம்பொருளேப் பாவிக்கலாமா? ஙo,(2).

ருரு. கருவிகளினீங்கினவிடத்து யாது தலைப்படும்? ஙo, (2).

ருகூ. கருவிகளினீங்கிப் பாவிப்பதென்பது யாதாய் முடியும்? ஙo, (2).

ருஎ. கருவிகளைக்கொண்டும் கருவிகளினீங்கியும் பாவியாது, சொல்லொணுததென்று பாவித்தால் என்னே? ஙo, (3).

ருஅ. பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாகப் பாவித்தால் என்னை? ௩௦, (4).

ருகூ. ஒருபிரகாரத்தானும் எய்தாத பொருளைப் பாழ் என்று கூறலாமா? ௩௦, (5).

கூ௦. சிவபிரான் பின் எங்ஙனம் பாவிக்கப்படுவர்? ௩௦, (6).

கூக. அருளினாற் பாவிக்க வேண்டுமென்றமைக்கு வடமொழி தென்மொழிச் சுருதிப் பிரமாணங்கள் கூறுக? ௩௨, ௩௪, ௩௬.

கூ௨. மனசு புத்தி என்பன எவர் பெயர்? *

கூ௩. அருளினால் எய்தப்பெறும் பரம்பொருளைத் தியானபாவனைக்குள்ளாக்கலாம் என்னும் எவர் மதம் மறுக்கப்பட்டது? ௩௭.

கூ௪. சிவப்பொருள் ஆன்மாவுக்கு வேறு? வேறன்று? ௩௮, (1).

கூரு. தூலசித்து யாது? சூக்குமசித்து யாது? ௩௮, (2).

கூகூ. எந்தச் சித்து எந்தச் சித்துள்ளே அடங்கி நிற்கும்? ௩௮, (2).

கூஎ. ஆன்மாவின் அறிவினாற் பரம்பொருள் அறியப்படுமா? ௩௮, (2).

கூஅ. கண்ணொளி தனக்குக் காட்டிநிற்கும் ஆன்மாவை அறியுமா? ௩௮, (3).

கூகூ. அங்ஙனம் ஆன்மசிற்சத்தி சிவத்தை அறிந்து தன்குணியாகிய ஆன்மாவுக்குக் காட்டவல்லதா? ௩௮, (3).

எ௦. ஆன்மசிற்சத்திக்கு வியஞ்சகமாய் நின்று அறிவிப்பது யாது? ௩௮, (3).

எக. ஆன்மஞானம் ஆன்மசிற்சத்தி என்பவற்றில், ஆன்மா எதனை ஒக்கும்? ஞானம் அல்லது சிற்சத்தி எதனை ஒக்கும்? ௩௯.

எ௨. பசுத்துவம் நீங்கிய ஆன்மா சிவனைப்போல எவற்றை யுடையனுவன்? ௪௦.

எ௩. அதுபற்றி ஆன்மஞானத்தை எந்த ஞானத்துக்கு ஒப்பாகும் என்று சிவசமவாதி கூறுகின்றான்? ௪௦.

எ௪. சிவசமவாதி எங்ஙனம் மறுக்கப்படுகின்றான்? ௪௦.

எரு. சத்தாகிய சிவம் எங்ஙனம் நிற்கும்? ௪க, (1).

எகூ. அது சூனியப்பொருளாமோ? ௪க, (1).

எஎ. ஞேயப்பொருளையன்றி அப்பொருளை அறியும் ஆன்மா ஆண்டிலதா? உளதா? சக, (1).

எஅ. சிவப்பொருள் எதுபோல ஆன்மாவுக்கு வேறாகாது நிற்கும்? சக, (2).

எகூ. பாசஞான பசுஞானங்களைக் கடந்த எந்த ஞானத்தினால் ஆன்மா சிவப்பொருளை அறிகின்றான்? சக, (2).

அ0. சிவபரம்பொருளைத் தலைப்பட்ட ஆன்மா சிவத்தோடு ஒன்றாய்ப் போமா? சஉ.

அக. இதனால் எவர் மதம் மறுக்கப்பட்டது? சஉ.

அஉ. சுத்தாவஸ்தை ஐந்தும் எங்ஙனம் கூறப்பட்டன? சந.

அந. கேவலாவஸ்தை எங்கே கூறப்பட்டது? சச.

அச. சகலாவஸ்தை எங்கே கூறப்பட்டது? சரு.

அரு. சுத்தாவஸ்தை எங்கே கூறப்பட்டது? சசூ.

அசூ. கேவலம் எத்தனை வகைப்படும்? சஎ.

அஎ. மருட்கேவலமாவது யாது? சஅ.

அஅ. சகலகேவலமாவது யாது? சகூ.

அகூ. இங்கே யாது கிருத்தியம் நிகழ்கின்றது? சகூ.

கூ0. அதற்குப் பிரமாணம் கூறுக? ருக.

கூக. பிரளயகேவலமாவது யாது? ருஉ.

கூஉ. விஞ்ஞானகேவலமாவது யாது? ருந.

கூந. அருட்கேவலமாவது யாது? ருச.

கூச. சகலம் எத்தனை வகைப்படும்? ருரு.

கூரு. சகலத்திற் கேவலம் ஐந்தும் எங்கே சொல்லப்பட்டிருக்கின்றன? ருசூ.

கூசூ. சகலத்திற் சகலம் ஐந்தும் எங்கே கூறப்பட்டுள்ளன? ருஎ.

கூஎ. சகலத்திற் சுத்தம் ஐந்தும் எங்கே கூறப்பட்டுள்ளன? ருஅ.

கூஅ. சுத்தாவஸ்தை எத்தனை வகைப்படும்? ருகூ.

---

# சிறப்பதிகாரம்.

## சாதனவியல்.

## ஆன்மசோரூபம்.

## ஏழாஞ் சூத்திரம்.



க. 𑌨𑌾𑌚𑌿𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 𑌕𑌿𑌨𑍍𑌤𑍁 𑌨𑌵𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍇 𑌉𑌭𑍇 𑌮𑌿𑌥𑌃।
𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌵𑌯𑍋𑌰𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 𑌯𑌃 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑌯𑍋𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍॥

நாசிச் சித்சந்நிதௌ கிந்து நவித்தஸ்தே உபே மிதஃ।
பிரபஞ்சசிவயோர் வேத்தா யஃ ச ஆத்மா தயோஃ பிருதக்॥

உ. (இ – ள்.) 𑌚𑌿𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 𑌅𑌚𑌿𑌤𑍍 𑌨 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 = (சிவனாகிய) சித்தின் சன்னியிதில் (பிரபஞ்சமாகிய) அசித்து அறியமாட்டாது (விளங்கித் தோன்றாது); 𑌤𑍇 𑌉𑌭𑍇 𑌮𑌿𑌥𑌃 𑌨 𑌵𑌿𑌤𑍍𑌤𑌃 = அந்தச் (சிவமும் பிரபஞ்சமுமாகிய) இரண்டும் ஒன்றை ஒன்று அறியமாட்டா; 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌵𑌯𑍋𑌃 𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 = எவன் பிரபஞ்சத்தையும் சிவனையும் அறிகின்றானோ; 𑌸𑌃 = அவன்; 𑌤𑌯𑍋𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 = அவ்விரண்டற்கும் வேறாகிய ஆன்மாவாம்.

௩. யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

௪. (இ – ள்.) சத்து எதிர் யாவையும் சூனியம் = சத்தாகிய சிவத்தின் சன்னிதியில் எல்லாம் பாழாமாதலின்; சத்து அறியாது = சத்தாகிய சிவம் (பிரபஞ்சத்தை) அறிதல் செய்யாது; அசத்தில் அது அறியாது = சடமாதலிற் பிரபஞ்சம் சத்தாகிய சிவத்தை அறியாது; இரு திறன் அறிவுளது = (சத்து அசத்து என்னும்) இருதிறத்தையும் (பிரித்தறியும்) அறிவுடையதாகிய ஒன்று உளது; இரண்டு அலா ஆன்மா = (அது) சத்து அசத்து என்னும் இரண்டு தன்மையும் அல்லாத (சத்தசத்தாகிய) ஆன்மாவாம்.

௫. (க. ரை.) ஆன்மாவின் சிறப்பியல்பு உணர்த்துகின்றது.

௬. (க. பொ.) ஒன்றனை அறிந்தவிடத்து அதனால் எய்தும் பிரயோசனத்தை அடைதற்குரிய முயற்சி செய்வோர்க்கு அதனைச் சாதிக்கும் வன்மை தமக்கு உண்டென்பதும், சாதித்தலால் வரும் பிரயோசனம் இன்னது என்பதும், அதனைப் பிறப்பித்தற்கு வாய்ந்த சாதனம் இன்னது என்ப

தும், அது தவத்தினால் எய்தும் என்பதும் உணர்ந்தாலன்றி அதன்கண் ஊக்கம் செல்லாமையால், ஈண்டுச் சாதனஞ் செய்து அடைதற்குரிய அதிகாரியை இன்னார் என உணர்த்துவது இச்சூத்திரமாம் என்க.

எ. சிறப்பியல்பாவது பொதுவியல்புபோல இடையே நீங்குதலின்றி எக்காலத்தும் ஒருதன்மைத்தாயுள்ளதுபற்றி உண்மை எனப்படுதலின், அது சிறப்பதிகாரமெனப் பெயருடைத்தாயிற்று.

அ. ஏழாம், எட்டாம், ஒன்பதாஞ் சூத்திரங்கள் மேலே பொதுவியல் பினாற் பெறப்பட்ட பதிபாசபசுபதார்த்தங்களுள்ளும் நீக்கவேண்டியதை நீக்கி, அதனால் வரும் துன்பத்தினின்று நீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனால் எய்தும் இன்பத்தை அடைதலுமாகிய பிரயோசனத்தை அடைதற்கு ஏதுவாகிய சாதனஞ் செய்யுமியல்பை உணர்த்துதலில், சாதனவியல் எனப் பெயருடைத்தாயிற்று.

கூ. (சூ. பி. பொ.) ஆறாஞ் சூத்திரத்துட் கூறப்பட்ட சத்து அசத்து என்னும் இரண்டினுள்ளே, வாக்குமனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதியிலே உணரப்படும் தன்மையவாகிய அசத்தெல்லாம் விளங்கமாட்டாவாம், அது பற்றிச் சூனியமெனப்படும்; சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அநுபவியாது; அசத்தாகிய பாசம் அறிவில்லாத சடமாதலின், சத்தாகிய சிவத்தை அறிந்து அநுபவியாது. ஆதலாற் பாரிசேடப்பிரமாணத்தினாற் பிரபஞ்சத்தையும் சிவத்தையும் அறியும் அறிவொன்றுளதென்று பெறப்படுதலின், அதுவே சத்தாகிய சிவமாதற்றன்மையும், அசத்தாகிய பிரபஞ்சமாதற்றன்மையுமாகிய இரண்டுமின்றிச் சத்தசத்தாயுள்ள ஆன்மாவாம் என்பது.

## முதலாஞ் சூர்ணிகை.

---

கo. அரன் பாசத்தை அநுபவியான்.

கக. (சூ. பொ.) சத்தாகிய சிவம் வியாபக அறிவுடையதாதலால் எவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்பதன்றி, ஏகதேசமாய்ப் பகுத்து ஒன்றை அறியுமாறின்றாமாதலின், சிவம் அசத்தை (பாசத்தை) அநுபவியாது என்றதாம்.

கஉ. சுட்டுணர்வின்மையாற் சிவபிரான் அசத்தை அறியாதிருத்தல் பற்றி அவரது முற்றுணர்வுக்கு இழுக்கில்லை என்று கூறப்படுகின்றது:—

கரு. (வெ. பொ.) சூரியனுக்குமுன் இருள்போல, சிவபிரானுக்கு எதிராகச் சடமாகிய பிரபஞ்சம் முனைத்து நில்லாமையான், அச்சிவபெரு

மான் தம்முள் வியாப்பியமாகிய பசு பாசங்களோடு வேற்றுமையின்றி உடனாகநின்று, அசத்தை அறிதலுறுவாராயின், அறிந்தாங்கறிவானன்றி நம்மனோர்போல வேறாக அதனைச் சுட்டி அறிவாரல்லர்.

## இரண்டாஞ் சூர்ணிகை.



கச. பாசம் அரனை அநுபவியாது.

கரு. (சூ. பொ.) பதிஞான பசுஞானங்களோடொப்பப் பாசஞானமொன்றென வைத்து எண்ணப்படும் உரிமையுடைமையால், அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சத்துக்கு அறிவு உண்டென்று கூறின், அந்தப் பாசஞான அறிவானது தூலமாய்ப் பார்க்குங்கால் அத்தத்துவப்பிரபஞ்சத்துக்கு உளதுபோலத் தோன்றினும், சந்தேகவிபரீதமின்றி மாசறுகாட்சியினால் ஆராயுங்கால், அந்த அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சத்துக்கு அறிவின்றாமாதலின், அது சிவத்தை அறியுமாறின்றாம், அதனால் அதற்கு அநுபவஅறிவில்லை என்பதாம்.

கசு. பாசம்வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஞானமே பாசஞானம் என உபசாரமாகக் கூறப்படும். பாசத்துக்கு ஞானமுளதென்று கூறுதல் ஆராய்தலின்மையால் எழுந்த அறியாமையேயன்றிப் பிறிதொன்றன்றாம்.

கஎ. (வெ. பொ.) பாலைநிலத்தின்கண்ணே காணப்படுகின்ற கானற்சலத்தை நீரென்று நினைத்து அதனைப் பருக வருகின்ற தாகமுடையவன் அதனை நணுகியபோது, அந்தக் கானற்சலம் நீராதலின்றிப் பொய்யாய்ப் போனமைபோல, ஆசாரியர் உபதேசிக்கும் உபதேசமொழியைப் பெற்று, அந்த அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சத்தினியல்பை ஆராய்ந்தறியமாட்டாதார்க்கு, அவ்வசத்தின்கண்ணே அறிவுள்ளதாகச் சத்தாந்தன்மையே காணப்படும்; அவ்வுபதேசமொழியைப் பெற்று ஆராய்ந்தறியவல்லார்க்கு அசத்துக்கு அறிவில்லை எனவே புலப்படும்.

## மூன்றாஞ் சூர்ணிகை.



கஅ. உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

கசு. (சூ. பொ.) மேலே கூறிப்போந்த சத்தாகிய சிவம் அசத்தாகிய தத்துவப்பிரபஞ்சம் என்னும் இந்த இரண்டையும், அறியுந்தன்மையதாய், அறிவிக்க அறியும் உபதேசியாய், சத்து அசத்து என்னும் இரண்டினும் அநுபவ அறிவுள்ளதாயுள்ளது எதுவோ, அதுதான் சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய ஆன்மாவேயாம் என்பதாம்.

௨௦. இருளில் முன்னர் மறைபட்டும் இருளல்லாமலும், ஒளியிற் பொருந்தி அறிந்தும் ஒளியல்லாமலும் இருக்கும் கண்ணின் இயற்கைபோல, சத்தையும் அசத்தையும் அறியுந்தன்மைத்தாயது ஆன்மா; இதனை உதாரணங்கொண்டு விளக்குதும்:—

௨௧. (வெ. பொ.) (1) ஆன்மாவே சத்து அசத்து என்னும் இரண்டையும் அறிவதாகும்; ஆகலின், அவ்வான்மா அவ்விரண்டின் வேறாம்;

(2) அங்ஙனமாயின், அவ்விரண்டையும் அறியும் ஆன்மாவுக்குத் தன் உண்மை அறியப்படுமாயின், அதனைச் சேர்த்து மூன்றனையும் அறியும் என்று கூறவேண்டுமன்றி இரண்டினையும் அறியும் எனல் பொருந்தாது;

(3) ஆன்மாவுக்குத் தன்னுண்மை அறியப்படாதெனின், அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழுவாயன்றோ முடியும்;

(4) அவ்வான்மாவின் உண்மைத்தன்மை யாதெனின், அது அவ்விரண்டும்போலத் தோன்றி, அவற்றோடு ஒப்பநிற்பதுமன்று; விளங்காது சூனியமாய் நிற்பதுமன்று; பின் மலரின்கண் மணம் அம்மலரின்கண்ணே அடங்கித் தோன்றுமாறுபோல, ஆன்மாவானது சத்தினும் அசத்தினும் சார்ந்ததன்வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்பாம். ஆதலாற் சத்தும் அசத்தும்போலத் தனித்து அறியப்படுமாறின்றி அவ்விரண்டையும் அறிதல்வாயிலாக அறியற்பாலதொன்றாம்.

௨௨. ஆன்மாவுக்குச்சிவத்தைப்போல அறிவுளதோ எனின், ஆகாயத் தன்மையாகிய ஓசைபோல ஆன்மாவானது தன்னை விளக்குவதாகிய வியஞ்சகம் உள்வழி விளங்குவதோர் தன்மைத்து; ஆதலால் அவ்வான்மாவுக்குச் சிவத்தோடொப்பச் சுதந்திர அறிவில்லையாதலின், அது அறிவிக்க அறியும் * உபதேசியாம் என்று கூறப்படுகின்றது:—

௨௩. (வெ. பொ.) (1) ஆன்மாவின் அறிவை விளக்குதற்குரிய கலாதி தத்துவமாகிய வியஞ்சகமில்லாதபோது அவ்வான்மா ஒரு விஷயத்தை இன்னதென்று அறியமாட்டாது மயக்கமடைந்தும், பசிநோய்க்கு அன்னம்போல அம்மயக்கநோய்க்கு மருந்தாகிய வியஞ்சகமுள்ளபோது அம்மயக்க நீங்கி அப்பொருளை இன்னதென நிச்சயித்தும் இங்ஙனம் அறியும்போதும் ஒருங்கே அறியமாட்டாது ஒரு விஷயத்திற் சென்ற அறிவை மாற்றி மற்றொரு விஷயத்தை அறிந்தும் வருகின்றமையால், இவ்வாறு மாறிமாறி ஒன்றொன்றாய் உணர்கின்ற ஆன்மா அனைத்தையும் ஒருங்கே ஓரியல்பாக உணர்வதாகிய சத்தின்தன்மை உடையதுமன்று;

---

* உபதேசி என்றது உணர்த்த உணருமியல்பினதென்பது.

(2) அங்ஙனமாயின் வியஞ்சகமுள்வழியன்றி அறியமாட்டாத ஆன்மா அசத்தினியல்பையுடையதாமோ எனின், வியஞ்சகமுள்ளவிடத்தும் ஆன்மா தான் முன் அறிந்து செய்த கன்மங்களை அவ்வான்மாவே அறிந்து அநுபவிக்கின்றதேயன்றி, அசத்தாகிய பிரபஞ்சம் அறிந்து அநுபவித்ததின்றாம்; ஆதலால் ஆன்மாவுக்கு அசத்தின் தன்மையுமில்லை;

(3) சத்தகுணமுடைய ஆகாயம்போலக் கலாதிதத்துவ வியஞ்சகமுள்ளபோது அறியுமொப்புமையாற் சத்தாதலும், அக்கலாதிதத்துவ வியஞ்சகமில்லாதபோது அறிவு நிகழாதவொப்புமையால் அசத்தாதலுமாகிய தன்மையுடையது அவ்விரண்டுக்கும் வேறாகிய சதசத்தாகிய ஆன்மாவாம்.

உச. ஸ்படிகம்போலச் சார்ந்ததின் வண்ணமாய் அழுந்தும் தன்மையதாதலின், அது சத்து அசத்து என்னும் இரண்டன்பாலும் உள்ளதாம் என்று கூறப்படுகின்றது:—

உரு. (வெ. பொ.) மேலே கூறப்பட்ட மயக்கமாகிய அஞ்ஞானம் கலாதிதத்துவ வியஞ்சகமில்லாதபோது மேற்பட்டும், அவ்வியஞ்சகமுள்ளபோது நீங்கியும் இவ்வாறு நிலைபேறுடையதன்றாகலின், அந்த அறியாமை எப்பொழுதும் ஒரே இயல்பினதாய் நிலையுற்று விளங்கும் ஞானமாகிய சிவசத்தின்கண்ணே சூரியன்முன் இருள்போல நிகழாதாம்; மெய்ஞ்ஞானமாகிய சிவசத்துள்ள அநாதியேதானே, கடல் (வெளியாகிய) ஆகாயத்தின்கண்ணே பொருந்தாது அக்கடல் (ஆகாயத்துள்ளே) யுள்ள நீரினிடத்தே பொருந்துகின்ற உப்புப்போல, அந்த அஞ்ஞானமாகிய ஆணவமயக்கம் தான் பொருந்துதற்குரிமையுடைய சதசத்தாமியல்பினவாய ஆன்மாக்கள் உள்ளனவாக, அந்த ஆன்மாக்களைப் பொருந்தி நிற்கும்; அது சிவசத்தைப் பற்றாது என்பது பெற்றாம். உப்பு நீரில் வியாப்பியமாய் அடங்கி, நீர் கடலாகாயத்துள் வியாப்பியமாய் அடங்கி நின்றாற்போல, ஆணவமாகிய அஞ்ஞானமயக்கம் வியாப்பியமாய் ஆன்மாவில் அடங்க, ஆன்மா சிவத்துள் வியாப்பியமாய் அடங்கி நிற்குமாம் என்க.

உசா. ஆகவே பாச, பசு, பதி என்பன வியாப்பிய வியாபகங்களாய் நின்றவாறு தெளியப்படும்.

உஎ. ஆன்மாவுக்குச் சிவம் அஞ்ஞானம் என்னும் இரண்டினிடத்தும் இயைபு கூறவே, சத்தின்பாலும் அசத்தின்பாலும் ஆன்மா உளதாதல் கூறியவாறாயிற்று.

உஅ. தத்துவங்களைச் சடமென்று திடமாய் அறிந்து ஆன்மா நீங்கி, அறிவாகிய தானே முதலென்று நிற்றல் ஆன்மரூபம்.

உ௯. சத்து அசத்து என்னும் இரண்டையும் அறியும் அறிவு உளது எனவே, சத்தும் அசத்தும் பிரமேயம்; அவ்விரண்டையும் அறியும் சத்தசத்தாகிய ஆன்மா பிரமாதா; ஆன்மாவின் அறிவாகிய சிற்சத்தியே பிரமாணம்; அவ்வறிவின் நிகழ்ச்சி பிரமிதி.

௩0. சத்து அசத்து என்னும் இரண்டினாலும் விளங்கும் அறிவுளதெனவே, அவ்விரண்டனுள்ளே அசத்தினால் விளங்கும்போது, ஆன்மாவுக்கு வேறாய் நின்று விளங்கும் காட்சி அனுமானம் உரை எனப்படும் பாசஞான மூன்றும் அவ்வான்மாவுக்கு வியஞ்சகங்களாம்.

௩௧. சத்தினால் ஆன்மாவுக்கு அறிவு விளங்கும்போது, அனன்னியமின்றித் தனக்கு ஆதாரமாய் உடனின்று விளக்கும் சிவஞானம் வியஞ்சகமாம்.

௩உ. ஆன்மாவுக்கு இருதிறனிலும் அறிவுளதெனவே, அந்த அசத்தினால் விளங்கி அசத்தை அறியும்போது அசத்தின்பாலும், சத்தினால் விளங்கிச் சத்தை அறியுங்காற் சத்தின்பாலும் சார்ந்து அது அதுவாய் நின்றுளதென்பது பெறப்படும்.

## ஏழாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

முத்திக்குரிய சாதகஞ் செய்யும் அதிகாரி ஆன்மா என்றும், இந்த ஆன்மா சத்தசத்தாம் இயல்புடையதென்றும், எல்லாவற்றையும் அறிந்தபடி அறிந்து நிற்கும் சிவபிரான் ஏகதேசமாகிய ஒன்றைச் சுட்டி அறியாரென்றும், பாசம்வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஞானம் பாசஞானமெனப்படுமென்றும், ஆன்மாவானது சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்தையும் அறியுமியல்பினதாயும், அறிவிக்க அறியும் உபதேசியாயும், ஸ்படிகம்போலச் சார்ந்ததின்வண்ணமாய் அழுந்துந்தன்மைத்தாதலின் சத்தசத்து என்னும் இரண்டன்பாலு முளதாயும் உள்ளது என்றும் கூறப்பட்டது.

## ஏழாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.

க. ஏழாஞ் சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக் கருத்துரை யாது? ரு.

௩. அதன் பொருள் யாது? ௬.

ச. சிறப்பதிகாரம் என்றது யாதுபற்றி? எ.

ரு. சாதனவியல் என்றமைக்குக் காரணம் என்னை? அ.

௬. சிவசன்னிதியில் அசத்தெல்லாம் விளங்கும் இயல்பினவோ? ௬.

எ. அவை விளங்கமாட்டாமையால் அவை எங்ஙனம் கூறப்படும்? கூ.

அ. பிரபஞ்சத்தையும் சிவத்தையும் அறியும் அறிவு யாது? கூ.

கூ. முதலாஞ் சூர்ணிகை யாது? க0.

க0. அதன் பொருள் யாது? கக.

கக. சிவபிரான் பிரபஞ்சத்தைச் சுட்டி உணாரதிருத்தல் அவர் முற்றுணர்வுக்கு இழுக்காமோ? கஉ.

கஉ. சிவபிரானுக்குமுன் பிரபஞ்சம் எதுபோல முனைக்காது? கங.

கங. நம்மனோர் போலச் சுட்டி அறியாது, பின் பிரபஞ்சத்தை அவர் எங்ஙனம் அறிந்து நிற்பர்? கங.

கச. இரண்டாஞ் சூர்ணிகை யாது? கச.

கரு. தத்துவப் பிரபஞ்சத்தை உள்ளவாறு ஆராயுங்கால் அதற்கு அறிவு உளதாமோ? கரு, கள.

கசு. பாசஞானமாவது யாது? கசு.

கள. மூன்றாஞ் சூர்ணிகை யாது? கஅ.

கஅ. அதன் பொருள் யாது? ககூ.

ககூ. சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பிரபஞ்சத்தையும் அறிவது ஆன்மா என்று விளக்குக? உ0.

உ0. ஆன்மாவானது சத்து அசத்து என்னும் இரண்டினால் அறிவிக்க அறியும் உபதேசியாதலின், அதற்கு அறிவு விளங்கும் தன்மையை விளக்குக? உங, (1), (2), (3).

உக. பசிநோய்க்கு அன்னம்போல ஒன்றையும் அறியாது மயங்குங்கால், ஆன்மாவுக்கு வியஞ்சகமாயுள்ளது யாது? உங, (1).

உஉ. கலாதி வியஞ்சகங்கள் அசத்தின்பாற்பட்டனவா? ங0, ஙங, (3).

உங. சத்தாகிய சிவத்தினால் ஆன்மாவுக்கு அறிவு நிகழுங்கால், அதற்கு வியஞ்சகமாயுள்ளது யாது? ஙக.

உச. கலாதி தத்துவ வியஞ்சகமுள்ளபோது ஆன்மா அறிதலால் அதற்கு எதன் தன்மை உண்டாகின்றது? உங (3).

உரு. அக்கலாதிகள் இல்லாதபோது ஆன்மாவுக்கு அறிவு நிகழாதாயின், அதற்கு எத்தன்மை உளதாகின்றது? உங, (3).

உசா. ஆதலால் அவ்வான்மா எங்ஙனம் கூறப்படும்? உங, (3).

உஎ. சத்து அசத்து என்னும் இரண்டன்பாலும் ஆன்மா உளதாம் என்பதை விளக்குக? உரு.

உஅ. கடல் என்றது எதனை உணர்த்துகின்றது? உரு.

உகூ. உப்பு எதிலே பொருந்தியுள்ளது? உரு.

ங0. உப்பு எதிலே பொருந்தாது? உரு.

ஙக. ஆணவமலம் எதனைப் பற்றும்? ஙரு.

ஙஉ. ஆணவமலம் சிவத்தைப் பற்றுமா? உரு.

ஙங. உப்பு எதிலே வியாப்பியம்? உரு.

ஙச. நீர் எதிலே வியாப்பியம்? உரு.

ஙரு. ஆணவமலம் எதிலே வியாப்பியம்? உரு.

ஙசா. ஆன்மா எதிலே வியாப்பியம்? உரு.

ஙஎ. ஆன்மரூபமாவது யாது? உஅ.

ஙஅ. பிரமேயம் யாது? உகூ.

ஙகூ. பிரமாதா யாது? உகூ.

ச0. பிரமாணம் யாது? உகூ.

சக. பிரமிதி யாது? உகூ.

சஉ. பாசஞானம் எத்தனை வகைப்படும்? ங0.

# சிறப்பதிகாரம்.

## சாதனவியல்.

## எட்டாஞ்சூத்திரம்.



க. 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌸𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌧𑍈𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂𑌨𑌵𑍇𑌤𑍍𑌸𑍀𑌤𑌿𑌬𑍋𑌧𑌿𑌤𑌃।
𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑍍𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌨𑌨𑍍𑌯𑍋𑌧𑌨𑍍𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿𑌤𑌤𑍍𑌪𑌦𑌮𑍍॥

ஸ்தித்வாசஹேந்திரியவியாதைஸ்துவாம்நவேத்சீதிபோதிதஃ।
முக்துவைதாங்குருணாநந்யோதந்யஃ பிராப்நோதிதத்பதம்॥

உ. (இ-ள்.) 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌧𑍈𑌃 𑌸𑌹 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾 = ஐம்புலவேடரோடு கூடியிருந்து; 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨 𑌵𑍇𑌤𑍍𑌸𑌿 𑌇𑌤𑌿 = உன் பெருமை அறிந்திலை என்று; 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾 = ஞானசாரியராலே; 𑌬𑍋𑌧𑌿𑌤𑌃 = அறிவுறுத்தப்பட்டவனாகிய; 𑌧𑌨𑍍𑌯𑌃 =(முன்னரே தவத்தை ஈட்டும் பேறு பெற்ற) செல்வமுடைய ஆன்மாவானவன்; 𑌏𑌤𑌾𑌨𑍍 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 = இவ்வைம்புலவேடரை விட்டு; 𑌅𑌨𑌨𑍍𑌯𑌃 𑌤𑌤𑍍 𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 = அனன்னியனாய்ச் சிவனார் திருவடியை அடைகின்றான்.

ங. ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

ச. (இ-ள்.) ஐம்புல வேடரின் = ஐம்புல வேடருள்ளே; வளர்ந்து அயர்ந்தனை என = வளர்ந்து (நின்பெருமையை) மறந்தாயென்று; தம் முதல் குருவுமாய் = தமக்குள்ளே (நின்றுணர்த்தி வந்த) பரம்பொருள் ஆசாரியருமாகி; தவத்தினில் உணர்த்த = (முன் ஈட்டிய) புண்ணிய விசேடத்தினால் அறிவிக்க; விட்டு = (அவ்வைம்புலவேடரை) விடுத்து; அன்னிய மின்மையின் அரன்கழல் செலும் = அனன்னியமாந்தன்மையின் அம்முதல்வர் திருவடியை அடையும்.

ரு. (க-ரை.) ஞானத்தினை உணரு முறைமையை உணர்த்துகின்றது.

சா. (க-பொ.) ஆன்மாவின் அறிவானது அசத்தான் விளங்கி அசத்தாகிய பாசத்தின் பாலுளதாய் அசத்தினை அறிந்து நின்றவாறும், சத்தான் விளங்கிச் சத்தாகிய சிவத்தின்பாலுளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறும் தரிசிக்கும் முறையினை அறிவித்தல்வாயிலாக, சாதித்தற்குரிய அதிகாரம் ஆன்மாவாகிய தனக்கு உண்டென்று அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனால் அடையும் பிரயோசனம் இன்னது என்றும், அதற்குச் சிறந்த சாதனமாவது

இன்னது என்றும், அது வரும்வழி இன்னது என்றும் உணர்த்துவது இந்த எட்டாஞ் சூத்திரம் என்பதாம்.

எ. (சூ. பி. பொ.) ஆன்மாவானது தான் முன்னே செய்தீட்டிய புண்ணிய விசேஷத்தினால் தனக்கு அந்தரியாமியாய் இதுவரையும் உள்ளே நின்று உணர்த்தி வந்த பரம்பொருளாகியசிவம் இப்போது ஆசாரியவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து, சிவதீக்ஷை செய்து, "அரசகுமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடருள்ளே அகப்பட்டு வளர்ந்து உன் பெருந்தன்மை அறியாது மயங்கித் துன்புற்றாய்", உன் பெருந்தன்மை இவ்வியல்பினதென்று உணர்த்த, உணர்ந்தமாத்திரையிலே அவ்வைம்புலவேடரை விட்டுநீங்கி, அன்னியமின்றி அனன்னியமாய் நிலைபெற்று அச்சிவத்தின் திருவடிகளை அடையும்.

அ. வெண்கொற்றக்குடையும், நவரத்தினகிரீடமும், சிங்காசனமும் அரசர்க்குரிய சிறப்படையாளங்களாம். அங்ஙனமே, உலகமனைத்துக்கும் மூலகாரணமா மியல்புபூண்ட ஒரு பெரிய வெண்கொற்றக்குடையையும், அனைத்தையும் ஒருங்கே ஓரியல்பினால் அறியும் முற்றறிவாகிய ஒரு பெரும் பிரகாச முடியையும், அங்கங்கே ஆன்மாவுக்கு ஆன்மாவாய் நின்று எவற்றையும் பிரேரிக்குமியல்பினதாகிய ஒரு பெருஞ் சிங்காசனத்தையும் தமக்கே உரிமையாகக்கொண்டு சிறந்தமைபற்றிப் (பசுக்களைப்பற்றிய பாசங்களை அழித்தலாகிய கெடுத்தல் செய்தலினால் அரன் என்னும் திருநாமத்தையுடைய) சிவபெருமானை அரசராகவும், சிவபெருமானது பேரானந்தப்பெருஞ்செல்வமுழுதும் தனதேயாகக்கொண்டு அநுபவிக்கும் சுதந்திரமுடைமையும், சித் எனப்படும் சாதி ஒப்புமையும்பற்றி ஆன்மாவை அரசகுமாரனாகவும், அவ்வான்மாவின் அறிவுப்பெருஞ் செல்வமுழுமையும் வழிபறித்துச் சிறுமையுறுத்தி விதிவிலக்குகளை இழந்து இழிதொழிற் கண்ணே நிற்பித்தலால் ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்யப்பட்டது.

## முதலாஞ் சூர்ணிகை.



கூ. உயிர்க்கு நல்லறிவு தவத்தினாலே வரும்.

க0. (சூ. பொ.) ஆன்மாக்களுக்கு ஆசாரியர் அறிவுறுத்தியவாறு சிவஞானக்கண்கொண்டு அறிவதாகிய சாதனஞானமானது முற்பிறவியிற் செய்த சரியை கிரியாயோகங்களாகிய தவத்தினால் எய்தும் என்பதாம்.

கக. சிவபெருமான் சர்வவியாபகராய் நின்று விளக்கினாலும் ஆன்மாக்கள் அறிவு ஸ்தூலவறிவாதலின் அங்ஙனம் ஒரேமுறையில் விளங்கமாட்டாது தத்தமக்கியன்றவாறு படிமுறையானே சிறிது சிறிதாக ஏகதேசமாய் விளங்கி, பின்னர் மேலோங்கி வியாபகமாய் விளங்குவதோர் தன்மையினதாமென்

றும், அதற்கேற்பப் படிமுறையானே சிவபெருமானது சிற்சத்தியும் பூருவ பக்கத்துச் சந்திரன்போலத் திரோதானசத்திரூபமாய்நின் றுணர்த்துமென் றும், ஆன்மாக்களைப்பற்றிய பற்பல சத்திகளையுடைய அஞ்ஞானமாகிய மல மும் அம்முறையே சிறிது சிறிதாகப் பூருவபக்கத்திருள்போலத் தேய்ந்து தேய்ந்து முடிவிலே பற்றறக்கழியும் என்றும், அதற்கேற்பத் திரோதான சத்தியும் அம்முறையே சிறிது சிறிதாகத் தன்றன்மை நீங்கிச் சிற்சத்திரூப மாய்ப் பதிந்து பதிந்து முடிவிலே அதிதீவிரசத்தியாய்ப் பதியுமென்றும், அதனால் விடயங்களில் வெறுப்புண்டாம் என்றும், அதுபற்றி முத்தியில் விருப்பம் நிகழுமென்றும், அதற்கியையப் பல்வகைப்பட்ட உபதேசங்களும் படிமுறையானே மேற்பட்டுவரும் என்றும், அதற்கிசையவே ஆன்மாக்களு க்கு அநுபவஞானங்களும் மேற்பட்டு எய்தும் என்றும் உணரற்பாற்று.

கஉ. (வெ. பொ.) சரியை கிரியாயோகங்களாகிய தவத்தைச் செய் தோர் அத்தவப்பயன்களைக் கொடுக்கும் சாலோக, சாமீப, சாரூப பதங்க ளைப் பிறழாது அடைந்து, ஆண்டுளவாகிய இன்பங்களை அநுபவித்திருந்து, மீளப் பூவுலகின்கண்ணே வந்து பிறந்து சேஷித்த கன்மபயன்களை அநுபவித் து விஷயப்பற்றுக்களை அறுக்கும்பொருட்டு அவ்வாறு தவஞ் செய்தற்குரிய உயர்ந்த சாதி குடிப்பிறப்பின்கண்ணே வந்து பிறந்து தவக்குறையான் அவ் விஷயப்பற்று முறுகாவண்ணம் அறுத்துத் தத்துவஞானத்தைத் தலைப்படு வார்; ஆகவே, இழிகுலத்தார் தத்துவஞானத்துக்கு உரியராகார் என்க.

கங. சரியை கிரியாயோகங்களாகிய தவங்களே தத்துவஞானத்தைக் கொடுக்குமென்று வலியுறுத்திக் கூறவேண்டிய தெற்றுக்கு? வேதத்துட் கூறப்பட்ட யாகமுதலியன தத்துவஞானத்தைக் கொடுக்குமென்று கூறினால் என்னை எனின்,

கச. 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌕𑌾𑌮𑍋 𑌯𑌜𑍇𑌤 ।

ஸ்வர்க்ககாமோ யஜேத।

கரு. (வெ. பொ.) "சுவர்க்கத்தை விரும்பினவன் வேள்வியைப் புரிக" என்றற்றொடக்கத்தனவாக வேதமானது யாகமுதலிய தருமங்களை விதிக்குமிடத்தே அந்த யாகாதிகளிற் காமியப்பயன்களையும் உடன்கூறிக் கொண்டே வருகின்றன. அவ்வியல்பினவாகிய வேள்விப்பயன்களால் எய்தும் சுவர்க்கவின்பம் முன்னர்ப் பசித்தமையால் உண்டு பின்னரும் பசிப்பவனுக்கு அவ்வுணவினால் வரும் இன்பத்தை ஒக்கும்; நல்வினையும் தீவினையும் ஒருவற்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதலினால், அவ்விரண்டும் முறையே பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலாம். இந்த நல்வினை தீவினைகள் இரண்டும் அநுபவமாத்திரையினாலே கேடுறாது மேன்மேல் முறுகி ஓங்குவன வாகிய சரியை கிரியாயோகங்களாலே நோாக ஒத்தால், அத்தவங்களின்

பயனாகிய பதமுத்திகளை அநுபவித்துக்கொண்டிருக்கும் அந்தச் சாலோக முதலிய உலகங்களிலிருந்துதானே ஞானநெறியிற்றலைப்படுவர். அப்புண்ணிய பாவமிரண்டும் ஒப்பாகாவிடின், மீளப் பூவுலகின்கண்ணே வந்து பிறந்து இருவினை யொப்பெய்தி ஞானாசாரியரின் திருவருளாற் சாதனமாகிய ஞானத்திற் றலைப்படுவர்.

கசூ. ஒருவனது அறிவின்கண்ணே ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமின்றிப் புண்ணியபாவம் இரண்டினும், அவற்றின் பயன்களாகிய இன்ப துன்பங்களினும் உவர்ப்பு ஒப்ப நிகழுதலே இருவினையொப்பாம் என்று உணரப்படும்.

கஎ. சிவபுண்ணியம் அபுத்திபூருவம், புத்திபூருவம் என இருவகைப் படும். அவற்றுள் அபுத்திபூருவம் யாகமுதலியவற்றுட் போலப் பொது நீக்கி அறியுமாறின்றிச் சிவபிராணையுற்றுச் செய்வதும், அந்நோக்கமுமின்றி மாவலி என்னும் ஓர் அசுரன் முற்பிறவியில் எலியாகி வேதாரணியத்தில் அணையும் தீபத்தைத் தூண்டினமைபோன்ற ஓர் வினை யாதோர் பிரகாரத்தாற் சிவபிரானுக்குப் பணியாய் முடிவதும் என இருவகைப்படும்.

கஅ. பொதுநீக்கிச் செயப்படுவதாகிய சிவபுண்ணியமும் பொது சிறப்பு என்று இருவகைப்படும். பொதுச்சிவபுண்ணியமாவது சிவபுண்ணியத்துக்கு அங்கமாகிய சிவதீக்ஷையின்றி அவ்வாறு செய்வது; சிறப்புச்சிவ புண்ணியமாவது சிவதீக்ஷையுடையராய் அங்ஙனம் செய்வது.

கசு. பொதுச்சிவபுண்ணியமும் சிறப்புச்சிவபுண்ணியமும் பக்தி காரணமாக உண்மையாற் செய்வதும் புகழ்பொருள் காரணமாக உலகப் பயனை நோக்கிச் செய்வதும் என வெவ்வேறு இருவகைப்படும்.

உ0. சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்னும் நான்கும், அங்ஙனம் கிரியையிற் சரியைமுதலிய நான்கும், யோகத்திற் சரியைமுதலிய நான்கும், ஞானத்திற் சரியைமுதலிய நான்குமாகச் சிவபுண்ணியம் பதினாறு வகைப்படும். உண்மையாற் செய்யப் படுங்காலும், புகழ்பொருள்காரணமாகச் செய்யப்படுங்காலும் இப்புண்ணியங்கள் தொகையால் முப்பத்திரண்டு வகைப்பட்டுப் பின்னும் விரியும் என்று யூகித்து உணர்க.

## இரண்டாஞ் சூர்ணிகை.

உக. உயிர்க்குச் சற்குருவாய் வருவது அரனே.

உஉ. (சூ. பொ.) மேலே கூறியவாறு சரியை முதலிய மூன்றும் முற்றிய பின்னர் அந்த முதிர்வுகாரணமாக மலபரிபாகம், சத்திநிபாதம் எய்தி,

தத்துவஞானத்தில் அவாவுற்ற ஆன்மாவுக்கு, இதுவரையும் தமக்கு முதலாய் உண்ணின்று உணர்த்தி வந்த சிவபரம்பொருளே அப்பருவம் எய்திய ஆன்மாவுக்கு ஆசாரியமூர்த்தமாய் எழுந்தளிவந்து அத்தத்துவஞானத்தை உபதேசித்தருளும் என்பதாம்.

உங. சிவபெருமான் பாலில் நெய்போல மறைந்து வேறாய் நில்லாது; சுத்தான்மசைதன்னியத்தையே தமக்குச் சொரூபமாகக்கொண்டு தயிரினெய்போல அவ்வான்மசைதன்னியத்தில் விளங்கி நிற்பாராக, சிவபெருமானைச் சார்ந்து அவ்வண்ணமாகிய சைதன்னியம் விளங்கப்பெறும் உடம்பும் அவ்வாறு அருண்மயமே யாதலின், அவ்வுடலை இடமாகக்கொள்ளுதல் பொருத்தமுடைமையான், சிவபரம்பொருள் ஆசாரியமூர்த்தமாக எழுந்தருளும் என்று கூறப்பட்டதாம் என்க.

உச. ஒவ்வோரிடங்களில் ஆசாரியராக எருந்தருளி வந்து உணர்த்தாதிருப்பவும் ஞானம் நிகழ்கின்றதே எனிற் கூறுதும்:—

உரு. (வெ. பொ.) சிவபெருமான் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை ஆன்மாக்களுள்ளே, விஞ்ஞானகலராயினோர்க்குத் (தன்மையினின்றவாறே) அறிவுக்கு அறிவாய்நின்று தத்துவஞானத்தை உபதேசிப்பர்; பிரளயாகலர்க்கு நாற்புயம், திரிநேத்திரம், நீலகண்டமுதலிய உறுப்பிற்றாய்த் தன்னியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தை உபதேசிப்பர்; சகலர்க்கு அவர் வடிவுபோலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை உணர்த்துவர்.

உசூ. விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்கு நிராதாரமாகவும், சகலர்க்குச் சாதாரமாகவும் நின்று அருள்செய்வர் என்பது பெறப்படும்.

உஎ. விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்போர்க்குச் சிவபெருமான் ஒருபிரகாரமாக உபதேசியாது, தன்மையினும், முன்னிலையினும், படர்க்கையினும் நின்று உணர்த்துவதற்குக் காரணம் உரைக்கப்படுகின்றது:—

உஅ. (வெ. பொ.) ஆன்மாக்களெல்லாம் தமக்குரிய படிமுறையானே சிவபெருமான் அறிவிக்க அறியும் இயல்பினவேயன்றி ஒன்றுபோல் உணருமியல்பினவன்று; ஆதலால், அறிவினாற் குறைவுறாத சிவபெருமானது உபதேசமொழியைக் கேட்டுணருமியல்பினராகிய பிரளயாகலர் சகலராயினோர்க்கு அறிவித்தால் அறிதலாகிய குறைபாடுகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம். அச்சிவபெருமானது உபதேசமொழியைக்கொண்டு உணரவேண்டாத விஞ்ஞானகலர்க்குச் சிவபெருமானாற் கொள்ளப்படும்

தன்னுண்மைமாத்திரத்தினல் மோக்ஷத்தைக்கொடுக்கும்ஞானம் நிமழுமாம் என்பதாம்.

உகூ. நூல் குறைவுடையதேனும், அதனைக் கேட்பித்துச் சிந்திப்பித்துத் தெளிவிக்கும் ஆற்றலில் ஆசாரியாது அறிவு குறைவுறுமையால், அவர் அறிவினுற் குறைவுறுதவர் எனப்பட்டார்.

௩0. ஆசாரியரது அறிவு குறைவுறுமையாற் கேட்டுச் சிந்தித்தன்றித் தெளியப்படாத குறைபாடுடைய நூல் வேண்டாத நுண்ணுணர்வுடைய விஞ்ஞானகலர்க்குச் சிவபெருமானுல் (தன்மையில்) அறிவுக்கறிவாய் நின்றுணர்த்துதல் மாத்திரத்தினுல் முத்தி கைகூடும் என்றும், நூல்வேண்டும் ஸ்தூல அறிவுடைய சகலர்க்கு ஆசாரியரால் முத்தி கைகூடும் என்றும் அறியற்பாற்று.

௩க. விஞ்ஞானகலர்க்கு மாயை கன்மங்கள் உளவாயவிடத்தும், அவர் அவற்றுற் பிணிப்புண்டு மயங்காது சூக்குமமலசத்தியினுற் பிணிப்புண்டமையின், அவரைப் பற்றிய அம்மலசத்தியானது சிவபெருமான் உண்ணின்று உணர்த்திய மாத்திரையானே நீங்கிவிடும்.

௩உ. பிரளயாகலர்க்கு மாயை உளதாயவிடத்தும், அவர் அதனுற் பிணிப்புண்டு மயங்காது ஆணவத்தினுலும் கன்மத்தினுலும் அவர் பிணிப்புண்டமையின், அவரைப்பற்றிய ஸ்தூலமலசத்தியானது சிவபெருமான் முன்னிலையில் நின்று உபதேசவாயிலாக உணர்த்துங்கால் நீங்கிவிடும்.

௩௩. சகலர் ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்றினுலும் பிணிப்புண்டமையான், அவரைப்பற்றிய ஸ்தூலதரமலசத்தியானது சிவபெருமான் அச்சகலர் வடிவுபோலும் குருவடிவாகிய மானிடப்போர்வையின் மறைந்து பின்னிலையாகிய படர்க்கையினின்று உபதேசவாயிலாகவும், நூல்வாயிலாகவும், அநுபவவாயிலாகவும் பலவேறு வகைப்பட வலியுறுத்தி உணர்த்துங்கால் நீங்கிவிடும் என்றும் அறியற்பாற்றும்.

௩ச. (வெ. பொ.) நூலினைக் கொண்டவராகிய சகலர்க்கு அந்நூலால் அறிதலே சாலும்; அதனுல் ஆசாரியர் எழுந்தருளி வந்துணர்த்தவேண்டாமெனல் கூடாது; தாயார்க்குக் குழந்தையினிடத்து உளதாம் அருவாகிய அன்பை வெளிப்படுத்துதற்கு அவ்வன்பு வடிவாகிய முலைப்பாலும் கண்ணீரும் குழந்தையைக் காணுமுன் அவளிடத்தில் இலவாய்ப் பின் உளவாகும்; அதுபோல, ஜலத்தின்கண்நிழல்போல ஆன்மாவினிடத்துப்பொருந்தி வெளிப்படாது நின்ற சிவபெருமான் தாமே ஆசாரியமூர்த்தமாய் எழுந்தளி வந்து அவ்வான்மாவுக்கு உபதேசியாது விடுவாராயின், யார்தாம் அவரை அறிய வல்லார்!

௩௫. அருவமாய்நின்ற சிவபெருமானை அறிவித்தற்கு நூல்மாத்திரம் போதாது என்றும், அச்சிவபெருமானே ஆசாரியராய் வெளிப்பட்டு உணர்த்தல்வெண்டுமென்றும் பெறப்பட்டது.

௩௬. நீரானது தன்னிடத்து இயங்கும் உயிர்களுக்கு இடங்கொடுக்கின்றமையால், அந்நீரிலே வெளி உண்டு என்றும், ஆதலால் நீருக்கு நிழல் உண்டு என்றும். அந்நிழலானது நீரோடு விரவிநிற்றலாற் புலப்படவில்லை என்றும், அதுபோலச் சிவசைதன்னியமும் ஆன்மசைதன்னியத்தினோடு விரவிப்புலப்படாது நிற்பதொன்றென்றும் கொள்ளற்பாற்றும்.

## மூன்றுஞ் சூர்ணிகை.



௩௭. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

௩௮. (சூ. பொ.) ஸ்படிகக்கல்லில் வைத்த பல்வகைப்பட்ட வர்ணங்கள் அந்த ஸ்படிகப் பிரகாசம் தோன்றவொட்டாது கீழ்ப்படுத்தித் தத்தமியல்பினையே விளக்கி நிற்குமாறுபோல, அந்த ஐம்பொறிகள் ஆன்மசொரூபம் விளங்காவண்ணம் கீழ்ப்படுத்தித் தம்மால் விஷயீகரிக்கப்பட்ட தத்தம் விடயங்களையே அவ்வான்மாவுக்கு விளக்கி மயக்குவனவாதலால், அவ்வான்மாவானது தன்னை உணரமாட்டாதாயிற்று என்பதாம்.

௩௯. ஐம்புலக் கருவிகள் நீங்கியபோது கேவலாவஸ்தை தலைப்படும்; ஐம்புலன்களும் காட்டியவற்றையே காட்டிக்கொண்டு நிற்றலால், அவ்வைம்புலக்கருவிகள் உளவாயபோது ஆன்மாவுக்கு ஆசாரியர் அறிவுறுக்கும் உபதேசம் ஏறுமென்று அதற்கு உபாயம் கூறப்படுகின்றது:—

௪௦. (வெ. பொ.) தன்னைச் சார்ந்த பலவேறு வகைப்பட்ட நிறங்களையே தன்னிடத்துக் காட்டும் பொதுவியல்புடைய ஸ்படிகம்போல ஆன்மாவானது தன்னைச் சார்ந்த ஐம்புலன்களின் இயல்பே தன்னிடத்து விளக்குவதாகிய தனது சார்ந்ததன்வண்ணமாமியல்பை முதற்கண்ணே சிந்தித்து அறிந்துகொண்டு, அந்த நிறங்கள் ஸ்படிகத்துக்கு வேறு என்று அறியுமாறுபோல, பல்வேறு வகைப்படும் இயல்பினையுடைய பொதுவியல்பைச் செய்யும் ஐம்பொறிகளையும் தனக்கு வேறு எனத் தெளிந்து, அப்பொறிகளாலாய அப்பொதுவியல்பு பொய் என்று நீங்குமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானாயின், அவன் பரம்பொருளாகிய சிவத்துக்கு அடிமையாய், அப்பரம்பொருளியல்பு தன்னிடத்து விளங்கநிற்பன்; நிற்கவே, முன் விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேறாக நீங்கும் என்க.

## நான்காஞ் சூர்ணிகை.



சக. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

சஉ. (சூ. பொ.) ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமாகிய ஊஞ்சற் கயிறு அற்றதாயின், அவனுக்கு உற்றவிடத்து உதவும் தாய்போல அவனுக்கு அவ்விடத்தில் தாரகமாயுள்ளது நிலமேயாம். அதுபோலப் பஞ்சப் புலன்களால் மயங்கித் தன்னை உணராத ஆன்மாவானது அறிவாய், வியாபகமாகிய தன்னியல்பைச் சடமாய் ஏகதேசமாகிய ஐம்பொறிகளுக்கு வேறாக உணரும்வியாபகஉணர்வுக்கு, அவ்வைம்பொறிகளால் ஆகக்கடவதொன்றில்லை என்று ஞானசாரியர் அறிவுறுப்பவே, மற்றோர் காரணம் வேண்டாது தனக்கு ஆதாரமாகிய சிவபெருமான் திருவடியையே தலைப்படும் என்பதாம்.

சங. ஐம்பொறிக் கருவிகள் ஆன்மாக்களால் அறியப்படாது கழியுங்கால் மலம் தாரகம் என்றும், அவ்வைம்பொறிகள் ஆன்மாக்களால் அறியப் பட்டுக் கழியுங்காற் சிவமே தாரகமென்றும் பெறப்படுகின்றது.

சச. ஐம்புலக் கருவிகளினின்று ஆன்மா நீங்குங்கால் அவ்வான்மா வேறுநில்லாது சிவத்தை அடையுமாயின், அவ்வான்மாவுக்கும் கருவிகளினீங்கிக் கேவலத்தை அடைந்த ஆன்மாவுக்குப்போல, மீட்சியில்லை என்று உணர்த்தப்படுகின்றது:—

சரு. (வெ. பொ.) ஒருவன் அணையை உயர்த்திக்கட்டித் தடைசெய்ய ஆங்குத் தடையுண்டு நிறைந்து நின்ற நீர்போல, கருவிகளாலாகிய பாசஞானம் தனது வியாபகத்தைத் தடைசெய்ய, அதன்கண்ணே ஏகதேசமாய்த் தடைப்பட்டுநின்ற ஆன்மாவானது, அவ்வணை முறிந்து தடைதீர்ந்தபோது இடையீடின்றிக் கடலின்கண்ணே சென்றடங்கி அந்நீரேயாய்ப் பின்பு மீளாத ஆற்றுநீர்போல, ஐம்புலக்கருவிகளாய பாசஞானத்தடை விட்டொழிந்தபோது, சிவபிரானது திருவடியை அடைந்து அத்திருவடி நிறைவேயாய் அடங்கிப் பின்பு மீளாது, நிலைபெற்றே இருக்கும் என்க.

சசு. ஞானசாரியர்வாயிலாக ஆன்மாவானது திருவருளைத் தரிசித்து, அத்திருவருட் சகாயத்தினால் தான் தத்துவங்களுக்கு மேலானேன் என்று நிற்றல் சிவரூபம், இந்தச் சிவரூபத்தினால் ஆன்மாவானது தனக்கு உயிராயுள்ளது திருவருள் என்று அறிந்து நிற்பது ஆன்மதரிசனம். இது ஞானத்துச் சரியை; கேட்டல் ஞானமுமாம். இது பிண்டத்தின் வைத்தறிதலால் இது ஞானதரிசனமுமாம்.

சஎ. சிவபிரான் திருவடியைத் தலைப்பட்ட ஆன்மா மீளுதல் செய்யாது என்று கூறுதல் வேண்டாம்; எல்லாஞ் சிவமாயிருத்தலின் ஆன்மா மீண்டாற்றான் என்னை? மீளாக்காற்றான் என்னை? எனின், அங்ஙனம் விடையிறுத்

தல் சாலாதென்று கூறி, பின்னரும் அவ்வான்மா மீளாதென்று வலியுறுத்தப்படுகின்றது:—

௪௮. (வெ. பொ.) (1) பசுஞானமேயன்றிப் பாசஞானமும் சிவமேயாயின், விசேஷமின்மையாற் புலன்வழி யொழுகும் சகலாவஸ்தையை விடுத்துத் திருவடியை அடையவேண்டாமாதலின், ஒருவரும் அத்திருவடியை எய்துவாரில்லையாய்,

(2) 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌵𑌂 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌶𑍈𑌃।

(சுவேதாசுவதரம். ௬, ௧௩.)

ஞாத்வா தேவம் முச்யதே சர்வபாசை:।

(3) "மகாதேவரை அறிந்து சமஸ்தபாசங்களினின்று விடுபடுகின்றான்" என்றும்,

(4) 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌪𑌤𑌿𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌮𑍍।

ததாபி முச்யதே தேஹீ பதிம் விஞ்ஞாய நிர்மலம்।

(5) "ஆன்மா நிர்மலராகிய சிவனை அறிந்து, பாசத்தினின்று வீடுறுகின்றான்" என்றும், "பாசத்தைப் பசுக்கள் விடுத்துப் பதியினை அடைய முத்தி" என்றும் கூறும் வேதாகமப் பிரமாணங்கள் போலியாய் முடியும்; அது பற்றிச் சிவபிரான் புலனுணர்வாகிய பாசஞானத்தோடியையின்றி அதனின் வேறாய் நிற்பரெனின், அப்பாசஞானத்துக்குச் சிவபிரானால் ஆகற்பால தொன்றின்மையின், அவர் அதற்கு முதல்வர் அல்லர் எனப்பட்டு முதன்மைக்கிழுக்காயன்றோ முடியும், பின் அதனியல்பு என்னை எனின், பாசஞானமும் பசுஞானமுமாகிய இரண்டும் கலப்பினாற் சிவமேயாயினும், அவ்விரண்டும் தம்முட்சமமாகா;

(6) ஆன்மாவானது பஞ்சப்புலன்களோடும் ஒப்ப நிற்பதேயாயினும், அவ்வைம்பொறிகளுள்ளே சோத்திரம், துவக்கு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் நான்கும், சட்சுவாகிய கண்ணிந்திரியம்போலப் பிரகாசத்தினால் அவ்வான்மபோதத்தோடு விரவி மிகுதூரத்தினதாகிய விடயத்தை வியாபித்து அறியுமாறுபோல, வியாபித்து அறியமாட்டாவாய்த் தம்மிடத்து எய்திய விடயங்களை நின்றவிடத்து நின்று இயைந்து அறியும் தன்மையினவேயாம். ஒளி மழுங்கிய கண்ணுக்கு ஏனை உறுப்புக்களோடொப்பத் தன்னிடத்தெய்திய விடயத்தைமாத்திரமே காண்பதன்றித் தூரத்தின்கண்ணே வியாபித்து அறியுமாறில்லையே எனின், மாசு மிகுதியினாற் கட்பிரகாசமிழந்தவர் கண்பெற்றபோது சேய்மைக்கண்ணதாகிய விஷயத்தை வியாபித்தறியுமிடத்தே கண்ணினது வெற்றிப்பாடு காணப்படும்.

௪௯. ஆன்மா மெய், வாய், மூக்கு, செவி, கண் என்பவற்றோடு அபேதமாய் விளங்கினும், மெய், வாய், மூக்கு, செவி என்னும் நான்குக்கும் கண்ணுக்கும் மேலே கூறியவாறு பேதம் உளதாமாறுபோல, சிவஞானமானது பாசஞானம் பசுஞானங்களோடு அபேதமாய் விளங்கினும், அவை தத்தமியல்பிலே திரியாது பாசஞானத்துக்கு ஏகதேசவிளக்கமும், பசுஞானத்துக்குச் சிவஞானம்வாயிலாக வியாபகவிளக்கமுமாகிய பேதமுடைமை பசுத்துவம் நீங்காத பெத்தநிலையில் அறியப்படாதாயினும், பசுத்துவம் நீங்கிய முத்திநிலையில் அறியப்படுமாதலின், அவ்வியல்பினதாகிய ஆன்மஞானம் பஞ்சப்புலன்களை மீளப் பற்றுமாறின்றும்.

௫௦. நீரானது தடைகடந்தபோது கடலின்கண்ணே சென்று அடங்குதலேயன்றி, நதிவாயிலாகக் கடலிலே பாய்ந்த நீரானது அந்நதி வழியாக மீண்டு வருதல் போல, சிவபிரான் திருவடியைத் தலைப்பட்ட ஆன்மாவுக்கு ஓரோவிடத்து மீட்சியுண்டென்பது பெறப்படுகின்றதே எனின், அவ்வான்மா சிவபிரான் திருவடியை அடைந்து மீளுமாயின், அம்மீட்சிக்குக் காரணம் யாது என்றும், அதனை நீக்குதற்கு உபாயம் யாது என்றும் கூறப்படுகின்றது:—

௫௧. (வெ. பொ.) ஐம்பொறிகள் போல ஏகதேச விளக்கமுறாது வியாபக அறிவுடையதென்று சித்தாந்த மகாவாக்கியம் உபதேசிக்கப்பட்ட ஆன்மாவானது நீர் அணை கடந்து கடலிற் சென்று அடங்குமாறுபோல, ஐம்புலப் பாசஞானத்தைக் கடந்து சிவனார் திருவடியை எய்திப் பின் அதனினின்று நீங்காது. கல் எறிந்தவிடத்து நீங்கிய பாசியானது அது விடும்போது பரக்குமாறுபோல, அவ்வணையின்கண் நீங்கிய மல கன்ம மாயைகள் பயிற்சிவயத்தினால் ஆன்மாவில் நிகழும் மறதிச் சமயம் பார்த்து வந்து கூடுமாயின், அதனாற் புலன்வழி மீளாது; தன்னை விட்டு நீங்காத சிவபிரானை முன்னர்க் கூறப்படும் உபாயங்கள்வாயிலாகச் சிந்தித்து அவ்வைம்புலன்களை நீக்கிக் கொள்ளலாம் என்க.

## எட்டாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.



ஆன்மாவானது முற்பிறவியில் ஈட்டிய தவத்தின் விசேஷத்தினால் அதற்கு அந்தரியாமியாய் அதற்குள்ளே நின்றுணர்த்திய பரம்பொருள் ஞானாசாரியராக எழுந்தருளி வந்து சிவதீக்ஷை செய்து "உன் பெருந்தன்மையை அறியாது ஐம்புல வேடருள்ளே அகப்பட்டு மயங்கினை" என்று உணர்த்திய போது, அவ்வைம்பொறிகளை விட்டு அன்னியமின்றிச் சிவபிரானது திருவடியை அடையும் என்றும், சிவபெருமான் சர்வவியாபகராய் நின்று அறிவுறுத்தினாலும் ஆன்மாக்களுடைய அறிவு ஸ்தூலமாதலின் அது ஒரே முறையில் விளங்கமாட்டாது படிமுறையினால் ஏகதேசமாய் விளங்கிப் பின்னர் வியாபகமாய் மேலோங்கி விளங்குவதோரியல்பினது என்றும், சரியை கிரியா

யோகங்களைச் செய்தோர் சாலோகாதி பதமுத்திகளை அடைந்து ஆண்டுள்ள இன்பங்களை அநுபவித்து மீளப் பூமியின்கண்ணே சேஷித்த கன்மங்களை அநுபவித்து விஷயப்பற்றுக்களை அறுக்கும்பொருட்டு உயர்ந்த சாதியின் கண்ணே வந்து பிறந்து தத்துவஞானத்தைத் தலைப்படும் என்றும், சரியை கிரியா யோகங்களைப்போல் யாகமுதலியன தத்துவஞானத்தைக் கொடுக்க மாட்டாவாம் என்றும், தீவினைகளும் யாகமுதலிய நல்வினையும் ஒருவற்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துவனவாதலின், அவ்விரண்டும் முறையே பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போல்வனவாம் என்றும், நல்வினை தீவினைகள் சரியை கிரியா யோகங்கள்வாயிலாக நேராக ஒத்தால், புண்ணிய பாவங்களினும் அவற்றான் வரும் இன்பதுன்பங்களினும் வெறுப்புச் சமமாக நேர்தலே இருவினையொப்பாம் என்றும், புண்ணியம் அபுத்திபூருவம், புத்திபூருவம், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் எனப் பத்துவகைப்படும் என்றும், சிவபெருமான் விஞ்ஞானகலர்க்குத் தன்மையினின்றும், பிரளயாகலர்க்கு நாற்புயமுதலிய உருப்பிற்றாய் முன்னிலையினின்றும் உபதேசிப்பார் என்றும், சகலர்க்கு அவர் வடிவுபோலும் மானிட வடிவுடைய குருவாகிப் படர்க்கையினின்று உபதேசவாயிலாகவும், நூல்வாயிலாகவும், அநுபவவாயிலாகவும் அறிவுறுத்தி ஆணவாதி முப்பாசங்களையும் நீக்குவார் என்றும், ஸ்படிகக்கல்லிலே பற்றிய நிறங்கள் அப்படிகத்துக்கு வேறாயினாற்போல, ஆன்மா தன்னைப்பற்றிய ஐம்புலன்களையும் தனக்கு வேறெனத் தெளிந்து, தனது சிறப்பியல்பை உணர்ந்து, சிவத்துக்கு அடிமையாய் அப்பரம்பொருள் தன்னிடத்து விளங்க நிற்கும் என்றும், இதனால் ஐம்பொறிகளை விட்டு ஆன்மா நீங்குங்கால், அவ்வான்மாவுக்குத் தாரகமாய்ப் போந்தது சிவம் என்றும், ஐம்புலன்களாகிய பாசஞானத்தடை கடந்தபோது ஆன்மா சிவபிரானது திருவடி நிறைவேயாய் அடங்கி, பின் அதனைவிட்டுப் பிரியாது நிலைபெற்றிருக்கும் என்றும், ஆன்மாவானது மெய், வாய், மூக்கு, செவி, கண் என்பவற்றோடு ஒப்ப அபேதமாய் விளங்கினும், அம்மெய் முதலிய நான்கனோடு நிற்கும் கண்ணிந்திரியம் பிரகாசத்தினால் ஆன்மபோதத்தோடு சேர்ந்து வெகுதூரத்துள்ள விஷயத்தை அறிதல்போல, சிவஞானமானது பாசஞானபசுஞானங்களோடு அபேதமாய் விளங்கினும், பாசஞானத்துக்கு ஏகதேச விளக்கமும், பசுஞானத்துக்குச் சிவஞானம்வாயிலாக வியாபகவிளக்கமும் எய்துமாம் என்றும், ஐம்பொறிகள்போல ஏகதேசவிளக்கமுறாது வியாபகவறிவுடைய ஆன்மாவானது அணை கடந்து கடலிற் சென்றடங்கிய நீர்போல ஐம்புலத்தடைகடந்து சிவபிரானார் திருவடியைத் தலைப்பட்டு அதனினின்று நீங்காது என்றும், அங்ஙனம் மலமுதலியவற்றின் பயிற்சிவயத்தால் ஓரோவிடத்து மீழினும், அதற்கு முன்னர்க் கூறப்படும் உபாயம்பற்றி நீக்கிக் கொள்ளலாம் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## எட்டாஞ் சூத்திரப் பரீக்ஷைவினக்கள்.



க. சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக்கருத்துரை யாது? ரு.

௩. சூத்திரப்பிண்டப்பொருள் யாது? எ.

ச. அரசர்க்குரிய சிறப்படையாளங்கள் யாவை? அ.

ரு. சிவபிரானுகிய அரசர்க்குரிய குடையும், முடியும், சிங்காசனமும் எவற்றை முறையே உணர்த்துகின்றன? அ.

சு. சிவபெருமானுக்கு யாதுபற்றி அரன் என்னும் திருநாமம் போந்தது? அ.

எ. சிவபெருமானது பேரானந்தத்தை அநுபவிக்கும் சுதந்திரம் யாருக்கு உண்டு? அ.

அ. எந்த ஒப்புமையால் ஆன்மா அரசகுமாரன் எனப்படுகின்றுன்? அ.

கூ. ஆன்மாவின் அறிவுப்பெருஞ் செல்வத்தை வழிபறித்துச் சிறுமையுறுத்தினவர் யார்? அ.

க0. முதலாஞ் சூர்ணிகை யாது? கூ.

கக. அதன் பொருள் யாது? க0.

கஉ. சிவபெருமான் சர்வவியாபகராய் நின்று விளக்கினுலும் ஆன்மாக்கள் ஒரே முறையில் விளங்குமியல்பினவா? கக.

க௩. படிமுறையினுலே ஆன்மா விளங்குங்கால், சிவனர் சிற்சத்தி எதுபோல நின்றுணர்த்தும்? கக.

கச. ஆன்மாவைப்பற்றிய பற்பல மலசத்திகள் எதுபோலத் தேயும்? கக.

கரு. முதற்கண்ணே திரோதானசத்திரூபமாய் நின்றுணர்த்திய சிற்சத்தி முடிவில் எங்ஙனம் பதியும்? கக.

கசு. அங்ஙனம் அதிதீவிரசிற்சத்தியாய்ப் பதியுங்கால் எவற்றிலே வெறுப்பும், எவற்றிலே விருப்பும் உண்டாம்? கக.

கஎ. அங்ஙனம் உளவாகுங்கால், எவை படிமுறையானே மேற்பட்டு வரும்? கக.

கஅ. சரியை கிரியாயோக தவங்களைச் செய்தோர் எவற்றை அடைவர்? கஉ.

கக. சாலோகாதி பதங்களை அடைந்து இன்பம் அநுபவித்துப் பின் எங்கே மீளுவர்? கஉ.

உ0. பூமியின்கண்ணே யாதுபற்றி உயர்ந்தசாதிக் குடிப்பிறப்பின் சண்ணே வந்து பிறப்பார்? கஉ.

உக. அங்ஙனம் பிறந்து எதனைத் தலைப்படுவர்? கஉ.

உஉ. வேதத்திற் கூறப்பட்ட யாகமுதலியன தத்துவஞானத்தைக் கொடுக்காவோ? கங, கரு.

உங. வேள்விப்பயன்களால் எய்தும் சுவர்க்கலோக இன்பம் எதனை ஒக்கும்? கரு.

உச. நல்வினை தீவினை என்பன எவற்றை ஒப்பன? கரு.

உரு. இந்த நல்வினை தீவினைகள் எவற்றால் நேராக எய்தும்? கரு.

உசு. அங்ஙனம் நேராக ஒக்குமாயின் சரியையாதி தவங்களின் பலனாக எவற்றை அநுபவிக்கும்? கரு.

உள. சாலோக்கியாதி உலகங்களிலிருந்து எதனைத் தலைப்படுவர்? கரு.

உஅ. அங்ஙனம் இருவினைகள் ஒப்பாகாவாயின் எங்கே மீளுவர்? கரு.

உகூ. பின் எதனைத் தலைப்படுவர்? கரு.

ங0. இருவினையொப்பாவது யாது? கசு.

ஙக. சிவபுண்ணியம் எத்தனை வகைப்படும்? கள.

ஙஉ. அபுத்திபூருவம் எத்தனை வகைப்படும்? கள.

ஙங. அவ்விரண்டும் யாவை? கள.

ஙச. பொது நீக்கிச் செய்யப்படுவதாகிய சிவபுண்ணியம் எத்தனை வகைப்படும்? கஅ.

ஙரு. பொதுச் சிவபுண்ணியமும் சிறப்புச் சிவபுண்ணியமும் தனித்தனி எத்தனை வகைப்படும்? ககூ.

ஙசு. சரியை முதலிய நான்கு பாதங்களும் தனித்தனி எத்தனை வகைப்பட்டு விரியும்? உ0

ஙஎ. உண்மையாற் செய்யப்படுங்காலும், புகழ்பொருள் காரணமாகச் செய்யப்படுங்காலும், சரியையாதிகள் எத்தனை வகைப்படும்? உ0.

ஙஅ. இரண்டாஞ் சூர்ணிகை யாது? உக.

ஙகூ. அதன் பொருள் யாது? உஉ.

ச0. சிவபெருமான் யாண்டும் எங்ஙனம் மறைந்து வேறாய் நிற்கின்றார்? உங.

சக. தயிரில் நெய்போல எங்கே விளங்கி நிற்பர்? உங.

சஉ. சுத்தான்மசைதன்னியத்தைச் சொரூபமாகக்கொண்டு சிவபெருமான் நிற்றலால், அச்சைதன்னியம் விளங்கும் சரீரம் எவ்வியல் பினதாகும்? உங.

சங. ஆன்மாக்கள் எத்தனைவகைப்படும்? உரு.

சச. சிவபெருமான் விஞ்ஞானகலர்க்கும், பிரளயாகலர்க்கும், சகலர்க்கும் எங்ஙனம் உபதேசிக்கின்றார்? உரு.

சரு. விஞ்ஞானகலர்முதலிய மூவர்க்கும் எங்ஙனம்நின்று அருள் செய்கின்றார்? உசூ.

சசூ. விஞ்ஞானகலர்முதலிய மூவர்க்கும் ஓரே பிரகாரமாக உபதேசிக்கின்றாரா? உஎ.

சஎ. அங்ஙனம் உபதேசித்தற்குக் காரணம் யாது? உஅ.

சஅ. ஞானாசாரியர் எதனாற் குறைவுறார்? உகூ.

சகூ. நூல் யாருக்கு வேண்டியதின்று? ங0.

ரு0. நூல் யாருக்கு வேண்டியது? ங0.

ருக. விஞ்ஞானகலர் எதனாற் பிணிப்புண்டார்? ஙக.

ருஉ. எவற்றாற் பிணிப்புண்ணார்? ஙக.

ருங. பிரளயாகலர் எவற்றாற் பிணிப்புண்டார்? ஙஉ.

ருச. அவரை எவ்வியல்பினதாகிய மலம் பற்றியது? ஙஉ.

ருரு. சகலர் எவற்றாற் பிணிப்புண்டார்? ஙங.

ருசூ. அவரைப் பற்றிய மலசத்தி எவ்வியல்பினது? ஙங.

ருஎ. சிவபெருமான் எங்கே மறைந்துநின்று, எங்ஙனம் உபதேசிக்குங்காற் சகலாது தூலதரமலசத்தி நீங்குகின்றது? ஙங.

ருஅ. அன்புவடிவாயுள்ளன யாவை? ஙச.

ருசு. அவை குழந்தையைக் காணுமுன் எங்கே இருந்தன? ஙச.

சுo. எதுபோலச் சிவபெருமான் ஆன்மாவிற்புலப்படாது நின்றார்? ஙச.

சுக. பின் எங்ஙனம் எழுந்தருளினர்? ஙச.

சுஉ. யாதுபற்றி நீரிலே நிழலுண்டு என்று அறியற்பாற்று? ஙரு.

சுங. அந்நீர் நிழல் யாதுபற்றிப் புலப்படவில்லை? ஙரு.

சுச. அங்ஙனம் எவர் புலப்படாது எங்கே விரவிநின்றார்? ஙரு.

சுரு. மூன்றாஞ் சூர்ணிகை யாது? ஙஎ.

சுசு. அதன் பொருள் யாது? ஙஅ.

சுஎ. படிகம் எவ்வியல்பினது? சo.

சுஅ. ஆன்மா எவற்றைத் தன்னிடத்தே விளக்கும்? சo.

சுசு. படிகத்துக்கு வேறாக எவற்றைக் கண்டாற்போல, ஆன்மா எவற்றை வேறாகத் தெளிதல்வேண்டும்? சo.

எo. அப்பொறிகளின் இயல்பு பொதுவோ? சிறப்போ? சo.

எக. சிறப்பியல்பை உணர்ந்த ஆன்மா சிவத்துக்கு யாதாகி, பின் எது விளங்கி நிற்கப்பெறும்? சo.

எஉ. அங்ஙனம் விளங்கிநிற்குங்கால், எது நீங்கும்? சo.

எங. நான்காஞ் சூர்ணிகை யாது? சக.

எச. அதன் பொருள் யாது? சஉ.

எரு. ஐம்பொறிக்கருவிகள் ஆன்மாக்களால் அறியப்படாது கழியுங்கால், ஆன்மாக்களுக்குத் தாரகம் யாது? சங.

எசு. அவ்வைம்பொறிகள் ஆன்மாக்களால் அறியப்பட்டுக் கழியுங்கால், அவ்வான்மாக்களுக்குத் தாரகம் யாது? சங.

எஎ. அணையினால் தடையுண்டு நிறைந்து நின்ற நீர் தடைதீர்ந்த போது எங்கே போம்? சரு.

எஅ. ஐம்புலக்கருவிகளாலாகிய பாசஞானத் தடைகடந்தபோது ஆன்மா எங்கேபோய்ப் பின் மீளாது? சரு.

எசு. சிவரூபமாவது யாது? சசு.

அo. ஆன்மதரிசனமாவது யாது? சசு.

அக. ஞானத்துச்சரியை யாது? சகூ.

அஉ. இது எங்கே வைத்துணரப்படும்? சகூ.

அந. "அந்தக்கரணங்களடக்கி அறிவதொரு குறி குருவினருளினா லறிந்து" என்றவாறு, பிண்டத்தில் வைத்தறிதலால் அது பின் எங்ஙனம் கூறப்படும்? சகூ.

அச. பாசஞானபசுஞானமெல்லாம் சிவமயமேயாயின், ஆன்மா சகலாவஸ்தையை விடுத்து திருவடியை அடையவேண்டாமென்றன்றோ முடியும்; அங்ஙனமாயின் எவை போலியாய் முடியும்? சஅ, (3, 5.)

அரு. பாசஞானமும் பசுஞானமும் ஒன்றுமோ? சஅ, (5.)

அசூ. எது ஐம்பொறிகளோடு ஒப்ப நிற்கின்றது? சஅ, (6.)

அஎ. ஐம்பொறிகளுள்ளே எந்தப் பொறி தூரத்திலேயுள்ள பொருளை வியாபித்தறியவல்லது? சஅ, (6.)

அஅ. ஏனைய நான்கு பொறியும் எவற்றை அறியமாத்திரம் வன்மையுடையன? சஅ, (6).

அகூ. கண்ணின் வெற்றிப்பாடு எப்போது வெளிப்படும்? சஅ, (6).

கூ0. சிவஞானம் எவற்றோடு ஒப்பநிற்கின்றது? சகூ.

கூக. எதனாற் பசுஞானத்துக்கு வியாபகவிளக்கம் பிறக்கின்றது? சகூ.

கூஉ. எப்போது அந்த வியாபகம் அறியப்படாது? எப்போது அறியப்படும்? சகூ.

கூந. கடலின்கண்ணே நதிவாயிலாகச் சென்ற நீர் அந்நதிவாயிலாக மீளுதல்போல, சிவனார் திருவடியைத் தலைப்பட்ட ஆன்மாவுக்கு மீளுதல் உளதாமோ? ருக.

கூச. வியாபக அறிவுடையதென்று ஆன்மாவுக்கு யாது உபதேசிக்கப்பட்டது? ருக.

கூரு. பாசஞானம் கடந்து திருவடியைத் தலைப்பட்ட ஆன்மா அதினின்று மீளாதாயினும், மலமாயாகன்மங்கள் பயிற்சிவயத்தால் ஒரோவழி வந்து கூடுமா? ருக.

கூசூ. எதுபோலவந்து தலைப்படும்? ருக.

கூஎ. பின் அவற்றை நீக்குதற்கு உபாயம் எங்கே கூறப்படுகின்றது? ருக.

---

# சிறப்பதிகாரம்.

## சாதனவியல்.

## ஒன்பதாஞ்சூத்திரம்.

க. த்ருஷ்ட்வா ஸ்வாத்மநி ஸம்பும் த்யக்த்வா வ்ருத்திம் மரீசிகாம்।
லப்த்வா ஶிவபதச்சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரீம் ஸுதீ:॥
சித்திருசாத்மநித்ருஷ்ட்வேசம்த்யக்துவாவ்ருத்திமரீசிகாம்।
லப்த்வாசிவபதச்சாயாம் த்யாயேத்பஞ்சாக்ஷரீம்சுதீ:॥

உ. (இ-ள்.) ஸுதீ: = அறிஞன்; ஸ்வாத்மநி ஸம்பும் த்ருஷ்ட்வா = தன் ஆன்மாவாகிய அறிவிலே சிவத்தை ஞானக்கண்ணினாலே கண்டு; மரீசிகாம் வ்ருத்திம் த்யக்த்வா = கானற்சலம்போலும் (நிலையில்லாத பிரபஞ்ச) வியாபாரத்தை விடுத்து; ஶிவபதச்சாயாம் லப்த்வா = சிவனாது திருவடி நீழலை அடைந்து; பஞ்சாக்ஷரீம் த்யாயேத் = திருவைந்தெழுத்தைக் கணிக்கக்கடவன்.

ந. ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

ச. (இ-ள்.) ஊனக்கண் பாசம் உணராப் பதியை = பசுஞானத்தினாலும் பாசஞானத்தினாலும் அறியப்படாத சிவனை; சிந்தை ஞானக்கண்ணினில் நாடி = தன்னறிவின்கண்ணே அருண்ஞானத்தினால் நாடுக; உராத்துனை = பரந்து திரிதற்கண்; தேர்த்துப் பாசம் என ஒருவ = (அதிவேகமுடைய) கானற்றேர் போல்வதாம் பாசம் என்று அதனை நீங்க; தண் நிழலாம் = சிவபிரான் (அவனுக்கு) குளிர்ந்த நிழலாவர்; ஐந்தெழுத்து விதி எண்ணும் = (அங்நிலை பிறழாதிருக்க) ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி (ஆன்மா) கணிக்கும்.

ரு. (க-ரை) ஆன்மசுத்தி பண்ணுமாறு கூறுகின்றது.

சு. (கா-பொ.) அஃதாவது சிவபெருமான் ஆசாரியராய் எழுந்தருளி உபதேசிப்ப, ஆன்மா அதனைக் கேட்டு, பின் சிந்தித்தல்வாயிலாக ஐம்புல வேடருள்ளே வளர்ந்த இழிவை நீக்கிச் சுத்தி செய்யுமாறுணர்த்துவதாம்.

எ. "தான் பணியை நீத்தலே" ஆன்மசுத்தி என்று சிவப்பிரகாசம் கூறுகின்றது. இந்த ஆன்மசுத்தியாகிய "தான் பணி நீத்தலைத்" பத்தாஞ் சூத்திரம் "இறைபணி நிற்க" என்று கூறுகின்றது. அங்ஙனம் இறைபணி

நிற்பின் பாசம் க்ஷயமாகும். அதுவே ஆன்மாவுக்குச் சுத்தியாகும். அங்ஙனமாகவும், வருகின்ற சூத்திரத்திற் கூறற்பாலதாம் ஆன்மசுத்தியை ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறலாமோ எனின், இந்த ஒன்பதாஞ் சூத்திரம் "பதியை நாடி" எனவும், "தண்ணிழலாம்பதி" எனவும் சிவதரிசனம் பண்ணுமியல்பைக் கூறுகின்றது. சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்மசுத்தியாமாதலினாலும், இவ்விரண்டும் தம்முள்ளே சிறுபான்மை வேறுபாடுடையவாமாதலினாலும், ஒன்பதாம் பத்தாஞ் சூத்திரங்கள் ஒரு பொருண்மேலனவாய் நிற்றலின் அங்ஙனம் கூறினமைபற்றி விரோதமின்றும் என்பது.

அ. ஆன்மா தன்னை ஐம்புலன்களின் வேறாகக் காணவே, சிவனார் திருவடியை அடையும்; அந்தக் காட்சியே அதற்குச் சாலும், சுத்தி எதன் பொருட்டோ எனின், கூறுவேம். காட்சியானது நிருவிகற்பமாய்க் காண்டலும், நிருவிகற்பம் சவிகற்பம் என்னும் இரண்டற்கும் இடைநிலத்தே காண்டலும், தெளியக்காண்டலும் என மூவகைப்படும். இம்மூவகைக் காட்சியும் அதிபரிபக்குவமுடையார்க்குச் சிரவணஞ் செய்தமாத்திரத்திலே ஒருங்கு நிகழும்; மற்றையோர்க்குக் கேட்டல் (சிரவணம்), சிந்தித்தல் (மனனம்), தெளிதல் (நிதித்தியாசனம்) என்னும் மூன்றும் படிமுறையினால் நிகழுகின்றமையால், சிவரூபத்தினிகழும் ஆன்மதரிசனத்துக்குப்பின், சிவதரிசனத்தின் நிகழும் ஆன்மசுத்தி கூறப்படுவதாம் என்க.

கூ. திருவருள் செய்யும் கிருத்தியத்தை ஆன்மா செய்யாதென்று திடமாய் அறிந்து நிற்றல் சிவதரிசனம். சூரியகிரணத்தைப் பொருந்தினகண் சூரியனாகாதவாறு போல, திருவருளைச் சேர்ந்த ஆன்மா அத்திருவருள் செய்யும் பஞ்சகிருத்தியத்தைத் தான் செய்யவேண்டுமெனல் கூடாதென்றுணர்ந்து தற்போத நிகழ்ச்சியின்றித் திருவருளில் அழுந்தாது சேர்தல் ஆன்மசுத்தியாம்; இது ஞானத்துக்கிரியை; சிந்தித்தல்ஞானமுமாம்.

க0. இது அண்டத்தில் வைத்தறிதலாற் பரைதரிசனமுமாம்; இவ்வுண்மை "அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞானசொரூபம்" என்று இம்முதனூலாசிரியரும், "எல்லாமீசனிடத்தினினு மீசனெல்லாவிடத்தினினுநின்ற வங்நிலையை யறிந்து" என்று வழிநூலாசிரியரும் கூறியவாற்றானும் உணரப்படும்.

கக. (சூ. பி. பொ.) பசுஞானத்தினாலும் பாசஞானத்தினாலும் அறியப்படாத சிவபெருமானை அவரது அருண்ஞானக்கண்ணினால் தன்னறிவின் கண்ணே ஆராய்ந்து அறிக;

அந்த அருள்ஞானம் எங்ஙனம் பெறப்படுமெனின், பிருதிவிதத்துவ முதல் நாததத்துவம் இறுதியாகிய பாசப்பிரபஞ்சஜாலம் நின்றபடி நில்லாது கானல்நீர்போலக் கழிந்துபோமென்று அறிந்து நீங்கவே, சிவஞானமா

னது பிறவித்துன்பமாகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும்;

அங்ஙனம் விளங்கிய ஞானத்தினாற் சிவமாகிய ஞேயப்பொருளைக் கண்ட காட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள்தரும் ஸ்ரீபஞ்சாக்ஷரம் விதிப்படி அறிந்து கணிக்கற்பாலதாம்.

## முதலாஞ் சூர்ணிகை.



கஉ. உயிர் அரன்ஞானத்தினாலே அரனைக் காணும்.

கங. (சூ. பொ.) பாசஞானபசுஞானவிருத்திகளைக் கடந்து அதீதமாய் ஒற்றுமைப்பட்டு உணரும் அநுபவஞானமாகிய சிவஞானத்தினாற் சிவத்தைக் காண்க என்பதாம்.

கச. பசுத்துவம் நீங்கியபோது சுட்டிறந்து அறிவதாகிய பசுஞானம் சிவஞானத்தோடு ஒப்பதாமாதலின், அந்தப் பசுஞானமே அமையுமெனபது அடாது:—

கரு. (வெ. பொ.) நாடியோ, எலும்போ, நகம்போ, சீயோ, கோழையோ இவற்றுள் ஆன்மாவானது தன்னை யார் என்றும், தன்னைத் தேடியும் அறிகின்றிலேன் என்றும், இங்ஙனம் தேர்கின்ற தேர்ச்சிஅறிவினிடத்து, இதனைத் தெரிவிப்பதோர் அறிவு வேறுண்டெனை ஆராய்ந்து, அங்ஙனம் நாடுங்கால் விளங்குவதாகிய சிவஞானத்தினாற் சிவத்தை உணர்ந்து, அச்சிவத்தின் வியாப்பியமாய்நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தன்னையும் அறியும் என்பதாம்.

கசு. இதுபற்றியே,

ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யதி। (பிருகதாரணியம், ௬. ச. உங.)

ஆத்மந்யேவாத்மாநம் பச்யதி।

கஎ. "ஆன்மாவினிலே (அருளினால்) பரமான்மாவைக் காண்கின்றான்" என்றும்,

தமாத்மஸ்தம் யேऽநுபஶ்யந்தி தீராஸ்தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்। (கடவல்லி, ரு. கஉ, கங; சுவேதாசுவதரம், ௬. கஉ; அதர்வசிரசு.)

தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ்தேஷாம் சுகம் சாச்வதம் நேதரேஷாம்।

"எந்தத் திண்ணிய அறிஞர்கள் ஆன்மாவில் இருப்பவராக அவரைக் காண்கின்றார்களோ அவர்களுக்கு நித்திய ஆனந்தம், ஏனையோர்க்கின்றாம்" என்றும் சுருதிகளும்,

கஅ. தஸ்மாத்ஸஹஜயா ஶக்த்யா ஹ்ருதி பஶ்யந்தி யே ஶிவம்।
தேஷாம் ஶாஶ்வதிகீ ஶாந்திர் நேதரேஷாமிதி ஶ்ருதி:।

(வாயுசங்கிதை, உத்தரபாகம், அ. உ௦.)

தஸ்மாத்சஹஜயா சக்தியா ஹிருதி பச்யந்தி யேசிவம்।
தேஷாம்சாச்வதிகீசாந்திர்நேதரேஷாமிதிசுருதிঃ।

கக. "ஆகலின், சிந்தையின்கண்ணே அருட்சத்தியோடியைந்து சிவத்தைப் பார்க்கின்றார்களோ அவர்களுக்கு நித்தியமாகிய ஆனந்தம் ஏனையோர்க்கின்றாம் எனச் சுருதி கூறிற்று." என்று ஸ்மிருதியும்,

உ௦. தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
றன்னிற் றன்னை யறியிற் றலைப்படுந்
தன்னிற் றன்னை யறிவில னாயிடிற்
றன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே

என்று திராவிடசுருதியும் கூறுகின்றமையால், சிவம் ஆன்மாவில் அருண்ஞானக் கண்ணினாற் காணற்பாற்று என்று பெறப்பட்டது.

உக. நாடி, எலும்பு, நரம்பு முதலிய தத்துவ தாத்துவிகங்களை அறிதற்குச் சிவஞானம் ஆன்மாவுக்கு வேண்டாமைபோல, அங்ஙனம் சிவத்தை அறிதற்கும் சிவஞானம் வேண்டாமே எனிற் கூறுவம்:—

உஉ. (வெ. பொ.) ஆன்மாவினாற்காட்டப்பட்டு எதிர்முகத்தில் ஒரு பொருளைக் காண்கின்ற கண்ணானது, எதிர்முகத்துப் பொருள்போலப் பின்புறத்துப் பொருளும் புறத்தே தோன்றும் பொருளாதலின், அவ்விரண்டையும் சமமாகக் காண்டல் கூடுமேனும், அக்கண்ணானது தன்னியல்பை அறியமாட்டாது; தனக்கு அவ்விடயத்தைக் காட்டி உண்ணின்று செலுத்தும் ஆன்மாவையும் அது காணமாட்டாது; அதுபோல, தனக்கு வேறாகிய நாடி முதலிய தத்துவதாத்துவிகங்களைத் தற்போதத்தினால் அறிகின்ற ஆன்மாவும் தன்னை அறியமாட்டாது; தன்னைச் செலுத்தும் சிவபெருமானையும் அறியமாட்டாது. அங்ஙனமாயினும், கண்போல ஆன்மா ஜடமல்லாமையால், கண்ணினிடத்து ஆன்மா நிற்றல்போலன்றி, ஆன்மாவுக்கு அதன் அறிவாகி உடனின்று தோன்றுதவியல்பினர் அச்சிவபெருமானே; அவரை ஆன்மாவின் கண்ணே காண்டல் முறையாம்.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

உங. உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.

உச. (சூ. பொ.) ஸ்படிகசொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவை நிலையில்லாத வேற்று நிறங்கள் எனக் கண்டு கழித்தவிடத்து நிலையுதலுடைத்தாய் விளங்கித் தோன்றும் அப்படிகசொரூபம்போல, நிலையுதலுடைய சிவஞானத்தினது சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையில்லாத அசத்தாகிய பிருதிவிமுதல் நாததத்துவம் இறுதியாகிய பிரபஞ்சத்தை நிலையில்லது என்று ஆன்மாவானது வியாபக அறிவினால் அதிற் பற்றின்றி விவேகித்து அறியுங்காற் சிவஞானத்தின் சொரூபம் நிராலம்பமாய் வெளிப்படும் என்பதாம்.

உரு. அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஞானாசாரியர் உணர்த்தியகுறியின்கண்ணுறைத்து நின்றுகொண்டு மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகை அத்துவாவுட்பட்ட அசுத்தம், மிசிரம், சுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சமும் காரணரூபத்திற் சிறிதும் காணப்படாமையால், பித்திகை வடிவம் காண்பார்க்குக் காணப்படாததாய் அதன்கண் மறைந்த சித்திரவடிவம்போல நிலையுதலின்மையைக் காண்டலேயாம்.

உசு. அதனை அங்ஙனம் கண்டபோது தோன்றுவது சூனியம் அன்று என்றமைக்கு உதாரணம் வருமாறு:—

உள. (வெ. பொ.) மூலப்பிரகிருதியின் (ஆன்மதத்துவத்தின்)பாற்பட்ட அசுத்தப்பிரபஞ்சம்போற் சாத்துவிகம் தாமசம் இராசசம் என்னும் முக்குணரூபமாய் அறியப்படுவாரல்லராய், பிரகிருதியைக் கடந்த வித்தியாதத்துவத்தின்பாலதாகிய மிசிரப்பிரபஞ்சம்போல மலகன்மகாரியரூபமாய் அறியப்படுவாரு மல்லராய், வித்தியாதத்துவத்தைக் கடந்த சிவதத்துவத்தின்பாற்பட்ட சுத்தப்பிரபஞ்சம்போல் அநித்தியானந்தராய் அறியப்படுவாருமல்லராய், இம்மூவகைப் பிரபஞ்சத்தோடும் கூடிய பொதுவியல்புபற்றி உணரப்படும் ஆன்மாப் போலன்றி, அவ்வான்மாவுக்குப் பரமாய், (ஐந்தாஞ் சூத்திரதது கஅ, 22-ம் பிரிவிற் கண்டவாறு, பிருதிவிமுதல் மூலப்பிரகிருதிவரையும் ஒன்றுக்கொன்று பத்துப் பத்துமடங்கு ஏற்றமாயும், புருஷதத்துவமுதல் அசுத்தமாயைவரையும் ஒன்றுக்கொன்று நூறு நூறுமடங்கு ஏற்றமாயும், சுத்தவித்தைமுதல் சாதாக்கியம்வரையும் ஆயிரம் ஆயிரமடங்கு ஏற்றமாயும், சத்திதத்துவம் சிவதத்துவம் ஒன்றுக்கொன்று லக்ஷலக்ஷமடங்கு ஏற்றமாயுமுள்ள) இத்தத்துவசமூகங்களாகிய இவற்றை அசத்தென்று கழிக்குங்கால், பயின்றறிந்து வரும் ஆன்மாவின்கண் சுட்டறிவினளவினைக் கடத்தலான், இன்னதென்றறிய வாராத சூனியப்பொருள்போலத் தோன்றி, பின்னர்ச் சுட்டிமறந்தறியும் அவ்வான்மாவின் அறிவின்கண்ணே சிவபிரான் நீங்காது அறிவுக்கறிவாய் விளங்கித் தோன்றுவர்.

உஅ. தத்துவங்களைப் படியாகக்கொண்டு மேலோங்குதலையுற்று,

முப்பது மாறும் படிமுத்தி யேணியா
யொப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்றெளிந்
தப்பரி சாக வமர்ந்திருந் தாரே

என்று திருமூலநாயனாரும்,

உகூ. நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி
யாணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்

என்று சேக்கிழார்நாயனாரும் அருளிச்செய்திருத்தல் காண்க.

ஙo. பிருதிவிமுதல் நாதம் இறுதியாக அறிவினால் அசத்தென்று கழித்தவிடத்துத் தோன்றுவது ஞானசொரூபம் என்று கூறப்படுகின்றது:—

ஙக. (வெ. பொ.) ஏகதேச அறிவினாற் சுட்டி உணரப்படும் பிருதிவி தத்துவமுதற் சிவதத்துவம் ஈறாகிய பிரபஞ்சத்தை ஒவ்வொன்றாகச் சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றபோது, முடிவின்கண் விஷயமாவது சத்தேயாம், அந்தச் சத்தானது ஒரோவொன்றாகச் சுட்டி அறிந்து வந்த ஆன்மாவுக்கு வேறாகிய சிவஞானமேயாம். அசத்தை அசத்தென்று அறிவினால் ஒருவிக் கண்டபோது, உளதாகிய சத்தினை ஆன்மாவானது அடிமையாய்ச் சென்று சத்தின் வசத்ததாய் அதனை உணர்ந்தால், சுட்டி அறிவதாகிய ஏகதேச அறிவைச் செய்யும் பொதுவியல்பு ஆன்மாவைவிட்டு நீங்கும்; ஆதலான் அந்தச் சத்தானது மற்றோர் அசத்தன்றாம்; (பின் அது பரஞானசோரூபமேயாம்.)

ஙஉ. ஆன்மாவானது சுட்டுணர்விற்கு விடயமாகிய பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டொழிக்குந்தன்மையும், அங்ஙனம் கழித்தபோது அவ்வான்மா சிவத்தோடு சேருந்தன்மையும், அதனாற் பொய்யாகிய சுட்டுணர்வு எனப்படும் பொதுவியல்பு நீங்குந்தன்மையும் கூறப்படுகின்றன:—

ஙங, (1) (வெ. பொ.) பிருதிவிமுதல் நாதமீறாகிய பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்று என்று ஒவ்வொன்றாகவைத்து நோக்கி, அசத்து என்று கழித்து, அங்ஙனம் கண்ட தன் அறிவின்கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற சத்தாகிய சிவத்தை ஆராய்ந்து, அந்தச் சிவஞானத்தினாலே ஆசாரியன்,

* ஸோऽயமாத்மா।
சோயமாத்மா.

---

* மாண்டூக்கியம், அ.

(2) "அது இந்த ஆன்மா".

ஶிவொயஜஷி|

சிவோயமஸ்தி।

(3) "சிவன் இதுவாய் இருக்கின்றான்" என்று தன்னுள்ளே பாவித்து;

* தஜுஷஷி|

தத் துவமசி।

(4) "அது நீ ஆகின்றனை".

ஶிவஃஷி|

சிவத்துவமசி।

(5) "நீ சிவன் ஆகின்றனை" என்று அறிவுறுக்கும் வேதாந்தசித்தாந்தமகாவாக்கியப்பொருளை நாடோறும் பயின்று,

ஶிவொZஹஷிஷிஜாஹெவெஷாஹெஷொZஹ ஷிதூ|

சிவோஹமஸ்மி சித்தாந்தே வேதாந்தே சோஹமஸ்மிது।

(6) வேதாந்தம் சோஹமஸ்மி என்று கூற, சித்தாந்தம் அதனைச் சிவோஹமஸ்மி என்று கூறுமாற்றால்,

ஷொZஹஷி|

சோஹமஸ்மி।

(7) "அவன் நான் ஆகின்றேன்" என்றேனும்,

ஶிவொZஹஷி|

சிவோஹமஸ்மி।

(8) "சிவன் நான் ஆகின்றேன்" என்றேனும் பாவிப்பானாயின், அந்தப் பாவனையில் விளங்கும் சிவனால் அநாதியே கூடிய பொதுவியல்பையும், அதற்கு ஏதுவாகிய மாயாகன்மங்களையும் தான் விட்டு நீங்குமியல்பு,

஗ருடொZஹஷி|

கருடோஹமஸ்மி।

(9) "நான் கருடன் ஆகின்றேன்" என்னும் கருடமந்திரத்தியானத்தில் விளங்கும் கருடனால் அந்தக் கருடபாவனை விஷத்தைப் பிரத்தியக்ஷத்தில் தீர்த்துவிடுதல் போலாம்.

---

* சாந்தோக்கியம், கூ, அ.

௯௪. 𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑌾𑌵𑌨𑍍𑌯𑍋𑌽𑌹 𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌨 𑌸 𑌵𑍇𑌦 𑌯𑌥𑌾 𑌪𑌶𑍁𑌰𑍇𑌵𑌂 𑌸 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍 | 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌯 𑌏𑌵𑌂 𑌵𑍇𑌦𑌾𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌸 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌭𑌵𑌤𑌿|

யோऽந்யாம் தேவதா முபாஸ்தேऽந்யோऽஸாவந்யோऽஹ மஸ்மீதி ந சவேத யதா பசுரேவம் சதேவாநாம் । தர்ஹி யஏவம் வேத அஹம் பிரம்மாஸ்மீதிச இதம் சர்வம் பவதி।

௯௫. "இந்தத் தேவதை வேறு; நான் வேறு என்று எவன் மற்றோர் தேவதையைப் பாவனை செய்யுங்கால், அவன் அந்தத் தேவதையை அறிவானல்லன்; அதுபற்றி அவன் தேவர்களுக்குப் பசுப்போலாகின்றான்; ஆதலால் எவன் நான் பிரமம் என்று (அபேதபாவனை) பண்ணுகின்றானோ, அவன் ஈதெல்லாம் (உலகெல்லாம்) ஆகின்றான்" என்று பிருகதாரணியசுருதியும்,

௯௬. 𑌶𑌿𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌹𑌮𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌭𑌾𑌵𑌂 𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍|
𑌯𑌶𑍍𑌶𑌿𑌵𑌸𑍍𑌸𑍋𑌽𑌹𑌮𑍇𑌵𑍇𑌤𑍍𑌯𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌭𑌾𑌵𑌯𑍇𑌤𑍍𑌸𑌦𑌾||
சிவோந்ய ஸ்து வஹமேவாந்ய: பிருதக்பாவம் விவர்ஜயேத்।
யச்சிவ: சோஹமேவேத் யத்வைதம் பாவயேத்சதா॥

௯௭. "சிவன் வேறு, நான் வேறு என்னும் துவிதபாவனையை விடுத்து, எந்தச் சிவன் உளரோ அந்தச் சிவன் நான் என்று எக்காலமும் அத்துவைதபாவனை செய்க" என்று (பிருகதாரணியசுருதிக்கிசைந்து) சர்வஞ்ஞானோத்தராகமமும்,

௯௮. பேத மாகிய பாவனை பேணுவ தெல்லா
மேத மாகிய பந்தமே யெனதியா னெனுமாற்
போத வாருயி ரபேதபா வனைபுரி வஃதே
மாத ராருயிர் முத்தியேன் றுரைத்திடு மறையும்

என்று திருவானைக்காப்புராணமும் கூறுமாற்றால், துவிதபாவனையை விடுத்து அத்துவிதபாவனை புரிதல் வேண்டுமென்பது பெறப்பட்டது. இந்தப் பாவனை மாயாவாதிகள் கூறும் பாவனை போல்வதன்று என்பது வெளிப்படை.

௯௯. ஏகான்மவாதிகட்குரிய சர்வசாரமுதலிய உபநிடதங்களிலே நிர்க்குணப்பிரமமே கூறப்படுகின்றது. இந்தப் பிரமம் பரோபநிடதசுருதிப் பிரகாரம் ஆன்மாவேயாம். இந்த ஆன்மப்பிரமத்துக்குச் சர்வஞ்ஞதாதி குணங்களேனும் சத்துவமுதலிய குணங்களேனும் இல்லை என்பது அவ்வேகான்மவாதிகட்கும் நமக்கும் ஒத்த கருத்தேயாம்.

௱. வேதாந்தசூத்திரத்துக்கு ஆதாரமாயுள்ள முண்டகம் தைத்திரீயமுதலிய பரோபநிடதங்களிலே "சர்வஞ்ஞதாதி" குணங்களையும், "சத்தியம், ஞானம், ஆனந்தம்" என்னும் குணங்களையும் சொரூபமாகவும் குண

மாகவுமுடைய பரமான்மப்பிரமமே பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. பிரமம் ஆன்மா என்னும் பெயர்கள் ஏகான்மவாதோபநிடதங்களினும், பரோப நிடதங்களினும் முறையே பிரதிபாதிக்கப்படும் ஆன்மப்பிரமத்துக்கும், பரப் பிரமசிவனார்க்கும் வழங்கப்படுதலான், ஆன்மப்பிரமம் யாது? சிவப்பிரமம் யாது? என்று அறியமாட்டாமையாலோ? இன்றேல் அப்பரோபநிடதங்கள் பரப்பிரமம் குணங்களோடிசைந்ததாகத் தமது உபநிடதங்களுக்கு மாறு படக் கூறுகின்றனவே என்ற பொறாமையினாலோ? இன்றேற் குணங்களோ டிசைந்த அந்தப் பிரமம் விருத்தியாய் உப்பிவிடும் என்ற கருத்தினாலோ? சத் தியம், ஞானம், ஆனந்தமுதலியன நமது பரப்பிரமசிவத்துக்குக் கூறப்பட் டிருத்தலைக் கண்டவுடனே, ஓர் சாதியார் ஓர் செந்துவை மரங்களிற் கண்ட வுடனே கல்லுவிட்டெறிந்து அதனைக் கொல்லுதல்போல, குயுக்திகொ ண்டு பாகத்தியாகலக்ஷணை என்னும் வாச்சியினால் அப்பிரமத்தின் குணங் களை அப்பிரமத்தினின்று நீக்கிவிடுவார்போல நினைந்து, அவற்றைச் செதுக்கிச் சேதித்துப் "பிரமத்துக்குக் குணகுணிபாவம் இல்லை" என்று சாதித்து, அந்தச் சகுணப்பிரமத்தைத் தமது நிர்க்குண ஆன்மப்பிரமமாகிய அறிவு ரூபகனத்துக்கு மேலசாக இயையுமாறு ஆக்குவதாகக் கனவுகாண்கின்றார்கள். பரோபநிடதங்களின்மாத்திரமன்றி, அவற்றை ஆதாரமாகக்கொண்டு கிளர் ந்த வேதாந்தசூத்திரத்தில்,

சக. 𑌆𑌨𑌨𑍍𑌦𑌾𑌦𑌯𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯

ஆநந்தாதயஃ பிரதாநஸ்ய (வே. சூ. ௩. ௩. கக).

சஉ. "முக்கியப்பொருளாகிய (சிவனார்க்கு) ஆனந்தமுதலிய குணங் கள் (உண்டு)" என்றற்றொடக்கத்தனவாகக் காணப்படும் இடங்களினும், அங்ஙனமே பாகத்தியாகலக்ஷணைவாச்சியினாற் குணகுணிபாவம் பிரமத்து க்கு இல்லை என்று கூறிக் கெடுக்கின்றார்கள். இவர்கள் இங்ஙனம் பரசுருதிகளை யும், சூத்திரங்களையும், ஆகம இதிகாச புராணங்களாகிய உபப்பிருங்கணங் களெல்லாவற்றிற்கும் முற்றும் மாறுபடத் தூர்த்தஞ் செய்தலாகிய அக்கிரம அதிபாதகத்துக்கு யாது கதி எய்துமோ! அறிகிலம்; நிற்க. பாகத்தியாகமா வது பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை நீக்கிவிட்டு மற்றோர் பாகத்தைக் கிரகிப்பதேயாம்.

சங. 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑍇𑌤𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾𑌂।

நித்யோ நித்யாநாம் சேதநச் சேதநாநாம்।

சச. (பதிபசுபாசம் என்னும்) நித்தியபதார்த்தங்களுள்ளே நித்திய ரும், (பதியும், விஞ்ஞானகலர், பிரயாகலர், சகலர் என்னும் மூவகை ஆன் மாக்களுமாகிய) சேதனப்பொருள்களுள்ளே சேதனருமாம்" என்று பரோப நிடதங்களில் ஆங்காங்குச் சிவபெருமான் கூறப்பட்டிருப்பாராகவும், அச்

சுருதிகளைப் பொருட்படுத்தாது, தங்கள் ஏகான்மவாதோபநிடதங்களிற் கூறப்பட்ட பிரகாரம்,

சரு. மயிஜீவத்வமீஶத்வம் கல்பிதம்।

மயிசீவத்வ மீசத்துவம் கல்பிதம்।

சசு. ஜீவேஶௌ கல்பிதௌ।

சீவேசௌ கல்பிதௌ।

சஎ. "சீவனும் ஈசுரனும் கற்பிதர்" என்றும், ஆபாசகர்கள் என்றும் வரைந்திருக்கின்றார்கள். ஒருவர் அநித்தியப் பொருள்களுள்ளே நித்தியப் பொருள் என்று (சஅ-ம் பிரிவிற்) சுருதிக்குத் தூர்த்தஞ் செய்திருக்கின்றார்; இதுமுற்றும் தவறும்.

சஅ. தத்துவமசி என்னும் மகாவாக்கியத்துக்குப் பொருள் கூறுங்கால் (க) மாயையும், (உ) மாயையிலுள்ள ஆபாசனும், (ங) மாயையின் அதிஷ்டானசேதனமுமாகிய மூன்றுஞ் சேர்ந்து முற்றுணர்வு முதலிய குணங்களையுடைய ஈசுரனும் என்றும், இது தத்பதத்தின் வாச்சியார்த்தம் என்றும்,

சகூ. (க) வியஷ்டி அவித்தையும், (உ) அவித்தையின் ஆபாசமும், (ங) அதின் அதிஷ்டானசேதனமுமாகிய மூன்றும் சேர்ந்து சிற்றுணர்வு முதலிய குணங்களையுடைய சீவனும் என்றும், இது துவம்பதத்தின் வாச்சியார்த்தம் என்றும்,

ருO. ஈசுரன், சீவன் என்னும் இரண்டின் ஏகத்துவத்தைத் தத்துவமசி வாக்கியங்கள் போதிக்கின்றன என்றும், அங்ஙனமாயினும் இந்த வாச்சியார்த்தத்தினால் ஏகத்துவம் சித்தியாது என்றும், ஆதலால்

ருக. மூன்று கூறுகளால் ஆக்கப்பட்ட ஈசுவரனிலிருந்து ஆபாசசகித மாயை, மாயையிலுள்ள முற்றுணர்வுமுதலிய குணங்கள் என்னும் இந்த வாச்சியபாகங்களைச் சேதித்து நீக்குதலால், சேதனபாகத்தில் தத்பதத்துக்குப் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கின்றது என்றும்,

ருஉ. பின்னரும் மூன்று கூறுகளால் ஆக்கப்பட்ட சீவனிலிருந்து ஆபாசசகித அவித்தியாம்சம், அவித்தையால் உண்டாகிய சிற்றுணர்வுமுதலிய குணங்கள் என்னும் வாச்சியபாகத்தைச் சேதித்து நீக்குதலால், துவம்பதத்துக்குப் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கின்றது என்றும், இதனால்

ருங. சீவேசுவரர்களின் சொரூபத்திலுள்ள லட்சியமாகிய சேதன பாகங்களில் ஏகத்துவத்தைத் தத்துவமசி போதிக்கின்றது என்றும் கூறுவர். இங்ஙனம் ஏனைய மகாவாக்கியங்களுக்கும் பொருள்கொள்வர்.

ருச. நரமாமிசபக்ஷிணிகள் மனிதரைத் திரட்டவும், செதுக்கவும், கழிக்கவும், ஒன்று மில்லையாமாறு பொசுக்கி விழுங்கவும், சிற்சில தீவுகள் இடம்கொடுக்குமேயன்றி, மற்றெத்தேசங்களும் இடம்கொடாதவாறுபோல,

ருரு. ஈசுரனையும் சீவனையும் மும்மூன்று பகுதிகளால் திரட்டவும், செதுக்கவும், கழிக்கவும் ஒன்றுமில்லையாமாறு செய்யவும் இவரது மூலப் பிரகிருதி மாயாப்பிரதேசம் பேசும் மாயாவாதோபநிடதங்கள் இடங்கொடுப் பனவாமன்றி, சிவேசுவரர்களை அங்ஙனம் முக்கூறுபடுத்திக் கூட்டவும், கழிக் கவும், அப்பரோபநிடதசுருதி சூத்திரங்களும், அச்சுருதி சூத்திரங்களின் பொருளை விளக்கும் சிவாகமபாஷ்ய விசேஷசுருதிகளும் ஓர்காலும் இடம் கொடாவாம். ஆகலின், வேதாந்த மகாவாக்கியத்துக்கு ஏகான்மவாதசுரு திப்பிரகாரம் அவர் கொண்ட கருத்து பரசுருதிகளுக்கு முற்றும் உடன் பாடின்றும்.

ருசு. ஓர் குக்கிராமத்திலே பூபதியாய்ப் பெருமைபடைத்துநின்றான் ஒருவன் அகண்ட பூமண்டலாதிபதிக்குமுன் எங்ஙனம் அடிமையாக ஒழுகு வானோ, அங்ஙனம் ஏகான்மவாதிகளது மகாவாக்கியங்களாற் சித்தித்த ஆன் மப்பிரமமானது சைவோபநிடதப்பிரகாரம் துவம் பதார்த்தமாகிச் சிவபெரு மானுக்கு அடிமையாகவே வந்துமுடியும். இவ்வுண்மை,

ருஎ. காரியசகுணப்பிரமம், சாங்கியயோக நிர்க்குணப்பிரமம், அத் தியாசிரமசகுணப்பிரமம் என்னும் மூவித பிரமபாவனைகளுக்குள்ளே நடுக்க ணுற்றது ஏகான்மவாதிகளது நிர்க்குணப்பிரமமாம் என்று இரத்தினத்திரய பரீக்ஷை, இதற்கு ஆதாரமாய்நின்ற கூர்மபுராணம், கைலாசசங்கிதை, மகாபாரதம் என்பனவற்றாலும், நாம் எழுதிப் பிரகடனஞ் செய்த "மகா உக்கிரவீரபத்திராஸ்திரம்" என்னும் புஸ்தகத்தினாலும் அறியப்படுகின்றது.

ருஅ. கருடோகம் என்ற வாக்கியத்தில், அகம் பதத்துக்குச் சீவன் வாச்சியம் என்றும், கருடன் என்றதற்கு ஈசுவரன் வாச்சியம் என்றும், இவ் விருபதங்களும் சேதனபாகத்தில் ஒருமைத்தன்மை லக்ஷணையினாற் சித்திக் கின்றதென்றும்கொண்டு கருடோகம் என்றமையினால் விஷம் தீராது; அது போல, ஏகான்மவாதிகளுடைய தத்துவமசிமுதலிய மகாவாக்கியப்பொருள் களால் தமது ஆன்மப்பிரமமாகிய அறிவுருப்பத்தை அறிதலாகிய புருஷார்த்தம் சித்திக்குமேயன்றி, பரோபநிடங்களிற் கூறப்பட்ட முடிவிறந்த பேரின்ப சிவபோகமும், பரமுத்தியாகிய மகாபுருஷார்த்தமும் சித்திக்கமாட்டா என்பது பசுமரத்தாணிபோல் நாட்டப்பட்டது. ஆதலால், சைவசித்தாந்தி களுடைய சிவோகம்பாவனையை நோக்க, அவர்கள் செய்யும் பாவனை சிறு மகார் மணல்கொண்டு ஆக்கி விளையாடும் சிற்றுண்டி விளையாட்டுப் போலிப் பாவனையாய் முடியும் என்பதிற் சிறிதும் ஆக்ஷேபமின்றாம்.

ருகூ. ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் இந்தக் கருடபாவனையையுற்றுக் கூறுங்கால், ''உலகத்திலே மாந்திரிகர் கருடமந்திராப்பியாசத்தினுற் கருடனுடைய அசாதாரணகுணத்தை அடைகின்றனர்; ஆகலின், பிரமாகம்பாவனை முற்றியபோது பிரமத்துக்குரிய (சர்வஞ்ஞத்துவாதி) அசாதாரணகுண விசேஷத்தை அடைதலாகிய விசேஷநிலை உபாசகர்களுக்கு எய்துவதில் யாதும் தடை இல்லை'' என்று பிரமசூத்திர சைவபாஷ்யத்து ௩. ௨. ௨௪-ற் கூறியிருக்கின்றார்.

கூ0. 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌶𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌗𑌰𑍁𑌡𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨 𑌵𑌿𑌷𑌕𑍍𑌷𑌯𑌮𑍍।
𑌶𑌿𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨 𑌸 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍॥

சர்வபாச விநிர்முக்தோ கருடதியானெ விஷக்ஷயம்।
சிவாநந்தபரதியானே ஸ யாதி பரமாம் கதிம்॥

கூக. ''கருடதியானத்தினுல் விஷமானது நீங்குகின்றது; அங்ஙனம் அவன் (முக்தன்) சிவானந்தபரதியானத்தினுலே சர்வபாசங்களினின்றும் நீங்கி முத்தியைத் தலைப்படுகின்றான்'' என்று வாதுளாகமமும்,

கூஉ. கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
தீரிமலந் தீர்ந்து சிவனவ னமே

என்று திருமூலநாயனுரும் கூறுமாற்றுல், கருடதியானத்தினதுண்மை சாதிக்கப்பட்டது; மேலும்,

கூங. 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌾𑌗𑌮𑌶𑌿𑌰𑍋𑌽𑌪𑌿 𑌰𑍂𑌪𑌾𑌸𑌨𑌾𑌯𑌾𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑌦𑍇𑌵
𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌯𑌾 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍। 𑌭𑍇𑌦𑌸𑍍𑌪𑍃𑌶𑍋𑌰𑍍𑌗𑌰𑍁𑌡𑌮𑌾𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌕𑌯𑍋𑌰𑌲𑍀
𑌕𑌂 𑌤𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌭𑌾𑌵𑌨𑌮𑌥𑌾𑌪𑌿 𑌵𑌿𑌷𑌂 𑌵𑍍𑌯𑌪𑍋𑌹𑍇𑌤𑍍॥

அத்வைத மாகம சிரோபி ருபாசநாயாமுக்தம் தவேதிபரமார்த்ததயா ந வாச்யம் । பேதஸ்புரோ கருடமாந்திரிகயோரளீகந் தாதாத்மியபாவநமதாபிவிஷம் பிரமார்ஷ்டி॥

கூச. ''சுவாமீ! உபநிடத முடிபுகளால் உம்முடைய உபாசனையிலே அத்துவைதம் கூறப்பட்டது; அதற்கு (ஆன்மா பிரமம் என்னும் இரண்டின் ஐக்கியத்தைக் கூடஸ்தப்பிரம ஐக்கியம்போல) நிருபசரிதவைக்கியமாகக் கூறல் கூடாது; கருடனும் மாந்திரிகனும் தம்முள் வேறுதல் வெளிப்படை; (ஏகவாத சுருதியினர்) அந்த ஆன்மா கருடனேடு தாதான்மியபாவனை யுறலைப் பொய் என்றாலும், கருடபாவனை விஷத்தை (நீக்காதிருக்கவில்லை) நீக்குகின்றது'' என்றனர் ஹரதத்தாசாரியர். கருடதியானமாவது யாதெனிற் கூறுதும்:—

கூரு. ஆதிபௌதிககருடன், ஆதிதைவிககருடன், ஆத்தியான்மிக கருடன் எனக் கருடன் மூவகைப்படும். உலகத்திலே காணப்படும் கருடன் ஆதிபௌதிககருடன் என்றும், கருடமந்திரம் ஆதிதெய்விககருடன் என்றும், கருடமந்திரமிடமாகநின்று பயன் கொடுக்கும் சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் என்றும் கூறப்படும். ஆதிதெய்விககருடமந்திரத்தை நாடோறும் பயின்றுவந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திரமே தானாக அனன்னியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாமாறு உறைத்துநின்று, அம்மந்திரக் கண்கொண்டு பார்க்குங்கால் விஷவேகம் உறுதியாக நீங்கிவிடும், அது போலச் சிவோகம்பாவனை செய்துவருங்கால் எய்தும் சிவத்துவவிளக்கம் வாயிலாகப் பாசமாகிய விஷம் உறுதியாய் நீங்கிவிடும் என்பதாம். விடம் தீர்தல் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுதலின், பாவனை போலி எனல் கூடாது.

## மூன்றாஞ் சூர்ணிகை.



கூகூ. பஞ்சாக்ஷரசெபம் பண்ணினால் வாசனாமலம் போம்.

கூஎ. (சூ. பொ.) தன்னை ஐம்புலன்களின் வேறாகக் கண்ட ஆன்மா அக்காட்சி நிலைபெறுவண்ணம் அசத்தாயுள்ள நிலமுதல் நாதமீறாகிய பாசப் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு நீக்கற்பாற்று; நீங்கியவிடத்து உளதாய் நிற்கும் சிவஞானக்கண்ணினால் தன் அறிவின்கண்ணே தனக்கு ஞேயமாகிய சிவம் நாடற்பாற்று; ஐம்புலனுக்கு வேறாகத் தன்னைக் காண்டலும், பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு சிவஞானத்தாற் காண்டலுமாகிய இரண்டும் சிவானந்தபோகப் பிரயோசனத்தை அடைதற்குச் சாதகமாம். இங்ஙனம் சாதித்தோனுக்கு, இனிச் சாதிக்கற்பாலதொன்று உளது என்றும், அஃதாவது வேம்பு தின்ற புழு அதனை விடுத்துக் கரும்பினிற் றலைப்பட்டு அதன் சுவையை அறிந்தவிடத்தும், பயிற்சிவயத்தினால் முன்னர்த் தான் நோக்கிய வேம்பின் சுவையிற் றலைப்பட்டு நிற்றல்போல, மேலே கூறப்பட்ட சாதகங்களைச் செய்து முற்றிய ஆன்மாவுக்கு அச்சாதகங்களாற் சிவஞானம் விளங்கி ஞேயக்காட்சிப்பட்டவிடத்தும், முன்னர்த் தான் பற்றிய ஏகதேசக்காட்சியை நோக்கி நிற்குமாதலான், அந்த நோக்கமாகிய வாசனையை நீக்குதற்குரிய சாதகமாகிய முத்திபஞ்சாக்ஷரத்தை "ஆன்மா பாசத்தை ஒருவிச் சிவஞானக்கண்ணினாற் சிவத்தைச் சிந்தையில் நாடுக என விதித்தவிதியின்படியே" சுத்தமானசபாக அறிவினாற் கணித்து நிற்றல் வேண்டும் என்பதாம்.

கூஅ. இலங்கை யரக்கர் தமக்கிறைவே யிடந்து கயிலை யெடுக்கிறைவே
புலன்கள் கெடவுடன் பாடினனே பொறிகள் கெடவுடன் பாடினனே
இலங்கிய மேனி யிராவணனே யெய்து பெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே காழி யரனடி மாவசியே

என்னும் திருப்பிரமபுரத்துத் தேவாரமும் ஈண்டுக் கவனிக்கற்பாற்று.

சுகூ. இங்ஙனம் ஸ்ரீபஞ்சாக்ஷரம் வாசனாமலத்தைப் போக்குதற்குச் சாதகமாமாறு உணர்த்தப்படுகின்றது:—

எ0. (வெ. பொ.) ஆன்மா சிவபெருமானுக்கு அடிமையாதலை ஸ்ரீபஞ்சாக்கரத்தை உச்சரிக்கு முறைமையில் வைத்துக்கொண்டு, தன்னுடலகத்தே இதயத்தைப் பூசைத்தானமாகவும், நாபியை ஓமத்தானமாகவும், புருவநடுவைத் தியானத்தானமாகவும் கருதி, புறத்தே ஞானபூசை செய்யுமாறு போல, இதயதாமரையிற் சிவபெருமானை அப்பஞ்சாக்ஷரத்தினால் அமைந்த சிவலிங்கத்திருமேனியிலே கோல்லாமை, ஐம்போறியடக்கல், அருள், போறை, ஞானம், தவம், அன்பு, வாய்மை என்னும் அஷ்ட புஷ்பங்கொண்டு அப்பஞ்சாக்ஷரத்தினாற் பூசித்து, குண்டலித்தானமாகிய நாபியில் ஞானவனலை எழுப்பி அதன்கண்ணே ஸ்ரீபஞ்சாக்ஷத்தினால் விந்துத்தானத்து அமிர்தமாகிய நெய்யைச் சுழுமுனாநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமஞ் செய்து, விந்துஸ்தானமாகிய புருவநடுவிலே சிகாரம் தத்பதப்பொருளும், யகாரம் துவம்பதப்பொருளும், வகாரம் அசிபதப்பொருளுமாமுறைமை கொண்டு, அப்பஞ்சாக்ஷரத்தினாற் சிவோகம்பாவனை செய்யின், அப்பொழுதே அங்ஙனம் விளங்கித் தோன்றும் சிவபெருமானுக்கு ஆன்மா அடிமையாம்.

எக. ஓமித்தலும் தியானித்தலும் பூசைக்கு அங்கங்களாமெனவும், பூசை அங்கியாம் எனவும் கொள்ளற்பாற்று. சுட்டறிவிறந்து ஞானத்தினால் ஞேயத்தைக் கண்டு, எங்கும் தானாக நிட்டை கூடியவிடத்தும், தொன்று தொட்டுவந்த ஏகதேசப்பழக்கத்தினாற் புறத்தே விடயத்திற் சென்று பற்றுவதாகிய தன் அறிவை அங்ஙனஞ் செல்லாது மடக்கி, அகத்தே ஒரு குறியின்கண்ணே நிறுத்தி நிஷ்டைகூடிநிற்கு முறைமையை ஸ்ரீபஞ்சாக்ஷரம் ஓதும் முறைமையில் வைத்துக்கண்டு, சிந்திக்கச் சிந்திக்க, அஃது சிவதரிசனத்தை விளக்கி வாசனைமாத்திரத்தினாற் புறத்தே போய்ப் பற்றும் ஏகதேச அறிவைப் பற்றறக் கெடுத்துப் பூரணநிலையிற் கொண்டு செல்லுமாம்.

எஉ. பஞ்சாக்ஷரத்தை ஓதுமுறையால் ஒரு குறியின்கண்ணே வைத்துக் காண்டல்வேண்டும் என்றும், அங்ஙனம் கண்டபோது சிவபெருமான் தன்னிடத்து விளங்கித் தோன்றும் என்றும், அங்ஙனம் தோன்றியபோது ஆன்மா சிவபெருமானுக்கு அடிமையாமாறும் கூறப்படுகின்றன:—

எங. (வெ. பொ.) ஆகாயத்திற் சஞ்சரிக்கும் நவக்கிரகங்களுள்ளே ஏனைய கிரகங்கள்போலக் காணப்படாத இராகு கேதுக்களைக் கிரகணகாலங்களிற் சந்திராதித்தரிடத்துக் காணுமாறுபோல, பதிபசுபாசம் என்னும் முப்பொருள்களுள்ளே "யான் அறிந்தேன் அறிகின்றிலேன்" என்னும் உணர்

விற்கு விஷயமாகக் காணப்படும் பசுபாசங்களோடொப்ப வேறு காணப் படாத பதிப்பொருளாகிய சிவபெருமானைத் தன் இதய தாமரையின்கண்ணே பஞ்சாக்ஷரத்தை ஓதுமுறையினுற் காணின், கோலை நட்டுக் கயிற்றினுற் சுற்றிக் கடையுங்காற் காட்டத்தினின்றும் வெளிப்படும் அக்கினிபோல, சிவபெருமான் ஆண்டு வெளிப்பட்டு அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பர். அப்போது ஆன்மாவும் அக்கினியைச் சேர்ந்த இரும்புபோலத் தன் சுதந்தரத்தைவிட்டு அச்சிவபெருமானுக்கு அடிமையாமாகலான், ஸ்ரீபஞ்சாக்ஷரம் விதிப்படி கணிக்கற்பாலதேயாம்.

திலேஷு தைலம் ததிநீவ ஸர்பிராப: ஸ்ரோத: ஸ்வரணீஷு சாக்நி:। ஏவமாத்மாத்மநி க்ருஹ்யதேऽஸௌ ஸத்யேநைநம் தபஸா யோऽநுபஶ்யதி (சுவேதாசுவதரம் க, கரு.)

திலேஷு தைலம் ததிநீவ சர்ப்பிராப: சுரோத: ஸ்வரணீசு சாக்நி:।
ஏவமாத்மாத்மநி கிருஹ்யதே சௌசத்யே நைநம் தபசா யோநுபச்யதி।

"எள்ளில் எண்ணெய் ஆட்டுதலாற் பெறப்படுதல் போன்றும், தயிரில் நெய் கடைதலாற் பெறப்படுதல்போன்றும், (வறந்த) நதியில் ஜலம் தோண்டுதலாற் பெறப்படுதல்போன்றும், விறகில் அக்கினி கடைதலாற் பெறப்படுதல் போன்றும் ஆன்மாவிற் பரமான்மாவானவர் சத்தியத்தினுலும் ஞானத்தினுலும் அறியப்படுகின்றுர்" என்று சுருதியும்,

திலேஷு வா யதா தைலம் தத்நி வா ஸர்பிரர்பிதம்।
யதாப: ஸ்ரோதஸி வ்யாப்தா யதாரண்யாம் ஹுதாஶந:।
ஏவமேவ மஹாத்மாநமாத்மந்யாத்மவிலக்ஷணம்।
ஸத்யேந தபஸா சைவ நித்யயுக்தோऽநுபஶ்யதி।

(வாயுசங்கிதை, பூருவபாகம், ச: எச, எரு.)

திலேஷுவா யதா தைலம் தத்நிவா சர்ப்பிரர்ப்பிதம்।
யதாப: சுரோதசி வியாப்தா யதாரண்யாம் குதாசந:।
ஏவமேவ மஹாத்மாநமாத்மந்யாத்மவிலக்ஷணம்।
சத்யேநதபசா சைவ நித்யயுக்தோநுபச்யதி।

"எள்ளிலே எங்ஙனம் எண்ணெயும், தயிரிலே எங்ஙனம் வெண்ணெயும் அடங்கி இருக்கின்றனவோ, நதியில் ஜலமும் அரணியில் அக்கினியும் எங்ஙனம் வியாபகமாயிருக்கின்றனவோ அங்ஙனமே ஆன்மாவுக்கு வேறுய் வியாபித்துள்ள பரமான்மாவை (ஒருவன்) சத்தியத்தோடும் ஞானத்தோடும் எக்காலமும் இயைந்து நின்று காண்கின்றுன்" என்று ஸ்மிருதியும் கூறுகின்றன. அங்ஙனம்,

விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியா
னுறவு கோனட் டுணர்வு கயிற்றினன்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே

என்று ஸ்ரீவாகீசர் அருளினர்.

எச. அண்டத்திலுள்ளனவெல்லாம் பிண்டத்துள்ளும் சூக்குமமாய் இருத்தலின், அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களும் இதயத்திலே கமலரூபமாய் விளங்குகின்றமையால் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற் பட்டு வியாபகமாய் விளங்கும் சிவபெருமானை இதயதாமரையின்மேல் அலரக்கண்டு பூசித்தல் அமைவுடைத்தெனத் தெளிவிக்குமாறு, இதயதாமரையின் இயல்பு கூறப்படுகின்றது:—

எரு. (வெ. பொ.) பிருதிவி முதலிய இருபத்துநான்கு தத்துவமும் நாபியினின்றும் தோன்றிய எண்விரலளவினதாகிய நாளவடிவும், வித்தியா தத்துவம் ஏழும் சுத்தவித்தையுமாகிய எட்டும் எட்டிதழ்வடிவும், ஈசுரதத்துவமும் சாதாக்கியதத்துவமும் அறுபத்திநான்கு கேசரவடிவும், சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவும், சிவதத்துவம் அப்பொகுட்டின்மீதுள்ள ஐம்பத்தொரு பீஜவடிவுமாமாதலின், அம்முப்பத்தாறு தத்துவக்கமலாசனத்தின்மேல் நிற்கும் சிவபெருமான் திருவடி பஞ்சாக்கரத்தினாற் பூசிக்கற்பாற்றும்.

எசு. இருதய நாப்ப ணஞ்செழுத் துருவி னிறைவனை யுயிர்க்கோலை சேயாமை, யருள்பொறி யடக்கல் பொறைதவம் வாய்மை யன்பறி வென்னு மெண்மலர்கொண், டொருமையோ டருச்சித் திடுகவேன் றடியர்க் கோள்ளிய தீக்கை செய் துணர்த்தத், திருவமர் துறைசை யுறையருட் குருவாந் திருநமச் சிவாயர்தாள் போற்றி

எனவும்,

எஎ. மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின்
மாயையாங் கிழங்கிலங் குரித்த
மன்னுழ வெட்டாந் தத்துவ நாள
மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு
நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொகுட் டாகு நாதமே வித்து
நயந்தகண் ணுமென விரவி
யிலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ
யிருந்தரு ளாசன மெனுமை
லெனதுபுக் கிலதா யெண்ணினேன் றெளிய
வியலருட் பார்வைதந் தனையே

யலகிலா வுயிர்கண் மலநடைக் கிலையா
யருணடைக் துண்மையாய் நின்ற
வாவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே

எனவும் போந்த திருவாக்குகள் பற்றியும் உணர்ந்து கோடற்பாற்று.

எஅ. மற்றோர் பிரகாரமாகக் கமலாசனம் கொள்ளுமாறு கூறப்படுகின்றது:—

எகூ. பிருதிவியாகிய நிவிர்த்திகலாரூபம் நாளம் எனவும், அப்புமுதலிய இருபத்துமூன்று தத்துவமாகிய பிரதிஷ்டாகலாரூபம் மலராம் எனவும், வித்தியாதத்துவமாகிய வித்தியாகலாரூபம் கேசரம் எனவும், சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவமாகிய சாந்திகலாரூபம் பொகுட்டாம் எனவும், சத்திதத்துவம் சிவதத்துவம் என்னும் இருதத்துவமாகிய சாந்தியதீதகலாரூபம் பொகுட்டிற் காணப்படும் பீஜமாம் எனவும் கோடல் அமையும்.

அ௦. முப்பத்தாறு தத்துவங்களால் அமைந்த கமலாசனத்தின்மீது,

அக. 𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍।

அ௨. 𑌯𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍।

ய ஆத்மநி திஷ்டந்।
யஸ்ய ஆத்மா சரீரம்।

அ௩. "எவர் ஆன்மாவில் உளரோ" எனவும், "எவருக்கு ஆன்மா சரீரம்" எனவும் மத்தியந்தினசாகை கூறுகின்றமையானும்,

அச. 𑌤𑌦𑌾𑌲𑌯𑌸𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌶𑌿𑌵𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍।

ததாலயஸ்தமாத்மாநம் சிவரூபம் விசிந்தயேத்।

அரு. "தேகமாகிய சிவாலயத்தின்கண்ணே ஆன்மாவைச் சிவலிங்க வடிவாகக்கொண்டு" என்று வாதுளாகமம் கூறுமாற்றானும், ஆன்மாவே சிவலிங்கம் என்றும், அதற்கு உயிராய் உள்ளது சிவன் திருவடியாம் என்றும் கொள்க. இதுபற்றியே, மனவாசகங்கடந்தார் "எட்டுமிரண்டு முருவான லிங்கத்தே நட்டம்புதல்வா" என்றும், திருமூலநாயனர் "தெள்ளத்தெளிந் தார்க்குச் சீவன் சிவலிங்கம்" என்றும் அருளிச்செய்தார்கள்.

அசு. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டினையும் திருமேனியாகக்கொண்ட சிவபெருமானுக்கு, ஆன்மா அந்த எட்டனுள்ளே ஓர் திருமேனியாய் முடிதலினல், சிவபெருமான் பசுபதி எனவும், ஆன்மா பசு எனவும் கொள்ளப்படுவார் என்றும், சிவன் தாளாகிய சத்தே ஆன்மாவுக்கு உயிராம் என்றும், தாள் என்றது சிவசத்தியின்மேற்றும் என்றும், இதுபற்றியே இருக்குவேதம்

௮௭. 𑌅𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌜𑌨𑍇 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂
𑌪𑌰𑍋𑌮𑌨𑍀𑌷𑌯𑌾 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 𑌜𑌿𑌹𑍍𑌵𑌯𑌾 𑌸𑌸𑌂।

அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம்
பரோமநீஷயா கிருப்ணந்தி சிஹ்வயா சசம்।

௮௮. “சனங்களிடத்து அந்தரியாமியாய் நிற்கும் பரனுகிய அந்தச் சிவபெருமானைச் சத்தியோடு கூட அகத்திற் பற்றுகின்றவர்களே அன்னத்தை நாவினுற் கிரகிக்கின்றுர்கள்” என அந்தரியாக பூசையை விசேஷித்துக் கூறியதாம் என்றும் ஓர்க.

௮௯. சிவாகமத்திலே விதிக்கப்பட்டவாறு புலரிக்காலத்திலே புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை என்னும் அஷ்டபுஷ்பங்கொண்டும், மற்றைக் காலங்களில் அச்சிவாகமத்தில் விதிக்கப்பட்டவாறு வெவ்வேறு அஷ்டபுஷ்பங்கொண்டும் புறத்தே பூசிக்கப்படுதலால், தேவாரத்தில் “எட்டுநாண்மலர் கொண்டவன்” எனப்படும் சிவபெருமானை அகத்தே ஆன்மலிங்கத்திலே தமது அறிவைக் கோல்லாமை, ஐம்போறியடக்கல், போறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அஷ்டபுஷ்பமாக்கிச் சதாகாலபூசை செய்துவரின், கிரகணகாலத்திற் சூரியன் புலப்படுமாறுபோலவும், கண்ணுடியை விளக்குந்தோறும் பிரகாசம் மேற்படுதல் போலவும், பாசி படர்ந்த நீரின்கண்ணே கல்லுவிட்டெறிந்தபோது பாசிநீங்க நீர்தோன்றுமாறுபோலவும், சிவபெருமான் ஆன்மாவின்கண்ணே வெளிப்பட்டு இன்பம் அளித்திடுவார்.

௯௦. 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃।
𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌤𑍁 𑌦𑌯𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌕𑍍𑌷𑌮𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌕𑌮𑍍।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌤𑌪𑌃𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌤𑍁 𑌸𑌪𑍍𑌤𑌮𑌮𑍍।
𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵𑌾𑌷𑍍𑌟𑌮𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌮𑍇𑌭𑌿𑌸𑍍𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 𑌶𑌙𑍍𑌕𑌰𑌃॥

அஹிம்சா பிரதமம் புஷ்பம் துவிதீய மிந்திரிய நிக்ரஹம்।
திருதீயந்து தயாபுஷ்பம் க்ஷமாபுஷ்பம் சதுர்த்தகம்।
ஞானபுஷ்பம் தப: புஷ்பம் பக்திபுஷ்பந்து சப்தமம்।
சத்யமே வாஷ்டமம் புஷ்ப மேபிஸ்துஷ்யதி சங்கர:॥

௯௧. இதனுல் அகிம்சை என்றது கொல்லாமையையும், இந்திரியநிக்கிரகம் ஐம்பொறியடக்கலையும், தயை அருளையும், க்ஷமை பொறையையும், ஞானம் அறிவையும், தபம் தவத்தையும், பக்தி அன்பையும், சத்தியம் வாய்மையையும் உணர்த்தும் என்க. இவ்வுண்மை நோக்கியே,

௯௨. 𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑌾𑌯𑌤𑌨𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌮𑌨𑌸𑌾 𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌶𑌂𑌕𑌰𑌮𑍍।
𑌹𑍃𑌤𑍍𑌪𑌦𑍍𑌮𑌪𑍀𑌠𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍋𑌷𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃। [𑌰𑍈𑌃।
𑌤𑍇𑌨𑍇𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌬𑌾𑌹𑍍𑌯𑍈𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑍈𑌶𑍍𑌚 𑌨𑌾𑌧𑍍𑌵
𑌹𑌿𑌂𑌸𑌾𑌦𑌿 𑌦𑍋𑌷 𑌮𑍁𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌾 𑌦𑍍𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌾𑌧𑌨𑌃।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌵𑌰𑍍𑌗𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌃॥

ஸ்வதேஹாயதநஸ்யாந்தர்மநசாஸ்தாப்ய சங்கரம்।
ஹிருத்பத்மபீட மத்யேது தியாநயஞ்ஞேந பூஜயேத்।
தியாநயஞ்ஞ: பர: சுத்த: சர்வதோஷவிவர்ஜித:।
தேநேஷ்ட்யா முக்திமாப்நோதிபாஹ்யை: சுத்தைச்ச நாத்வரை:।
ஹிம்சாதி தோஷமுக்த துவாத்விசுத்த: சித்தசாதந:।
தியாநயஞ்ஞ: பாஸ்தஸ்மாதபவர்க்க பலபிரத:॥

௯௩. "தனது தேகமாகிய ஆலயத்தின்கண்ணே சிவபெருமானை மான சமாகத் தாபனஞ் செய்து, இதயகமலத்தின்கண்ணே, கந்தம், மலர், தூபம், தீபம், திருமஞ்சனமுதலியவற்றை மனத்தினுற் கருதிக்கொண்டு, தியான யாகம்வாயிலாகப் பூசிக்க. தியானயாகமானது மேலானதும், தூயதும், சமஸ்த குற்றமும் நீங்கியதுமாயுள்ளது. அந்த அந்தரியாக தியானயோகத்தினுல் முத்தியை அடைகின்றுன். புறத்துள்ள தூய யாகங்களினுல் முத்தி எய்தாது. கொலை முதலிய குற்றங்கள் நீங்கி இருத்தலால், அந்தரியாகம் மிகு தூயதும் சித்தசாதனமாயும் உள்ளது. தியானயாகமானது மிக மேலானதாதலால், அது முத்தியைப் பாலிப்பதாயுள்ளது" என்று சிவதருமோத்தராகமம் கூறிற்று. இவ்வுண்மையை வருத்தமற உய்யும்வழி என்னும் நூலும்

௯௪. "அலலாக்கைக்கில்லை யருவருப்பு மில்லை.
கொலையுமிலை யுட்பூசை கூடு"

என்று கூறிற்று.

௯௫. அறுபத்துமூன்றுநாயன்மாருள்ளே அந்தரியாகபூசை செய்து வந்தவர் திருமயிலாப்பூர் வாயிலார்நாயனுர். அவ்வுண்மை.

௯௬. "மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்"

என்னும், திருச்செய்யுளால் அறியப்படுகின்றது.

## ஒன்பதாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

ஆன்மா இறைபணி நிற்றலும், அவ்வான்மா தான் பணிநீத்தலுமாகிய இரண்டும் கருத்தினால் வேறுபடா என்றும், இவ்விறைபணி நிற்றலால் ஐம்புலவேடருள்ளே வளர்ந்த இழிவு நீங்குதலாகிய ஆன்மசுத்தி எய்தும் என்றும், சிவதரிசனத்தில் நிகழ்வது ஆன்மசுத்தியாம் என்றும், பசுஞானத்தினாலும், பாசஞானத்தினாலும் அறியப்படாத சிவபெருமானை அவரது அருண் ஞானக்கண்ணினால் ஆன்மாவில் ஆராய்தல்வேண்டும் என்றும், புறப்பொருளைக் காணுமியல்பினதாகிய கண்ணானது தன்னியல்பை அறியமாட்டாதவாறுபோல, தத்துவதாத்துவிகங்களை அறிகின்ற ஆன்மாவானது தன்னையும் அறியமாட்டாது தன்னைச் செலுத்தும் சிவபெருமானையும் அறியமாட்டாது என்றும், சிவபிரான் ஆன்மாவின்கண்ணே அறியற்பாலராம் என்றும், அசத்தாகிய பிருதிவி முதலிய தத்துவங்கள் நிலையில்லாதன என்று விவேகித்து அறியின் சிவஞானசொரூபம் வெளிப்படும் என்றும், அச்சிவஞானத்தினால் ஆசாரியர் மாணாக்கனுக்குச் சித்தாதங்மகாவாக்கியத்தை உபதேசிப்ப, அவன் சோகம்பாவனையை நாடோறும் பயின்று வந்தால் மாயாகன்மங்களை விட்டு நீங்குவான் என்றும், ஐம்புலனுக்கு வேறாக ஆன்மா தன்னைக் காண்டலும் பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலுமாகிய இரண்டும் சிவப்பேற்றிற்குச் சாதகங்களாம் என்றும், அச்சாதகங்களாற் சிவஞானம் விளங்கி ஞேயமாகிய சிவம் காட்சிப்பட்டவிடத்தும், முன்னர்த் தான்பற்றிய ஏகதேசக் காட்சியாகிய வாசனை நீக்குதற்கு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி கணித்தல்வேண்டும் என்றும், தனது உடலின்கண்ணே இதயத்தையும், நாபியையும், புருவநடுவையும் முறையே பூசைத்தானம், ஓமத்தானம், தியானத்தானமாய்க்கொண்டு, முப்பத்தாறு தத்துவங்களால் அமைந்த இதயகமலத்தின்கண்ணே அமர்ந்த பஞ்சாக்ஷரத்திருமேனியிற், கொல்லாமைமுதலிய அஷ்டபுஷ்பங் கொண்டு பூசித்தல்வேண்டும் என்றும், அங்ஙனம் பூசிக்குங்காற் சிவபெருமான் அறிவுக்கு அறிவாய் விளங்கி நிற்பார் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## ஒன்பதாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.

க. சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக்கருத்துரை யாது? ரு.

ந. இதன் பொருள் யாது? சு.

ச. சிவப்பிரகாசம் எதனை ஆன்மசுத்தி என்று கூறுகின்றது? எ.

ரு. தான் பணிநீத்தலைப் பத்தாஞ் சூத்திரம் யாதென்று கூறுகின்றது? எ.

சு. இறைபணி நிற்றலால் எய்தும் பயன் யாது? எ.

எ. பாசக்ஷயம் ஆன்மாவுக்கு யாதாகும்? எ.

அ. பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்படும் ஆன்மசுத்தியை ஒன்பதாஞ் சூத்திரம் கூறலாமா? எ.

கூ. ஒன்பதாஞ் சூத்திரம் பதியை நாடி எனவும், தண்ணிழலாம் பதி எனவும் கூறுமாற்றால் எதன் இயல்பைக் கூறிற்று? எ.

கo. சிவதரிசனத்தின் நிகழ்வது யாது? எ.

கக. சிவதரிசனத்துக்கும் ஆன்மசுத்திக்கும் பேதமுண்டா? எ.

கஉ. எந்தச் சூத்திரங்கள் ஒருபொருண்மேலனவாயுள்ளன? எ.

கங. ஆன்மா தன்னை ஐம்புலனின் வேறாகக் காணின் எதனை அடையும்? அ.

கச. திருவடிக்காட்சியே அமைவதாகவும், சுத்தி எற்றுக்கோ? அ.

கரு. காட்சி எத்தனை வகைப்படும்? அவை யாவை? அ.

கசு. இம்மூவகைக் காட்சியும் அதிதீவிரபக்குவமுடையார்க்கு எப்போது நிகழும்? அ.

கஎ. அதிபரிபக்குவமில்லாதோர்க்கு எங்ஙனம் நிகழும்? அ.

கஅ. சிவரூபத்தின் நிகழ்வது யாது? அ.

ககூ. ஆன்மதரிசனத்தின் பின் நிகழ்வது யாது? அ.

உo. சிவதரிசனத்தில் நிகழ்வது யாது? அ.

உக. சிவதரிசனமாவது யாது? கூ.

உஉ. ஆன்மசுத்தியாவது யாது? கூ.

உங. ஞானத்துக்கிரியையாவது யாது? கூ.

உச. சிவதரிசனத்தின் நிகழும் ஆன்மசுத்தி எங்கே வைத்தறியற்பாற்று? கo.

உரு. அதுபற்றி யாது பெயர் பெறும்? கo.

உசு. இதனையுற்று மெய்கண்டாரும், அருணந்திசிவாசாரியரும் எங்ஙனம் கூறினர்? கo.

௨௭. சூத்திரப்பிண்டப்பொருள் யாது? ௧௧.

௨௮. முதலாஞ் சூர்ணிகை யாது? ௧௨.

௨௯. இதன் பொருள் யாது? ௧௩.

௩௦. ஆன்மாவானது தன்னை யார் என்று தேடியும் அறிகின்றிலேன் என்னும் தேர்ச்சியறிவின்கண்ணே, அதனைத் தெரிவிக்கும் அறிவு வேறுண்டு என ஆராயுங்கால் விளங்குவது யாது? ௧௫.

௩௧. சிவஞானத்தினால் உணரப்படுவது யாது? ௧௫.

௩௨. ஆன்மா எப்போது தன்னை அறியுமியல்பினது? ௧௫.

௩௩. சிவஞானபோதத்து ஒன்பதாஞ் சூத்திரத்தில் ஆன்மாவிலே (பரமான்மாவாகிய) சிவனைக் காண்க என்று கூறப்பட்டவாறு, எந்தச் சுருதிகளிற் காணப்படுகின்றது? ௧௬, ௧௭.

௩௪. இதற்கு இசைந்து உபப்பிருங்கணமும் கூறுகின்றதா? ௧௯.

௩௫. திராவிடசுருதிப் பிரமாணமுமுளதோ? ௨௦.

௩௬. ஆன்மாவினாற் காட்டப்படுவது யாது? ௨௨.

௩௭. அந்தக் கண்ணானது எதிர்முகத்துப் பொருளையும் பின்புறத்துப் பொருளையும் காணுமியல்பினதோ? ௨௨.

௩௮. அங்ஙனம் காணும் கண் எதனை அறியமாட்டாது? ௨௨.

௩௯. பின்னர் எதனையும் அறியமாட்டாது? ௨௨.

௪௦. தத்துவதாத்துவிகங்களை அறியும் ஆன்மா தன்னை அறியுமா? ௨௨

௪௧. பின் எவரை அறியமாட்டாது? ௨௨.

௪௨. கண்போலச் சடமல்லாத ஆன்மா எவரை அறிதல் முறை? ௨௨

௪௩. இரண்டாஞ் சூர்ணிகை யாது? ௨௩.

௪௪. இதன் பொருள் யாது? ௨௪.

௪௫. படிகசொரூபத்தைக் காட்டாது மறைத்துநிற்பன யாவை? ௨௪.

௪௬. எப்போது படிகசொரூபம் நிலையுதலுடைத்தாய் விளங்கும்? ௨௪.

சஎ. சிவஞானத்தை மறைப்பது யாது? உச.

சஅ. எப்போது சிவஞானசொரூபம் நிராலம்பமாய் வெளிப்படும்? உச.

சகூ. அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை எங்ஙனம் அசத்து என்று காண்டல் வேண்டும்? உநி.

நிo. அத்துவா எத்தனை வகைப்படும்? உநி.

நிக. இந்த அத்துவா எப்பிரகாரம் வகுக்கப்படும்? உநி.

நிஉ. பித்திகையைக் கண்டால் எது மறைந்து நிற்கும்? உநி.

நிங. மூவகைப் பிரபஞ்சமும் எங்கே காணப்படாது நிற்கும்? உநி.

நிச. அங்ஙனம் கண்டபோது வெளிப்படுவது சூனியமோ? உசூ.

நிநி. முப்பத்தாறு தத்துவம் சிவத்தை அறிதற்கு வாய்த்தபடியோ? உஅ.

நிசூ. சேக்கிழார்பெருமான் அதனையுற்று எங்ஙனம் கூறினர்? உகூ.

நிஎ. பிருதிவிமுதற் சிவதத்துவமிறுதியாகிய பிரபஞ்சத்தைச் சுட்டிக் கழித்துக்கொண்டு சென்றவிடத்து விஷயமாவது யாது? ஙக.

நிஅ. அந்தச் சத்து யாது? ஙக.

நிகூ. எப்போது ஆன்மாவின் பொதுவியல்பு நீங்கும்? ஙக.

சூo. தத்துவங்களை நீக்கிய தன்னறிவின்கண்ணே சிவத்தை ஆராய்ந்து பின் யாது செய்தல் வேண்டும்? ஙங, (6) (7) (8).

சூக. ஆசாரியர் எதனைச் சீடனுக்கு அறிவுறுத்துகின்றார்? ஙங, (5).

சூஉ. எந்த வேதாந்த சித்தாந்த மகாவாக்கியப் பொருளைச் சீடன் நாடோறும் பயின்று, எங்ஙனம் பாவித்தல்வேண்டும்? ஙங, (4) (5) (7) (8).

சூங. கருடமந்திர தியானத்தினால் விஷம் தீர்கின்றதா? ஙங, (9).

சூச. பிருகதாரணியோபநிடதம் ஆன்மாவையும் சிவனையும் துவிதமாய்ப் பாவிக்கச் சொல்கின்றதா? அபேதமாய்ப் பாவிக்கச் சொல்கின்றதா? ஙநி.

சூநி. பேதமாய்ப் பாவிப்பவன் தேவர்க்கு எதுபோலாகின்றான்? ஙநி.

சூசூ. இந்தச் சுருதிக்கிசைந்து கூறும் சிவாகமவாக்கியத்தைக் கூறுக? ஙஎ.

௬௭. இவற்றுக்கிசைந்து புராணமும் கூறுகின்றதா? ௩௮.

௬௮. சர்வசாரமுதலிய உபநிடதங்களிலே யாது பிரமம் கூறப்படுகின்றது? ௩௯.

௬௯. இந்த நிர்க்குணப்பிரமத்துக்குக் குணங்கள் உண்டா? ௩௯.

௭௦. அந்தப் பிரமத்துக்கு எவ்வித குணங்களுமில்லை யென்பது எவ்விருதிறத்தார்க்கும் உடன்பாடாம்? ௩௯.

௭௧. பரோபநிடதங்களிலே பிரதிபாதிக்கப்படும் பரப்பிரமசிவனார்க்குக் குணங்களுண்டா? ௪௦.

௭௨. ஆன்மா பிரமம் என்னும் மொழிகள் ஏகான்மவாதோபநிடதங்களில் நிர்க்குணப்பிரமத்துக்கும், பரோபநிடதங்களில் பரப்பிரமசிவனார்க்கும் வழங்கப்படுகின்றனவா? ௪௦.

௭௩. ஓர் வகைச் சாதியார் மரங்களில் ஒந்தியைக் கண்டவுடன் யாது செய்கின்றார்? ௪௦.

௭௪. அதுபோல ஏகான்மவாதிகள் பரப்பிரமசிவனார்க்குச் சத்திய ஞானானந்தம் சர்வஞ்ஞதை முதலிய குணங்கள் பரோபநிடதங்களிலே கண்டவுடன் யாது செய்கின்றார்? ௪௦.

௭௫. பரப்பிரமசிவனார்க்கு எதனை இல்லை என்று கூறுகின்றார்? ௪௦.

௭௬. உபநிடதங்களின்மாத்திர மின்றி வேதாந்த சூத்திரத்திற் காணப்படும் சகுணப்பிரமத்தையும் அங்ஙனம் செய்கின்றாரோ? ௪௨.

௭௭. ஏகான்மவாதிகள் எவற்றுக்கெல்லாம் மாறுபடக் குயுக்திகொண்டு அக்கிரம அர்த்தஞ் செய்கின்றார்கள்? ௪௨.

௭௮. பாகத்தியாகலக்ஷணை என்றால் என்னை? ௪௨.

௭௯. பசுபதிகளாகிய சீவேசுவரர் நித்தியப்பொருள்களென்றும், சேதனப்பொருள்கள் என்றும் கூறும் சுருதி யாது? ௪௩, ௪௪.

௮௦. இந்தப் பரசுருதிக்கு மாறாக மாயாவாதசுருதிகள் சீவேசுவரரை எங்ஙனம் கூறுகின்றன? ௪௫, ௪௬, ௪௭.

௮௧. ஏகான்மவாதிகள் தமது ஈசுரன் எத்தனை கூறுகளால் ஆபது என்கிறார்? ௪௮.

௮௨. இந்த ஈசுரனுக்குக் குணங்களும் உண்டென்கிறார்களா? ௪௮.

௮௩. இந்த ஈசுரன் தத்துவமசி வாக்கியத்தின் எந்தப் பதத்தின் வாச்சியார்த்தமோ? ௪௮.

௮௪. ஏகான்மவாதிகள் தமது சீவன் எத்தனை கூறுகளால் ஆயது என்கிறார்? ௪௯.

௮௫. இந்தச் சீவனுக்குக் குணங்களும் உண்டென்கிறார்களா? ௪௯.

௮௬. இந்தச் சீவன் தத்துவமசிவாக்கியத்தின் எந்தப் பதத்தின் வாச்சியார்த்தமோ? ௪௯.

௮௭. இந்த வாச்சியார்த்தங்களால் ஏகத்துவம் அவர்க்குச் சித்திக்குமா? ௫௦.

௮௮. ஆதலால் முன்னர் முக்கூறுகொண்டு கூட்டிய ஈசுரனிலிருந்து எவற்றைக் கழிக்கின்றார்? ௫௧.

௮௯. பின் எது எதனால் எஞ்சுகின்றது? ௫௧.

௯௦. முன்னர் முக்கூறுகொண்டு கூட்டிய சீவனிலிருந்து எவற்றைக் கழிக்கின்றார்? ௫௨.

௯௧. பின் எது எதனால் எஞ்சுகின்றது? ௫௨.

௯௨. ஏகான்மவாதிகள் எதனால் ஏகத்துவம் சித்திக்கின்றது என்பர்? ௫௩.

௯௩. சிற்சில தீவாந்தரங்கள் நரமாமிச பக்ஷணஞ்செய்தற்கு இடங்கொடுத்தல்போல, ஏனைய தேசங்களும் இடம் கொடுக்குமா? ௫௪.

௯௪. அங்ஙனம் சீவேசுரர் கற்பிதர் ஆபாசர் என்று கூற எந்த உபநிடதங்கள் இடங்கொடுக்கின்றன? ௫௫.

௯௫. எவை அதற்கு இடங்கொடுக்கமாட்டா? ௫௫.

௯௬. இது சாந்தோக்கிய மகாவாக்கியம், இது பிருகதாரணிய மகாவாக்கியம் என்று மிகு சாம்பிரதாயமாய்க் கூறி, அவ்வேகான்மவாதிகள், மாயாவாதோபநிடதங்களிலுள்ள தத்துவமசிமுதலிய வாக்கியங்களுக்குக் கொண்டபொருள் பரசுருதிகளுக்கு உடன்பாடாமா? ௫௫.

௯௭. ஏகான்மவாதிகள் தத்துவமசி முதலியவற்றால் முடித்து நின்ற (கூடஸ்தபிரமம்) ஆன்மப்பிரமமானது பின்னர்ப் பரோபநிடதப்பிரகாரம் மகாவாக்கியத்தின் எந்தப் பதத்தினுற் சுட்டப்படும்? ௫௬.

௯௮. அதற்குக் கூறப்பட்ட உவமை யாது? ௫௬.

கூகூ. பாவனை எத்தனை வகைப்படும்? ௫ள.

க00. மாயாவாதிகள் நிர்க்குணப்பிரமநிலை எந்தப் பாவனைகளுக்கு இடைக்கணுற்று நிற்கும்? ௫ள.

க0க. அதற்குப் பிரமாணங்கள் எங்கே காணப்படுகின்றன? ௫ள.

க0உ. ஏகான்மவாதிகள் தத்துவமசி முதலியவற்றுக்குக்கொண்ட பொருள்போல, கருடோகமஸ்மி என்றதற்குப் பொருள்கொண்டு விடம் தீண்டப்பட்டோனை நோக்கின் விடம் தீருமா? ௫அ.

க0௩. இதனால் அவர்கள் அவ்வாக்கியங்களுக்குக் கொண்டபொருள் பொருந்துமா? ௫அ.

க0௪. அந்த மகாவாக்கியப்பொருளால் யாது பயன் உண்டாம்? எவை உண்டாகா? ௫அ.

க0௫. அவர்கள் கொள்ளும்பாவனை எதுபோலாய் முற்றும்? ௫அ.

க0கூ. கருடபாவனையையுற்று ஸ்ரீநீலகண்டசிவாசாரியசுவாமிகள் யாது கூறுகின்றார்கள்? ௫கூ.

க0எ. பிரமாகம்பாவனை முற்றியபோது எப்படிப்பட்ட விசேஷநிலை எய்துகின்றது? ௫கூ.

க0அ. இங்ஙனம் சைவபாஷ்யகாரர் எங்கே கூறியிருக்கின்றார்? ௫கூ.

க0கூ. கருடதியானத்தினால் விஷம் நீங்கும் என்பதற்கும், சிவானந்த பரதியானத்தினாற் பாசம் நீங்குமென்பதற்கும் பிரமாணம் யாது? கூ0, கூக.

கக0. திருமந்திரநூலுடையார் கருடதியானத்தைப் பொய் என்கின்றாரா? கூஉ.

ககக. அரதத்தாசாரியசுவாமிகள் கருடதியானத்தைப்பற்றி யாது கூறுகின்றார்? கூ௩, கூ௪.

ககஉ. ஆன்மாவுக்கும் சிவத்துக்கும் நிருபசரித ஐக்கியம் கொள்பவர் யார்? ஏகான்மவாதிகள்.

சுக௩. அவ்விரண்டுக்கும் உபசரித ஐக்கியம் கொள்பவர் யார்? சைவ சித்தாந்திகள்.

கக௪. இவ்விருவகை ஐக்கியங்களுள்ளே எந்தப்பிரகாரமாகிய ஐக்கியம் கோடல் கூடாது? கூ௪.

கக௫. கருடபாவனை பொய்யா? கூ௪.

சுககூ. கருடன் எத்தனை வகைப்படும்? அவை யாவை? கூ௫.

கசுஎ. ஆதிபவுதிககருடன் யாது? கூ௫

ககஅ. ஆதிதைவிககருடன் யாது? கூரு.

ககக. ஆத்தியான்மிககருடன் யாது? கூரு.

க௨0. எதனை மாந்திரிகன் பயிலல்வேண்டும்? கூரு.

க௨க. எங்ஙனம் மாந்திரிகன் பயிலல்வேண்டும்? கூரு.

க௨௨. கருடபாவனையால் விஷம் தீர்தல்போலச் சிவோகம்பாவனையால் எது நீங்குகின்றது? கூரு.

க௨௩. மூன்றுஞ் சூர்ணிகை யாது? கூகூ.

க௨௪. இதன் பொருள் யாது? கூஎ.

க௨ரு. ஆன்மா எதனை நீக்கல்வேண்டும்? கூஎ.

க௨கூ. நீக்கியவிடத்து உளதாவது யாது? கூஎ.

க௨எ. சிவஞானத்தினல் எது நாடற்பாற்று? கூஎ.

க௨அ. எவை இரண்டும் சிவானந்தபோகப்பயனை அடைதற்குச் சாதகமாகும்? கூஎ..

க௨கூ. அங்ஙனம் சாதித்தோன் பின் எதனைச் சாதனமாகக் கணித்தல்வேண்டும்? கூஎ.

க௩0. எதற்காக அங்ஙனம் கணித்தல்வேண்டும்? கூஎ.

க௩க. ஞேயக்காட்சி எய்தியவிடத்தும் எந்தக் காட்சியை ஆன்மா நோக்கி நிற்கும்? கூஎ.

க௩௨. அதற்கு எடுத்துக்காட்டப்பட்ட உவமை யாது? கூஎ.

க௩௩. எந்த விதிப்படி ஸ்ரீபஞ்சாக்ஷரம் கணிக்கற்பாற்று? கூஎ.

க௩௪. எங்ஙனம் கணிக்கற்பாற்று? கூஎ.

க௩ரு. உடலின்கண்ணே எது எது பூசைத்தானம், ஓமத்தானம், தியானத்தானமாகக் கொள்ளப்படுகின்றது? எ0.

க௩கூ. பஞ்சாக்கரத்தினல் அமைந்த திருமேனி யாது? எ0.

க௩எ. உட்பூசைக்குரிய அட்ட புஷ்பங்கள் யாவை? எ0.

க௩அ. ஞானக்கினியை எங்கே எழுப்பல்வேண்டும்? எ0.

க௩கூ. குண்டலித்தானமாகிய நாபியின்கண்ணே ஓமித்தற்கு அமைந்த சுருக்குச் சுருவங்கள் யாவை? எ0.

க௪0. பூசைக்கு அங்கங்களாயுள்ளன யாவை? எக.

கசக. பண்டுதொட்டுப் பயின்றுவந்த பழக்கத்தினுல் தன் அறிவு புறத்தே செல்லாது பூரணநிலையிற்செலுத்தி நிறுத்தற்குச் செய்யும் உபாயம் யாது? எக.

கசஉ. இராகுகேதுக்கள் எப்போது எங்கே காணப்படுகின்றன? எங.

கசங. பஞ்சாக்ஷரத்தை ஓதுமுறையில் ஒரு குறியின்கண்ணே வைத்துக் காண்டலால் எய்தும் பயன் யாது? எஉ.

கசச. எதுபோலச் சிவபெருமான் அறிவுக்கறிவாய் விளங்குவர்? எங.

கசரு. இதனையுற்றுச் சுருதிஸ்மிருதிகளும் தேவாரமும் எங்ஙனம் அருளின? எங.

கசசூ. அண்டத்தில் உள்ளனவெல்லாம் எங்கே உள்ளன? எச.

கசஎ. அண்டவடிவாகிய தத்துவங்களெல்லாம் எங்கே விளங்குகின்றன? எச.

கசஅ. முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவபிரான் எங்கே அலர்கின்றூர்? எச.

கசகூ. எத்தனை தத்துவங்கள் நாளவடிவாய் அமைந்தன? எரு.

கரு௦. எத்தனை தத்துவங்கள் மலர்? எரு.

கருக. எத்தனை தத்துவங்கள் கேசரம்? எரு.

கருஉ. எந்தத் தத்துவம் பொகுட்டு? எரு.

கருங. எந்தத் தத்துவம் பீஜம்? எரு.

கருச. கமலாசனத்தின்மேல் நின்றது யாது? எரு.

கருரு. கமலாசனத்தையுற்று இரு செய்யுட்கள் கூறுக? எசூ, எஎ.

கருசூ. கமலாசனத்தை மற்றோர் பிரகாரமாகக் கூறுங்கால், நிவிர்த்தி கலைமுதலிய ஐந்தும் எவ்வெத் தத்துவங்களை அடக்கி நாளமுதலியவாய் அமைந்தன? எசூ.

கருஎ. சிவபெருமானுக்கு ஆன்மா சரீரம் என்றும், அவர் ஆன்மாவுக்கு உயிர் என்றும் உணர்த்தும் சுருதிகள் கூறுக? அக, அஉ, அங.

கருஅ. உடல் கோயில் என்றமைக்கும், அந்தக் கோயிலுள்ளே இருக்கும் சிவலிங்கம் ஆன்மா என்றமைக்கும் பிரமாணம் யாது? அரு.

கருகூ. ஆன்மலிங்கத்தை உடலாகக்கொண்டு அதிலே சிவனுர் திருநடனஞ் செய்கின்றதென்றமைக்குப் பிரமாணம் யாது? அரு.

கசூ0. சிவபிரானுக்குரிய அட்டமூர்த்தங்களுள்ளே சேதன மூர்த்தம் யாது? அசூ.

கசூக. அங்ஙனம் ஆன்மாவாகிய பசுவைத் திருமேனியாகக்கொண்டமையினால், அவர்க்கு யாது பெயர் எய்திற்று? அசூ.

கசூஉ. சிவன்தாள் என்றது யாது? அசூ.

கசூங. அந்தரியாகபூசையையுற்று இருக்குவேதம் யாது கூறுகின்றது? அஎ, அஅ.

கசூச. புறத்தே சிவபெருமானைப் புலரிக்காலத்திற் பூசித்தற்குரிய அட்டபுட்பங்கள் யாவை? அகூ.

கசூரு. மற்றைக்காலங்களினும் வெவ்வேறு அட்டபுட்பங்கள் கொண்டு சிவபெருமான் பூசிக்கற்பாலர் என்று சிவாகமங்கள் விதிக்கின்றனவோ? அகூ.

கசூசூ. அங்ஙனம் பூசிக்கப்படுதல்பற்றித் திராவிடசுருதி யாது கூறுகின்றது? அ0.

கசூஎ. உடலகத்தே கொல்லாமைமுதலிய அட்டபுட்பங்கொண்டு ஆன்மலிங்கத்திலே சிவபிரான் திருவடி பூசிக்கப்படுங்கால், அவர் எங்ஙனம் ஆன்மாவுக்குப் புலப்படுகின்றார்? அகூ.

கசூஅ. கொல்லாமைமுதலிய எட்டையும் உணர்த்தும் சிவாகமப்பிரமாணம் யாது? கூ0, கூக.

கசூகூ. அந்தரியாகபூசை செய்யுங்கால் எந்த உபகரணங்களை மனசினாற் கருதிப் பூசித்தல்வேண்டும்? கூங.

கஎ0. புறத்துள்ள யாகங்களினும் எது மேலாயது? கூங.

கஎக. இங்ஙனம் அந்தரியாகபூசையை வியந்து எந்த ஆகமம் கூறுகின்றது? கூங.

கஎஉ. வருத்தமறவுய்யும்வழி யாது கூறுகின்றது? கூச.

கஎங. அறுபத்துமும்மைநாயன்மாருள்ளே எவர் அந்தரியாகபூசை செய்து முத்தி அடைந்தார்? கூரு.

கஎச. அங்ஙனம் பூசை செய்தமைக்குப் பிரமாணம் சொல்க? கூசூ.

---

## சிறப்பதிகாரம்.

### பயனியல்.

### பத்தாஞ் சூத்திரம்.



௧. 𑌶𑌿𑌵𑍇𑌨𑍈𑌕𑍍𑌯𑌂 𑌗𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑌦𑌧𑍀𑌨𑌸𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌃।
𑌮𑌲𑌮𑌾𑌯𑌾𑌦𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌮𑌾𑌨𑍍॥

சிவேனைக்யம் கத: சித்தஸ்தததீந: ஸ்வவிருத்திக:।
மலமாயாத்யசம்ஸ்பிஷ்டோ பவதி ஸ்வாநுபூதிமாந்॥

௨. (இ—ள்.) 𑌶𑌿𑌵𑍇𑌨 𑌐𑌕𑍍𑌯𑌂 𑌗𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 = சிவனோடு ஒற்றுமை அடைந்த ஆன்மா; 𑌤𑌦𑌧𑍀𑌨𑌸𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌃 = அச்சிவன் வயத்தனாதலாகிய தன் விருத்தியை யுடையனாய்; 𑌮𑌲𑌮𑌾𑌯𑌾 𑌆𑌦𑌿 𑌅𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌃 = மலம் மாயை முதலியவற்றால் தொடக்குண்ணாதவனாய்; 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌭𑌵𑌤𑌿 = சுவாநுபூதியாகிய சிவபோகமுடையனாவன்.

௩. அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

௪. (இ—ள்.) அவனே தானே ஆகிய அந்நெறி = (பெத்தநிலையில்) அவ்வான்மாவே தானேயாய்ச் சிவன் நின்ற அம்முறையானே; ஏகனாகி இறைபணி நிற்க = (முத்திநிலையில்) சிவனே தானெனும்படி ஆன்மா இறைபணியில் நிற்குமாயின்; மலமாயை தன்னொடு வல்வினை இன்று = மலம் மாயை என்பவற்றோடு வலியகன்மமும் இல்லையாம்.

௫. (க—ரை.) பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துகின்றது.

௬. (க—பொ.) ஏழாஞ் சூத்திரத்தினாற் சாதிக்கும் பொருளியல்பும், எட்டாஞ் சூத்திரத்தினாற் சாதித்துப் பெறப்படும் பொருளியல்பும், ஒன்பதாஞ் சூத்திரத்தினாற் சாதிக்குமாறும் உணர்த்தி, இனி அச்சாதனத்தினால் எய்தும் பயனியல்பு வகுத்துக் கூறப்படுகின்றது. பாசக்ஷயமும் (பாசவீடும்), சிவப்பேறும் எனப் பயன் இருவகைப்படும். அவ்விரண்டினுள்ளே சுட்டுணர்வினாலாகிய ஏகதேசக்காட்சி திருவஞ்செழுத்தின் உச்சரிப்பினாற் பற்றறக் கழியும். அது கழிதலினாற் பெறப்படுவது ஆன்மசுத்தியாம். ஆன்மசுத்தியின் பயன் பாசக்ஷயமேயாம். ஒன்பதாஞ் சூத்திரத்திற் பாசக்ஷயம் எய்து

மாறு சிந்தனைசெய்தபொருளைத் தெளிய உணர்த்துவது பத்தாஞ்சூத்திரம் என்பதாம்.

எ. இச்சூத்திரம் ஞானத்துயோகமாகிய தெளிதலை உணர்த்துகின்றது. இது நிதித்தியாசனம் எனவும் படும்; சிவயோகமுமாம், ஆதித்தகிரணத்தைக் கலந்த கண்போல ஆன்மா திருவருளோடு அழுந்தாது சேர்ந்து அருளாய்நிற்றலே சிவயோகம். இது ஞானயோகஸ்தானமாய், "தில்லை வட்டமாய்," "அறிவினெல்லையாய திருத்தில்லையெல்லை" யாயுள்ள துரிய சிதம்பரத்தின்பாலதாம் என்பது.

அ. (சூ. பி. பொ.) சிவஞானக்கண்ணினால் ஆன்மாவிலே நாடப்பட்ட சிவன் பொருட்டன்மையால் ஆன்மாவுக்கு வேறேயாயினும், வேறு காணப்படாது யானே கண்டேன் என்னுமாறு ஆன்மாவேயாய்நின்ற பெத்தநிலையிற் போல, ஈண்டு ஆன்மா தானென வேறு காணப்படுமாறின்றி அச்சிவனேயாமாறு ஒற்றுமைபட்டுத் தான் பணி நீத்தலாகிய இறைபணியிலே சலியாது நிற்பின், மலம் மாயை கன்மம் என்னும் மூன்றும் இல்லையாய் ஒழியும்.

கூ. ஈண்டு ஒற்றுமைப்படுதலாவது

(1) குடம் உடைந்தபோது குடாகாயமும் மகாகாயமும் ஒன்றுதல் போல ஒற்றுமைப்படுதலோ?

(2) இன்றேல் வெள்ளியை இப்பி என்பதுபோல விபரீதக்காட்சியான் ஒற்றுமைப்படுதலோ?

(3) இன்றேல் மண்ணே குடம் என்பதுபோல ஒன்று திரிந்து மற்றொன்றாய் ஒற்றுமைப்படுதலோ?

(4) இன்றேல் வெள்ளைநிறமும் தாமரையும்போல குணகுணித்தன்மையால் ஒற்றுமைப்படுதலோ?

(5) இன்றேல் தீயும் இரும்பும்போல ஒன்றினொன்று கலத்தலால் ஒற்றுமைப்படுதலோ?

(6) இன்றேற் பாலும் நீரும்போலப் பிரிக்கப்படாத இயல்பினால் ஒற்றுமைப்படுதலோ?

(7) இன்றேற் கருடனும் மாந்திரிகனும்போலப் பாவனைமாத்திரையினால் ஒற்றுமைப்படுதலோ?

(8) இன்றேற் காய்ச்சிய இரும்பின் நீர்போல ஒன்றின் ஒன்று லயமாதலால் ஒற்றுமைப்படுதலோ?

(9) இன்றேற் பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தினுல் ஒற்றுமைப்படுதலோ?

(10) இன்றேற் காட்டத்தில் அங்கிபோல விளங்காமையான் ஒற்றுமைப்படுதலோ?

(11) இன்றேற் சூரியனெளியின் விளக்கொளிபோலச் சத்திகெட்டு நிற்றலால் ஒற்றுமைப்படுதலோ?

(12) இன்றேல் தலைவனும் தலைவியும்போல இன்பநுகர்ச்சிமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ?

(13) இன்றேல் நட்பினர் இருவர் போல நட்பின் மிகுதியால் ஒற்றுமைப்படுதலோ?

(14) இன்றேல் ஆவும் ஆவும்போல ஒப்புமைமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ? என்று அவ்வச்சமயத்தார் கூறும் ஐயப்பாடுகளெல்லாம் பொருந்தா என்று கொண்டே, சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறேயாயினும் பெத்தகாலத்தில் அச்சிவபெருமான் அவ்வான்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு நின்றவாறுபோல, முத்திநிலையில் ஆன்மா சிவனேயாய் ஒற்றுமைப்பட்டு ஏகனாகியிறைபணிநிற்றல் வேண்டும் என்று பெறப்பட்டது.

## முதலாஞ் சூர்ணிகை.

---

க०. அரனுடன் ஒன்றாகி நில்.

கக. (சூ. பொ.) அந்த ஆன்மா தான் என வேறு காணப்படுமாறின்றிச் சிவனோடு ஒற்றுமைப்பட்டு ஏகனாகி நின்றால், யானும் எனதும் எனப் பகுத்துக்காணும் மயக்கவுணர்விற்கேதுவாகிய மலம் நீக்கி அச்சிவபிரானது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாதலான், அந்தச் செருக்கு நீங்குதற்குக் காரணமாதல்பற்றி, சிவபெருமான் இந்த ஆன்மாவேயாய் நின்றமைபோல, அச்சிவபெருமானோடு ஆன்மா ஏகனாகிநிற்றல் வேண்டுமென்பதாம்.

கஉ. யானும் எனதும் எனப் பகுத்துநிற்கும் உணர்வே மயக்கவுணர்வு என்றமையை உதாரணங்கொண்டு விளக்குகின்றார்:—

கங. (வெ. பொ.) ஆன்மாவாகிய ஞாதாவையும், சிவமாகிய ஞேயத்தையும், யான் என்றும் அவன் என்றும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் யானே என நிற்பார்க்கும் போல அவ்வாறு கருதுகின்ற ஆன்மபோதம் முற்பட்டுத் தோன்றுமாதலான், அது தோன்றுங்காற் சிவனாகிய தான் என்று ஒரு முதல் காணப்படுமாறின்றித் தான் அவ்வான்மாவேயாய்க் காணப்பட்டும், இனி

"யான் என்று ஒரு முதல் காணப்படுமாறில்லை என்றறிந்து சிவனே முழுவதும் எனக் காண்பாரை" அங்ஙனம் வேறு காணப்படுமாறில்லை என்று தனது திருவடி வியாபகத்துள் வியாப்பியமாய் அடக்கி நிற்கச் செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன்.

கச. இதுபற்றியே, மாணிக்கவாசகசுவாமிகள் "நல்வினைத் தெய்வம் இவளைக் களவின்கட் கூட்ட, அமுதமும் அதன்கட் கரந்துநின்ற சுவையுமென்ன என் நெஞ்சம் இவள்கண்ணே ஒடுங்க, யான் என்பதோர் தன்மை காணாதொழிய, இருவருள்ளங்களும் ஒருவேமாமாறு கரப்ப, ஒருவேமாகிய ஏகாந்தத்தின்கட் பிறந்த புணர்ச்சிப்பேரின்பவெள்ளம் யாவரான் அறியப்படும்" என்பதுபற்றிச் "சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே, நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப், பொற்பாரறிவார்" என்றருளிச் செய்தார். இங்கே இவள் எனச் சுட்டப்பட்டது சிவபரம்பொருளே என்றும், பேரின்பவெள்ளத்தை அடைந்தவன் ஆன்மா என்றும் அறியற்பாற்றும்.

கரு. திருநாவுக்கரசுநாயனாரும்,

"எம்பிரா னென்றதேகொண் டென்னுளே புகுந்துநின்றிங், கெம்பிரானாட்டவாடி யென்னுளே யுழிதர்வேனை, யெம்பிரா னென்னைப் பின்னைத் தன்னுளே கரக்குமென்று, லெம்பிரா னென்னினல்லா லென்செய்கேனேழையேனே"

என்று அருளிச்செய்தார்.

கசூ. திரண்டாம் பயனெனுந் திருவரு டெளியிற்
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்ற
மென்றிறை யியற்கை யியம்புத றதும்

என்று உமாபதிசிவாசாரியர் தமது சங்கற்பநிராகரணத்திற் பரமசித்தாந்தமாக (மாணிக்கவாசகசுவாமிகள் திருவாக்கை) முடிவின்கண்ணே எடுத்து ஓதியவாறே, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தில் உய்த்துணர்ந்துநிற்றலே ஏகனாகி நிற்றலின் பொருளாம்.

கஎ. வாதனாமலம் போக்கி ஆன்மசுத்திபண்ணுதற்குப் பஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரித்தலே சாலும், அதற்குமேல் ஏகனாகிநிற்றல் எதன் பொருட்டாமெனின், அங்ஙனம் நிற்றலால் யான் எனப்படும் ஞாதாவும், எனது எனப்படும் ஞானமும், அதற்கு விஷயமாய் எனது எனப்படும் ஞேயமுமாகப் பகுத்துக்காணும் மயக்க உணர்விற்குக் காரணமாகிய மலவாசனை நீங்கும்; அது நீங்கினாற் சிவனார் திருவடியாகிய சிவானந்தத்தை அநுபவிக்கும்; ஆதலால் மலவாசனை நீங்கிச் சிவானந்தத்தை அடைதற்கு ஏகனாகி நிற்றலாகிய இது சாதகமேயாம்.

கஅ. ஸ்தூலவொளியாகிய கண்ணொளியும் சூக்குமவொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்துநிற்குநிலை பிரித்தறிய வாராமையான்,

ககூ. கண்ணொளியாய்க் காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலான், அப்போது விளக்கொளி இருந்தும் இல்லைத்தானே;

உo. இன்றேல் விளக்கொளியாய்க் காணுங்காற் காட்டுந் தன்மையே முனைத்துத்தோன்றுமாகலான் அவ்வழி கண்ணொளி இருந்தும் இல்லையாமே;

உக. கண்ணொளியும் விளக்கொளியும் எனப் பகுத்துக் காணப்புகினும், காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலால் விளக்கொளி திரிவுபுலனுகக் காணப்படுவதல்லது தெளிவுக்காட்சிப்படுமாறில்லை;

உஉ. அதுபோல ஸ்தூல அறிவாகிய ஆன்மாவும் சூக்கும அறிவாகிய சிவனும் அத்துவிதமாய்க் கலந்துநிற்கு நிலையும் பிரித்தறிய வாராமையால்,

உங. ஆன்மாவாய்க் காணுங்கால் ஆன்மபோதமே முனைத்துத் தோன்றுமாகலால் அவ்வழி சிவனிருந்தும் இல்லையாமே;

உச. இன்றேற் சிவனுய்க் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலான், அவ்வழி ஆன்மா இருந்தும் இல்லையாமே;

உரு. இனி ஆன்மாவும் சிவனும் எனப் பகுத்துக் காணப்புகினும் தற்போதமே முற்பட்டுத் தோன்றுமாகலான், அவ்வழியும் சிவன் திரிவுக் காட்சிக்குப் புலனுகக் காணப்படுவானன்றித் தெளிவுக்காட்சிக்குப் புலனுய் நிற்குமாறில்லையாம்; ஆதலால் ஆன்மா தான் என்றொருமுதல் காணப்படாது எல்லாம் சிவனே எனக் காண்டல் தெளிவுக்காட்சியேயாம்.

உசூ. கண்ணுக்கு ஒளியிருத்தலினுலன்றே,

ஆதித்ய꞉ சக்ஷுர்பூத்வாக்ஷிணீ ப்ராவிஶத்|

ஆதித்ய꞉ சக்ஷுர்பூத்வாக்ஷிணீ பிராவிசத்।

உஎ. "ஞாயிறு கண்ணுகி இரு கண்களுள்ளே பிரவேசித்தான்" என்று ஐதரேயசுருதி கூறுகின்றமையானும்,

உஅ. சாக்ஷுஷோ ஹி ரஶ்மி꞉|

சாட்சுஷோ ஹி ரச்மி꞉।

உகூ. "கண்ணுக்கு ஒளி உளதன்றே" என்று நியாயசாஸ்திரம் கூறுகின்றமையானும்,

ரு௦. ஏஷ ரஸோ யச்சக்ஷுஃ।

ஏஷ ரஸோ யச்சக்ஷுஃ।

பிருகதாரணியசுருதி கூற, அதற்குச் சங்கராசாரியர்

ருக. தைஜஸம் ஹி சக்ஷுஃ।

தைஜஸம் ஹி சக்ஷுஃ।..

ரு௨. "ஒளியுடைத்தன்றோ கண்" என்று பொருள் கூறுகின்றமையானும்,

ருரு. (தந்ந)ரூபைகநிஷ்டத்வாச்சக்ஷுஸ்தைஜஸமிந்திரியம்।

(தந்ந)ரூபைகநிஷ்டத்வாச்சக்ஷுஸ்தைஜஸமிந்திரியம்।

ருச. "கண்ணானது ரூபமொன்றையே விஷயீகரித்தலால் ஒளியுடைய இந்திரியமேயாம்" என்று பவுட்கராகமம் கூறுதலானும் கண்ணுக்கு ஒளி இல்லை என்று கூறும் பித்தர் கூற்றுப் பொருந்தாதாம் என விடுக்க. கண்ணுக்கு இயல்பாய் ஒளியில்லையாயின், அது இருட்காலத்தில் இருட்டை இருட்டென்று எங்ஙனம் அறிய வன்மையுடையதாயிற்றோ? ஆதலால் இயல்பாகக் கண்ணுக்கு ஒளி உண்டு என்பதாம்.

## இரண்டாஞ் சூர்ணிகை.



ருரு. உன் றேழிலெல்லாம் அரன்பணி என்று கோள்.

ருசூ. ஆன்மாவானது தனது அற்ப இச்சையும், அற்பஞானமும், அற்பசெய்கையுமாகிய இம்மூன்றும் சிவபெருமானது இச்சாசத்தியும், ஞானசத்தியும், கிரியாசத்தியுமின்றி நிகழமாட்டாமையின், அஃதாவது, ஆன்மாவானது தனது விருப்பு சிவபெருமானது இச்சாசத்தி இன்றியும், தனது அறிவு அவரது ஞானசத்தி இன்றியும், தனது செய்கை அவரது கிரியாசத்தி இன்றியும் நிகழமாட்டாமையின், சிவனுடைய விருப்பேயன்றித் தனக்கு விருப்பில்லை என்றும், சிவனுடைய அறிவேயன்றித் தனக்கு அறிவில்லை என்றும், சிவனுடைய செய்கையேயன்றித் தனக்குச் செயலில்லை என்றும் உணர்ந்து

ருஎ. ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்தி லின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்

என்றவாறு, சிவபெருமானது மிக ஓங்கிய திருவடிவியாபகத்துக்குள்ளாக அடங்கி, இந்தப் பேரின்பப்பேறு பெற்றேன் என்னும் கொர்ச்சிதமும் அவரது இன்பசத்தியாலாயதென்றறிந்து, அந்தப் பூரணநிலையில் விசாரமற்றுத்

தூங்குங்கால், பிரபஞ்சம் சிறிதும் தாக்குமாறில்லை. பிரபஞ்சம் தாக்கா தொழியவே, மறுமைக்குக் காரணமாகிய வினையும் ஏறாது. அங்ஙனம் ''பல்லடியார்'' என்றற்றொடக்கத்த தேவாரத்தில் ''செல்லடியேநெருக்கித் திறம்பாது சேர்ந்தவர்க்கே சித்திமுத்தி செய்வான்'' என்று கூறப்பட்ட பிரகாரம், சலியாது நிற்றல்தான் இறைபணியில் வழுவாது நிற்றல் எனப் படும்; திருவடிவியாபகத்துள் நில்லாது அதனைவிட்டு நீங்கிநிற்பின் பிரபஞ்சம் தாக்கும்; அது தாக்கவே, விருப்பு வெறுப்புச் சாரும்; அவை சாரவே, பிற விக்கு வித்தாகிய பெத்தநிலை வந்து தலைப்படும். ஆகலான், மாயை கன்மங் களின் வாசனை அற்றுப்போதற்கு உபாயம் இது என்று அறிந்து இறைபணி யிற் சலியாது நிற்க என்பதாம்.

௩௮. முதலாஞ் சூர்ணிகையிற் கூறப்பட்டவாறு, சிவபெருமானி டத்து ஆன்மா ஏகனாய்நின்றால், ஞாதாவும், ஞானமும், ஞேயமும் எனப் பகுத்துக்காணும் மயக்க உணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை நீங்கும்.

௩௯. இறைபணி நின்றால், உடம்போடுநிற்குமிடத்து அநுபவித் தற்கு வேண்டப்படும் பிராரத்தவினையும், அதுபற்றிவரும் ஆகாமியவினை யும் பிரவேசிக்கமாட்டா என்று விளக்கப்படுகின்றது:—

௪௦. (வெ. பொ.) (1) வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்கும் கருவி யாகிய செவி, வாய்முதலிய இந்திரியங்கள் சிவபெருமானது உடைமையா கிய மாயேயமாமன்றி ஆன்மாவாகிய நாமாவன அன்றாம்; அவ்விந்திரியங்கள் தொழிற்படுதலும் சிவபிரான் வயத்தானன்றி நம் வயத்தான் அன்றாம். அந் தச் செவிமுதலிய இந்திரியங்கள் சத்தாதி வாக்காதிகளை விடயித்தற்குத் துவாரமாயுள்ள தனுகரணபுவனபோகங்களும், அம் மாயேயமாவனவன்றி யாமாவன அன்று; அவை தொழிற்படுதலும் முதல்வன் வயத்தானன்றி நம்வயத்தானன்றாம்;

(2) அவற்றோடு கூடிநின்ற வினைகளை ஈட்டி நுகர்ந்துவருகின்ற யாமும் எமது அறிவையும் செயலையும் சிவபெருமான் விளக்கியபோது விளங்கியும், விளக்காதபோது விளங்காமலும், (இங்ஙனம் நமது ஞான இச்சாக் கிரியை கள் சிவபெருமான் ஞான இச்சாக் கிரியைகளையின்றி நிகழாமையின்), ஆன் மாக்களாகிய நாமெல்லாம் சிவபெருமானது அடிமைபாகிய உடைமையாமே மன்றிச் சுவதந்திரராவேமல்லேம்;

(3) இங்ஙனம் பசுபாசங்களின் இயல்பை உள்ளபடி அறிந்து செய் வனவெல்லாம் சிவபெருமான் அருளின்வழிநின்று செய்யும் செயலாகக் கண்டுகொண்டிருப்பாராயின், இந்த இறைபணியாகிய அடிமைத்திறமுடை யார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவ்வினைகள் அவர்க் குப் பந்தமாகமாட்டா. அவ்வாகாமியவினையைப் பிரியாது உடன்கொண்டு

வருவதாகிய பிராரத்தவினையும் தன்னைக் கூட்டும் சிவசன்னிதியிலே உடல் அநுபவிப்பதாய்க் கழியும். ஏனையோர்க்குப்போல அவ்வினை அவர்க்கு எய்தாதாம்.

𑌯𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌨𑍍𑌤𑌰𑍋 𑌯𑌮𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌤
𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌮𑍃𑌤𑌃 । 𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌚𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 𑌤𑍍𑌵𑌚𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍋 𑌯𑌮𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌤
𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌮𑍃𑌤𑌃 । 𑌯𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌨𑍍𑌤𑌰𑍋
𑌯𑌮𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌤 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌮𑍃𑌤𑌃 ।

(பிருகதாரணியம், ரு. எ, கசு, உக, உஉ.)

யஃ சுரோத்திரே திஷ்டந்யஃ சுரோத்ரமந்தரோ யமயத்யேஷத ஆத்மாந்தர்யாம்யமிருதஃ। யஸ்துவசிதிஷ்டந்யஸ்துவசமந்தரோயமயத்யேஷத ஆத்மாந்தர்யாம்யமிருதஃ। யோவிஞ்ஞாநேதிஷ்டந்யோ விஞ்ஞாநமந்தரோயமயத்யேஷத ஆத்மாந்தர்யாம்யமிருதஃ।

"எவர் சுரோத்திரத்தினும், துவக்கினும் (அங்ஙனம் ஏனையவற்றினும்) இருந்து அச்சுரோத்திரம் துவக்குமுதலியவற்றையும் உண்ணின்று செலுத்துகின்றுரோ, எவர் ஆன்மாவிலிருந்து அதனை உண்ணின்று செலுத்துகின்றுரோ, அவர் உன் அந்தரியாமியாகிய பரமான்மா எனப்படும் சிவனும்" என்னுஞ் சுருதிப்பிரகாரம், இவ்விந்திரியங்களும் ஆன்மாவும் செலுத்தப்படுதலான் இந்திரியங்கள் சிவபெருமானுக்கு உடைமையாம் என்றும், ஆன்மா அவர்க்கு அடிமையாம் என்றும் பெறப்பட்டது.

சஞ்சிதவினை ஞானசாரியரால் ஷடத்துவசோதனை செய்தபோது எரியைச் சேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிந்தது; இங்கே பிராரத்தவினையும் ஆகாமியவினையும் உடலின் நுகர்ச்சியாய் ஒழிந்தன.

சக. அல்ல லென்செயு மருவினை யென்செயுந்
தொல்லை வல்வினைத் தொண்டன்ற னென்செயுந்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனுர்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே

என்று ஸ்ரீவாகீசப்பெருமான் அருளிய திருவாக்கினுலும் அறியற்பாற்று.

சஉ. ஆகாமியவினையும் பிராரத்தவினையும் இறைபணிநிற்பார்க்கு அவர் உயிரைச் சாராது உடலின் அநுபவமாய்க் கழிந்துபோக, அவ்விறைபணி நில்லாத ஏனையோர்க்கு அவ்வினைகள் உடலின் அநுபவமாய்ச் சென்று வருத்துதற்குக் காரணம் கூறி விளக்குதல்வாயிலாகச் சிவபெருமான் நடுவு நிலையிற் பிறழ்ந்திலர் என்று கூறப்படுகின்றது:—

சங. (வெ. பொ.) "தன்னையடைந்தார் வினைதீர்ப்பதன்றே தலையாயவர் தங்கடன்" என்று திருநாவுக்கரசுநாயனுரருளிச்செய்த பிரகாரம், தம்மி

டத்து அடைக்கலம் எனச் சார்ந்தவரை அவர்க்கு வரும் ஏதத்தை நீக்கி, அவர்க்குப் பற்றுக்கோடாய் நின்று இரக்ஷித்தல் உத்தமகுணமுடையார்க் குக் கடமையாதலின், சிவபிரான் ஏனையோரை விடுத்துத் தம்மைச் சார்ந்த வரைப் பாதுகாப்பாராய், அதுபற்றி நடுநிலையினின்று கோடினோல்லராய்த் தம்மைச்சார்ந்து தமது திருவடித்தொண்டுப் பணியின் நிற்கவல்ல அடியார் சிவனேயாய் நிற்குமாறு நிறுவி, அவர்க்குவரும் ஆகாமியவினைத் தொடக்கில ராகச் செய்து, அவ்விறைபணி செய்யமாட்டாத பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை நியதிசெய்து அவர்க்குக் கொடுப்பாராதலின், அவ்விறைப்பணி நிற்பார் நிற்கமாட்டாதார் என்னும் இருவர்க்கும் உணவாகி நுணுகி வந்து நணுகும் பிராரத்தவினையும் அவ்வாறு செய்வோர் செய்திக்குத்தக்க பயனுமாறு இருவேறுவகைப்படச் செய்வர்.

சச. இதுபற்றிச் சிவபெருமான் நடுவுநிலைமையுடையாரவாரன்றி, கோட்டமுடையாராகாரென்பது ஏனைச் சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்த பக்ஷமாம்.

சரு. சிவப்பணியினிற்கும் ஞானிகளுக்கும் பிராரத்தவினை தாக்கு மென்பது "தினைத்துணையேனும் பொறேன் றுயராக்கையின் றிண்வலையே" என்றற்றொடக்கத்தனவாகிய மாணிக்கவாசகசுவாமிகள் திருவாக்குகளால் அறியப்படுவதேயாக, இறைபணிநிற்பார் உலகின்கண்ணே செய்யும் நன்மை தீமைகள் (நன்மை தீமைகளை இவ்விறைபணிநிற்பார்க்குச்) செய்வாரிடத்தே இசையச் செய்வர் சிவபெருமான் என்றதனோடு மாறுபடுகின்றமையால், பிராரத்தவினைவாயிலாக ஆகாமியவினை பிறவிக்கு வித்தாய் நிலைபெறுமே யெனின், அந்தப் பிராரத்தவினை தாக்கினமைக்குக் காரணம் உரைத்து, அது செய்வோர் செய்திப்பயனுப் ஒழியுமென்று கூறப்படுகின்றது:—

சசா. (வெ. பொ.) தன்பால் வைத்தெடுக்கப்பட்டொழிந்த பெருங் காயத்தினின்றும், அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாத்திரத்தின்கண் அந்த வாசம் மங்கிப்போய் மெலிதாய் மணக்குமாறுபோல, நான் அவன் என்று தியானித்துச் சோகம்பாவனை எனப்படும் சிவோகம்பாவனை செய்து இறைபணிநிற்கும் தத்துவஞானிக்குப் பயிற்சிவயத்தினால் அவ்வாறு தியா னிக்கின்ற ஆன்மபோதமாகிய தற்போதம் முனைத்துத் தோன்றுதலுண்டா மாதலின், அதுபற்றிப் பிராரத்தவினையும், அதற்கு வாயிலாக உடம்பு முத லிய மாயேயமும் மங்கிப்போய் வாசனைமாத்திரையாய் மெலிதாய் வந்து தாக்குமாயின், அந்தத் தத்துவஞானி பின்னர்ப் பகுத்துணர்வு உதித்து "ஏகனாகி இறைபணி நின்று" சத்தாயுள்ள சிவனேயாந் தன்மையினால், ஓரோவிடத்து அவ்வாதனைபற்றிப் பிறழ்ந்தாலும் பிறழவொட்டாது அந்த மெய்ப்பொருட் சிவனாகிய அச்சினை உணர்ந்து நிற்பானாதலினால், அவ் வாகாமியவினை மறுபிறவிக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக் குப் பற்றுக்கோடாகிய தனுகரணாதி மாயேயத்தோடு கெட்டொழியும் என்க.

சஎ. பிராரத்தவாதனையினுல் ஆகாமியம் மெலிதாய் மூண்டவிடத்து, சிவனுகிய அச்சினே உணர்ந்து நிற்றல் எங்ஙனம் என்று உவமைவாயிலாக விளக்கப்படுகின்றது:—

சஅ. (வெ. பொ.) சுடாமைக்குக் காரணமாக அக்கினிஸ்தம்பனஞ் செய்யவல்லார், அந்த அக்கினிமத்தியிற் கிடந்தாலும் தம்வெற்றிப்பாட்டினின்று நீங்காதவாறுபோன்றும், குதிரை செலுத்துதற்குரிய அசுவசாஸ்திரப் பயிற்சியில் வல்லார் அக்குதிரையின் வேகத்துட்பட்டாலும் தமது வெற்றிப்பாட்டினின்று நீங்காதவாறுபோன்றும், ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாதென்றுணர்ந்து, ஐம்புலன்கள் தம்முள்ளே வியாப்பியமாய் அடங்க, தாம் அவற்றை வியாபித்து மேற்பட்டுநிற்கும் முறையை ஆராய்ந்து, சிவபெருமானது அருட்டிருவடி வியாபகத்தைத் தலைப்பட்டு அந்த அச்சினே உணர்ந்து நிற்கவல்லார் அவ்வாகாமியவினை மூளுதல்பற்றி ஐம்புலவிஷயங்களிற் சென்றாராயினும், அதனுல் அவர் தம் வெல்வியை இழந்து பந்தத்தினுல் தொடக்குண்பாரல்லர்.

சகூ. 𑌯𑌥𑌾 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌪𑌲𑌾𑌶 𑌆𑌪𑍋 𑌨 𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤 𑌏𑌵𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿 𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌯𑌤𑍇।

யதா புஷ்கரபலாச ஆபோ ந சிலிச்யந்த ஏவமேவம் விதிபாபம் கர்ம ந சிலிச்யதே।

ரு0. "தாமரையிலையில் நீர் ஒட்டாததுபோல (பரப்பிரமசிவனுகிய) அதனை அறிந்தவரிடத்துப் பாவகர்மம் பற்றாது" என்று சாந்தோக்கிய சுருதியும்,

ருக. 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌂 𑌯𑌥𑌾 𑌤𑍋𑌯𑍈𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑍈𑌰𑌪𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇।
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌾𑌮𑍍𑌭𑍋𑌭𑌿𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇॥

பத்மபத்ரம் யதாதோயை: ஸ்வஸ்தைரபி ந லிப்யதே।
சப்தாதிவிஷயாம்போபிஸ்தத்வஜ்ஞாநீ ந லிப்யதே॥

ரு௨. "தாமரையிலையானது தனக்கு ஆதாரமாய் நிலைத்தஜலங்களினுல் எங்ஙனம் தொடக்குண்ணவில்லையோ, அங்ஙனம் ஞானி சப்தாதி விஷயங்களினுற் றொடக்குண்ணுன்" என்று சிவதருமோத்தராகமமும் கூறியிருத்தல் காண்க.

ருங. சத்தோடு சார்ந்தவிடத்தும், அசத்தோடு சார்ந்தவிடத்தும் அதுவதுவாய்ச் சத்தசத்தாமியல்பினையுடைய ஆன்மாக்கள் ஐம்புலனுகிய அசத்தைச் சார்ந்தும் அதனுற் சிக்குண்ணுது வெல்வியடைதல் எப்படி என்று கூறப்படுகின்றது:—

ருச. (வெ. பொ.) சத்தாகிய சிவபிரானோடு கூடியவிடத்துச் சத்தாகிய சிவனும், அசத்தாகிய ஐம்புலன்களோடு கூடியவிடத்து அசத்தாயும், இங்ஙனம் சத்தசத்தாமியல்புடைய ஆன்மாவின் உண்மை உணர்ந்தோன் சிவபிரான் திருவருளாலல்லது ஒன்றையும் காணுனுப், அவ்வருளின்வழி நின்று காணுமாயின், அப்போது பாசத்திலே பற்றுச்செய்தல் கூடாமையான், சத்தாகிய அப்பெருமானைத் தலைப்பட்டோர் மிகச்சொலித்து எரியும் ஒளிக்கு முன் எதிர்ப்பட்ட அந்தகாரம்போல, அந்தச் சத்தாகிய சிவபிரானது எதிரிலே தனது சத்தி ஏற்கமாட்டாத அசத்தாகிய ஐம்புலனுட் சிக்கி நிற்பாரல்லர்.

ருரு. இங்ஙனம் சத்தாகிய சிவபிரானைத் தலைப்பட்டுத் துரிய அருணிலைச் சுகப்பிரபைநிலையை அடைந்தோர்க்கு ஒருகாலும் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டுமென்றேனும், அட்டமாசித்தி செய்யவேண்டுமென்றேனும், மற்றொருசித்துவிளையாடல் செய்து உலகத்திற் பொருள் புகழ்பெறவேண்டுமென்றேனும் நினைவு உதிக்கச் சாவகாசமிராது; அங்ஙனம் அவர்க்கு அறிவுதிக்கப்பெறுமாயின், அவர் அந்த அருணிலையை அடைந்தாருமல்லர்; அந்தச் சுகத்தை அடைந்தாருமல்லர்; அமிர்தமுண்டு சுவைகண்டவன் மற்றோர் இழிவாகிய உணவை விரும்புவானோ? விரும்புவானல்லன்; அதுபோலாம்.

ருசூ. இறைபணிநிற்பார்க்குப் பிராரத்தவினை சிவபிரான் சன்னிதியில் உடற்புசிப்பாய் ஒழிவதன்றி, உயிர்ப்புசிப்பாய் மறுபிறவிக்கு ஆகாமியவினையாய் ஏறுமாறில்லை என்றும், இறைபணிநில்லாத ஏனையோர்க்கு அது உயிரூழாய் வருத்தும் என்றும்,

ருஎ. இங்ஙனம் இறைபணிநிற்பார்க்கும், இறைபணிநில்லாதோர்க்கும் இருவேறுவகைப்படச் செய்தலாற் சிவபிரான் "சார்ந்தாரைக்காத்தல்" என்னும் முதுமொழிகொண்டு நடுநிலையினின்று வழுவினுரல்லர் என்றும்,

ருஅ. பிராரத்தவாசனை ஒரோவிடத்து இறைபணிநிற்பார்க்கு வந்து தாக்கினும், அது அவரது திருவடிஞானத்தினுல் அழிவுறும் என்றும்,

ருசூ. அந்த இறைபணிநிற்பார் ஒவ்வோர் ஐம்புலவிடயத்துட்படினும், அவர் அதனுற் பந்தத் தோடக்குணர் என்றும்,

சூo. சத்தாகிய சிவனைத் தலைப்பட்டோர் அசத்தாகிய ஐம்புலன்மாட்டெய்தி நிற்பாரல்லர் என்றும் கடைப்பிடிக்க.

---

## பத்தாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

ஏழாஞ் சூத்திரத்தினற் சாதிக்கும் அதிகாரியாகிய ஆன்மாவினியல்பும், எட்டாஞ் சூத்திரத்தினற் சாதித்துப் பெறப்படும் பொருளினியல்பும், ஒன்பதாஞ் சூத்திரத்தினற் சாதிக்குமாறும் உணர்த்தி, இந்தப் பத்தாஞ் சூத்திரத்தினற் சிவஞானவாயிலாக ஆன்மாவில் நாட்டப்பட்ட சிவன் பொருட்டன்மையால் வேறேயாயினும், வேறுகாணப்படாது யானே கண்டேன் எனும்படி சிவன் பெத்தநிலையில் ஆன்மாவேயாய் நின்றமைபோல, ஆன்மா முத்திநிலையிற் சிவனோடு ஏகனாகிநிற்றல்வேண்டுமென்றும், அங்ஙனம் நான் என்றொருமுதல் இல்லை என்றறிந்து சிவனே முழுவதுமெனக் காண்பாரைத் தமது திருவடி வியாபகத்துள் அடங்கிநிற்கச் செய்வரென்றும், ஆதலால் மலவாசனை நீங்கிச் சிவானந்தத்தை அடையுமாறு ஏகனாகிநிற்றல் சாதகமாமென்றும், ஆன்மாவையும் சிவனையும் பகுத்துக் காணப்புகின் தற்போதம் முனைத்துத் தோன்றுமாதலான் அது திரிவுக்காட்சியாம் என்றும், ஆதலால் கண்ணொளியோடு கூடியவிடத்தும் இது விளக்கொளி, இது ஆதித்தனொளி, இது சந்திரனொளி என அவ்வப்பெற்றியவாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுக்காட்சியாமாறுபோல, ஆன்மாவானது தான் என்றொருமுதல் காணப்படுமாறில்லை என்றுணர்ந்து முழுவதுஞ்சிவனே எனக் காண்டல் தெளிவுக்காட்சியாம் என்றும், பசுபாசங்களின் தன்மைகளை உள்ளவாறு உணர்ந்து ஆன்மாவானது தான் செய்பவற்றையெல்லாம் சிவனருளின்வழிநின்று செய்தலே இறைபணிநிற்றலாம் என்றும், ஏகனாகிநிற்றலால் மலவாசனை நீங்கும் என்றும், இறைபணிநிற்றலால் பிராரத்தவினையும் ஆகாமியவினையும் ஆன்மாக்களுக்குப் பந்தமாக மாட்டாவாய் உடலின் அநுபவமாய்க் கழிந்துபோம் என்றும், ஏனையோர்க்கு அவை உயிரின் அநுபவமாய்ச் சென்று வருத்தும் என்றும், இங்ஙனம் இருவேறுபடச் சிவபெருமான் செய்தலாற் ''சார்ந்தாரைக் காப்பது இறைவர் கடனும்'' என்னும் பழமொழிப்பிரகாரம் அவர் நடுவுநிலையிற்றிரிந்திலர் என்றும், சிவோகம்பாவனைசெய்யும் தத்துவஞானியர்க்கும் பயிற்சிவயத்தால் தற்போதம் முனைத்துத் தோன்றுதல்வாயிலாகப் பிராரத்தவினை மெலிதாய்வந்து மூளுமாயின், அவர் அச்சிவனாகிய அச்சினை உணர்ந்து நிற்றலால் அதுபிறவிக்குவித்தாய் முறுகாது தனுகரணாதி மாயேயத்தோடு கெட்டொழியும் என்றும், அத்தத்துவஞானியர் ஐம்புலவிஷயங்களிற் சென்றாரேனும் தாமரையிலையின் நீர்போல அவர் அவற்றாற்றொடக்குண்ணார் என்றும், அசத்தோடு சார்ந்து அசத்தாயும், சத்தாகிய சிவனோடுசேர்ந்து சிவனாயும், இங்ஙனம் சத்தசத்தாமியல்பினையுடைய ஆன்மாவின் உண்மை உணர்ந்தோர் திருவருளின் வழிநின்று அனைத்தையும் காணுவாராயின், பாசப்பற்றொழிந்து சத்தாகிய சிவனைத் தலைப்பட்டமையால், ஒளிமுன் எதிர்ப்பட்ட இருள்போலச் சிவபிரான்முன் தன் சத்தி முனைக்க வலியில்லாத ஐம்புலனில் அகப்படமாட்டார் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

## பத்தாஞ் சூத்திரப் பரீக்ஷைவினுக்கள்.

---

க. சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக்கருத்துரை யாது? ரு.

ங. ஏழாஞ் சூத்திரத்தில் எந்தப் பொருள் கூறப்பட்டது? சு.

ச. எட்டாஞ் சூத்திரத்தில் எந்தப் பொருள் கூறப்பட்டது? சு.

ரு. ஒன்பதாஞ் சூத்திரத்தில் எது கூறப்பட்டது? சு.

சு. இந்தப் பத்தாஞ் சூத்திரத்தில் எவ்வியல்பு கூறப்படுகின்றது? சு.

எ. பயன் எத்தனை வகைப்படும்? சு.

அ. ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் உச்சரிப்பினுல் எது பற்றறக்கழியும்? சு.

கூ. அக்கழிவினுல் எது பெறப்படும்? சு.

க0. ஆன்மசுத்தியின் பயன் யாது? சு.

கக. ஒன்பதாஞ் சூத்திரத்திற் பாசக்ஷயம் எய்துமாறு சிந்தித்த பொருளை நிதித்தியாசனஞ் செய்யுமாறு கூறுவது எந்தச் சூத்திரம்? சு.

கஉ. தெளிதல் என்றது யாது? எ.

கங. இது மற்றெப்பெயர் பெறும்? எ.

கச. சிவயோகமாவது யாது? எ.

கரு. இது எந்த ஸ்தானம்? எ.

கசு. தில்லைவட்டமும் அறிவினெல்லையும் எதனைச் சுட்டும்? எ.

கஎ. சூத்திரப் பிண்டப்பொருள் யாது? அ.

கஅ. ஆன்மா தான் என வேறுகாணப்படுமாறின்றிச் சிவனேயாய் எதுபோல ஒற்றுமைப்படுதல்வேண்டும்? அ.

ககூ. பின் எவைபோல ஒற்றுமைப்படலாகாது? கூ, (10) முதலியவற்றிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

உ0. முதலாஞ் சூர்ணிகை யாது? க0.

உக. அதன் பொருள் யாது? கக.

௨௨. யானும் எனதும் எனப் பகுத்துக் காணும் உணர்வு யாது எனப்படும்? ௧௨.

௨௩. சிவபிரான் பெத்தகாலத்தில் ஆன்மாவேயாய் நின்ற முறை போல முத்திகாலத்தில் ஆன்மா எப்படி நிற்றல்வேண்டும்? ௧௧.

௨௪. சிவமாகிய ஞேயத்தையும், ஆன்மாவாகிய ஞாதாவையும் எங்ஙனம் பகுத்தறிகின்றார்? ௧௩.

௨௫. அங்ஙனம் பகுத்துக்காண்பார்க்கு எது முற்பட்டுத் தோன்றும்? ௧௩.

௨௬. ஆன்மபோதம் முற்பட்டுத் தோன்றுங்காலத்திற் சிவபிரான் எப்படி நிற்கின்றார்? ௧௩.

௨௭. யான் என்றொருமுதல் காணப்படுமாறில்லை என்று அறிந்து எல்லாம் சிவமே எனக் காண்பாரைச் சிவபிரான் யாதுசெய்து, தாம் எங்ஙனம் நிற்பர்? ௧௩.

௨௮. இந்நிலையையுற்று மாணிக்கவாசகசுவாமிகள் எங்ஙனம் அருளினர்? ௧௪.

௨௯. இங்கே இவன் என்றமையாற் சுட்டப்பட்டவர் யாவர்? ௧௪.

௩0. திருநாவுக்கரசுநாயனார் அதனையுற்று எங்ஙனம் கூறினர்? ௧௫.

௩௧. எந்தத் திருவாக்கை முடிவாகக்கொண்டு எங்ஙனம் நிற்றல் வேண்டும்? ௧௬.

௩௨. வாதனாமலம் போக்கி ஆன்மசுத்திபண்ணுதற்கு எது சாலும்? ௧௭.

௩௩. பஞ்சாக்ஷரோச்சாரணமே போதியதாயிருப்ப, ஏகனாகிநிற்றல் யாதுக்கு? ௧௭.

௩௪. மலவாசனை நீங்கினால் ஆன்மா எதனை அனுபவிக்கும்? ௧௭.

௩௫. ஏகனாகிநிற்றல் எதற்குச் சாதகமாகும்? ௧௭.

௩௬. கண்ணொளியோ விளக்கொளியோ சூக்கும ஒளி? ௧௮.

௩௭. இவ்விரண்டொளியும் கலந்து நிற்குநிலை பிரித்தறிய முடியாமையின், கண்ணொளியாய்க்காணுங்கால் எது முனைத்துத்தோன்றும்? ௧௯.

௩௮. விளக்கொளியாய்க் காணுங்கால் எது முனைத்துத் தோன்றும்? ௨0.

௩௯. இவ்விரண்டொளியையும் பகுத்துக்காணுங்கால் எது முற்பட்டுத்தோன்றும்? ௨௧.

தைக் காணுமாறு அவ்வான்மாவுக்குச் (சிவபிரான்) காட்டியும் கண்டும் நிற்ற லான்; அயரா அன்பின் அரன் கழல் செலுமே = மறவாத அன்பினாற் சிவ பிரான் திருவடியைக் கூடும்.

ரு. (க. ரை) பரமேசுவரன் சீபாதங்களை அணையுமாறு உணர்த்து கின்றது.

சூ. (க. பொ.) ஏகனாகி இறைபணிநிற்கும் ஞானிக்கு அவர் ஞான இச்சாக்கிரியைகள் விடயித்தற்கு விடயம் ஒன்றுளது என்று அதனை உணர்த் துதல்வாயிலாக, பாசக்ஷயம் சிவப்பேறு என்னும் இரண்டனுள்ளே எஞ்சி நின்ற சிவப்பேறு எனப்படும் ஆன்மலாபம் கூடுதலாகிய நிட்டையினியல்பை இப்பதினொராஞ் சூத்திரம் உணர்த்துகின்றதென்பதாம்.

எ. ஏகனாகி இறைபணிநிற்பார்க்கு இனிச் செய்யக்கடவது ஒன்றில்லை எனவும், இருணீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியாயவாறுபோல, பசுத் துவநீக்கமும் சிவத்துவவிளக்கமும் இடையீடின்றி உடனிகழ்கின்றனவே என்றும் கூறின், அது பொருந்தாது; "ஏகனாகி இறைபணிநிற்றல்" துரிய நிலைக்கண்ணதாகிய சிதம்பர அருணிலையேயாதலினாலும், அங்கே மலம் நீங்கியவிடத்துச் சுகப்பிரபைமாத்திரையே விளங்குவதன்றித் துரியாதீதத் தின்கண்ணதாகிய சிவத்துவவிளக்கம் எனப்படும் பரமானந்தம் விளங்கா மையாலும், அது விளங்குதல் அவனருளால் ஒன்றையுஞ் செய்யாமை மாத்திரம் போதாமையால், அதற்கு வேறும் ஆண்டுச் செய்யவேண்டியதுண் டென்பது பெறப்படுதலானும், இருணீக்கத்தின் ஒளிவிளக்கம்போலப் பசுத் துவநீக்கத்தில் அருள்விளக்கமாத்திரமேயன்றி, ஆனந்தவிளக்கமும் உடனி கழாமையானும், இவ்விரு விளக்கத்துக்கும் பேதம் முன்னர்க் காட்டப்படு மாதலினானுமாம்.

அ. ஒன்பதாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பத்தாஞ் சூத்திரத்தில் முற்றுப்பெற்றாற்போல, (வடமொழி) பத்தாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ் சூத்திரத்தில் முற்றுப் பெறும் என்றும், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட சுவானு பூதிமானவன் என்பது தென்மொழிப் பதினொராஞ் சூத்திரத்தில் அரன் கழல்செலுமே என்று மொழிபெயர்க்கப்பட்டதாம் என்றும், அதுபற்றி மாறுபாடில்லையாம் என்றும், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் சுவாநு பூதிமான் என்றது வடமொழிப் பதினொராஞ் சூத்திரத்திற் பராபக்திசெய்க என்றதின் பின்னர்க்கொண்டு கூட்டி உரைக்கப்பட்டது என்றும் யூகித்து உணரற்பாற்றும். இதுபற்றியே பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம் பண்ணுதலை உணர்த்திற்று எனவும், பதினொராஞ் சூத்திரம் பரமசிவனது சீபாதத்தை அணையுமாறு உணர்த்திற்று எனவும் கருத்துரை போந்ததாம் என்க.

௯. (சூ. பி. பொ.) காட்டக் காணும் இயல்பினையுடைய கண்ணானது உருவத்தைக் காணுமாறு ஆன்மாவானது அந்தக் கண்ணோடு பிரிப்பில்லாமல் ஒருங்கியைந்துநின்று காட்டித் தான் காண்கின்றவாறுபோல, அறிவிக்க அறிவதாகிய அவ்வான்மா விஷயத்தை அறியுமாறு சிவன் பிரிப்பின்றி ஒருங்கியைந்து நின்று அதற்கு அவ்விஷயத்தை அறிவித்துத் தான் அறிந்து வருதலான், இங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகாரஞ் செய்துவரும் பெருங் கருணையை அவ்வான்மாவானது மறவாது உறுதியாகப்பற்றிச் செய்யும் அன்பினால் அச்சிவபிரானாது திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப் படும் என்றவாறு.

௧௦. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்று திருவள்ளுவநாயனாரும், "நன்றி மறவேல்" என்று ஔவைத்தாயாரும் கூறியாங்குச் சிவபெருமான் பெத்தகாலத்திற் பிரபஞ்சவிஷயத்தையும் முத்திகாலத்திற் சிவவிஷயத்தையும் ஆன்மாவுக்குக் காட்டித் தாமும் உடனின்று கண்டுவரும் பேருபகாரத்தை இடையீடின்றி மறவாதிருந்தாற் பேரன்பு உளதாகும். அந்தப் பேரன்புவாயிலாகச் சிவானந்தப்பேறுளதாம். இந்த இடையீடில்லாத அன்பு பராபக்தி எனப்படும் என்றும், அதுவே அயரா அன்பு என்றும் உணரற்பாற்று. அயரா அன்பு என்றது அயாராமையானாகிய அன்பு எனப்படும்.

௧௧. இந்தச் சூத்திரப்பிண்டப்பொழிப்பு விரித்துக் கூறப்படுகின்றது.

௧௨. (1) ஆன்மாவையின்றியமையாத கண்ணானது ஓர் உருவத்தைக் காணுமிடத்து, ஆன்மசிற்சத்தி கண்ணொளியெனத் தானெனப் பேதமுறாது உடனாய்க் கலந்துநின்று கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண் கண்டதென்றும் கண்ணை அதிட்டித்துநின்ற ஆன்மா அறிந்ததென்றும் பிரித்தறியப் படுமாறின்றி, இருவகைக் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறுபோல,

(2) சிவபிரானையின்றி அமையாத ஆன்மாவானது ஒரு விடயத்தை அறியுமிடத்தும், சிவபிரானது சிற்சத்தி ஆன்மாவின் சிற்சத்தியெனத் தானெனப் பேதமின்றி உடனாய்க் கலந்துநிற்ப, சிவபிரானும் ஆன்மாவில் அவ்வாறு கலந்துநின்று அறிவித்தவிஷயத்தை ஆன்மா அறிந்ததென்றும், ஆன்மாவை அதிட்டித்துநின்ற தாம் அறிந்தேம் என்றும் பிரித்தறியப்படுமாறின்றி, இருவகை அறிவும் ஒன்றனையொன்றுவிடாது அத்துவிதமாய் ஒருங்கே விடயிக்குமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தகாலம் முத்திகாலம் என்னும் இருகாலத்தினும் ஒரே பிரகாரமாயிருத்தலின்,

(3) ஏனையவற்றையெல்லாம் விடுத்து, ஆன்மாவானது (பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்டவாறு) துரியத்திலே சிவபிரானிடத்து ஏகனாகி அவரது அருளாலன்றி ஒன்றையும் செய்யாமையாகிய இறைபணியில் நின்று,

(4) சிவபிரான் அவ்வாறு அத்துவிதமாய் உடனின்று பெருங்கருணையினால் உபகரித்துவரும் உதவியுரிமையை நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருளின்கண்ணே செல்லும் ஆசை அடங்காது மீதூருமாதலின்,

(5) அந்த இச்சையாகிய ஆசையே தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தைச் சாக்கிராதீதமாகிய துரியாதீதத்தில் அநுபவிக்கப்பெறும்; இங்ஙனம் ஆன்மாவின் சிற்சத்தி எனப்படும் ஞான இச்சாக்கிரியைகளாற் சிவமாகிய விஷயம் விஷயீகரிக்கப்பட்டவாறு காண்க.

கஙு. நோக்குந்தோறும் நோக்குந்தோறும் என்பதனையே மாணிக்கவாசகசுவாமிகள் "கொவ்வைக்கனிபோலுஞ் செவ்வாயையுடைய இக்கொடியிடைதோளைக் கூடினாலும், கூடுந்தோறும் பெரிதாகிய இன்பம் முன்புபோலப் பின்னும் புதிதாய் வளராநின்றது" என்று கொண்டு, "புணர்ந்தாற் புணருந்தோறும் பெரும்போகம் பின்னும் புதிதாய் ... வளர்கின்றதே" என்றருளிச்செய்தார்.

கச. அது நீ ஆகின்றனை (தத்துவமசி) எனவும், அவன் நான் ஆகின்றேன் (சோகமஸ்மி) எனவும், அவன் இது ஆகின்றான் (சோயமஸ்தி) எனவும் மூவிடம்பற்றி நிகழும் மகாவாக்கியங்களுள்ளே,

கரு. அது நீ ஆகின்றனை என்னும் முன்னிலை மகாவாக்கியத்தில், அது என்பது சிவமாகிய ஒரு பொருள், நீ என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி எனவும்,

கசு. அவன் நான் ஆகின்றேன் என்னும் தன்மை மகாவாக்கியத்தில், அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், நான் என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருளாதலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி எனவும்,

கஎ. அவன் இது ஆகின்றான் என்னும் படர்க்கை மகாவாக்கியத்தில் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், இது என்பது ஆன்மாவாகிய மற்றொருபொருளாகலின், ஒரு பொருள் மற்றொருபொருளாதல் எப்படி எனவும் வரும்

கஅ. ஐயநீக்குதற்கு எழுந்தமையால், அவ்விரு பொருட்கும் உளதாகிய சம்பந்தவிசேஷமுணர்த்துதலே அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருளாம். அதுபற்றியே பெரியோர்

கசு. சொன்ன தத்துவ மசியெனுஞ் சுருதியின் மொழியு
மன்னு கார ண பதியுநா னெனவரும் பசுவு
மென்ன வேபொரு ளிருமைகண் டியைந்துவே றன்மை
தன்னை நாட்டிய தல்லது தனியென்ப தின்றே

என்று கூறினர்.

உ0. அத்துவிதம் என்னுஞ் சொல்லினாற் பெறப்படுஞ் சம்பந்தம் ஐக்கியமோ? தாதான்மியமோ? சமவாயமோ? சையோகமோ? சொரூபமோ? அல்லது வேறோ? என ஆக்ஷேபநிகழின் கூறுதும்:—

உக. ஆற்றுநீரும் கடனீரும் தம்மிற் சேர்ந்தாற்போன்றதெனவும், குடாகாயமும் மகாகாயமும் தம்மிற் சேர்ந்தாற்போன்றதெனவும் முறையே ஐக்கியவாதியும் மாயாவாதியும் கூறின், அங்ஙனம் சேர்ந்தவிடத்து ஒரே பொருளாகலான், அதனை ஏகம் அல்லது ஒன்று எனக் கூறவே அமையும்; அத்துவிதம் என உய்த்துணர வைத்துரைக்க வேண்டியதில்லை; ஒன்றாகப் போமாயின், அதுவதுவாய் நிற்கும் ஆன்மாவின் இலக்கணம் முத்திகாலத்தில் இல்லை எனப்பட்டு வழுவாமாதலின், அது பொருந்தாது.

உஉ. குண குணிகளுக்குத் தம்மின் உளதாகிய சம்பந்தம்போலும் தாதான்மியம் எனின், ஆன்மா முதல்வனைப்போல (ஆறாஞ் சூத்திரத்து ௩எ, 3–னும், ௩கூ–னும் கண்டவாறு) குணகுணிப்பொருளாய் நிற்பதன்றி, ஆன்மா சிவபெருமானுக்குக் குணமல்லாமையால் அவ்வாறியைதல் கூடாது.

உ௩. தாதான்மியத்தின் வேறாய் நையாயிகர் கூறும் சமவாயமென்பது ஒன்று இல்லையாதலின், அதுவும் பொருந்தாது.

உச. விரலும் விரலுஞ் சேர்ந்து நின்றாற்போலச் சையோகம் எனின், ஒரு விரல் மற்றொரு விரலால் வியாபிக்கப்படாதிருத்தலாகிய சையோகம் வியாபகப்பொருள்களாகிய ஆன்மாவுக்கும் சிவத்துக்கும் கூடாமையால், அதுவும் பொருந்தாது.

உரு. யாதாயினும் ஓரியல்புபற்றிக் கூறப்படும் சொரூபம் எனின், அது மகாவாக்கியப்பொருளை வலியுறுத்துமாறு போந்த அத்துவிதம் என்னும் மொழிக்குப் பொருளாகாமையானும், சொரூபசம்பந்தமாத்திரத்தினால் ஆன்மா சிவானந்தத்தை அடைதல் கூடாமையானும் அதுவும் பொருந்தாது.

உகூ. ஒருபொருளே அவயவமாகிய நூலும் அவயவியாகிய துணியும் போல அவயவ அவயவிகளாயாதல், குணமாகிய செம்மையும் குணியாகிய தாமரையும்போலக் குணகுணிகளாயாதல் வேற்றுமைப்பட்டு நிற்றற்கேதுவாகிய தாதான்மியம் ஒன்றும், அதுபோலக் கண்ணொளியும் கதிரொளியும் போலவாதல், ஆன்மபோதமும் கண்ணொளியும் போலவாதலுள்ள இரு பொருளே அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய் நிற்றற்கேதுவாகிய தாதான்மியம் மற்றொன்றுமாகத் தாதான்மியம் இருவகைப்படும்; முதற்கண்ணே கூறப்பட்டது தாதான்மியம் எனப்படும்; பின்னையது அத்துவிதம் எனப்படும்.

உஎ. அத்துவிதம் என்னும் சொல்லியைபு (இரண்டாஞ் சூத்திரத்து கரு–ம் பிரிவிற் கூறப்பட்டவாறு) அன்மைப்பொருள்பற்றி இரண்டன்றென வேற்றுமைப்படாமையை விளக்கி நிற்பதாயிற்று.

உஅ. எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குந்தன்மையில் ஆன்மாவானது பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என்று அறுவகைப்படும்.

சo. விளக்கொளி எங்ஙனம் காட்சிப்படும்? எது காட்சிப்படாது? உக

சக. இங்ஙனம் தூல அறிவாகிய ஆன்மாவும் சூக்கும அறிவாகிய சிவமும் கலந்துநிற்குநிலை பிரித்தறியவாராமையால், ஆன்மாவாய்க் காணுங்கால், எது முனைத்துத்தோன்றும்? உஉ, உங.

சஉ. சிவமாய்க் காணுங்கால் எது முனைத்துத்தோன்றும்? உச.

சங. இரண்டையும் பகுத்துக்காணப்புகின் எது முற்பட்டுத் தோன்றும்? உரு.

சச. அதனால் எந்தக் காட்சி தலைப்படும்? உரு.

சரு. தெளிவுக்காட்சியாவது யாது? உரு.

சசு. (ஏகான்மவாதிகள் கருத்தின்படி பசுவாகிய சீவன் பொய், அது வைதிகசைவசித்தாந்திகள் கருத்துப்பிரகாரம் மெய்; ஆன்மாவாகிய பசுவுக்கு உவமையாக நாம் கூறுவது கண்ணொளி ஆதலால், கண்ணுக்கு ஒளி இல்லை என்று குயுக்தியினாற் சாதித்துவிட்டாற் பசுவாகிய ஆன்மா பொய்யாய்விடும் என்பது ஏகான்மவாதிகள் கொள்கையாதலின்), கண்ணுக்கு ஒளி உண்டென்றமைக்குப்பிரமாணம் வேண்டப்படுதலால், அந்தப் பிரமாணங்கள் யாவை? உஎ, உகூ, ஙo, ஙஉ, ஙச.

சஎ. கண்ணுக்கு ஒளி உண்டென்பது யுக்தியினால் எங்ஙனம் சாதிக்கப்படும்? ஙச.

சஅ. இரண்டாஞ் சூர்ணிகை யாது? ஙரு.

சகூ. சூர்ணிகைப் பொருள் யாது? ஙசு.

ருo. ஆன்மாவின் அற்ப இச்சாஞானக்கிரியைகள் எவற்றையின்றிச் சலிக்கமாட்டா? ஙசு.

ருக. ஆன்மா எங்ஙனம் உணர்ந்து எங்கே அடங்கிநிற்றல் வேண்டும்? ஙசு, ஙஎ.

ருஉ. பேரின்பம் பெற்றேன் என்னும் கொர்ச்சிதம் எதனால் ஆபதென்றறிதல்வேண்டும்? ஙஎ.

ருங. எங்ஙனம் இருந்தாற் பிரபஞ்சம் தாக்காது? ஙஎ.

ருச. பிரபஞ்சம் தாக்காதொழியின் எது வருது? ஙஎ.

ருரு. இறைபணி வழுவாது நிற்றலாவது யாது? ஙஎ.

ரு௬. திருவடி வியாபகத்தைவிட்டு நீங்கின் எது தாக்கும்? ௩எ.

ருஎ. அது தாக்கினுல் எது சாரும்? ௩எ.

ருஅ. விருப்பு வெறுப்பு எய்தவே, எது தலைப்படும்? ௩எ.

ருகூ. இறைபணியிற் சலியாதுநின்ருல் எந்த வாசனை நீங்கும்? ௩எ.

௬௦. ஏகனுகி நின்ருல் எந்த வாசனை நீங்கும்? ௩அ.

௬க. எங்ஙனம் நின்ருற் பிராரத்தவினையும் ஆகாமியவினையும் பிரவேசிக்கமாட்டா? ௩௬, ச௦, (1).

௬உ. செவிமுதலிய கருவிகள் எவருடைய உடைமை? ச௦, (1).

௬௩. அவை எவரால் தொழிற்படுகின்றன? ச௦, (1).

௬ச. செவிமுதலிய இந்திரியங்கள் சப்தாதிகளை விடயித்தற்குத் துவாரமாயுள்ளன யாவை? சக, (1).

௬ரு. அவை மாயேயமாய் எவரால் தொழிற்படுகின்றன? ச௦, (1).

௬௬. ஆன்மாக்களாகிய எங்கள் ஞான இச்சாக்கிரியைகள் எவராற் செயற்படுகின்றன? ச௦, (2).

௬எ. ஆன்மாக்களாகிய நாமெல்லாம் சிவபெருமானுக்கு எவ்வியல்பினராயுள்ளேம்? ச௦, (2).

௬அ. இறைபணிநிற்போர் எங்ஙனம் ஒழுகின் வினை அவர்க்குப் பந்தமாகாது? ச௦, (3) அடிமை உடைமைகளை உணர்த்துதற்குப் போதரும் சுருதிப்பிரமாணங்கள் யாவை? ச௦, (3).

௬கூ. இறைபணி நிற்பார்க்குச் சிவசன்னிதியில் எது உடல் ஊழாய் முற்றும்? ச௦, (3).

எ௦. சஞ்சிதவினை எப்போது கெட்டொழிந்தது? ச௦, (3.)

எக. ஆகாமிய வினையும் பிராரத்த வினையும் அவர்க்கு எங்ஙனம் இலவாய் ஒழியும்? ச௦, (3).

எஉ. இறைபணிநிற்பார்க்கு ஆகாமிய வினையும் பிராரத்தவினையும் உயிரூழாய்ச் செல்லுமா? சஉ.

எ௩. இறைபணி நில்லாதோர்க்கு அவ்விரு வினையும் உயிர் ஊழாய்க் கழியுமோ? உடலூழாய்க் கழியுமோ? சஉ.

எச. உத்தமகுணமுடையார்க்குப் போதரும் கடமை யாது? ச௩.

எ௫. அதுபற்றி அவர் நடுநிலையிற் கோணினரா? ச௩.

எ௬. அங்ஙனம் சிவபெருமான் தம்மைச் சரணென்று அடைந்தவரைப் பாதுகாத்தல்பற்றி அவர் நடுநிலையிலே தவறினரோ? ச௩.

எஎ. இறைபணிநிற்கமாட்டாதோர்க்கு ஆகாமியவினையை எங்ஙனம் அருளுவர்? ச௩.

எஅ. இறைபணிநிற்பார் நிற்கமாட்டாதார் என்னும் இருவர்க்கும் பிராரத்தவினை எங்ஙனம் வேறுபட்டு நிகழும்? ச௩.

எகூ. இறைபணிநிற்பார்க்கும் பிராரத்தவினை தாக்குமா றுண்டோ? ச௫.

அ०. அதற்குப் பிரமாணம் யாது? ச௫.

அக. ஞானிகள் செய்யும் நல்வினை தீவினைகள் எவரைச் சாருமாறு சிவபிரான் செய்வர்? ச௫.

அ௨. பெருங்காயம் வைத்தெடுக்கப்பட்ட பாத்திரத்தில், யாது மெலிதாய் மணக்கும்? ச௬.

அ௩. சிவோகம்பாவனை செய்து இறைபணிநிற்கும் தத்துவஞானிக்குப் பயிற்சிவயத்தால் எது முனைக்கும்? ச௬.

அச. தற்போதம் முனைக்குமாயின் எவை மெலிதாய் வந்து தாக்கும்? ச௬.

அ௫. அதுபற்றித் தத்துவஞானி பிறழநேர்ந்தாலும், பிறழாது எங்ஙனம் நிற்பன்? ச௬.

அ௬. மெய்ப்பொருளாகிய அச்சை உணர்ந்துநின்றால் ஆகாமிய வினை யாதாய்ப்போகும்? ச௬.

அஎ. ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாது? சஅ.

அஅ. திருவடிவியாபகத்தைத் தலைப்பட்டு அந்த அச்சினை உணர்ந்து நின்றார் ஐம்புலவிஷயத்திற் சென்றாரேனும், பந்தத்திற்றொடக்குறார் என்றமையை இரு உவமைகளால் விளக்குக? சஅ.

அகூ. அதுபற்றிச் சுருதிப்பிரமாணமும் சிவாகமப்பிரமாணமும் கூறுக? ௫०, ௫௨.

கூ०. சத்தொடுசார்ந்து சத்தாயும், அசத்தோடு சார்ந்து அசத்தாயும் நிற்பது யாது? ௫ச.

௯௧. அருளின்வழி நின்றால் எதிலே பற்றுச்செய்தல் கூடாதாகும்? ௫௪.

௯௨. சத்தாகிய சிவத்தினைத்தலைப்பட்டோர் எதுபோல ஐம்புலனிற் சிக்குண்ணார்? ௫௪.

௯௩. எவர்க்குப் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டுமென்றும், மற்றோர்சித்திசெய்யவேண்டுமென்றும் மனது உதிக்காது? ௫௫.

௯௪. அங்ஙனம் பஞ்சகிருத்தியஞ் செய்யத்துணிவாராயின் அவர் எதனை அடைந்தாரல்லர்? ௫௫.

---

## சிறப்பதிகாரம்.

### பயனியல்

## பதினோராஞ்சூத்திரம்.

௧. த்ருசோர் தர்சயிதா ஸாத்மா தஸ்ய தர்சயிதா சிவ:।
தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம் குர்யாதாத்மோபகாரகே॥
திருசோர் தர்சயிதா சாத்மா தஸ்ய தர்சயிதா சிவ:।
தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம் குர்யாதாத்மோபகாரகே॥

௨. (இ-ள்.) த்ருசோ: தர்சயிதா ச த்ருஷ்டா = கண்களுக்கு (உருவத்தைக்) காட்டுபவனும் அவற்றோடு ஒற்றித்துநின்று காண்பவனும் ஆன்மாவாம்; தஸ்ய தர்சயிதா ச சிவ: = (அதுபோல) அவ்வான்மாவுக்கு (விஷயத்தைக்) காட்டுபவனும், (அவ்வான்மாவோடு ஒற்றித்துநின்று) காண்பவனும் சிவனே; தஸ்மாத் = ஆகலின்; ஆத்மோபகாரகே தஸ்மிந் = ஆன்மாவுக்கு உபகாரியாம் அவரிடத்தில்; பராம் பக்திம் குர்யாத் = (ஓர்காலும் மறவாத) பேரன்பைச் செய்க.

௩. காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

௪. (இ—ள்.) காணும் கண்ணுக்கு=காட்சியையுடைய கண்ணுக்கு; காட்டும் உளம்போல = (உருவத்தைக்) காட்டிக் (காண்கின்ற) ஆன்மாப் போல; காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் =(ஆன்மாவானது) விஷயத்

எக. (வெ. பொ.) (1) சிவபிரான் திருவடிகளில் "நான் என்று ஒருமுதல் காணப்படுமாறில்லை என்றுணர்ந்து முழுவதும் சிவமே" என்று காணும் தெளிவுக்காட்சியினால் அச்சிவத்தோடு ஒற்றுமைப்பட்டுநின்று அவரது திருவடிகளை (கஉ, 4, பிரிவிற் கூறப்பட்டவாறு) உணருங்கால், அச்சிவம் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடையதாகும். "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்" எனவும், "ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக் கூனமில்லை" எனவும், "ஒல்லை யாறி யுள்ள மொன்றி" எனவும் போந்த திருவாக்குக்களும் அக்கருத்தே பற்றியனவாம்.

(2) ஆதலால் அங்ஙனம் ஆன்மா உணருங்கால், அவ்வான்மஞானத்தினிடத்து நீங்காதிருந்த அச்சிவம் கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவ்வான்ம அறிவோடு உடனின்று அறியாதிருக்குமோ? அங்ஙனம் அது அறியாதிருத்தல் அகண்டாகாரநித்தவியாபகசச்சிதானந்தப்பொருளுக்கு ஏதமாகுமன்றே.

எஉ. பெத்தகாலத்திலும் முத்திகாலத்திலும் ஆன்மாவினால் விடயிக்கப்படும் விடயங்களைச் சிவபிரான் உடனின்று விடயிப்பர். பெத்தகாலத்திற் சிவபிரான் ஆன்மாவாய்நின்று விடயித்தலின் விஷயங்களால் வரும் இன்பதுன்பங்கள் ஆன்மாவுக்காகுமன்றிச் சிவபிரானுக்கு எய்தா; முத்திகாலத்தில் ஆன்மாவானது சிவபிரானாய் நின்று விடயித்தலின், அச்சிவபிரானொழிந்த விஷயங்களெல்லாம் ஆன்மாவுக்காகாது சிவத்துக்கேயாம். இம்முறைமை நோக்கியன்றோ உலகத்திலே ஒன்றனை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணமெனக் கருதல்வேண்டும் என்றும், அங்ஙனம் கருதாக்கால் குற்றம் எய்தும் என்றும் கொள்ளப்படுகின்றது.

## இரண்டாஞ் சூர்ணிகை.



எங. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப்போவன்.

எச. (சூ. பொ.) (1) ஒரு பொருளை அறிந்தமாத்திரத்தினால் அதன்கண் இச்சை நிகழுமாறுபோல, இச்சை நிகழ்ந்தமாத்திரத்திலே அப்பொருளைப்பெறுதல்கூடுமென்பது உலகத்தில் இல்லாமையால், ஆன்மாவானது இச்சையாகிய பத்திமாத்திரத்தினாற் சிபாதத்தை அடையுமாறு எங்ஙனமெனில்,

(2) சிவபிரான் ஆன்மாவில் விரவினின்று அறிவித்த சிவானந்த விஷயத்தை ஆன்மா அறிந்ததென்றும், அவ்வான்மாவை அதிஷ்டித்துநின்ற தாம் அறிந்ததென்றும் பகுத்தறியவாராது இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் உபகாரத்தை

அவ்வான்மா மறவாது உறுதியாகப்பற்றி அவரது அருளின்வழி நிற்றலால், அவரது சீபாதத்தை அடைதலாகிய சிவானந்தாநுபூதிநிட்டையை அடையும்;

(3) அச்சிவபிரான் உலகத்தார்போலன்றிப் பெத்தமுத்தி இரண்டினும் வேறுநில்லாது அத்துவிதமாய் உடனின்று யார் யார் எதனை எதனைச் செய்கின்றார் என்று அறிந்து அவ்வச்செய்கைக்கு வாய்ந்த பயனை அவ்வப்பொழுதே விளைவித்தும், காலாந்தரத்தில் விளைவித்தும் நிற்பவராதலான் என்பதாம்.

எரு. அன்பு பத்தி என்பன இச்சை மீதூர்தல் எனப் பொருள்படும். மாயாவாதிகள் பத்தியாவது தங்கள் நிர்க்குணப்பிரமநிலைக்குச் சாதகமாகப் பிரமா, விஷ்ணு, உருத்திரர் என்னும் சகுணமூர்த்திகளிடத்து வைக்கப்படும் அன்பென்று மயங்கிக்கொள்வர்.

எசு. இந்த மாயாவாதியின் நிர்க்குணப்பிரமநிலை * சீவன்முத்திநிலை; இதற்கு மேற்பட்டது அதிகாரமுத்திநிலை; இதற்கு மேற்பட்டது போகமுத்திநிலை; இதற்கு மேற்பட்டது லயமுத்திநிலை; இதற்கு மேற்பட்டது பரமுத்திநிலை; இத்தப் பரமுத்திநிலையில் இச்சையாகிய அன்பு நிகழாதவிடத்துச் சிவானந்தாநுபவம் ஓர்காலும் சித்திக்காது.

எஎ. ஒருவர்க்குச் சிவானந்தாநுபூதி உடம்பு நீங்கியபின்னன்றி உடம்போடிருக்குங்காலும் எய்துமாயின், அது சூரியன் ஒளிபோல ஏனையோர்க்குப் புலப்படாதென்று உவமைமுகத்தாற் கூறப்படுகின்றது:—

எஅ. (வெ. போ.) ஆதித்தன் எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும் ஒளி மழுங்கிய கண்ணுக்கு மாலை இருட்டேயாம்; ஒளிவிளங்கிய கண்ணுக்கு நன்கு தோன்றும்; அதுபோலச் சிவபெருமான் பெத்தர் முத்தரிடத்து அத்துவிதமாய் ஒப்ப நிற்பினும், பாசத்தாலாகிய ஏகதேச அறிவுடைய பெத்தர்க்குப் பாசஞானமாய்த் தோன்றுவர்; பாசப்பிணிப்புக்கு ஏதுவாகிய அபக்குவம் நீங்கித் தமது திருவருட்பார்வையினால் அன்புசெய்து தம்மை அறிதற்கியன்ற பக்குவமுடைய மலநீங்கிய முத்தர்க்குப் பாசத்தினாலாகிய ஏகதேச அறிவை நீக்கிப் பூரண அறிவு விரியச்செய்து அவரெதிரே விளங்கித் தோன்றுவர்; ஆயிரம் கிரணத்தையுடைய சூரியன் தனது கிரணம் தீண்டிப் பக்குவமெய்திய கமலமலருக்கு முன்னுளதாகிய கூம்புதலைமாற்றித் தன்போல அத்தாமரைமலரின் ஆயிரம் இதழும் அலரச் செய்வது போலாம்.

எகூ. இதனால் முத்திநிலையில் ஆன்மாவின் அறிவு நிகழுமாறும், அது சிவபிரானது அறிவாகிய அருட்கண்ணினால் எய்துமாறும் கூறப்பட்டன.

---

* மாயாவாதிகள் தமது நிர்க்குணப்பிரமநிலையைச் சீவன்முத்தர் நிலை என்பர்; சைவசித்தாந்திகள் பரமுத்திநிலையையே சீவன்முத்தர்நிலை என்பர்; ஆகலின், அவ்விரண்டின் தாரதம்மியநிலை ஈண்டுக் கூறியதுபற்றி உணர்ந்துகோடற்பாற்று.

அ0. பிறையார் சடையண்ணலன்
மறையார் மருதனை
நிறை*யா னினைபவர்,
துறையா ரின்பமே

என்றும்,

அக. "சூன்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தானுக் கன்ப, ரா லின சிந்தை போல வலர்ந்தன கதிர்க ளெல்லாம்" என்றும்,

அஉ. "ஞான வரம்பின் றலைநின்றார்" என்றும்,

அங. "அப்பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, வோங்குநிலைத் தன்மையதாய்" என்றும்,

அச. "திண்ணிய வுணர்விற் கொள்பவர்" என்றும்

போந்த திருவாக்குகளால் முத்தர் அறிவு வியாபகமாமாறு தெளியப்படும்.

அரு. அன்பினால் தம்மை உணருமுத்தருக்குப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துமாறு கூறப்படுகின்றது:—

அசு. (வெ. பொ.) கண்ணின்கணுளதாகிய இருளைச் சந்திரன் உடனாய் நின்று முறைமுறையால் நீக்கி ஓட்டியவாறுபோல, ஆன்மாவில் அநாதிக்கண்ணே நிலைபெற்ற சிவபிரான் ஆன்மாவைத் தமது திருவடிக்கண்ணே சேர்த்துக்கொள்ளுதற்குளதாகிய இச்சை மிகுதியினால், அவ்வான்மாவின் கண் நிலைபெற்ற ஆணவமலத்தை நீக்கி ஓட்டி, காந்தமானது இரும்பைத் தன் கண்ணே இழுத்துக்கொண்டு தன் வசமாய்ப் பற்றச்செய்தல்போல, சிவபிரான் ஆன்மாவைத் தமது சிவானந்தசாகரத்துட் சேர்த்துத் தம்வசமாய்ப் பற்றிக் கொண்டுநிற்குமாறு செய்தலால், அவருக்கு எக்காலத்திலும் விகாரமில்லை, அவர் எல்லாத் தொழிலையும் தமது சந்நிதிக்கண்ணே சத்திசங்கற்பமாத்திரமாய் ஓர்பாரமின்றி விளையாட்டுப்போலச் செய்கின்றார்.

அஎ. முத்திநிலையில் ஆன்மாவுக்கு அன்பு நிகழும் என்றும், அது சிவத்தின் அன்பினால் எய்தும் என்றும் கூறப்பட்டது.

அஅ. "உள்ளூறு மன்பர் மனத்தார் தாமே" என்றும், "ஆறு செஞ் சடை வைத்தவாட் போக்கியார்க், கூறி யூறி யுருகுமென் னுள்ளமே" என்றும், "ஆறாத பேரன்பி னவருள்ளங் குடிகொண்டு" என்றும், "உள்ளத்திற் றெளி கின்ற வன்பின் மெய்ம்மை யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள் ளைச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையும்" என்றும் போந்த திருவாக்குகளும் அவ்வன்பின் நிலைமையை இனிது புலப்படுத்தும்.

---

* நிறை என்றது வியாபகம்.

அகூ. ஆன்மாவுக்குக் குணம்போல அநாதியாயுள்ள சகஜமலம் அவ்வான்மாவுக்கு வேறாய் நீக்கற்பாலதென்றும் கூறப்படுகின்றது:—

கூ0. (வெ. பொ.) வியாபக அறிவு விளங்கி ஆன்மா சிவபிரான் வசமாய் ஒன்றுபட்டுக் கூடுங்கால் முன்னுளதாய ஏகதேச அறிவு கெட்டுக்கூடுமாயின், குணமாகிய அறிவுகெடவே குணியாகிய ஆன்மாவும் கெட்டுப்போமாதலின், அது சிவத்தோடு ஒன்றமாட்டாது; அறிவுகெடாது சிவத்தோடு கூடுமாயின் ஏகதேச அறிவு கெடாதபோது வியாபக அறிவு விளங்குதலின்மையால் இரண்டு பொருளாய் நிற்றல்பற்றி ஒன்ருமாறின்ரும். பின் எங்ஙனம் ஏகதேச அறிவும் சிவமும் கூடுமோ எனின் கூறுதும்; ஏகதேச அறிவைச் செய்யும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்கள் மாத்திரையே கெட்டொழிய, தன்னிடத்துளதாகிய கடினகுணம் நீங்கி நீரைச் சேர்ந்து ஒன்ருய்ப்போன லவணம்போல, ஆன்மாவானது சிவானந்தத்தைத் தலைப்பட்டு அச்சிவத்துக்கு அடிமையாக, அச்சிவமும் ஆன்மாவைவிட்டுப் பிரியாது இயைந்துநிற்கும்.

கூக. ஏனைப் பசுக்களும் பாசங்களும் சிவபிரானுக்குப் பொதுவியல்பானே அடிமையும் உடைமையுமாயிருப்பினும், ஈண்டு ஆன்மா அவனருளாலல்லது ஒன்றுஞ் செய்யாளுக, அவ்வான்மாவைப் பிரியாது இயைந்து நிற்கும் இன்பசிவத்தை அறிந்து இச்சித்து அநுபவிக்கும் உரிமை எய்திய ஆன்மா அச்சிவத்துக்குச் சிறப்பியல்புபற்றி அடிமையாம். இதனுல் முத்திநிலையில் ஆன்மாவின் கிரியை நிகழுமாறும், அது சிவத்தின் கிரியையினுல் எய்துமாறும் கூறப்பட்டன.

கூஉ. நான்காம், ஐந்தாம், ஆரும் சூத்திரங்களில் முறையே கூறப்பட்ட கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவஸ்தையினும் ஆன்மா தன்னியல்பிற் கேடின்றி நிற்குமாறு கூறப்படுகின்றது:—

கூங. (வெ. பொ.) பரிதியங்கடவுள் காலைப்போதில் முகிற்படலத்துள் மறைந்து, அம்முகிற்படலம் சிறிது நீங்கியபோது சங்கோசமாய்த் தன்னொளி ஏகதேசமாய்ச் சிறிது விளங்கி, பின்னர் அம்முகிற்படலம் பெருங்காற்றினுல் அடியுண்டு அதனுல் சத்திமடங்கி விட்டுநீங்கியபோது, அவ்வொளி எங்கணும் விகாசமுமாய் விளங்கும் முறைமைபோல, ஆன்மாவும் மலத்தினுற் கேவலாவஸ்தையில் மறைப்புண்டு, பின்பு தன்னறிவு சகலாவஸ்தையில் ஏகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரபஞ்சவிஷயத்தை அறிந்து அதில் அழுந்தும்; பின்பு சிவபிரான் திருவருளால் அம்மலசத்தி பற்றறக் களைந்து அடக்கப்பட்டபோது, அவ்வறிவானது சுத்தாவஸ்தையில் வியாபகமாய் விளங்கிக் கப்பின்றிச் சிவானந்தத்தைத் தலைப்பட்டு அந்த ஞேய இன்பசிவத்தில் அழுந்தும்.

உகூ பூதபரிணாமமாகிய உடம்பினைப்பற்றியவிடத்து ஆன்மா பூதான்மா எனப்படும்.

ங௦ அகத்தின் கண்ணவாகிய சூக்குமைமுதலிய வாக்குக்களைப் பற்றியவிடத்து ஆன்மா அந்தரான்மா எனப்படும்.

ஙக. சப்தமுதலிய சூக்குமதத்துவங்களைப் பற்றியபோது ஆன்மா தத்துவான்மா எனப்படும்.

ஙஉ. புருடதத்துவமாய் நின்று பிரகிருதிகுணங்களைப்பற்றிய இன்ப துன்பங்களை ஆன்மா அநுபவிக்குங்காற் சீவான்மா எனப்படும்.

ஙங. மந்திரங்களைக் கணிக்குமிடத்து ஆன்மா ஸ்படிகம்போல அவ் வம்மந்திரமயமாய் நிற்குங்கால் மந்திரான்மா எனப்படும்.

ஙச. ஆன்மா அத்துவிதபாவனையாற் பரமான்மா என நிற்குங்காற் பரமான்மா எனப்படும்.

ஙரு. இந்த அறுவகையுள் ஏனையவெல்லாம் உபாதிபற்றிய செயற்கையாம்; சித்து என்னும் சாதி ஒருமைபற்றிப் பரமான்மா என நிற்றல் இயற்கையாம். ஆகலான்,

ஙகூ. 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑍀𑌚 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌸𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌃 ।
𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍇𑌵𑌲𑍀𑌭𑍂𑌤𑌃 𑌸𑍁𑌖𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 ॥

சர்வஞ்ஞஃ சர்வதர்சீச பரிபூர்ணஃ சுநிர்மலஃ।
விமுக்தஃ கேவலீபூதஃ சுகமக்ஷயமாப்நுயாத்॥

ஙஎ. "அத்துவிதபாவனையுடையோன் ஞானக்கண்ணாற் சிவனை ஆன்மாவிற் கண்டு, முழுதும் வியாபகமாய் நின்று அறிவதாகிய முற்றுணர்வுடையனாய் அவ்வப்பொருளியல்பெலாமுணர்ந்து மலவாசனை தீர்ந்து கேவலமாய் நின்று முடிவுகாண்கிலாப் பேரின்பத்தைப் பெறுவன்" என்று ஆன்மா பரமான்மாவாய் நின்று பேரின்பம் பெறுமாறு சர்வஞ்ஞானோத்தரத்திற் கூறப்பட்டது.

ஙஅ. கடாகாயமும் மகாகாயமும்போல அபேதமாய் நிற்கு நிலையே அத்துவிதத்தின் பொருளாமென்றும், சிவானந்தம் எனப்படும் பரமானந்தம் அடைதற்குரியதாய சீவான்மா என்பதொன்று மாயாவாதச்சுருதிப்பிரகாரம் கெட்டொழியும் என்றும் கூறின்,

ஙகூ. 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ।

ஆனந்தோ பிரம்ம।

ச௦. "ஆனந்தகுணமுடையது பிரமம்" என்றும்,

சக. ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:।

ச ஏகோ பிரம்மண ஆநந்த:।

சஉ. "அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என்றும்,

சங. ரஸோ வை ஸ:।

ரசோ வை ஸ:।

சச. "அவர் (சிவபிரான்) ஆனந்தகுணமுடையவர்" என்றும்,

சரு. அந்தர ஆத்மாநந்தமய:।

அந்தர ஆத்மாநந்தமய:।

சசு. "அந்தரான்மாவானவர் ஆனந்தகுணமிகுதியுடையர்" என்றும்,

சஎ. ரஸம் லப்த்வாநந்தீ பவதி।

ரசம் லப்த்வாநந்தீபவதி।

சஅ. (பிரம) ஆனந்தத்தைச் (சீவான்மா) அடைந்து ஆனந்தமா யிருக்கின்றான்" என்றும்,

சகூ ஏஷஹ்யேவ ஆநந்தயாதி।

ஏஷஹ்யேவ ஆநந்தயாதி।

ரு0. "இவர் நிச்சயமாக (ஆன்மாவுக்கு) ஆனந்தத்தை விளைக்கின் றார்" என்றும்,

ருக. யதா வை ஸுகம் லபதே த கரோதி।

யதா வை சுகம் லபதே த கரோதி।

ருஉ. "எப்போது ஒருவன் இன்பத்தை அடைகின்றானோ, அப்போ து (அவன் புண்ணியஞ்) செய்கின்றான்" என்றும்,

ருங. யோ வை பூமா தத்ஸுகம்।

யோ வை பூமா தத்சுகம்।

ருச. "எது பூமா எனப்படுகின்றதோ, அது முடிவிறந்த ஆனந்தம்" என்றும்,

ருரு. யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ பூமா।

யத்ரநாங்யத்பச்யதி நாங்யச் சுருணோதி நாங்யத்விஜாநாதி ச பூமா।

ருசு. "எங்கே மற்றொன்றும் காண்கிலனோ, மற்றொன்றும் கேட்கில னோ, மற்றொன்றும் அறிகிலனோ, அது முடிவிறந்த ஆனந்தம் (பூமா)" என்றும் கூறும் அளவிறந்த சுருதிகளுக்கும்,

௫௭. ந ஶ்ருணோதி ந க்ருஹ்ணாதி ந ரஸ்யதி ந பஶ்யதி।

ந சிருணோதி ந கிருஹ்ணாதி நரஸ்யதி ந பச்யதி।

௫௮. "(அவன் சிவானந்தத்தில் அமிழ்ந்தி மற்றொன்றும்) கேட்கின்றிலன், மணக்கின்றிலன், உருசிக்கின்றிலன், காண்கின்றிலன்" என்றற்றொடக்கத்த ஆகமசுருதிகளுக்கும்

௫௯. ஆநந்தமயோऽப்யாஸாத்।

ஆனந்தமயோப்பாசாத்।

௬௦. "சிவபெருமான் அப்பியாசத்தினால் ஆனந்தகுண மிகுதியினர்" என்றும்,

௬௧. தத்தேது வ்யபதேஶாச்ச।

தத்தேது வியபதேசாச்ச।

௬௨. "அவர் (ஆனந்தமாகிய) அதற்கு ஏதுவாகக் கூறப்படலானும்" என்றும் கூறும் வேதாந்தசூத்திரங்களுக்கும், அந்த வேதம், ஆகமம், வேதாந்தசூத்திரம் என்பவைகளுக்கு இசைந்து வேறுபடாது,

௬௩. "அந்தமிலா வானந்த மணிகொடிலலை கண்டேனே" எனவும், "அந்தமோன் றில்லா வானந்தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன் றென்பால்" எனவும், "கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே" எனவும், "உள்ளத் தேற லமுத வொளிவெளி, கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல், வெள்ளத் தேனுக் கெவ் வாறு விளைந்ததே" எனவும் போதரும் பலப்பல திராவிடசுருதிகளுக்கும் கதி யாதோ? அறிகின்றிலம்.

௬௪. ஆதலினாற் பரசுருதியும், இவற்றின் சாரமாகிய சித்தாந்தமும் கூறுமாறு, சீவன் கெட்டொழியாதென்பது உறுதியேயாம். மாயாவாதிகளும் "நாம் சச்சிதானந்தமாய் இருக்கின்றோம்" என்று கூறுவாரேல், அது சுபகருமங்களுக்கு ஆகாத செவ்வாய்க்கிழமையை மங்களவாரம் என்பது போல வெறும் கூற்றாய் முடியும்; சுருதிப்பிரகாரம் சிவபிரான்வாயிலாக ஆனந்தத்தை அடைதற்குரிய பெறுவானாகிய சீவான்மா ஆண்டில்லையாதலின் என்க.

௬௫. (சாந்தோக்கியம் ௭. ௨௩. ௧-ற் காணப்படும்) பூமா என்பது சிவனாது முடிவிறந்த ஆனந்தத்தை மேலே உரைத்தவாறு உணர்த்துவதேயாகவும், ஏகான்மவாதிகள் "சர்வதேசத்தினும், சர்வகாலத்தினும், சர்வவஸ்துக்களினும் வியாபகமாகிய ஆன்மப்பிரமமென்னும் வஸ்துவே பூமா எனப்படும் அந்தமில்லா ஆனந்த ரூபம்" என்று தூர்த்தஞ்செய்து முடிவிறந்த

ஆனந்தகுணத்தைப் பாகத்தியாகலக்ஷணையினுற் செதுக்கி ரூபமாக்கிவிடுகின் றூர்கள். அவர் தமது ஆன்மப்பிரமத்தை ஆனந்தரூபமென்று அலங்காரமாகக் கூறுதலெல்லாம் குருடன் ஒருவனைக் கமலக்கண்ணன் என்றமைபோலாம்.

## முதலாஞ் சூர்ணிகை.

கூகூ. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

கூஎ. (சூ. பொ.) விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடு கூட உருவத்தினும் கலந்தாலன்றி, அக்கண்ணானது உருவத்தைக் காண்டலின்றாயவாறுபோல, அறிவிக்க அறியும் இயல்பினவாகிய ஆன்மாக்களும் சிவபிரானது சிற்சத்தி தமது ஆன்மசிற்சத்தியோடு கலந்து நின்று தம்மோடு உடன்சென்று விடயத்தினுங் கலந்துநின்றால் அறிவு விளங்கி, அவ்விஷயத்தை அறிய வன்மையுடையனவேயன்றி, அவ்வான்மாக்கள் தனித்து நிற்கமாட்டா, தனித்து ஒன்றை விஷயீகரிக்கவும்மாட்டா; ஆகலின், அறிவு விளங்குதற்குமாத்திரமன்றி விடயத்தைப் பற்றுதற்கும் சிவபிரான் ஆன்மாவோடு உடன் நிற்றல் உறுதியாக வேண்டப்படுதல்பற்றி, அச்சிவபிரானே பரமுத்தர்களாகிய ஞானிகளுக்கு எய்தும் விஷயங்களை உணர்வார் என்பதாம்.

கூஅ. சிவபிரான் ஆன்மாவுக்குக் காட்டுதன்மாத்திரை அமையுமன்றி, ஆன்மாக்களோடு உடன்நின்று அவ்வாறேப்பக் காண்டலும் செய்யுமாயின், அவர் ஆன்மாக்கள்போலப் பந்தப்பட்டு விகாரியாவாரல்லர் என்று கூறப்படுகின்றது:—

கூகூ. (வெ. பொ.) சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்னும் ஐவகை விஷயங்களையும் உணருங்கால் ஆன்மாவானது தன்னியல்பு இதுவென வேறு காணப்படுமாறின்றி அவ்வவ்விடயங்களேபோல அதுவதுவாய் விரவி நின்று அறியும் இயல்பினதாதலின், அந்த ஐந்து விஷயங்களையும் ஒருங்கே அறியமாட்டாது, ஒரோவொன்றாக அவ்வான்மா அறிந்து அநுபவிக்கும். அதுபோல, சதசத்தாய்ச் சார்ந்ததன்வண்ணமாய ஆன்மாவைப் போலப் பலதிறப்படுமியல்பின்றி என்றும் ஓரியல்பினதாகிய சிவம் எல்லா ஆன்மாக்களுடைய எல்லா விஷயங்களையும் ஏகமாய்ப் போதுவகையால் ஒருங்கே உணர்ந்து, அவ்வான்மாக்களோடு உடன்நின்று சிறப்புவகையாலும் உணரும், அங்ஙனம் உடனின்று அறிதல்பற்றி, ஆன்மாப்போலப் பரம்பொருளாகிய சிவபிரான் விகாரமெய்துவாரல்லர்.

எ0. ஆன்மா ஐம்புலவிஷயங்களை விஷயீகரிப்பதுபோல, ஆன்மா சிவத்தை விஷயீகரிக்குங்கால் முதல்வரும் அவ்வாறு உடனின்று தம்மை விஷயீகரிப்பரென்று உணர்த்துகின்றது:—

கூச. 𑌨𑌦𑌿𑌨𑍇 𑌪𑍂𑌜𑌯𑍇𑌦𑍍𑌦𑍇𑌵𑌂 𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌨𑍈𑌵 𑌚 𑌨𑍈𑌵 𑌚।
𑌸𑌨𑍍𑌤𑌤𑌂 𑌪𑍂𑌜𑌯𑍇𑌦𑍍𑌦𑍇𑌵𑌂 𑌦𑌿𑌵𑌾𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌚 𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍॥

நதிநே பூஜயேத் தேவம் ராத்ரௌ நைவச நைவச।
சந்ததம் பூஜயேத் தேவம் திவாராத்ரௌச வர்ஜயேத்॥

கூரு. "பகல் எனப்படும் சகலாவஸ்தையிற் சிவனை வழிபடற்க; இரவு எனப்படும் கேவலாவஸ்தையில் அவரை வழிபடற்க; பின் கேவல சகலமொழிந்து எஞ்ஞான்றும் சுத்தாவஸ்தையில் அவரை வழிபடுக" என்று கூறிற்றுச் சிவாகமம்.

கூசு. (𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌃 𑌸𑍍𑌵𑌃) 𑌤𑌤𑍍𑌸𑌵𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 𑌭𑌰𑍍𑌗𑍋 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 𑌧𑌿𑌯𑍋 𑌯𑍋 𑌨𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍॥

(இருக்குவேதம், ௩. சூ௨. க௦; கிருஷ்ணயசுர்வேதம், க. ரு. கூ. ச; சுக்கிலயசுர்வேதம், ௩கூ. ௩; சாமவேதம், ஏழாவது பிரபாடகம், க௦)

(பூர்புவஃ ஸ்வஃ) தத்சவிதுர்வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ நஃ பிரயோதயாத்॥

கூஎ. "எந்தச் சிவசூரியனது (ஞானேச்சாக்கிரியா) சத்தியாகிய ஒளியானது எங்கள் ஞானேச்சாக் கிரியாசத்திகளைச் செலுத்துகின்றதோ, அந்த முக்கியப் பொருளை (அஃதாவது, அந்தப் பராசத்தியொளியை) தியானிக்கின்றோம்" என்பதே சமஸ்தவேதங்களின் சாரமாகிய மகாமந்திரகாயத்திரியின் பொருளாம். இதற்கு உபப்பிருங்கணமாக,

கூஅ. 𑌶𑌿𑌵𑌾𑌰𑍍𑌕𑌶𑌕𑍍𑌤𑌿𑌦𑍀𑌧𑌿𑌤𑍍𑌯𑌾 𑌸𑌮𑌰𑍍𑌥𑍀𑌕𑍃𑌤𑌚𑌿𑌦𑍍𑌦𑍃𑌶𑌾।
𑌶𑌿𑌵𑌂 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑌤𑌾𑌵𑍃𑌤𑌿𑌃॥

சிவார்க்கசக்திதீதித்யா சமர்த்தீகிருதசித்திருசா।
சிவம் சக்தியாதிபிஃ சார்த்தம் பச்யத்யாத்மா கதாவிருதிஃ॥

கூகூ. "சிவசூரியனுடைய பராசத்தியொளியினால் வன்மையாக்கப்பட்ட ஞானக்கண்ணினால் ஆன்மாவானது சிவசத்தியோடியைந்து சிவத்தைப் பார்க்கின்றது; மலம் மறைந்துபோயிற்று" என்று சிவாகமம் அக்காயத்திரிப்பொருளை விளக்கிற்று. காயத்திரியிலே தேவசவிதா எனப்பட்டவர் நாராயண சூரியனா? மற்றொன்றா? என்னும் ஆசங்கைகள் எழவொட்டாமல்,தேவ என்பது சிவனையும், சவிதா என்றது சூரியனையும் உணர்த்தும் என்பது போதரச் சிவார்க்கர் (அஃதாவது) சிவாதித்தன் என்று கூறப்பட்டது. படவே, நமது கண்களுக்கு விஷயங்களைப் புலப்படச் செலுத்தும் புறத்துள்ள சூரியனுக்கு இயையச் சிவாகமம் ஒளி என்றும், சிவத்துக்கியையச் சத்தி என்றும் கூறிற்று. காயத்திரி சுருதியானது ஒரு மொழிகொண்டு

ஒளியையும் பராசத்தியையும் ஒருங்கு உணர்த்துமாறு பர்க்கஸ் என்று கூறிற்று. சேதனாசேதனப் பிரபஞ்சமனைத்தையும் பிரகாசிப்பித்தலாற் ப (ஃப) எனவும், அவற்றை இச்சிப்பித்தலால் ர (ர) எனவும், அவையனைத்தும் ஒடுங்கித் தோற்றுதலால் க (ம) எனவும் பகுத்துப் பொருள் கோடற்கியன்ற பர்க்க சப்தம் சிவசத்தியினின்று வேறுபடாத சிவனுக்குப் பெயராகப் போந்ததென்று மைத்திராயணோபநிடதம் கூறுமாற்றால், பர்க்கஸ் (ஃபர்க்ஃ) என்றது ஞான இச்சாக்கிரியாரூப பராசத்திக்குப் பெயராயிற்று; பர்க்கஸ் என்றது தனிமொழியாய் ஒளிக்கும் பெயராமாறு தெளியப்படும்.

௧௦௦. பிரசோதயாத் (ப்ரசோதயாத்) என்னும் மொழி செலுத்துகின்றார் எனப் பொருள்படும். அஃதாவது ஆன்மாக்களாகிய எங்கள் ஞான இச்சாக்கிரியைகளை உண்ணின்று செலுத்துபவர் சிவசத்தி என்றே பெறப்படுகின்றது. எங்கே ஆன்மாவைச் செலுத்துகின்றாரெனின், பெத்தகாலத்திலே திரோதானசத்தியாய் நின்று பிரபஞ்சவிஷயத்தை அறிந்து அநுபவிக்குமாறும், முத்திகாலத்திலே அருட்சத்தியாய்நின்று ஞேயப்பொருளாகிய சிவத்தை அறிந்து சிவாநுபவத்தை அநுபவிக்குமாறுமாம் என்க.

௧௦௧. பொதுவகையாற் பெத்தகாலத்திற் சிவசூரியனார் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியைகளைச் செலுத்தி அறிவித்து நிற்றல் அதிசூக்கும பஞ்சகிருத்தியமாம் என்றும், சிறப்புவகையால் முத்திகாலத்திற் சிவசூரியன் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியைகளைப் புறத்தே மற்றொன்றினுஞ் செல்லவொட்டாது தடுத்து, ஞேயப்பொருளாகிய தம்மை உணருமாறே செலுத்தி, தாமும் அங்ஙனம் சென்று உணருங்கால், ஆன்மசிற்சத்தியினிடத்துத் தாம் ஏகமாய் விட்டுநீங்காதவராய், அந்த ஞேயவிஷயத்தை உணர்வோராவர். இங்ஙனம் ஆன்மாவுக்குச் செய்யும் உபகாரம் பரநடனம் எனப்படும்.

௧௦௨. ஆகவே, சிவஞானபோதத்தில் ஐந்தாம் சூத்திரத்தாலும், பதினோராம் சூத்திரத்தாலும் முறையே உரைக்கப்பட்ட அதிசூக்குமநடனமும் பரநடனமும் காயத்திரி மந்திரத்தினால் உணர்த்தப்பட்டனவாம். அந்தக் காயத்திரி மந்திரப்பொருள்,

௧௦௩. தஸ்ய தர்சயிதா ஶிவ:।
தஸ்ய தர்சயிதா சிவ:।

௧௦௪. "அந்த ஆன்மாவுக்குப் (பிரபஞ்சசிவஞேய) விஷயத்தைக் காட்டுபவரும் (உடனின்று) காண்பவரும் சிவனே" என்று ௧௦௩-ம் பிரிவிற் காணப்பட்டவாறு கூறும் சிவஞானபோத ௧௧-ஞ் சூத்திரத்தினாலும் உணர்த்தப்பட்டது.

௧௦௫. ஆதித்தனையும் ஒளியையும் பதார்த்தத்தையும் குருடன் அறியான்; அதுபோல, ஆசாரியரையும் சிவஞானத்தையும் மெய்ப்பொருளையும் அபக்குவன் அறியான்.

க0கூ. ஆதித்தன் குருடனுக்குக் காட்டாததுபோல ஆசாரியர் அபக்குவனுக்கு அறிவிக்கமாட்டார்.

க0எ. ஆதித்தனுக்குத் தன் கிரணங்களால் இருட்டை நீக்கிப் பதார்த்தங்களைக் கண்ணுக்குக் காட்டும் குணம் ஒன்று; தன்னைக் காட்டிப் பதார்த்தங்களையும் கிரணத்தையும் காட்டாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

க0அ. கண்ணுக்குக் கிரணத்தைப் பொருந்திப் பதார்த்தங்களைக் காணும் குணம் ஒன்று; கண் ஆதித்தனைப் பொருந்திக் கிரணத்தையும் பதார்த்தத்தையும் காணாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

க0கூ. ஆசாரியர்க்குத் திருவருண் ஞானத்தினால் உயிர்க்கு அனைத்தையும் அறிவிக்கும் குணம் ஒன்று; சிவமாகிய ஞேயத்தைக் காட்டித் திருவருண் ஞானத்தையும், அதனால் அறிந்த ஏனைய பொருளையும் காட்டாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

கக0. ஆன்மாவுக்குத் திருவருளைப் பொருந்தி அனைத்தையும் அறியும் குணம் ஒன்று; சிவமாகிய ஞேயத்தைப் பொருந்தி அருளையும் அதனால் அறிந்த ஏனைப்பொருளையும் காணாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

ககக. சீவன்முத்தர்களுக்குச் சிவமேயன்றி ஏனைய பதார்த்தங்கள் விஷயமாகாதிருக்கினும், பழக்கவாடையால் ஒரோவழி ஞானக் கிரியைகள் புறத்தேசென்று, அதுவாயிலாக ஏகதேசவுணர்வு உண்டாயதேனும், ஒரு பொருள் காட்சிப்படவருமாயின் அந்தப்பொருள் காட்சிப்படும்போதே,

ககஉ. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

என்று உத்தரவேதமுடையார் கூறியவாறு, சிவஞானம் எவ்விடத்தினும் இருப்புவிடாமல் எல்லாப்பொருட்கு மிடம்கொடுத்துநிற்கு நிலையைமறவாத உணர்வால் அந்த ஞானப்பொருட்குள்ளாகச் சிவத்தைக் காண்பாராதலின், அவர்க்குப் பரமே பார்க்கப்படுவதன்றிப் புறத்துள்ள பதார்த்தங்களைப் பார்க்க நேராதாம்; சிவயோகத்தானத் துரியநிலைக்கண்ணே தம்மை வேறு காணுமாறின்றித் திருவருளிலே அடங்கி அருளாய் ஒழிந்திருக்கப் பெற்ற யோகிகள் தம்மிடத்து ஒரோவழிச் சுகதுக்கங்கள் வந்து தாக்கினும், அவர் பரமே பார்த்திருப்பாராதலின், எல்லாம் அந்தப் பானிறைவிலடக்கிக் காண்பார்கள் என்று சித்தாந்தசாத்திரங்கள் கூறுகின்றமைபாலன்றோ, எஞ்ஞான்றும் சிவத்தினது பரநடனத்தைப் பார்க்குமியல்பினராய பகவானாகிய விஷ்ணுமூர்த்தியானவர்

ககங. [illegible]
[illegible]
[illegible]

நிருத்ததர்சநசம்ஹிலாதாத் பகவாந் கமலாபதிঃ।
சிவாநந்தார்ணவே மக்நோ நச ஸஸ்மார வை ஜகத்।
மமஜ்ஜ சுசிரம்காலம் சிவாநந்தமஹாம்புதௌ॥

ககச. "அந்த நடேசரது நிருத்ததரிசன மகிழ்ச்சியினுற் சிவானந்த சமுத்திரத்திலே அமிழ்ந்தி, உலகத்தை உணர்ந்தாரில்லை; நெடுங்காலம் சிவானந்தமகோததியில் அமிழ்ந்திக் கிடந்தார்" என்று சுவேதாரண்ணியமான்மியமும்,

ககரு. [illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸ்வயம் நிர்கத்ய பூலோகே புண்டரீகபுரம் பரம்।
பிராப்ய திருஷ்ட்வா மஹாதேவம் தத்ர சித்ரூபிணம் சிவம்।
ஆனந்தா சுருபரீதாக்ஷஸ்ததாகத்கதவாக்கரிঃ।
சதுர்மாசாந்த மஞ்ஞத்வா ந கிஞ்சிதபி மாதவঃ।

ககசா. "பாற்கடலைவிட்டு விஷ்ணுவானவர் நிலவுலகின்மிக்கதாகிய அரிய சிதம்பரஸ்தலத்தை அடைந்து, (அகண்டாகார) ஞானரூபியாகிய மகாதேவநடேசமூர்த்தியைத் தரிசித்துக் கண்களினின்று ஆனந்தபாஷ்பம் பொழியவும், வாக்குத் தழுதழுக்கவும், நான்கு மாசம்வரையும் புறத்துள்ள தொன்றும் உணராது (போயினர்)" என்றும்,

ககஎ. அங்கதற்பின் முறையாக வச்சுதன்பாற் கடலகன்று
நங்குழவேல் லாஞ்சூழ நாவலந்தீ வகத்தணுகி
யெங்கள்பிரா னருணடஞ்செய் யெல்லையிலாத் தில்லைதனிற்
றுங்கமணி மன்றுதனைத் தொழுதுபர வசமானன்.

ககஅ. சொல்லரிய பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனி லறிவிழந்து துணைவிழிகள் புனல்பெருகப்
பல்லுயிர்க்கு முயிராகும் பரமசிவ பூரணத்தி
னெல்லைதனிற் புக்கழுந்தி யெழுந்திலனீ ரிருதிங்கள்.

ககக. இத்திறத்தா லவசமதா யீறுமுத லிடுவுமிலா
வத்தனது திருவடிக்கீ ழடங்கியே யாணையினன்
மெய்த்துரியங் கடந்தவுயிர் மீண்டுசாக் கிரத்தடையத்
தத்துவமெய் யுணர்ச்சியெலாந் தலைத்தலைவந் தீண்டினவால்.

கஉ0. "விஷ்ணுவானவர் பாற்கடலை நீங்கிச் சம்புத்தீவிற்போய், எம் பெருமானாகிய சிவபெருமான் பரமானந்ததாண்டவஞ் செய்தருளுகின்ற தில்லைப்பதியிலுள்ள கனகசபையை வணங்கி, பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சி, அறிவு செயலிழந்தவிடத்துளதாம் அன்பு மீதூர்ந்து, அதுகாரணமாகக் கண்கள் இரண்டினின்றும் ஆனந்தபாஷ்பம் பொழிய, சர்வான்மாக்களுக்கும் அந்தரியாமியாகிய சிவபெருமானது அகண்டாகாரநித்த வியாபக எல்லையைத் தலைப்பட்டு, அதிலழுந்தி, நான்குமாசம் எழுந்தாரல்லர்" என்றும் கந்தபுராணமும் கூறுகின்றன.

கஉக. திருவாலங்காட்டிலே ஊர்த்துவதாண்டவமும், சுவேதாரண்ணியத்திற் புஜங்கலளிதநடனமும், மதுராபுரியில் வியத்தியஸ்ததாண்டவமும், குடந்தைக் கீழ்க்கோட்டத்தினும் நாகேசுவராலயத்தினும் அம்பிகா தாண்டவமும், தேவதாருவனத்திற் கஜகும்பிநடனமும், பேரூரிற் பிரளய காலசங்காரதாண்டவமும், உத்தரகோசமங்கையிற் பரமரகசிய ஆனந்த தாண்டவமும், திருக்கைலாசத்திலே திருநடனமும், சிதம்பரத்திற் பரமானந்தபோததாண்டவமுமாகக் கூறப்படும் நவதாண்டவங்களுள்ளே, இறுதியாகக் கூறப்பட்ட பரமானந்தபோததாண்டவத்தைத் தரிசித்து விஷ்ணுவானவர் நடராஜர் திருமுன்னே பரவசமாய் வீழ்ந்து நான்குமாசம் எழுந்தாரல்லர் என்று ஈண்டுக் கூறப்பட்டதாம் என்க.

கஉஉ. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து

கஉங. "சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற், பெருக்கவிழித் தாலலது, பேரின்ப—மெய்துமோ" என்று திருச்சிற்றம்பலநாடிகள் அருளியாங்கு, எப்பொருளினும் பற்றிநின்றும் ஒன்றினும் பற்றில்லாத திருவருளே பற்றாக விரவிநிற்பவனுய் ஏகதேசப் பழக்கம் தீர்ந்து வியாபக அறிவு விளங்கிநிற்கப் பெறுதலாகிய மெய்யுணர்வெனப்படும் (திண்ணிய அறிவாகிய) தோட்டியினால் ஐம்பொறிகளாகிய யானைகள் ஐந்தனையும் தத்தம் புலன்களின்மேற் செல்லாமற் காப்பவன் சத்தியலோக வைகுண்டலோகமுதலிய எல்லா உலகங்களினும் மிக்கதென்று கூறப்படும் பரப்பிரமசிவலோகம் எனப்படும் சோமலோகத்திற்கு ஓர் வித்தாம்; அஃதாவது, அந்தச் சோமலோகத்தை ஒளி மார்க்கத்தினாலே சென்றடைந்து மீளப் பிறவியிற் செல்லான் என்று உத்தர வேதமுடையார் அருளிச்செய்தார். வேதமானது ஞானயோகஸ்தானமாகிய துரிய அருட்சிதம்பரவெல்லையில் நிலைத்தலால், சிவலோகம் கூறப்பட்டதாம் என்க.

கஉச. சிற்றின்ப சிறுபோகம் துய்த்தற்கு ஏகதேச அறிவு வேண்டப்படுமாறுபோல, பேரின்ப பரபோகம் துய்த்தற்கு வியாபக அறிவு வேண்டற்பாலதேயாம் என்க.

கஉரு. இதுபற்றியே மெய்கண்டதேவநாயனுர் "மலத்து இரித்துச் செல்லும் வாத்து" என்றும், அருணந்திசிவாசாரியர் "விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்" என்றும், உமாபதிசிவாசாரியர் "அதிலறி வடங்கி மன்னிட வியாபி யாய வான்பயன் ருேன்றும்" என்றும் அருளிச்செய்தார்கள். சேக்கிழார்பெருமான் அவ்வியாபக அறிவை "ஊன்" என்றும், "திண்ணிய அறிவு" என்றும், "நிலைப்பட்டமெய்யுணர்வு" என்றும் பலபிரகாரமாக அருளிச்செய்தார்.

கஉசு. "உணர்வு நேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்க, ணணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை யெனப்போற்றி" "ஐம்புலன்வாயிலாக எய்தும் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அலைவுபட்டோடுமாறு, நிலைப்பட்ட மெய்யுணர்வானது தலைப்பட்டவிடத்து வரும் பரமானந்தசிவபோகத்தை, (இப்போது) இடையீடின்றி (உமது) சபாநடராஜ திருவுருவின்கண்ணே செல்லும் ஐம்புல அளவிற்கும் எளிதாக வாய்க்குமாறு அருளிச்செய்தீர்" என்று திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருவாய்மலர்ந்ததாகப் பெரியபுராணம் கூறுமாற்ருல், புறத்துள்ள ஐம்புலச் சிற்றின்பத்தை (மேலே ககச-ம் பிரிவிற் கூறியாங்குப்) பேரின்பமாகக் காணும் நாயனுர், சிவானந்தபோகதாண்டவம் புரியும் தம்பிரானுரையே தலைப்படப் பெற்ருல், அவரடையும் ஆனந்தத்தின் எல்லையை யார் அளவிடவல்லார்!!

கஉஎ. "ஊனுறு திருக்கூத் துள்ள மார்தரப் பெருகி" என்றும், "வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந் தக்கூத்து" என்றும், "உணர்வு நேர்பெற வருஞ்சிவ போகம்" என்றும் கூறப்படலால், பரநடனுனந்தமும் சிவபரபோகானந்தமும் ஒன்றுமென்பது பெறப்படுகின்றது. படவே, சிவஞானபோதத்துப் பதினொரூஞ் சூத்திரம் பரானந்தசிவபோகபரநடனத்திலே முற்றியவாறு காண்க.

கஉஅ. பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்டவாறு, சிவயோகத்திலே ஆன்மா அருளால் நிற்குங்கால் அதற்கு மேலாகிய ஞேயம் தோன்றும்; அந்த ஞேயத்தைப் பொருந்தித்தான் தோன்ருமல் இரண்டறக் கலந்து நிற்பதுவே சிவபோகமாம். இதுவே இப்பதினொரூஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட ஞானத்து ஞானம் எனப்படும் சமாதிப்பரமுத்திநிலை. இது ஆன்மலாபம் எனவும் படும்.

கஉகூ. சிவபோக பரானந்தத்தை இப்போதே அடைந்துகொண்டிருப்பவர் சகஜநிஷ்டையினர் எனப்படுவர்.

கங0. தெஹபாதெ ஶிவாநந்஦ம் ஶிவெகாஸதாம் வ்ரஜெத்।
தேஹபாதே சிவாநந்தம் சிவைகாசதாம் விரஜேத்।

கஙக. "தேகவியோககாலத்தில் (ஆன்மாவானது) சிவானந்தத்தோடு ஒரே இரசத்தை அடைக" என்று இரௌரவாகமங் கூறுகின்றது. அங்ஙனமாகவும் "முடிவிலாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால்" என்று சுந்தரமூர்த்திநாயனாரையுற்றுக் கூறப்படலால், அச்சிவபோகநிலை அடைந்த சுந்தரமூர்த்திநாயனார், திருநந்திதேவர் முதலாயினோர் இங்கே சிவாகமம் கூறிய பிரகாரம் தேகவியோகமெய்திச் சிவைக்கியரசத்தை அடைந்தாராகக் கூறப்படாது, திருக்கைலாசம் என்னும் ஓர் ஸ்தானத்தை அடைந்தாராகக் கூறப்படுகிறன்றதே என்று ஆக்ஷேபிப்பது அடாது; மீளா அடிமைகளாகிய அவரெல்லாம் சிவாஞ்ஞையை எஞ்ஞான்றும் சிரமேல் வகித்து இறைபணியில் ஒழுகவேண்டியவராதலின், அந்தச் சர்வஞ்ஞராகிய சிவபெருமான் யாதுகாரணம்பற்றியோ எவரையும் ஆங்காங்குத் திருத்தொண்டுகளில் நிறுத்துவார்; அதனை ஆக்ஷேபிக்க நமது குயுக்திகளுக்கு வன்மை இன்றாமாதலின் என்க. மேலும். அகண்டைசுவரிய ஆனந்தத்தினால் ஓங்கிய மந்திரியானவன் தனது பெரிய இராஜதானியிலிருந்தாலும், இன்றேல் தனது அரசன் ஆஞ்ஞாப் பிரகாரம் ஓர் சிற்றூரிலிருந்தாலும், மற்றெங்கிருந்தாலும் அவனுக்கு ஓர்காலும் இன்பம் குறையாதிருத்தல்போலாம்; இதுபற்றியே,

கஙஉ. சத்திய நிருவா ணத்தாற் றனுகா ணுதி தம்பாற்
போத்திய வோட்டி னேட்டாப் புளிம்பழம் போற றேற்ற
ரத்தின லுடல்போ மேன்ப ரதுபுரி முறையுந் தேற்றார்
பித்தேன மயங்கி நிற்பார் பெரிதீவ நுணர்ந்தார் போலும்.

கஙங. இன்னணஞ் சகச நிட்டை யெய்திய நந்தீப் புத்தே
டன்னருட் தூரவ னேவற் றலைநிற்த மியல்புந் தேற
ரன்னவ னூலை யாய்ந்து மாக்கைநின் றுளதேன் முத்தி
மன்னல ரேன்ப ரன்னோர் மம்மர்நோய்க் கொழிவு முண்டே

என்று மேலோரும் பணித்தார்.

கஙச. 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑌧𑌿𑌕𑌾𑌰𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌰𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃।
அதிகாரிணா மதிகாரநிவிருத்தோரநந்தாம் முக்திः।

கஙரு. "(சிவோபாசனையில் முற்றிய) அதிகாரிகளுக்கு அதிகாரம் நிவிர்த்தியானபின்னர்த்தான் முத்தி" என்று ஞானயோகத்தானத்தினராகிய சிவாத்துவிதசைவபாஷ்யகாரர் கூறிய திருவாக்கியத்தினால், திருக்கைலாசத்தை அடைந்த திருத்தொண்டர்களுக்கு இறைபணித் திருத்தொண்டின் அதிகாரம் நீங்கியபின்னர்த்தான் மேலே கூறிய இரௌரவாகமவிதி அநுசரிக்கற்பாலதாம் என்று பெறப்படுகின்றது.

கஙசு. இருக்குவேதத்தினும் (க. கசுச. ஙகூ,) சுவேதாசுவதரோபநிடதத்தினும் (ச. அ), தைத்திரீயோபநிடதத்தினும் (உ. க; ங. சு), பிருக

தாரணியோபநிடதத்தினும் (சு. ச. உஉ; ரு. அ. கக), சாந்தோக்கியோப நிடதத்தினும் (அ. க. க; க. கூ. க), கைவல்லியோபநிடதத்தினும், தைத்திரீய ஆரணியகத்தினும் (கo. க. க), முண்டகோபநிடதத்தினும் (உ. உ. எ), பிரசிநோபநிடதத்தினும் (ரு. ரு), அதர்வசிகோபநிடதத்தினுமாக எல்லா உபநிடதங்களினும், அவ்வுபநிடதங்களை ஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த வேதாந்தசூத்திரத்தினும் (க. ௩. கரு; ௩. ௩. ௩அ), தடஸ்தத்திலே நிறுத்திப் பிரதிபாதிக்கப்பட்ட ஞானயோகஸ்தானமாகிய சிதம்பரத்துத் தகராகாயதிருச்சிற்றம்பலநடனமானது வேதசாரமாய், வேதாந்தத்தெளி வாய்ப் போந்த சித்தாந்தசிவஞானபோதத்திற் சொரூபநிலைபற்றிப் பேசப் படுங்கால், ''ஆட்டுவித்தா லாரொருவராடாதாரே'' என்று வாகீசப்பெருந்த கையார் அருளியவாறு, ஆன்மாவைச் சிவரூபவிஷயத்திற் செல்லுமாறு ஆட்டி, ஆட்டுதல் மாத்திரத்தோடமையாது, அவ்வான்மாவோடு உடனாய் நின்று ஆடியும் நிற்றலாகிய பரநடனநிலையை நோக்குந்தோறும் நோக்குந் தோறும் கரும்பிரசம், தேன், பால், கனி, அமுதம், கற்கண்டு, கருப்புக் கட்டி என்னும் சுவைப்பொருள்களையெல்லாம் கலந்தவிடத்துளதாகிய சுவை இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராமைபோல, சொல்லுதற்கரிய பேரின்பம் ஆன்மாவுக்கு எய்துமாம் என்க.

கஙௌ. இங்ஙனம் ஆன்மா எனப்படும் மன்றிலே பரநடனஞ் செய் கின்றார் என்பது ''மதிகங்கைவிதியாளனென்னுயிர்மேல் விளையாடல் விடுத் தானே'' என்று திருநாவுக்கரசுநாயனார் திருப்பழனத்தேவாரச்சுருதியிலே கூறியிருத்தலினாலும் புலப்படும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் ''அன்று நீ யாடல் செய்கை நினைப்பதே நியமமாகும்'' என்று அருளுமாற்றால், சிவ ஞானபோதம் கூறுமாறு சிவபோகபரநடனத்திலே எஞ்ஞான்றும் அவர் கரு த்து ஒழுகிக்கொண்டிருந்தவாறு வெளிப்படையாம்.

கஙஅ. புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லா
மளிக்த மநட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்த
மொளிக்த வானந்தத் தமுதூறு முள்ளத்தே

என்று திருமூலநாயனார் பரநடனம் தரிசனஞ் செய்வோர்க்கு எய்தும் மெய் ப்பாடு இங்ஙனமாம் என்று விளக்கினார்.

கஙகூ. இங்ஙனம் சதாநிருத்ததரிசனஞ் செய்துகொண்டிருக்கும் பரமுத்தருடைய ஸ்தானமும் சிதம்பரமாம். அது,

கசo. ஆரண வுருவார் தில்லை யம்பல மெய்தப் பெற்றே
ரோருணர் வாவ ரென்று மொன்றல ரொன்ற ரல்லர்
காரண ராகா ரோத்த கருத்திலர் நிருத்த வின்பப்
பூரண ரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே

என்னும் உமாபதிசிவாசாரியசுவாமிகள் திருவாக்கினால் உணரப்படும்.

கச௪க. தாமரைப்பூவை அடிக்கடி தீண்டியும், அதனோடு கலந்திருந்தும் அந்தத் தாமரைப்பூவின் தேனைப் பருகமாட்டாத மண்டூகங்கள் போலவும், பாற்சமுத்திரத்துள் வாழும் மீன்கள் பாலை இருந்தவிடத்திருந்து நிறையப் பருக அறியாமல் வேறுபலவற்றை உண்டல் போலவும், உறியின் கண்ணே தூங்கும் பால் நிறைந்த பானையிலிருக்கும் பூனை அதனைப் பருக அறியாது சுவரின்கண்ணே ஊரும் கரப்புப் பூச்சியை விரும்பிப் பாய்ந்து பாற்பானையையும் தகர்த்து அப்பூச்சியினாலும் தன் வயிறு நிறையப் பெறாது போதல் போலவும், நடராஜப்பெருமானது திருமேனியை எஞ்ஞான்றும் தரிசித்தும் பூசித்தும் வரும் பாக்கியம் பெற்றும், அவரது பரநடனானந்தத்தை அவர் அருளிய வேதசிவாகமநெறியானே தலைப்பட அறியாது, புறச்சமய மாயாவாத நெறியிற் சிலர் தலைப்படுதல் நெறியாமோ? அங்ஙனம் தலைப்பட்டவர்க்கு இறுதியில் அவர் அளித்த பயனை அறிந்தவர் பின்னும் அக்குழியில் எப்போதேனும் இறங்கமுயல்வாரோ? எந்தப்பிரகாரம் திருப்பித் திருப்பி வெள்ளிடை மலைபோல விளங்கவைத்தாலும், அதிபரிபக்குவமுடையார்க்கே அந்த நன்னெறி புலப்படும். இதுபற்றியே, "உண்மையாஞ் சிவானுபவ ஞானபோக மருந்திடினு முத்தமர்க்கே யாகும்" என்றார் பெரியோர்.

கச௪உ. இராப்போதிலே போய்த் தத்தம் கூத்துக்களைக் கண்ணினாற் பார்த்து மகிழ்தல் எந்தெந்தத் தேசத்தினும் உள்ள எந்தெந்தச் சாதியாராகிய அஞ்ஞானிகளெல்லோர்க்கும் ஒப்பமுடிந்த பக்ஷமேயாக, சிவபரானந்தக் கூத்தை எக்காலத்தினும் இடையீடின்றி உண்ணோக்கி மகிழ்தல் சிவஞானிகளுக்குமாத்திரம் இயலுமாம் என்க.

## பதினோராஞ் சூத்திரத் தொகைப்பொருள்.

ஏகனாகி இறைபணிநிற்கும் ஞானிக்கு அவரது ஞான இச்சாக்கிரியைகள் விடயித்தற்கு விடயமொன்றுளதென்று உணர்த்துதல்வாயிலாகச் சிவப்பேறு எனப்படும் ஆன்மலாபம் கூறப்படுகின்றதென்றும், சிவபாவனையின்றி அமையாத ஆன்மாவானது ஒரு விடயத்தை அறியுமிடத்தும் சிவபிரானது சிற்சத்தி ஆன்மாவின் சிற்சத்தி எனத் தானெனப் பேதமின்றி உடனாய்க் கலந்து நிற்ப, சிவபிரானும் ஆன்மாவிற் கலந்துநின்று அறிவித்த விஷயத்தை ஆன்மா அறிந்ததென்றும், ஆன்மாவை அதிட்டித்து நின்ற தாம் அறிந்ததென்றும் பிரித்தறியப்படுமாறின்றி இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே விடயிக்குமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தத்தினும் முத்தியினும் ஒரே பிரகாரமாய் இருக்கும் என்றும், ஆன்மாவாகிய ஒருபொருள் சிவமாகிய மற்றொன்றாதல் எங்ஙனம் என்னும் சந்தேகம் ஒழிக்கப் போந்தமையால் அவ்விரு பொருட்கு முளதாகிய சம்பந்தவிசே

ஷம் உணர்த்துதலே அத்துவிதசொற்குப் பொருளாம் என்றும், சிவபிரான் ஆன்மாவுக்குக் காட்டியும் அதனோடு கலந்து காண்டலும் செய்யுமாற்றால் அவர் விகாரியாவாரல்லர் என்றும், ஆன்மா சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவரது திருவடிகளை உணரவே, அச்சிவம் பரபோகமாய் மேன்மேலும் விளையும் என்றும், பெத்தகாலத்தில் சிவபிரான் ஆன்மாவாய் நின்று விடயித்தலின், விஷயங்களால் வரும் இன்பதுன்பங்கள் ஆன்மாவுக்கேயாம் என்றும், முத்திகாலத்தில் ஆன்மாவானது சிவபிரானாய் நின்று விடயித்தலின் அவ்வின்பதுன்பங்கள் ஆன்மாவுக்காகா என்றும், சிவபிரான் ஆன்மாவுக்குக் காட்டியும் கண்டும் நிற்கும் உபகாரத்தை அவ்வான்மா மறவாது உறுதியாய்ப் பற்றித் திருவருள்வழி நிற்பின் அதற்குச் சிவானந்தாநுபூதி நிஷ்டை எய்தும் என்றும், பரமுத்திநிலையில் அன்பு நிகழாதாயின் சிவானந்தானுபவம் எய்தாது என்றும், சிவபிரான் பெத்தர் முத்தர் என்னும் இருதிறத்தாரிடத்தும் அத்துவிதமாய் ஒப்ப நிற்பினும் பக்குவமுடையார் அறிவையே பூரண அறிவாக விரியச்செய்வர் என்றும், ஆன்மாவின்கண்ணேயுள்ள ஆணவமலத்தை நீக்கிச் சிவானந்தசாகரத்துட் படியச்செய்து தம்வசமாகச் சங்கற்பமாத்திரத்தினால் விளையாட்டுப்போலச் செய்கின்றார் என்றும், ஆன்மாவானது ஆணவமுதலிய மும்மலமாத்திரையே கெட்டொழியச் சிவானந்தத்தைத் தலைப்பட்டுச் சிவத்துக்கு அடிமையாம் என்றும், ஆன்மா மலத்தினாற் கேவலாவஸ்தையையும், கலாதிதத்துவங்களாற் சகலாவஸ்தையையும் அடைந்து, சிவபிரான் திருவருளால் அவ்வான்மா சுத்தாவஸ்தையை அடைந்து வியாபகமாய் விளங்கிச் சிவானந்தத்தைத் தலைப்படும் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

## பதினோராஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.

---

க. சூத்திரப்பொருள் யாது? ச.

உ. சூத்திரக்கருத்துரை யாது? ரு.

ங. அதன் பொருள் யாது? சூ.

ச. இருள் நீக்கத்தில் ஒளிவிளக்கம் போல், எதன் நீக்கத்தில் எது விளங்குகின்றது? எ.

ரு. அதனால் இறைபணிநிற்பார்க்கு இனிச் செய்யக் கிடந்ததொன்றில்லை யெனலாமா? எ.

சூ. ஏகனாகி நிற்கும் தானம் யாது? எ.

எ. அந்த அருணிலையில் எது விளங்கும்? எது விளங்காது? எ.

அ. வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவானுபூதிநிலை எங்கே முற்றுப்பெறுகின்றது? அ.

கூ. வடமொழிச் சூத்திரத்திற் சுவாநுபூதிமானவன் என்றது எங்ஙனம் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது? அ.

க0. சுவாநுபூதிமான் (எனப்படும் அரன் கழல் செலும்) என்றது எதன் பின் வைத்துரைக்கப்பட்டது? அ.

கக. பத்தாஞ் சூத்திரம் எதனை உணர்த்திற்று? பதினொராஞ் சூத்திரம் எதனை யுணர்த்திற்று? அ.

கஉ. சூத்திரப் பிண்டப்பொருள் யாது? கூ.

கங. எதனை மறவாதிருந்தாற் பேரன்பு உளதாகும்? க0.

கச. நன்றி மறவாமையைப்பற்றி நாயனாரும், ஔவையாரும் யாது கூறினர்? க0.

கரு. ஆன்மாவைவிடுத்துக் கண்ணானது ஓர் உருவத்தைக்காண வல்லதோ? கஉ, (1).

கசு. கண்ணுக்குக் காட்டுவது யாது? கஉ, (1).

கஎ. ஆன்மசிற்சத்தி கண்ணொளியோடு எங்ஙனம் கலந்து நிற்கும்? கஉ, (1).

கஅ ஓர் உருவத்தைக் கண்ணொளி கண்டதோ, ஆன்மசிற்சத்தி கண்டதோ எனப் பிரித்தறிய வாராது நிற்கும் இருவகைக் காட்சியும் எங்ஙனம் ஒருங்கு நிகழ்கின்றன? கஉ, (1).

ககூ. சிவபிரானை விடுத்து ஆன்மா ஒரு விடயத்தை அறிய வியலுமோ? கஉ, (2).

உ0. ஆன்மாவுக்குக் காட்டுபவர் யார்? கஉ, (2).

உக. சிவசிற்சத்தி ஆன்மசிற்சத்தியோடு எங்ஙனம் கலந்து நிற்கும்? கஉ, (2).

உஉ. ஓர் விஷயத்தை ஆன்மசிற்சத்தி அறிந்ததோ, சிவசிற்சத்தி அறிந்ததோ எனப் பகுத்தறிய வாராதுநிற்கும் இருவகை அறிவும் எங்ஙனம் விடயிக்கும்? கஉ, (2).

உங. அத்துவிதமாய் விடயிக்குமாறு செய்யும் உபகாரம் எக்காலங் களில் உண்டு? கஉ., (2).

உச. எங்கே நின்றுகொண்டு ஆன்மா சிவபிரானது உபகாரத்தைச் சிந்தித்தல்வேண்டும்? கஉ, (3, 4.)

உரு: அவ்வுபகாரத்தை நோக்குந்தோறும் யாது மீதூருகின்றது? கஉ, (4).

உசு. அந்த இச்சை பின் யாதாக விளங்கும்? கஉ, (5).

உஎ. பேரானந்தத்தை எந்நிலையில் அனுபவிக்கும்? கஉ, (5).

உஅ. ஆன்மாவின் ஞானேச்சாக்கிரியைகளால் எது விஷயீகரிக்கப் பட்டது? கஉ, (5).

உகூ. நோக்குந்தோறும் நோக்குந்தோறும் என்றதை மாணிக்கவாசக சுவாமிகள் எங்ஙனம் அருளிச்செய்தார்? கங.

௩0. மூவிடம்பற்றிய மகாவாக்கியங்கள் யாவை? கச.

௩க. எவற்றின் சம்பந்தவிசேஷத்தை உணர்த்துகின்றது அத்து விதப்பொருள்? கஅ.

௩உ. எவற்றின் ஐயத்தை நீக்குமாறு ஆன்மா பரமான்மாக்களின் சம் பந்தம் உணர்த்த நேர்ந்தது? கரு, கசு, கஎ.

௩௩. தத்துவமசிச்சுருதியின் பொருளைப் பெரியோர் எங்ஙனம் கூறினர்? ககூ.

௩ச. அத்துவிதம் என்னும் மொழியினுற் பெறப்படும் சம்பந்தம் எத்தனை? உ0.

௩ரு. மாயாவாதி கூறும் ஐக்கியசம்பந்தம் ஒவ்வாதென்பதை விளக்குக? உக.

௩சு. குணகுணிபோலும் தாதான்மியசம்பந்தம் ஒவ்வாதென்பதை விளக்குக? உஉ.

௩எ. சமவாயசம்பந்தம் ஒவ்வாதென்பதை விளக்குக? உ௩.

௩அ. சையோகசம்பந்தம் ஒவ்வாதென்பதை விளக்குக? உச.

௩கூ. சொரூபசம்பந்தம் ஒவ்வாதென்பதை விளக்குக? உரு.

ச0. அவயவ அவயவிகளாயேனும், குணகுணிகளாயேனும் வேற்று மைப்பட்டுநிற்றல் யாது சம்பந்தம்? உசு.

சக. இருபொருள் அது அதுவாய் ஒற்றுமைப்படுதல் யாது சம்பந்தம்? உசு.

சஉ. இதனுல் தாதான்மியம் எத்தனை வகைப்பட்டது? உசு.

ச௩. எது தாதான்மியம், எது அத்துவிதம் என்று கூறப்படும்? உசு.

சச. ஆன்மா எத்தனை வகைப்படும்? உஅ.

சரு. பூதான்மா யாது? உகூ.

சசூ. அந்தரான்மா யாது? ௩0

சஎ. தத்துவான்மா யாது? ௩க.

சஅ. சீவான்மா யாது? ௩உ.

சகூ. மந்திரான்மா யாது? ௩௩.

ரு0. பரமான்மா யாது? ௩ச.

ருக. எவையெல்லாம் ஆன்மாவுக்கு உபாதியினாற் செயற்கையாம்? ௩ரு

ருஉ. எது இயற்கை? அதற்குக் காரணம் யாது? ௩ரு.

ரு௩. பரமான்மாவை ஆன்மாவிற் கண்டு பேரின்பத்தைப் பெறுவன் என்றமைக்கு ஆகமப்பிரமாணம் யாது? ௩சூ, ௩எ.

ருச. கடாகாயமும் மகாகாயமும்போல இருவகை ஆன்மாவும் அபேதமாய் நிற்குமென்றும், அதுபற்றிச் சீவான்மா கெட்டொழியும் என்றும் கூறினால் என்னை? ச0, சூ௩.

ருரு. பரப்பிரமசிவம் ஆனந்தகுணமுடையது என்றமைக்கும், சீவான்மா சிவானந்தத்தைத் துய்க்கும் என்றமைக்கும் சுருதிப்பிரமாணம் விடுக்க? ச0-ம் பிரிவு முதல் சூ௩-ம் பிரிவு இறுதியாக உள்ள பிரிவுகளிற் காண்க.

ருசூ. ஏகான்மவாதிகள் நாம் சச்சிதானந்தமாயிருக்கிறோம் என்றால், அது எந்தக் கூற்றுப்போலாம்? சூச.

ருஎ. யாதுபற்றி அங்ஙனம் கூறல்வேண்டும்? சூச.

ருஅ. வைதிகசைவர்களாகிய நாமெல்லாம் பூமா என்றதற்கு முடிவிறந்த ஆனந்தம் என்று திராவிடசுருதிகளுக்கு இணங்கப் பொருள்செய்வேமாக, ஏகான்மவாதிகள் எங்ஙனம் அதற்குப் பொருள்செய்து கெடுக்கின்றார்? சூரு.

ருகூ. முதலாஞ் சூர்ணிகை யாது? சூகூ.

சூ0. அதன்பொருள் யாது? சூஎ.

சூக. ஆன்மாக்களுக்குக் காட்டுதன்மாத்திரையோடமையாது அவ்வான்மாக்களோடு உடனின்று காணுதலால், அவர் விகாரியாகாரோ? சூகூ.

சூஉ. ஆன்மா சிவத்தை விஷயீகரிக்குங்கால், முதல்வரும் உடனின்று தம்மை விஷயீகரிப்பாரோ? எ0, எக.

சுங. தெளிவுக்காட்சி யாது? எக.

சுசு. தெளிவுக்காட்சிவாயிலாகச் சிவத்தோடு ஒற்றுமைப்பட்டுநின்று திருவடிகளை எங்ஙனம் உணர்தல்வேண்டும்? எக, கஉ, (4, 5).

சுரு. அங்ஙனம் உணர்தலால் எய்துவது யாது? எக, கஉ, (5).

சுசு. எல்லாம் சிவமெனக்கண்டு சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு (ஏகமாய்) நிற்றலை உணர்த்தும் திருவாக்குகள் யாவை? எக.

சுஎ. சிவமானது ஆன்மாவைப்போல அதனோடு உடனின்று தன்னை அறியாதிருப்பின் இழுக்காதோ? எக, (2).

சுஅ. எக்காலங்களில் ஆன்மாவோடு சிவபிரான் உடனின்று விஷயீகரிப்பர்? எஉ.

சுசு. பெத்தகாலத்திற் சிவபிரான் ஆன்மாவாய்நின்று விஷயீகரிக்குங்கால் எய்தும் இன்ப துன்பங்கள் எதுக்கு எய்தும்? யாருக்கு எய்தா? எஉ.

எ0. முத்திகாலத்தில் ஆன்மா சிவமாய்நின்று விஷயீகரிக்குங்கால் எய்தும் இன்பதுன்பங்கள் எதற்கு எய்தா? எதற்கு எய்தும்? எஉ.

எக. இரண்டாஞ் சூர்ணிகை யாது? எங.

எஉ. இதன்பொருள் யாது? எச, (1, 2).

எங. உலகத்தில் ஒருவர்க்கு ஒரு பொருளில் இச்சை நிகழ்ந்த மாத்திரத்தினால் அது கிட்டிவிடுமா? எச, 1.

எச. எப்போது ஆன்மாவுக்குச் சிவானந்தானுபூதிகிட்டை தலைப்படும்? எச, (1, 2.).

எரு. பெத்தமுத்தி இரண்டினும் ஆன்மாக்களிடத்தில் உடனின்று அவரவர் செய்யும் செய்கைக்குவாய்ந்த பயனை எவ்வெப்போது விளைவிப்பர்? எச, 3.

எசு. அன்பு பத்தி என்பவற்றின் பொருள் யாது? எரு,

எஎ. மாயாவாதிகள் பத்தியை எதற்குச் சாதகமாகக் கொள்ளுகின்றார்? எரு.

எஅ. மாயாவாதிகளுடைய சீவன்முத்திநிலை சுத்தாவஸ்தையில் எதில் நிலைபெறும்? எசு.

எசு. சீவன்முத்திநிலைக்கு மேற்பட்ட முத்திநிலைகளைக் கூறுக? எசு.

அ0. துரியமுத்திநிலையில் நின்றவர் சிவாத்துவிதிகளா? ஆம்.

அக. சைவசித்தாந்திகள் பரமுத்திநிலையினரைச் சீவன்முத்தரென்றேனும், பரமுத்தரென்றேனும் கூறுவதில் இழுக்குண்டா? இல்லை.

அஉ. பரமுத்திநிலையில் அன்பில்லாவிடத்து யாது சித்திக்காது? எசு.

அங. ஒருவர்க்கு உடம்போடிருக்குங்காற் சிவானந்தானுபூதி எய்துமாயின், அது ஏனையோர்க்குப் புலப்படாதிருத்தற்குக் காரணம் என்? எஅ.

அச. எதுபோலப் பக்குவமுடைய ஆன்மாவின் அறிவை விரியச் செய்வர்? எஅ.

அரு. வியாபக அறிவுடையார் இன்பமடைதலிற் குறைவுறார் என்றமைக்குத் திராவிடசுருதிப் பிரமாணம் கூறுக? அ0.

அசு. அங்ஙனம் பெரியபுராணத்தினின்றும் பிரமாணங்கள் விடுக்க? அக, அச.

அஎ. ஆன்மாவைச் சிவானந்தசாகரத்திற் படியச் செய்தலால் விகாரமுறுவாரோ? அசு.

அஅ. எதுபோல விகாரமுறார். அசு.

அகூ. எதுபோல ஆன்மாவின் மலத்தை நீக்குகின்றார்? அசு.

கூ0. முத்திநிலையில் ஆன்மாவுக்கு அன்பு எதனால் நிகழும்? அஎ.

கூக. அன்பின் நிலையை உணர்த்தும் திருவாக்குகள் கூறுக? அஅ.

கூஉ. ஆன்மா சிவபிரானோடு ஒன்றுபட்டுக் கூடுங்கால் ஏகதேச அறிவு கெட்டுக் கூடுமென்றால் என்னை? கூ0.

கூங. ஏகதேச அறிவு கெடாது கூடுமென்றால் என்னை? கூ0.

கூச. பின் எங்ஙனம் அவ்விரண்டும் கூடும்? கூ0.

கூரு. எதுபோல மும்மலங்கள் மாத்திரம் கெடும்? கூ0.

கூசு. ஏனைப் பசுபாசங்களெல்லாம் பொதுவியல்புபற்றி அடிமையும் உடைமையுமேயாயினும், முத்திநிலையில் ஆன்மா சிவத்தை அறிந்து இச்சித்து அநுபவிக்குங்கால், எவ்வியல்பினால் அச்சிவத்துக்கு அடிமையாம்? கூக.

கூஎ. நான்காஞ் சூத்திரமுதலிய மூன்றும் எவை முறையே கூறப்பட்டன? கூஉ.

கூஅ. இம்மூவகை அவஸ்தையையும் உவமைமுகத்தால் விளக்குக? கூங.

கூகூ. கேவல சகலம் இரண்டினும் சுத்தாவஸ்தை சிறந்ததென்றமைக்குச் சிவாகமப்பிரமாணம் கூறுக? கூச, கூரு.

க00. சமஸ்தவேதங்களின் சாரமாயுள்ள மந்திரம் யாது? கூகூ.

க0க. காயத்திரிமந்திரம் எந்தெந்த வேதங்களிலே காணப்படுகின்றது? கூகூ.

க0உ. காயத்திரிமந்திரத்தின் பொருள் யாது? கூஎ.

க0௩. காயத்திரிமந்திரப்பொருளை விளக்கும் உபப்பிருங்கணம் யாது? கூஅ, கூகூ.

க0ச. காயத்திரியிலே தேவசவிதா எனப்பட்டவர் யாவர்? கூகூ.

க0ரு. சூரியனுக்கு அபின்னமாயுள்ளது யாது? கூகூ.

க0கூ. சிவனுக்கு அபின்னமாயுள்ளது யாது? கூகூ.

க0எ. சூரியனது ஒளியும், சிவபிரான் சத்தியுமாகிய இரண்டையும் காயத்திரியின் எந்தப் பதம் சுட்டுகின்றது? கூகூ.

க0அ. பர்க்கஸ் என்னும் மொழியிலுள்ள பகரம், ரகரம், ககரம் என்னும் மூவெழுத்துக்களின் பொருள்கள் என்னை? கூகூ.

க0கூ. ஆன்மாக்களாகிய எங்கள் ஞான இச்சாக்கிரியைகளைச் செலுத்துகின்றவர் யாவர்? க00.

கக0. பெத்தகாலத்திலே திரோதானசத்தியாயும், முத்திகாலத்தில் அருட்சத்தியாயும் நின்று பிரபஞ்சவிஷயத்தினும், சிவஞேயவிஷயத்தினும் உஞற்றுதலை உணர்த்துதற்குப் பிரயோகிக்கப்பட்ட வடமொழிப்பதம் யாது? க00.

ககக. சிவாதித்தியர் நமது ஞான இச்சாக்கிரியாசத்திகளை உண்ணின்று பிரபஞ்சவிஷயத்திற் செலுத்திநிற்றல் யாது கிருத்தியம் எனப்படும்? க0க.

ககஉ. சிவாதித்தியர் நமது ஞானேச்சாக்கிரியைகளைச் சிவஞேயவிஷயத்தை விஷயீகரிக்குமாறு செலுத்தித் தாமும் உடனின்று அதனை உணர்தல் யாது கிருத்தியம் எனப்படும்? க0க.

கக௩. காயத்திரிப்பொருளும் சிவஞானபோதப்பொருளும் ஒன்றுமென்று காட்டுக? க0உ, க0ச.

ககச. அபக்குவன் எவனைப்போல எவற்றை அறியான்? க0ரு.

ககரு. ஆசாரியர் அபக்குவனுக்கு எவனைப்போல அறிவிக்கமாட்டார்? க0கூ.

கக௯. ஆதித்தனுக்குள்ள இரண்டு குணங்களையும் கூறுக? க0எ.

ககஎ. கண்ணுக்குள்ள இரண்டு குணங்களையும் கூறுக? க0அ.

ககஅ. ஆசாரியர்க்குள்ள இரண்டு குணங்களும் யாவை? க0௯.

கக௯. ஆன்மாவுக்குள்ள இரண்டு குணங்களும் யாவை? கக0.

கஉ0. பரமே பார்த்துக்கொண்டிருக்கும் சீவன்முத்தர்க்கு ஓரோவிடத்துப் பழக்கவாடையால் ஏகதேச உணர்வு உளதாயின் யாது செய்தல் வேண்டும்? ககக, ககஉ.

கஉக. ஞானயோகிகளுக்கு ஓரோவழிச் சுகதுக்கங்கள் வந்து தாக்கின் அவர் யாதுசெய்வார்? ககஉ.

கஉஉ. எஞ்ஞான்றும் உட்கண்ணினாற் பரநடனதரிசனஞ் செய்யும் விஷ்ணுவானவர் எங்கேபோய் எவரைப் புறத்தே தரிசித்தார்? ககஉ, ககச.

கஉ௩. சுவேதாரணியத்துக்குமாத்திரமன்றிச் சிதம்பரத்துக்கும் போனாரோ? கக௯, கஉ0.

கஉச. தாண்டவங்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை? கஉ௩.

கஉ௫. சுவேதாரணியத்திலும், சிதம்பரத்திலுமுள்ள நடனங்களின் பெயர்கள் என்னை? கஉக.

கஉ௬. சிற்றின்பச் சிறுபோகத்துக்கு எந்த அறிவும், பேரின்பப் பரபோகத்துக்கு எந்த அறிவும் வேண்டற்பாலன? கஉச.

கஉஎ. வியாபக அறிவுவேண்டுமென்று முதனூலாசிரியரும், வழிநூலாசிரியரும், புடைநூலாசிரியரும் விடுத்த பிரமாணங்கள் யாவை? கஉ௫.

கஉஅ. சேக்கிழார் அதனை எங்ஙனம் கூறியுள்ளார்? கஉ௫.

கஉ௯. "உணர்வு நேர்பெற வருஞ்சிவபோகம்" என்றற் றொடக்கத்த பெரியபுராணச்செய்யுட்பாகத்தின் பொருள் என்னை? கஉ௬.

க௩0. "பெற்றசிற் றின்பமே பேரின்ப மாம்" என்றவாறு, எவற்றையும் பேரின்பசிவமாகக் காணவல்லார்க்கு ஆனந்ததாண்டவேசுவரர் எதிர்ப்படின் அவர் எதனைத் தலைப்பட்டோராவர்? கஉ௬.

க௩க. பரநடனானந்தமும், சிவபரபோகானந்தமும் ஒன்றுமென்று நிரூபணஞ் செய்க? கஉஎ.

க௩உ. சிவஞானபோதத்துப் பதினொரஞ் சூத்திரம் எதிலே முற்றிநின்றது? கஉஎ.

கஙௗ. சிவபோகமாவது யாது? கஉஅ.

கஙச. எது சமாதிப்பராமுத்திநிலே? கஉஅ.

கஙரு. இந்தச் சிவபோகம் மற்றெப்பெயர் பெறும்? கஉஅ.

கஙசூ. இப்போது பரபோகானந்தத்தை அடைந்துகொண்டிருப்பவர் யாது பெயர் பெறுவர்? கஉசூ.

கஙஎ. சிவபோகநிலேயை அடைந்தவர் தேகம் நீங்குங்கால் இங்கே லயமடைகின்றார் என்றமைக்குப் பிரமாணம் யாது? கங0, கஙக.

கஙஅ. இங்கே லயமடைவாராயின் சுந்தரமூர்த்திநாயனார் திருநந்திதேவர்முதலாயினோர் திருக்கைலாசமாகிய ஓர் பதத்தை அடையலாமா? கஙக, கஙரு.

கஙசூ. இதனே உவமைவாயிலாக விளக்குக? கஙக.

கச0. எங்கிருந்தாலும் மெய்யடியார்கள் சகஜநிஷ்டையிலிருப்பர் என்றமைக்குப் பிரமாணம் கூறுக? கஙஉ, கஙௗ.

கசக. திருச்சிற்றம்பலதடஸ்தநடனம் எந்தெந்த உபநிடதங்களினும், வேதாந்தசூத்திரத்தினும் கூறப்பட்டுள்ளது? கஙசூ.

கசஉ. சொரூபநடனம் எங்கே கூறப்பட்டுள்ளது? கஙசூ.

கசௗ. வைதிகசைவகாயத்திரியில் ஆன்மாவைச் செலுத்தித் தாமும் உடன்சென்றும், வைதிகசைவசிவஞானபோதத்தில் ஆன்மாவுக்குக் காட்டித் தாமும் உடன்கண்டும் நிற்கும் சிவம் திராவிடசுருதியில் எங்ஙனம் கூறப்பட்டிருக்கின்றது? கஙசூ.

கசச. எங்கே பரநடனஞ் செய்கின்றார்? கஙஎ.

கசரு. இதற்குப் பிரமாணம் என்னே? கஙஎ.

கசசூ. இந்தப் பரநடனத்தைத் தரிசித்தலால் எய்தும் இன்பம் எது போலாகும்? கஙசூ.

கசஎ. பரநடனதரிசனத்தினல் எய்தும் மெய்ப்பாடு யாது? கஙஅ.

கசஅ. பரானந்தநிருத்ததரிசனஞ் செய்வோரது தானம் யாது பெயர் பெறும்? கஙசூ.

கசசூ. இதற்குப் பிரமாணம் யாது? கச0.

கரு0. நடேசபெருமானது ஆனந்தநிருத்ததரிசனஞ் செய்யாது சிலர் எங்கே பொறிந்து வீழ்ந்தார்? கசக.

கருக. அதற்கு விடுக்கப்பட்ட உவமைகளைக் கூறுக? கசக.

கருஉ. இந்தச் சிவஞானபோதத்துண்மைநெறி யார்க்குப் புலப்படும்? கசக.

கருங. பாமர அஞ்ஞானிகள் எதனைப் பார்த்து மகிழ விரும்புகின்றார்? கசஉ.

கருச. எதனைப் பார்த்து மகிழ்தற்கு மெய்ஞ்ஞானிகளுக்குமாத்திரம் வன்மை உளதாகின்றது? கசஉ.

---

## அணைந்தோரியல்பு.

### பயனியல்

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

க. முக்த்யை ப்ராப்ய ஸதஸ்தேஷாம் பஜேத்வேஷம் சிவாலயம்।
ஏவம் வித்யாச்சிவஜ்ஞாநபோதே சைவார்த்தநிர்ணயம்॥

முக்தியை பிராப்ய சதஸ்தேஷாம் பஜேத்வேஷம் சிவாலயம்।
ஏவம் வித்யாச்சிவஞாநபோதே சைவார்த்தநிர்ணயம்॥

உ. (இ-ள்.) முக்த்யை ஸத: ப்ராப்ய = வீடுபேற்றின்பொருட்டு மெய்யடியார்களை அடைந்து; தேஷாம் வேஷம் சிவாலயம் பஜேத் = அவர்கள் திருவேடத்தையும் சிவாலயத்தையும் (சிவமெனக்கொண்டு) வழிபடுக; ஏவம் = இங்ஙனம்; சைவார்த்தநிர்ணயம் = சைவாகமங்களிலே (ஆங்காங்குப் பிரதிபாதிக்கப்பட்ட பதிபசு பாசங்களின் தடஸ்த சொரூபலக்ஷணங்கள் மாறுபாடின்றி ஒற்றுமையுறக் கூறப்பட்டிருக்கும்) பொருள் நிச்சயத்தை; (அஸ்மிந்) சிவஜ்ஞாநபோதே வித்யாத் = இந்தச் சிவஞானபோதத்தில் அறிந்துகொள்க.

ங. செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

ச. (இ-ள்.) செம்மலர் = சிவந்த மலர்போலும்; நோன் தாள் = வலிய பாதத்தை; சேரல் ஒட்டா = கூடவொட்டாத; அம்மலம் கழீஇ = அந்த (மூன்று) மலங்களைப் போக்கி; அன்பரொடு மரீஇ = சிவபத்தரோடு கூடி;

மாலற நேயம் மலிந்தவர் வேடமும் = மயக்கமறச் (சிவபெருமானிடத்து) அன்பு மிகுந்துள்ளவருடைய திருவேடத்தையும்; ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே = சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு வழிபடுவான் (சீவன்முத்தன்.)

ரு. (க. ரை.) அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துகின்றது.

சு. (க. பொ.) அயரா அன்பினாற் சிவத்தை அணைந்த முத்தராயினோர்க்குச் சீவன்முத்திநிலையிலே அவர் அறிவும் இச்சையும் கிரியையும் ஒரோவழிப் புறத்துச்செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவை என்று உணர்த்துதல் வாயிலாக, வாக்குமனாதீதமாய் அன்பினால் ஆன்மாவானது வழிபடுமாறுநின்ற சிவபிரானை வாக்குமனகோசரமாமாறு அவரைத் தெளியக் கண்டு வழிபடுமாறு உணர்த்துகின்றது என்பதாம்.

எ. (சூ. பி. பொ.) அயரா அன்பின் அரன்கழல் அடைந்த சீவன்முத்தன் செங்கமலமலர்போல விரிந்து விளங்கிய சிவபிரான் திருவடியை அணைய உடன்படாது தடுத்து மறதியைச் செய்விக்கும் மும்மல அழுக்கை அருண்ஞானஜலத்தினாற் கழுவி, (சீவன்முத்தனாகிய) தன்னைப்போல அயரா அன்பினாற் சிவானந்தத்தைத் தலைப்பட்ட மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி, அவ்வாறு கழுவப்பட்டு ஆணவமலமயக்கம் ஒழியுமாறு, அன்பரோடு மருவி, அன்புமிக்குடைய அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவபெருமானே எனக் கண்டு வழிபடுக என்பதாம்.

அ. "அம்மலம் கழுவி" என்றமையால் முத்தரது அறிவு வியாபரிக்குமிடமும்,

சு. "மெய்ஞ்ஞானிகளோடு கூடி" என்றமையால், அம்முத்தரது இச்சை வியாபரிக்குமிடமும்,

க0. "வேடமும் ஆலயமும் வழிபடும்" என்றமையால் அம்முத்தரது கிரியை வியாபரிக்குமிடமும் கூறப்பட்டன.

கக. இதனாற் சீவன்முத்தருடைய அறிவும், இச்சையும், கிரியையும் இவையொழிந்த ஏனைய இடங்களை நாடா என்பதாம்.

கஉ. செல்வப்பெருக்கமுடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பை நோயின்றி வளரச்செய்யும் மருந்துமாவதுபோல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதும் தாக்காது சிவானந்தம் மேன்மேல் வளரச்செய்யும் சாதகமுமாயிற்று.

## முதலாஞ் சூர்ணிகை.



கங. மும்மலங்களையும் களைக.

கச. (சு. பொ.) ஆணவம், மாயை, கன்மம், என்னும் மும்மலங்களும் மெய்யுணர்ந்து நிஷ்டைகூடினோரிடத்தும் யாதானுமோர் வழியால் நுழைந்து, அவரது மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய விபரீதவுணர்வை மேற்படுத்திவிடுமாதலின், அவை அவர்க்கு ஆகாவாதலான், ஆணவ முதலிய மும்மலங்கள் மூன்றையும் களைக என்பதாம்.

கரு. அம்மும்மலங்களும் அஞ்ஞானத்திற்கேதுவாய் வந்து நுழையும் என்றும், அங்ஙனம் நுழைதல் முத்தர்க்கு ஆகாதென்றும் கூறப்படுகின்றது:—

கசா. (வெ. பொ.) புண்ணியபாவப்பயன்களாயும், புண்ணியபாவங்களுக்குக் காரணமாயுமுள்ள விருப்புவெறுப்புக்களாய்ப் பொருந்துகின்ற இக்கன்மமலமும், பிருதிவிமுதல் அசுத்தமாயாதத்துவம் இறுதியாய்க் காணப்படுகின்ற இம்மாயாமலமும், சுட்டி அறிவதாய் விபரீத உணர்வை உண்டாக்கும் இவ்வாணவமலமுமாகிய இந்த மூன்று மலங்களும் மெய்ஞ்ஞானிக்கு ஆகாவாதலின், அவற்றை விடுத்தொழிதல்வேண்டும்.

கஎ. எல்லா மலங்களையும் பற்றறத் துடைத்து உண்மைஞானத்தை அடைந்த மெய்ஞ்ஞானிகளுக்கு உடம்பு உள்ளளவும் பிராரத்தவினை அவ்வுடம்பை ஒட்டி நிற்றலான், அஃது அவர்க்கு ஒரோவிடத்து வாதனை வயத்தினால் இங்குளிவாங்கும் கலம்போல் வந்து தாக்குதலால், அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்; அவை உளவாகவே, பரமே பார்த்திருப்போர்க்குப் பிருதிவிமுதல் மாயாதத்துவமிறுதியாகிய ஏகதேசப்பொருள் புலப்படும்; அது புலப்படவே, அவற்றைச் சுட்டி உணர்வதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகும். இங்ஙனம் அறிவு சோரும் சமயம் பார்த்து அம்மும்மலமும் இம்முறையானே வந்து தலைப்பட்டுச் சிவபோகப்பெருவாழ்வை இழப்பிக்குமாதலின், அவை மெய்ஞ்ஞானிக்கு ஆகா எனப்பட்டது. விபரீத உணர்வாகிய அஞ்ஞானம் ஏகதேசக்காட்சியாலாயதெனவும், அவ்வேகதேசக்காட்சி விருப்புவெறுப்புக்களாலாயதெனவும், அவ்விருப்புவெறுப்புக்கள் பிராரத்தவினையை அநுபவிக்குங்கால் எய்திய தற்போதத்தினாலாயவெனவும் அறிந்து, அங்ஙனம் செல்வதாகிய தற்போதம் முனையாவண்ணம் ஒங்குணர்வாகிய சிவஞானத்துள் அடங்கி, சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்படி ஞானநிலையில் உறைத்து நிற்றல்தான் அம்மும்மலங்களும் மேன்மேல் முறுகவொட்டாது, அவற்றைத் தோன்றும்போதே துடைத்துவிடுதற்கு வாயிலாம்.

## இரண்டாஞ் சூர்ணிகை.

---

கஅ. சிவஞானிகளுடனே கூடுக.

கக. (சூ. பொ.) இங்கே சிவஞானிகள் எனப்பட்டார் பத்தியினுன் மறவாது சிவனருள் வழிப்பட்டு நின்று, சிவத்தை அடைந்த சீவன்முத்தராகிய சிவபத்தரேயாம். ஆணவமுதலிய மும்மலங்களும் அஞ்ஞானமாகிய விபரீத உணர்வைச் செய்வது இலக்கு வாய்த்தபோது மாத்திரமேயாம். சிவபக்தரல்லாதார் இலக்குவாயாதவிடத்தும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களாலும் தம்மோடொப்ப விபரீத உணர்வைச் செலுத்தியே விடுவாராதலின், அம்மலங்களினும் கொடியராகிய அவரை விட்டொழித்து, அக்கொடியரல்லாத சிவபக்தர்களோடு இணங்குக என்பதாம். வெறுப்பும் விருப்பும் ஒழித்துப் பல்லுயிரையும் குழந்தைகள் என ஒப்ப நோக்கும் செல்வக்கடவுட்டொண்டர்க்கு இங்ஙனம் அவபக்தர்களிடத்து வெறுப்பும், சிவபக்தர்களிடத்து விருப்பும் நிகழவேண்டினமைக்குக் காரணம் அதுவேயாம்.

உ0. சிவபக்தியில்லாதாரோடு இணங்காதிருத்தல் ஒன்றுமாத்திரம் போதாது என்றும், சிவபக்தர்களோடே இணங்குதல்வேண்டும் என்றும் கூறப்படுகின்றது:—

உக. (வெ. பொ.) மும்மலங்களும் நீங்கி, சிவபிரான் அத்துவிதமாய் நின்று காட்டியும் கண்டும் உபகரிக்கும் பரநடனப் பெருங்கருணையை மறவாது கடைப்பிடிக்கும் சிவஞானக்கண்ணுடைய மெய்ஞ்ஞானிகள் (அச்சிவானந்த நிறைவை இழப்பித்து, வியாபக அறிவைக் கெடுத்து, ஏகதேச அறிவைக் கொடுத்து, விபரீத உணர்வைத் தொடுத்து, பிறவிக்குழியில் வீழ்த்துதலாகிய தீநெறிக்கண்ணே செலுத்தித் துயருறுத்தும் அவபக்தர் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சேர்க்கை அறும்பொருட்டு), அம்மறதியை மாற்றி, ஞானக்கண்ணை விளக்கி, பிறவிக்குழியினின்றும் எடுத்து, விபரீத உணர்வைக் கெடுத்து, ஏகதேச அறிவைத் தடுத்து, வியாபக அறிவைக் கொடுத்து, சிவானந்தநிறைவிலே விடுத்தலாகிய நன்னெறிக்கட்செலுத்தி வாழ்விக்கும் சிவபக்தர்கூற்றிலே பேரன்புடையராய், அவ்வன்புவாயிலாக விளங்கும் சிவஞானக் கண்ணினால் அந்தச் சிவபோகநிலையைப்பற்றி உணரப்பெற்றவரை எல்லா அநர்த்தங்களுக்கும் மூலமாய்வரும் பிராரத்தவினை வாதியாதென்பதாம்.

உஉ. சிவஞானக்கண்ணினுற் சிவத்தைத் தரிசித்து உணரப்பெற்ற தவமொன்றே மெய்த்தவமாம்; இஃதொழிந்த தவங்களெல்லாம் மெய்யாதலின்றி அவமாகிய மலநடையாய்ப் போதலிற் பொய்த்தவங்களாம்.

உங. சிவபக்தர்களிடத்து அன்புசெய்து, அவரது மனம் சொல் செய்கையின்வழி நிற்போர்க்கு உலகியலுணர்வுமாறிச் சிவாநுபூதியுணர்வே மேம்

பட்டு நிகழும்; அங்ஙனம் நிகழவே, பௌதிக உடம்பு உள்ளளவும் நீங்காதுள்ள பிராரத்தவினைகள் அவர்க்குப் புசிப்பாகச் செல்லாமையால், அவை அவரை வாதிக்கமாட்டா; அவை வாதியாதொழியவே அவபக்தர் திறத்துச் சேர்வைபற்றறக் கழிந்துவிடும்; வீட்டுணர்வை நிலைபெறுத்தும் சிவபக்தர்களோடு இணங்கினாலன்றிப் பண்டுதொட்டுப் பயின்று வந்த தீயோரது இணக்கம் அறாது என்றோர்க. இதுபற்றியே மாணிக்கவாசகசுவாமிகள் "அடியேனடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன், அடியார் நடுவு ளிருக்கு மருளைப் புரியாய்" என்றருளிச்செய்தார். சிவபோகச்செல்வத்தை ஐம்புலவேடர் கொள்ளைகொள்ளவிடாது தடுத்தற்கு வேலியாயுள்ளார் சிவானுபவசிவபக்தர்களேயாம் என்க.

## மூன்றாஞ் சூர்ணிகை.



உச. சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.

உரு. (சூ. பொ.) சேதனப்பொருள் அசேதனப்பொருள் எல்லாவற்றினும் சிவபெருமான் கலந்து வியாபகமாய் நிற்றல்பற்றி, ஸ்ரீருத்திரம் நின்றதிருத்தாண்டகமுதலியன பகுப்பில்லாமல் அசேதன சேதனப் பொருள்களையெல்லாம் தனித்தனி எடுத்தோதி வழிபாடு கூறுதலால், மெய்ஞ்ஞானிகள் பகுப்பின்றி எங்கணும் பரமேசுவரர் உளர் எனக் காண்டல் பொருத்தமேயாயினும்,

உசு. காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை, சாந்து, ஆபரணம், குங்குமமுதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறுபோல, மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரத்தினாலே இன்பஞ் செய்தலினாலும், சிவபக்தரது திருவேடம் சிவாலயத்துச் சிவலிங்கம் என்னும் இரண்டினிடத்தினும் தயிரில் நெய்போல விளங்கி, ஏனைய இடங்களிற் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்றலானும், மெய்ஞ்ஞானிகளாகிய பத்தரது திருவேடத்தையும் சிவலிங்கத்தையும் சிவபெருமான் எனக் கண்டு வழிபடுக என்பதாம்.

உஎ. சிவபிரான் சிவவேடத்திற் பிரகாசமாயும் ஏனைய இடங்களில் அப்பிரகாசமாயும் எங்ஙனம் உளர் என்று கூறப்படுகின்றது:—

உஅ. (வெ. பொ.) 1. வாக்குமனாதீதமாய் நின்ற பரம்பொருளாகிய சிவபிரான் உலகத்தார் தம்மை அறியுமாறு கருணைசெய்து தமது திருவேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய தமது வடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாகநின்று அங்கங்கே அறிவு விளக்குதலானும்,

(2) ஒன்பதாஞ் சூத்திரத்து ௯௯. (7), (8)—னும், ௯௫, ௯எ—ம் பிரிவினும் கூறப்பட்டவாறு தம்மைச் சிவோகம்பாவனையால் உணரச் செய்தலானும்,

(3) எட்டாஞ் சூத்திரத்து சகூ-ம் பிரிவினும், ஒன்பதாஞ் சூத்திரத்து எகூ, அரு, அகூ-ம் பிரிவுகளினும் கூறப்பட்டவாறு இதயத்தினும், ஒன்ப தாஞ்சூத்திரத்து கூ, க0, உஎ-ம் பிரிவுகளினும், பத்தாஞ்சூத்திரத்து கஙு-ம் பிரிவினும் கூறப்பட்டவாறு அண்டத்தினுமாகக் குறியின்கண் வைத்து அவ ரைக் கூடுஞ் செயலானும்,

(4) குறியிறந்து நின்ற தம்மைப் பதினோராஞ்சூத்திரத்து கஉ, (3), (4), (5)-ம் பிரிவுகளிற் கண்டபிரகாரம் உள்ளவாறு உணரும் அன்பராகிய அவர்களிடத்துத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றுந் தன்மையானும், எனவே வேடம், பாவனை, செயல், தன்மை என்னும் நான்கினுலும் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாவராதலால், அவர் சிவன் என வழிபடற்பாலர்; பாசக்கட்டுடைய ஏனையோர்மாட்டு அச்சிவபெ ருமான் பாலில் நெய்போல விளங்காது நிற்றலால் அவரது பற்று விட்டொழி தற்பாலதேயாம்.

உகூ. வேடமுதலிய நான்குமுடைய சங்கமவேடத்தினிடத்து எக்கா லமும் சிவபிரான் பிரகாசமாய் நிற்பர்.

ஙo. சிவபக்தர்களுக்குக் கூறிய இயல்பில்லாத சிவலிங்கத்தினும் சிவ பிரான் எங்ஙனம் பிரகாசிக்கின்றார் என உணர்த்தப்படுகின்றது:—

ஙக. (வெ. பொ.) (1) ஆன்மாக்களுக்குப் புத்தி முத்தி அளிக்கும் பொருட்டுக் காணப்பட்ட தாவரவடிவாகிய அருவுருவச்சிவலிங்கமுதலிய திருமேனிகளைச் சரியையாளர்கள் பகுத்தறிதலில்லாது சிவமெனக்கண்டு வழிபடுவார்கள்; அவர்களுக்குச் சிவன் அங்கே வெளிப்படாது நின்று அரு ளுவர்;

(2) கிரியையாளர்கள் ஈசானமுதலிய மந்திரங்களினாலே திருவுருக் கொண்டார் என்றறிந்து மந்திரநியாசத்தினால் வழிபடுங்கால், அவர்களுக்குச் சிவபிரான் கடைந்தபோது தோன்றும் அக்கினிபோல அவர்கள் விரும்பிய வடிவாய் அவ்வத்திருமேனிகளிலே அவ்வப்போதுதோன்றிநின்று அருளுவர்;

(3) யோகிகளுடைய இதயம் எங்கும் வியாபித்திருக்கும் சிவபெரு மான் இந்தச் சிவலிங்கத்திருமேனியினும் இருந்து பூசை கொண்டருளுவார் என்று யோகிகள் சாந்தியமந்திரங்களினாலே வழிபடுங்கால், அவர்களுக்குச் சிவபெருமான் அவ்வம்மந்திரங்கள்வாயிலாக, அவர்கள் விரும்பிய வடிவ மாய் அவ்வத்திருமேனிகளில் கறந்தவிடத்துத் தோன்றும்பால்போல அவ் வப்போது தோன்றி நின்று அருளுவர்;

(4) ஞானிகள் அன்பு மாத்திரத்தினாலே சிவபெருமானிடத்தில் வழி பாடு செய்வார்கள்; சிவபெருமான் அவர்களுக்குக் கன்றை நினைந்த தலையீற் றுப்பசுவின் முலைப்பால் போலக் கருணைமிகுதியினால் அவ்வன்பே தாயாகி எப்பொழுதும் வெளிப்பட்டுநின்று அருளுவர்.

## நான்காஞ் சூர்ணிகை.



௩௨. வழிபடாமையை ஒழிக.

௩௩. (சூ. பொ.) மும்மலங்களைக் களைதலும் சிவஞானிகளுடனே கூடுதலும், சிவனடியாரோடிணங்குதலும், சிவலிங்கங்களைச் சிவனெனக்கண்டு வழிபடுதலுமாகிய இவை சீவன்முத்தர்க்கு இலக்கணமாய் அமைந்தவிடத்தும், நரம்பு, நாடி, இறைச்சி, என்புமுதலிய தாதுக்களின் வேற்றுமையின்றி, அதுவததானுப் வருகின்ற ஆன்மாவானது அந்நரம்பு முதலியவற்றுக்கு வேறுமாயினாற்போல, உயிர்க்குயிராகிய சிவபிரான் சேதனாசேதனப்பிரபஞ் சமனைத்தினும் அதுவது தாமாயும், அல்லராயும் நிற்பராகலான், கலப்புப் பற்றி அபேதமாய்க்காணும் காட்சிபற்றி எய்திய வழிபாடு பொருட்டன்மையாற் பேதமாய் நிற்றலைக் காணுமிடத்து எய்தாமையின், சிவனடியாரையும் சிவலிங்கத்தையும் சிவமெனக்கண்டு வழிபடுக என்பதாம்.

௩௪. சிவபிரானுக்கு எப்பொருட்கண்ணும் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்குமியல்பு உளதாதலின், சிவவேடம் சிவலிங்கம் என்பவற்றை வழிபடுக என்றமைக்குக் காரணம் கூறப்படுகின்றது:—

௩௫. (வெ. பொ.) சிவபிரான் உயிர்ப்பொருள் உயிரில்லாப்பொருளெங்கணும் நிற்குநிலையை உணரப்பெற்றார்க்கு, கண்ணும் ஆதித்தனும் போல அது இது என்று கூறப்படும் பேதநிலையினருமல்லராய், உடலும் உயிரும்போல அதுவே என்று கூறப்படும் அபேதநிலையினருமல்லராய், குணகுணிபோல அதுவே இது என்று கூறப்படும் பேதாபேதநிலையினருமல்லராய், அம்மூன்றற்கும் பொதுமையாய்க் கண்ணொளியும் ஆன்மபோதமும் போல அத்துவிதநிலையினராதலின், சடசித்துக்களெல்லாம் சிவவடிவேயாமாயினும், அவற்றுள் அன்பு விளையுமிடத்தில் வழிபடல்வேண்டும் என்பது.

௩௬. பசுவின் வடிவமெங்கணும் காணப்படாத பால் கன்றைநினைந்த தலையிற்றுப்பசுமுலையின்கண்ணே விம்மி ஒழுகுவதுபோல, எப்போதும் வெளிப்பட்டருளுவதாகி அடிப்பட்டுவரும் அன்பானது திருக்கோயிலுள்ளிருக்கும் சிவலிங்கத்திருமேனியிலன்றி விளையாமையால், சிவலிங்கத்திற் செய்யும் வழிபாடே அத்துவித ஞானத்தைநிலைபெறுத்துமென்றறியற்பாற்றும்.

௩௭. இதனாற் சிவலிங்கவழிபாடு கூறப்பட்டது. இந்த அத்துவித ஞானம் அசத்தாயுள்ள பேதங்களைக்கண்டு நீங்குதலாலாகும் பயனாதலின், அதன்பொருட்டு வழிபாடு வேறு விதித்தமை மிகையாகாதென்று கூறப்படுகின்றது:—

ங.அ. (வெ. பொ.) உடம்பினுள்ள பிராரத்தவாதனை ஆன்மாவுக்குத் தாக்கும்வரையும், அதனால் வரும் விருப்புவெறுப்புக்களும், அவைவாயிலாக எய்தும் பிருதிவிமுதல் மாயையீறாகிய மாயேயமும், அதுபற்றி உண்டாம் விபரீதஞானமுமாகிய அசத்துக்கள் நீங்கினாலும், பின்வந்து கூடி மேம்படுவனவாதலான், இவை அனைத்துக்கும் மூலமாகிய பிராரத்தவினை வாசனை பற்றற நீங்கினாலன்றி அத்துவிதஞானம் மேம்பட்டு நிகழாதாமாதலின், அது பற்றறக் கழியும்பொருட்டு மெய்ஞ்ஞானிகளை நாடி வழிபடவே, அப்பிராரத்தவினை ஒழிந்து அம்மெய்யுணர்வு மேலோங்கும்; ஆகலான் அன்பினால் அவரை வழிபடுதல்வேண்டும் என்பதாம்.

ஙகூ. இதனாற் சிவபக்தர்வழிபாடு கூறப்பட்டது.

சo. அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்டொருவியபோது உளதாகும் சிவஞானசொரூபம் நிலைபெறுதல் அந்த அசத்துளதாதற்கு வேராயுள்ள பிராரத்தவினை ஒழிந்தவிடத்திலேயாமாதலின், அவ்வினையை வேரறுத்து நிலைபெறச் செய்தற்கு, அங்ஙனம் நிலைபெறுத்திய சிவஞானிகளிடத்து வழிபாடு இன்றியமையாது வேண்டப்படும் என்றவாறாயிற்று.

சக. அப்பிராரத்தவாதனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறும்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்ஷரமும் விதிப்படி உச்சரிக்கற்பாற்றாம்; இவ்வுண்மை சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிக்கவி முதலியவற்றின் ஐந்தெழுத்தருணிலையை இன்புறுநிலைக்குப் பின்னாக அணைந்தோர்தன்மையைச் சாரவைத்தோதியவாற்றால் உணரப்படும்.

சஉ. "வேள்விபுரிந்தோன் சுவர்க்கமடைவன்" எனப் பயன்பற்றி விதிக்கப்படும் யாகமுதலியவற்றைப் பயன் விரும்பாமையாலேனும், பின்னர்ச் செய்து பயன்பெறலாமென்றேனும் ஓரோவிடத்துத் தவிர்த்தல்போல, சிவாசாரியரையும் ஓரோவிடத்து வழிபடாது தவிர்க்கலாமே எனின், அது கூடாதென்றும், அங்ஙனஞ் செய்யாவிடின் அது குற்றமாய் முடியும் என்றும் கூறப்படுகின்றது:—

சங. (வெ. பொ.) தன்னுண்மை அறியமாட்டாது குருடாய்க்கிடந்த ஆன்மாவுக்குப் பலவாற்றானும் அதினுண்மையைத் தெளிவித்து, எத்தனையும் எளிய அந்த ஆன்மா தன்னை அறிந்தவிடத்து, முற்றுணர்வு, வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவேபாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, தன்வயமுடைமை, இயற்கையுணர்வினனாதல், தூயமேனியினனாதல் என்னும் எண்குணங்களால் நிறைந்து தன் வண்ணமாகச் செய்தளித்த பெரியதோருதவியை அதன்பின்னர் மறக்குமாயின், அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம் கழுவப்படுமாறுபோலத் தீருமியற்கைத்தாகிய குற்றமன்றாதலானும், ஞானாசாரியராய் எழுந்தருளிய சிவ

பிரான் அங்ஙனம் தான்ருனகச் செய்தாலும், இதுகாறும் தனக்குச் சுதந்தரமின்றி அச்சிவபிரானது உபகாரத்தையின்றி அமையாததாய், அடிமையாகிய ஆன்மா எக்காலமும் அவ்வாறு அடிமையேயாமாதலானும், தான்ருனகச் செய்தளித்த அந்த ஞானசாரியப்பெரியோரை வழிபடுதலே அவ்வான்மாவுக்கு வலியாவதாம்.

௪௪. 𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌰𑍋 𑌵𑌿𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌵𑌿𑌶𑍋𑌕𑍋 𑌵𑌿𑌜𑌿𑌘𑌤𑍍𑌸𑍋𑌽𑌪𑌿𑌪𑌾𑌸𑌃 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌃 𑌸𑌤𑍍𑌯𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃।

ஏஷ ஆத்மாபஹதபாப்மா விஜரோ விமிருத்யுர் விசோகோ விஜிகித்சோபிபாஸஃ சத்யகாமஃ சத்யசங்கல்பஃ।

௪௫. "இந்த ஆன்மா (அபஹதபாப்மத்துவம்) சர்வஞ்ஞத்துவமுதலிய எண்குணங்களை உடையது" என்று சாந்தோக்கியசுருதி கூறுகின்றமையானும், இந்த அபகதபாப்மத்துவமுதலியவற்றின் பொருளும், முக்தன் அந்த எண்குணங்களை அடையுமாறும் பிரமசூத்திரசைவபாஷ்யத்திற் (௪. ௪. ௯.) காணப்படலானும்,

௪௬. 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌤𑌾 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌰𑌨𑌾𑌦𑌿𑌬𑍋𑌧𑌃 𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌲𑍁𑌪𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌃। 𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌨𑌿𑌰𑌾𑌮𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌦𑍇𑌹𑌶𑍍𑌶𑌿𑌵𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌿॥

ஸர்வஞ்ஞதா திருப்தி ரநாதிபோதஃ ஸ்வதந்திரதா நித்யமலுப்தசக்திஃ।
அநந்தசக்திச்சநிராமயாத்மா விசுத்ததேஹஃ சசிவத்வமேதி॥

௪௭. "சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்தசக்தி, அனந்தசக்தி, சுவதந்திரத்துவம், நிராமயான்மா, விசுத்ததேகம் என்பவற்றையுடையனாய் அவன் சிவத்தை அடைகின்றான்" என்று சர்வஞ்ஞானோத்தராகமமும்,

௪௮. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை

௪௯. என்று உத்தரவேதமும் "சேர்வார்தாமே தானகச் செயுமவனுறையுமிடம்" என்று திராவிடசுருதியும் கூறுமாற்றானும் ஆன்மாவானது சிவனாது எண்குணங்களால் நிறைதல் பெறப்பட்டது.

௫௦. இங்ஙனம் இருபத்தெட்டுச் சிவாகமங்களினும் கூறப்படும் ஞானபாதப்பொருளெல்லாவற்றையும் பொது உண்மை என இருவகைப்படுத்தி, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நான்காகவைத்துப் போதிக்கும் இச்சிவஞானபோதசாஸ்திரத்தைக் கேட்டற்குரிய அதிகாரி யாரென்று கூறப்படுகின்றது:—

௫௧. (வெ. பொ.) தான்ருனகச் செய்தவாற்ருற் சீவன் என்னும் இயல்பினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்தசாரமாகிய சித்தாந்த நெறி

உணர்ந்தமாணவகனே! ஆணவம் என்னும் ஒரு மலமுடைய விஞ்ஞானகலர்க்கு அறிவின்கணின்று அருட்பார்வையால் நோக்குதலானும், ஆணவம் கன்மம் என்னும் இரு மலமுடைய பிரளயாகலர்க்கு இஷபாரூட தேவகுருவாய் முன்னின்று செய்யும் திருநோக்கம், பரிசம், வாக்கு எனப்படும் தீக்கையானும் பிறவிக்கு ஏதுவாகிய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்குமாகலான், அவரின் வேறாகிய ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலமுடைய சகலர்க்கே அநுபவமுள்ள தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞானபோதம் உரியதாம் என்க.

நிஉ. "முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்" என்றற் றொடக்கத்த தேவாரத்திலே, "தன்னுமங் கெட்டாள் தலைப்பட்டாணங்கை தலைவன் றாளே" என்னும் திராவிடசுருதியானும், "ஓர்மாத் திரையளவென் பேரிற், குறுகினேன்" என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானும், முத்திகாலத்திலே சீவன் எண்குணங்களால் நிறைந்த சிவமாதல் பெறப்பட்டது; நாமங்கெடுதலும் ஒருமாத்திரையிற் குறுகலும் சீவன் சிவம் எனப்படுதலாம்.

## பன்னிரண்டாஞ் சூத்திரத் தொகைப்பொருள்.



சிவத்தை அணைந்த முத்தராயினோர்க்குச் சீவன்முத்திநிலையில் அவர் அறிவும் இச்சையும் கிரியையும் புறத்தே நிகழுங்கால், அவர் அறிவானது மும்மலவழுக்கைச் சிவஞானநீரினாற் கழுவுதலினும், அவரது இச்சையானது மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடுதலினும், அவரது கிரியையானது அன்பர் திருவேடத்தையும் சிவலிங்கத்தையும் வழிபடுதலினும் வியாபரிக்கும் என்றும், ஏனை இடங்களில் அவரது அறிவுமுதலிய நாடா என்றும், அங்ஙனம் வழிபடுதல் மலவாசனையைத் தாக்கவொட்டாது தடுத்துச் சிவானந்தத்தை மேன்மேல் வளரச்செய்யும் என்றும், மெய்ஞ்ஞானிகளுக்கு உடம்பு உள்ளளவும் பிராரத்தவினை உளதாதலின, அஃது ஒரோவிடத்து யாதானும் ஓர் சோர்வுகண்டு வாதனைவயத்தினால் வந்து நுழைந்து தாக்குமாயின், தோன்றும்போதே அதனை முறுகவொட்டாது துடைத்துவிடல்வேண்டும் என்றும், ஆணவமுதலிய மும்மலங்களும் விபரீத உணர்வைச் செய்வது சமயம்வாய்த்தபோதேயாக, அவபக்தராயினோர் சமயம் வாய்க்காதபோதும் வாய்க்குமாறு செய்துகொண்டு தம்மோடொப்ப விபரீத உணர்விற் செலுத்தியே விடுவாராதலின், அம்மலங்களினும் கொடியராகிய அவர் சேர்க்கையொழித்துச் சிவபக்தரோடு இணங்கவேண்டும் என்றும், அங்ஙனம் சிவபக்தரோடு இணங்கின் அவர் சிவானந்தபோகத்தை ஐம்புலவேடர் சூறைகொள்ளுமாறு ஊடுருவிச் செல்லவொட்டாத திண்ணிய வேலியாய் அமர்ந்து, அச்சிவானந்தபோகத்தைப் பிறழவொட்டாது நிறுத்திக்கொள்வாரென்றும், அதனால் உலகியல்புணர்ச்சி தேய்ந்து தேய்ந்து போக, சிவாநுபூதியுணர்வே மேலோங்கி மேம்பட்டுவிளங்கும் என்றும், அதுபற்றிப் பிராரத்தவினை அவர்க்குப் புசிப்பாகச் செல்லாதென்றும், அது சார்பாக அவபக்தர் சேர்க்கை பறற்றக் கழிந்துவிடும்

என்றும், சிவபெருமான் சேதனாசேதனப் பிரபஞ்சமெங்கும் பாலில் நெய் போல வியாபித்திருப்பினும், சிவனடியார் திருவேடத்தினும், சிவலிங்கத்தி னும் தயிரில் நெய்போல விளங்கி நிற்பார் என்றும், சிவனடியாரைச் சிவமெ னக் கண்டு வழிபடுதற்கு வேடம், பாவனை, செயல், தன்மை என்னும் நான்கு னுள் ஒன்றே அமையும் என்றும், சிவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவ லிங்கத்தைச் சரியாபாதத்தினரும், கிரியாபாதத்தினரும், யோகபாதத்தின ரும், ஞானபாதத்தினருமாகிய நால்வரும் தத்தம் அறிவின் தாரதம்மியத்திற் கேற்றவாறு நான்கு பிரகாரமாக வழிபடுவார் என்றும், சிவபிரான் சேதனா சேதனப்பிரபஞ்சம் எங்கும் அபேதமாயும், பேதமாயும், பேதாபேதமாயு முள்ள நிலையரல்லராய், அம்மூன்றற்கும் பொதுமையாய்க் கண்ணொளியும் ஆன்மபோதமும்போல அத்துவித நிலைமையினராயிருத்தலின், அவரை அன்பு விளையுமிடத்தில் வழிபடல்வேண்டும் என்றும், பிராரத்தவாதனை கழி யும்பொருட்டுச் சிவலிங்கத்தையும், சிவனடியாரையும், சிவாசாரியரையும் வழிபடல்வேண்டும் என்றும் போதிக்கப்பட்டதாம் எனக.

## பன்னிரண்டாஞ் சூத்திரப் பரீக்ஷைவினாக்கள்.



க. சூத்திரப்பொருள் யாது? ச.

உ. இதன் கருத்துரை யாது? ரு.

ங. இதன் பொருள் யாது? சு.

ச. சூத்திரப்பிண்டப்பொருள் யாது? எ.

ரு. முத்தர் அறிவு வியாபரிக்குமிடம் எதனாற் பெறப்படுகின்றது? அ.

சு. முத்தர் இச்சைவியாபரிக்குமிடம் எதனாற் பெறப்படுகின்றது? கூ.

எ. முத்தர் கிரியை வியாபரிக்குமிடம் எதனாற் பெறப்படுகின்றது? க0.

அ. முத்தர் ஞான இச்சாக்கிரியை ஏனையவிடங்களிற் செல்லுமா? கக.

கூ. இந்தவழிபாடு எதுபோலச் சிவானந்தத்தை வளரச்செய்யும்? கஉ.

க0. முதலாஞ் சூர்ணிகை யாது? கங.

கக. இதன் பொருள் யாது? கச.

கஉ. மெஞ்ஞானிக்கு எவை மூன்றும் ஆகாவாம்? கரு.

கங. பிராரத்தவினை வாதனைவயத்தினால் வந்து தாக்குமாயின், எவை படிப்படியே வந்து தலைப்படும்? கசு.

கச. மும்மலமும் வந்து எதனை இழக்கச் செய்யும்? கள.

கரு. அஞ்ஞானம் எதனால் ஆகின்றது? கள.

கசு. ஏகதேசக்காட்சி எவற்றால் ஆயது? கள.

கள. விருப்பு வெறுப்புக்கள் எதனால் ஆகின்றன? கள.

கஅ. தற்போதம் முனையாதவாறு யாது செய்தல்வேண்டும்? கள.

கசூ. மும்மலங்கள் உதிக்கும்போது அவற்றைத் துடைத்தற்கு எது வாயில்? கள.

உ0. இரண்டாஞ் சூர்ணிகை யாது? கஅ.

உக. அதன் பொருள் யாது? கசூ.

உஉ. சிவபக்தியில்லாதாரோடு இணங்காதிருத்தல் ஒன்றுமாத்திரம் போதாதா? உ0.

உங. சிவபத்தரோடு யாதுபற்றி இணங்கல்வேண்டும்? உக.

உச. மெய்த்தவமாவது யாது? உஉ.

உரு. பொய்த்தவமாவது யாது? உஉ.

உசு. எவர்க்கு உலகியல்பு தூர்ந்து சிவாநுபூதி தலைப்படும்? உங.

உஎ. சிவாநுபூதியையுடையார்க்கு எவை வாதியா? உங.

உஅ. எவரோடு இணங்கினால் தீயோர் இணக்கம் அறும்? உங.

உசூ. சிவபோகச் செல்வத்தை ஐம்புலவேடர் கொள்ளையடிக்காது தடுத்தற்கு வேலியாயுள்ளார் யார்? உங.

ங0. மூன்றாஞ் சூர்ணிகை யாது? உச.

ஙக. இதன் பொருள் யாது? உரு.

ஙஉ. ஸ்ரீருத்திரம் நின்றதிருத்தாண்டகம் என்பன அனைத்துக்கும் வழிபாடு கூறுதலால், மெய்ஞ்ஞானிகளும் அங்ஙனம் பகுப்பின்றி அனைத்தையும் பரமேசுவரரெனக் கண்டு வழிபடுதல் அமையாதா? உரு, உசு.

ஙங. காமுகரை எவை வசிகரித்தல்போல, மெய்யடியாரை எவை வசிகரிப்பன? உசு.

ஙச. தயிரில் நெய்போல எங்கே விளங்கி நிற்கின்றார்? உசூ.

௩௫. சிவபிரான் எங்கே பிரகாசமாயும், எங்கே அப்பிரகாசமாயும் உள்ளார்? உஎ.

௩௬. மெய்யன்பர் வேடம் யாது? உஅ, (1).

௩௭. பாவனை யாது? உஅ, (2).

௩௮. செயல் யாது? உஅ, (3).

௩௯. தன்மை யாது? உஅ, (4).

௪0. எவைபற்றி மெய்யன்பர் சிவமேயாவர்? உஅ, (4).

௪௧. சிவபிரான் எங்கே எக்காலமும் பிரகாசமாய் நிற்பர்? உகூ.

௪௨. சரியையாளர் சிவலிங்கத்தை எங்ஙனம் வழிபடுகின்றார்? ௩௧,(1)

௪௩. கிரியையாளர் எங்ஙனம் வழிபடுகின்றார்? ௩௧, (2).

௪௪. யோகிகள் எங்ஙனம் வழிபடுகின்றார்? ௩௧, (3).

௪௫. ஞானிகள் எங்ஙனம் வழிபடுகின்றார்? ௩௧, (4).

௪௬. நான்காஞ் சூர்ணிகை யாது? ௩௨.

௪௭. இதன் பொருள் யாது? ௩௨.

௪௮. சடசித்துக்களெல்லாம் சிவவடிவேயாமாயினும், அவர் எங்கே வழிபடற்பாலர்? ௩௫.

௪௯. எவைபோலப் பேதநிலையினரல்லர்? ௩௫.

௫0. எவைபோல அபேதநிலையினரல்லர்? ௩௫.

௫௧. எவைபோலப் பேதாபேதநிலையினரல்லர்? ௩௫.

௫௨. எவைபோல அத்துவிதநிலையினர்? ௩௫.

௫௩. மெய்ஞ்ஞானிகளுக்குச் சிவபிரான் எதுபோல எப்போதும் வெளிப்பட்டருளுகின்றார்? ௩௬.

௫௪. மெய்ஞ்ஞானிகளது அடிப்பட்ட அன்பு எங்கே விளைகின்றது? ௩௬.

௫௫. சிவலிங்கவழிபாடு எதனை நிலை நிறுத்தும்? ௩௬.

௫௬. அத்துவிதஞானம் எதன் பயன்? ௩௭.

௫௭. பிராரத்தவினை ஆன்மாவைத் தாக்குங்கால் எவையெல்லாம் நீங்கும்? எவை பின்வந்து தலைப்படும்? ௩௮.

௫௮. அனைத்துக்கும் மூலமாயுள்ளது யாது? ௩௮.

ருசு. பிராரத்தவாசனை நீங்காதொழியின் எது மேம்பட்டு விளங்காது? ௩அ.

சு0. அப்பிராரத்தவாசனையை நீக்குமாறு யாது செய்தல் வேண்டும்? ௩அ.

சுக. மெய்யடியார்களை எங்ஙனம் வழிபடல்வேண்டும்? ௩அ.

சுஉ. சிவஞானசொரூபம் எப்போது நிலைபெறும்? ச0.

சு௩. ஐந்தெழுத்தருணிலை திருவருட்பயன் முதலியவற்றில் எங்கே வைத்துக் கூறப்பட்டது? சக.

சுச. ஆதலால் எவரிடத்து இன்றியமையாது வழிபாடு செய்தல்வேண்டும்? ச0.

சுரு. பயனை விரும்பாமையாலேனும், பயனைப் பின்னர்ப்பெறலாம் என்றேனும் எதனைத் தவிர்க்கலாம்? சஉ.

சுசு. அங்ஙனம் சிவாசாரியரை வழிபடாதொழியின் என்னை? ச௩.

சுஎ. ஆசாரியர் ஆன்மாவை எவ்வண்ணமாகச் செய்தார்? ச௩.

சுஅ. ஆசாரியர் செய்த உதவியை ஆன்மா மறந்தால் யாதாகும்? ச௩.

சுகூ. சிவபிரானுக்கு எக்காலமும் அடிமையாயது யாது? ச௩.

எ0. சுருதியிற் கூறப்பட்ட எண்குணங்கள் யாவை? சச, சரு.

எக. சுருதியிற் கூறப்பட்ட அபகதபாப்மத்துவாதி குணங்களைச் சைவ பாஷ்யகாரர் சர்வஞ்ஞதாதிகுணங்களென்று எங்கே பொருள்கூறுகின்றார்? சரு

எஉ. சிவாகமத்திலே கூறப்பட்ட எண்குணங்கள் யாவை? சசு, சஎ.

எ௩. உத்தரவேதமுடையார் எண்குணங்களையுற்றுக் கூறியிருக்கின்றாரா? சஅ.

எச. சிவபிரான் ஆன்மாவைத் தன்வண்ணமாக்குகின்றார் என்றமைக்குப் பிரமாணம் யாது? சகூ.

எரு. சிவஞானபோதம் யாருக்கு உபதேசிக்கற்பாற்று? ருக.

எசு. சீவன் யாது காரணத்தினால் தனது நாமம் குறுகப்பெற்றது? ருஉ

எஎ. எங்ஙனம் குறுகிற்று? ருஉ.

எஅ. அதற்குத் திராவிடசுருதிப்பிரமாணம் யாது? ருஉ.

சிவஞானபோதவசனாலங்காரதீபம்

முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 1 | ஸ்பனஞ் | ஸ்தாபனஞ் |
| 6 | 12 | திருமுகத்தை | திருமுகத்தை |
| 8 | 1 | வடுத்துறை | வடுதுறை |
| 17 | 8 | படன | டன |

"சிவஞானபோதநூல்" என்ற விஷயத்துக்கு இடப்பட்ட ௩௨-ம் பக்கந்தொடுத்துள்ள ஏனைய பக்கங்களை ௧௩, ௧௪ என்றற்றொடக்கத்தனவாகக் கொள்ளாது ௩௩, ௩௪ என்றற்றொடக்கத்தனவாகக் கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 5 | பிருதக | பிருக |
| ,, | 7 | அவர் | அதர் |
| 34 | ,, | திரகளாற் | திரங்களாற் |
| 41 | 11 | மெனில் | மெனல் |
| 34 | 10 | ௩-டும் | ௩டு-ம் |
| ,, | 14 | ஆன்மாக்களுக்கு | உயிர்களுக்கு |
| 40 | 15 | தோற்றிய | தோற்றிய) |
| ,, | 31 | இஃது | இது |
| 84 | 9 | உயர்வும் | உயர்வு |
| 85-ம் பக்கத்து | 24-ம் வரியில் | இதற்கு என்றற்றொடக்கத்த அடைப்புக் குறிக்குளுள்ளதை நீக்கிவிடுக. | |
| 88 | 16 | 14, 20 | 14–20 |
| 95 | 3 | பொருளா | பொருளாகாது |
| 95 | 32 | சிறப்புப்பாயிரத்து ௭-ம் பிரிவின் குறிப்புகளில் | "மகாவுக்கிர வீரபத்திராஸ்திர"த்து ௧௫௮-ம் பிரிவிற் |
| 97 | 1 | பரவி | விரவி |
| ,, | 22 | ஶக்தி | ஶக்தீ |
| 107 | 15 | ஆன்மாவானது | அது |
| 120 | 9 | தேயம் | தேவம் |
| 128 | 23 | (கா. பொ) | (க. பொ) |
| 129 | 14 | முனட | முடை |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 131 | 4 | தவஸ்ரா | தவஸா |
| 132 | 34 | சுட்டிமறங் | சுட்டிறங் |
| 133 | 32 | ஸோऽயமாத்மா | அயமாத்மாப்ரஹ்ம |
| | | சோயமாத்மா | அயமாத்மாபிரம்ம |
| 134 | 1 | அது இந்த ஆன்மா | இந்த ஆன்மா பிரமம் |
| 137 | 28 | துவம் | சேதனபாகத்தில்துவம் |
| 138 | 30 | நிடங் | நிடதங் |
| 141 | 5 | கொண்டு | கண்டு |
| ,, | 31 | மாறும் | மென்றும் |
| ,, | ,, | கின்றன | கின்றது |
| 144 | 9 | மலராம் | மலர் |
| ,, | 12 | பொருட்டாம் | பொருட்டு |
| ,, | 13 | பீஜமாம் | பீஜம் |
| 146 | 3 | தேஷ | தோஷ |
| 147 | 13 | தாதங் | தாந்த |
| 162 | 18 | ௩௬ | ௩௬ (சூ. பொ.) |
| 166 | 20 | அதனை | அவரை |
| 168 | 4 | நாட்ட | நாட |
| 169 | 21 | (10) | (1) |
| 172 | 24 | வரய் | வாய் |
| 181 | 21 | இவற்றின் | இதன் |
| 185 | 10 | தாய் | வாய் |
| 190 | 18 | ஞத்வா | ஞாத்வா |
| 191 | 22 | ப–மெ | பமெ |
| 192 | 27 | ளால் | ளாய் |
| 199 | 13 | 40,63 | 40—63 |
| 201 | 11 | 81,84 | 81—84 |
| 203 | 13 | 116,120 | 116—120 |
| ,, | 14 | ௧௨௩ | ௧௨௧ |

சென்னையினின்று நெடுந்தூரத்தினதாகிய திருப்பரங்குன்றத்திலிருந்து பிழை திருத்தி அனுப்பவேண்டியிருந்தமையால், இங்கே காட்டப்பட்ட பிழைகளேயன்றி இன்னும் பிழைகள் விரவியிருத்தல் கூடும்; ஆகலான், அறிஞர் தயைகூர்ந்து அவற்றைத் திருத்தி வாசித்துக்கொள்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விக்கிரயபுஸ்தகம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | நீலகண்டபாஷ்யத்தமிழ்மொழிபெயர்ப்பு | 6 | 0 |
| 2. | வைதிகசுத்தாத்துவிதசைவசித்தாந்ததத்துவப்படம் | 3 | 0 |
| 3. | ஷை விஞவிடை | 1 | 0 |
| 4. | வச்சிரதண்டமுந்தாந்திரிகதுண்டகண்டனகண்டனமும் | 0 | 8 |
| 5. | மகாவுக்கிரவீரபத்திராஸ்திரம் (ஏகான்மவாதகண்டனம் பற்றியது) | 0 | 8 |
| 6. | ஸ்ரீசீகாழிப்பெருவாழ்வின் சிவகாருண்ணியமாட்சி | 0 | 4 |

(இவற்றிற்குத் தபாற்சார்ஜ் வேறு)

இங்ஙனம்

சிவசப்புநாதையர்

திருப்பரங்குன்றம்

மதுரைஜில்லா.

---

சிவஞானபோதவசனலங்காரதீபம் ரூ. 2; அணா. 8.

சிவலிங்கமகத்துவம் அணா. 4.

திருநீற்றின் உண்மை அணா. 4.

(தபாற்சார்ஜ் வேறு)

விலாசம்:—

சி. சு. ஏகாம்பரமுதலியார்

44. சாமிநாயக்கன்தெரு

சிந்தாத்திரிப்பேட்டை

(சென்னை)

தமிழ்ச் சைவத்தின் வேராகக் கருதப்படும்
சிவஞான போதத்தை விளக்குவதற்குப்
பல்வேறு நூல்கள் உருவாக்கப்பட்டிருப்பினும்
காசிவாசி செந்திநாதையர் அருளிய சிவஞான போத
வசனாலங்கார தீபம் என்ற இந்நூல்தான்
அவற்றுள் சிறந்ததாக் கருதப்படுகிறது.

1916 ஆம் ஆண்டு வெளிவந்த இந்நூல்
அதன் பின்னர் முழுமையாக எவராலும்
வெளியிடப்படவில்லை சைவ சமயத்தின்
நீண்ட நாள் தேவை கருதி இந்நூல்
இப்போது மீள் பதிப்பு பெற்று வெளிவருகிறது
இந்நூல் சைவத்தின் திறவுகோல்.